ணன் வேண்டும் உபகரணங்கள் கொடுக்க, பெண்கள் நோன்பிலே உபக்ரமித்தார்கள். நாட்டங்க, அநாவ்ருஷ்டி தீர்ந்து ஸம்ருத்தமாய்த்ததென்று கொண்டாடும்படி. (படிந்து) இந்நோன்பிலே அவகாஹித்து, "நீராடப்போதுவீர்! போதுமினோ" என்று அந்வயம். (ஏல், ஓர்) பாதத்தைப் பூரித்துக் கிடக்கிறது. (எம்பாவாய்) எங்கள் நோன்பென்னுதல்; எங்கள் சந்தஸ்ஸென்னுதல். ... ... ... க

மில்லாதார் நிந்திப்பர்கள்; அதுவேண்டாவிறே இவர்களுக்கு வர்ஷமுண்டாகையாலே. "படிந்து - நீராடப்போதுவீர் போதுமினோ" என்று. (ஏலோரெம்பாவாய்) ஏல் - இப்படியாகி லென்றபடி. "ஏல்" என்றது - ஸம்போதநை. (ஓர்) புத்திபண்ணு. "எம்பாவாய்" என்றது - எங்கள் சந்தஸ்ஸைப் பின்செல் என்றபடி. அன்றிக்கே, பாதபூரணமான அவ்யயமாகவுமாம். "எம்பாவாய்" என்றது - மேல் காம ஸமாச்ரயண மாகையாலே, "பாவாய்" என்று - ரதியைச் சொல்லிற்றாகவுமாம். எங்கள் சந்தாநுவ்ருத்தியைப் பண்ணென்னவுமாம். ச, வை, து, ஹிக்கள்போலே, பாதத்தைப் பூரித்துக் கிடக்கிறதென்று சொல்லுகிறது.

காலத்தைக் கொண்டாடி, பலத்தைச்சொல்லி, அதிகாரிகளைச்சொல்லி, இது கேட்டபின்பு அவர்களுக்குப் பிறந்த பௌஷ்கல்யத்தைச் சொல்லி, "க்ருஷ்ணஸம்ச்லேஷத்துக்கு ஏகாந்தமான வூரிலே பிறக்கப்பெற்ற நீங்களும் சிலரே!" என்று ஸ்ரீநந்தகோபர்க்கும் யசோதைப்பிராட்டிக்கும் பவ்யனுகையாலேயிழக்க வேண்டாவென்று அவர்கள் ஒளித்தாலும் விடவொண்ணாதபடியான வடிவழகைச் சொல்லி, விரோதிஞலும் விடவொண்ணாதபடியான ப்ராப்தியைச் சொல்லி, உபாயநைரபேக்ஷ்யஞ்சொல்லி, ஆகிஞ்சந்யத்தில் நைரபேக்ஷ்யம் சொல்லி, உகவாதாரும் உகந்து கொண்டாடும்படி சொல்லித்தலைக்கட்டுகிறார். ... ... ... க

சுத்தஸத்வம்தொட்டாசார்யரருளிசெய்த

# திருப்பாவைஸ்வாபதேசவியாக்யானம்

24. அவதாரிகை—(மார்கழியித்யாதி) இப்பாட்டில் - அதிகாரி ஸ்வரூபத்தையும், உபாயஸ்வரூபத்தையும், உபேய ஸ்வரூபத்தையும் ஸங்க்ரஹித்து, இந்நோன்புக்குக்காலம் நேர்பட்ட படியைக் கொண்டாடுகிறார்கள்.

25. வியாக்கியானம்—(மார்கழியித்யாதி) ஸத்வோத்தரமானகாலத்திலே ஸதாசார்யப்ரஸாதமடியாக ஸ்வரூபயாதாத்ம்ய ஜ்ஞாநம் பரிபூர்ணமாய், இச்சேதநன் பகவத்விஷயீகார பாத்ர பூதமான திவஸத்திலே தங்களுக்கு பகவத் கைங்கர்யத்தில்ருசிபிறந்தவின்று மங்களகார்யம் செய்யுமவர்களுக்குத் தேட்டமானகாலம் தன்னடையே நேர்பட்டபடியைக்கண்டு ஆச்சர்யப்படுகிறார்கள். (நீராடப்போதுவீர்) பகவத்கைங்கர்யம் பண்ணப்போருகையிலேருசியையுடையவர்களாய் ; (நேரிழையீர்) இதுக்குத் தகுதியான ஜ்ஞாந பக்தி வைராக்யங்களை யுடையராய்; (சீர்மல்கு மித்யாதி) எம்பெருமானுடைய க்ருபாக்ஷமாதி கல்யாண குணங்கள் தந்தாம் விஷயங்களிலே சேர்ந்து பொங்கி, பரமபதத்தளவும் சென்று அலையெறியும்படி அபிவ்ருத்தமாகாநின்றுள்ளதாய், ஜ்ஞாந ஜந்மாக்கள் ஸாதரமாகவர்த்தியாநின்றுள்ள வூரிலே பகவத்ஸம்பந்தமுடையரராய், தததுபவபரிகரமான அபிநிவேசாதிசயத்தையுடையரராய் அநந்யார்ஹரானவர்கள்; (நீராட—போதுமினோ) பகவத்கைங்கர்யம் பண்ணவாருங்கோள். "ஆயர்" என்னுங்காட்டில் ஜ்ஞாநஜந்மாக்களைக் காட்டுமோவென்னில்; லோகத்தில் ஆயர் பகவதேகபரரா யிருக்குமாப்போலே ஜ்ஞாநஜந்மமுடையவர்களும் பகவதேகபரராகையாலே த்ருஷ்டாந்தவிதையாகக் காட்டும்.

26. "சிறுமீர்காள்" என்று - ஸ்த்ரீத்வேந நிர்த்தேசம், அநந்யார் ஹத்வத்யோதநார்த்தம். சரீரஜந்மமான ஆயருக்கு ப்ரக்ருதிஸம்பந்தத்தாலே அந்யபரதையுண்டாகைக்கு யோக்யதையுண்டு; ஆகையாலே, உபாயாந்தரஸம்ஸர்க்க யோக்ய

தாகந்தரஹிதமான விலக்ஷணஜந்மம் ஜ்ஞாநஜந்மமேயாமித்தனையல்லது அத்ரைவர்ணிக ஜந்மமன்று ; அஜ்ஜந்மந் தன்னிலும் சிலரை உபாயாந்தரபரராகவும் உபேயாந்தரபரராகவும் தேவதாந்தரபரராகவும் காணாநின்ரேமிறே ; ஜ்ஞாநஜந்மந் தன்னில் அப்படிகாண விரகில்லையிறே. ஆகையால், நம்மாசார்யர்கள், உத்க்ருஷ்ட ஜந்மமென்கிறது ஜ்ஞாநஜந்மமேயென்று கொள்ளவேணும். இப்படி நாம் கனக்கப்பாரித்துக்கொண்டுபோங்காட்டில் நமக்கு அப்புருஷார்த்தம் ஸித்திக்குமோவென்ன (கூர்வேலித்யாதி) கூரியதாய் ஸர்வாநிஷ்ட நிவர்த்தகமான மங்களாசாஸநத்தை யுடையராய், அல்பாமங்களஸம்பாவனையிலும் அதிசயிதமங்களாசாஸநபரராய், பகவல்லாபத்தாலே களித்து, பகவத் விஷயத்தை அசலறியாதபடி ரக்ஷித்துக்கொண்டு போருகிற ஆசார்யவிஷயத்தில் தன்னுடைய நியாம்யதை / தோற்றும்படி யிருக்குமவனாய்.

27. "கண்" என்று - ஜ்ஞாநமாய், அதுக்குக்கூர்மையாவது - வஸ்துவை உள்ளபடி க்ரஹிக்கையாய், அத்தாலே-பூர்ணமான ஜ்ஞாநத்துக்கு ப்ரகாசகமாய், தன்னையநுஸந்திப்பார்க்கு ஆபிஜாத்யாதி ஸகலாதிசயப்ரதமான திருமந்த்ரத்திலே தன்னுடைய ஸகலகாரணத்வாத்யதிசயங்களெல்லாம் ப்ரகாசிக்குமவனாய். "மந்த்ரோமாதா" என்னக்கடவதிறே, இம்மந்த்ரந் தானும் ஸமஸ்த கல்யாண குணாத்மகனான எம்பெருமானைத் தன்னுடைய கர்ப்பத்திலே வைத்துக்கொண்டு எல்லாருமறியலாம்படி ப்ரகாசிப்பிக்கையாலே இம்மந்த்ரத்தை "மாதா" என்னக்குறையில்லை. ஆச்ரிதஸகலதாபநிவர்த்தகமாய், பரமோதாரமான திருமேனியையுடையனாய். இத்தால் - உபாயக்ருத்யஞ் சொல்லுகிறது. அன்றிக்கே, "கார்மேனி" என்று - மேகம்போலே தர்சநீயமான திருமேனியை யுடையவனென்று அழகைச்சொல்லுகையாலே - உபேயத்வம் சொல்லிற்றாகவுமாம். அத்திருமேனிக்கு பராபாகசோபாவஹமாய், அகவாயில்வாத்ஸல்ய ப்ரகாசகமாயும் பரத்வப்ரகாசகமாயு மிருந்துள்ள சிவந்த திருக்கண்மலர்களையுடையனாய். "கார்மேனி" என்கையாலே - ஸௌலப்ய

ஸௌசீல்யங்களும், "செங்கண்" என்கையாலே-வாத்ஸல்ய ஸ்வாமித்வங்களும் தோற்றுகையாலே, ஆச்ரயண ஸௌகர்யாபாதக குணசதுஷ்டயமும் சொல்லிற்றுய்த்து.

28. (கதிர்மதியமித்யாதி) ஸூர்யகிரணங்களையுடைய மதியம்போலேயிருக்கிற திருமுகமண்டலத்தை யுடையனும். இத்தால் - அநுகூலர்க்கு அணுகலாம்படி யிருக்கையும், ப்ரதிகூலர்க்கு அணுகவொண்ணாதபடி யிருக்கையும் தோற்றுகையாலே அநபிபவநீயத்வம் சக்திகார்யமாகையாலே ஆச்ரித கார்யாபாதக குணசதுஷ்டயமும் சொல்லிற்றுய்த்து. இப்படி ஆசார்யபவ்யத்வாதி குணங்களையும் வாத்ஸல்யாதி குணங்களையும் ஜ்ஞாநசக்த்யாதிகுணங்களையு முடையனை நாராயணனே. (நமக்கே) ஸஹாயாந்தர நிரபேக்ஷமாக அவனாலே புருஷார்த்தமென்றிருக்கிற நமக்கே. "நமக்கே" என்கிறவிடத்தில் ஏவகாரத்தாலே - உபாயாந்தரங்களையும் தன்னையும் உபாயமாகப் பற்றினவர்களுக்கு ஈச்வரன் கர்மாநுகுணமாக பலங்கொடுப்பானத்தனையல்லது க்ருபாநுகுணமாக பலங்கொடானென்னுமிடம் தோற்றுகிறது. (பறைதருவானித்யாதி) புருஷார்த்தத்தைக் கொடுப்பான். ஆகையாலே பூமிப்பரப்பிலுள்ள லௌகிகபரமவைதிக ரெல்லாரும் கொண்டாடும்படி இந்நோன்பிலே அவகாஹித்து - நீராடப்போதுமினோ என்றந்வயம். காமநாதிகாரிகளுக்கு ஸாதநமாயும், நிஷ்காமருக்கு நித்யமாயும், பகவத்ப்ரபந்நர்க்கு கைங்கர்யமாயும்போருகிற இந்நோன்பிலே பகவதநுபவைகாந்தம் என்று அத்யவஸித்து, ச்ரத்தாபூர்வகமாக யதாவிதாநமநுஷ்டித்தால், லௌகிக வைதிக பரமவைதிகர்களுடைய கொண்டாட்டம் தன்னடையே ஸித்திக்குமிறே. "யத்ராஷ்டாக்ஷரஸம்ஸித்தோ மஹாபாகோ மஹீயதே" என்னக்கடவதிறே.

29. இப்பாட்டில், "ஏஷப்ரஹ்ம ப்ரவிஷ்டோஸ்மி க்ரீஷ்மேசீதமிவஹ்ரதம்" என்கிறபடியே க்ரீஷ்மகாலத்தில் ஸூர்யகிரண தப்தனானவன் தன் தாபமாறும்படி குளிர்ந்த மடுவிலே நாமரூபவிபாகாநர்ஹனும்படி ப்ரவேசிக்குமாப்போலே, ஸம்ஸாரதாபார்த்தனான் அந்ததாபமாறும்படி

ஸமஸ்த கல்யாணகுணாத்மகனை ஸ்ரீமந்நாராயணனை, அவனை யொழியப்ருதக்ஸ்தித்யுபலப்தி யில்லாதபடி ப்ரவேசித்து ஸ்வ ஸத்தையை லபித்தேன் என்று ப்ரஹ்மாநுபவத்துக்கு நீராட்டத்தை த்ருஷ்டாந்தமாகச் சொல்லுகையாலே, "நீராட்" என்று - ப்ராப்யத்தை ஸங்க்ரஹித்தார்கள். "நீராடப்போதுவீர்" என்று - இப்புருஷார்த்தத்துக்கு இதில் இச்சையை யுடையவர்களே அதிகாரிகள் என்று அதிகாரியை ஸங்க்ர ஹித்தார்கள். "நாராயணனே" என்று - ப்ராபகத்தை ஸங்க்ரஹித்தார்கள். "நமக்கே" என்று - உபாயாதிகாரியை ஸங்க்ரஹித்தார்கள். இத்தால் - உபாயாந்தர நிவ்ருத்தி பூர்வகமாக அவனையே உபாயமாகப் பற்றுகை அதிகாரமென்ற தாய்த்து. ... ... ... ... ... ... க

---

## இரண்டாம் பாட்டின் அவதாரிகை

**மூவாயிரப்படி** :— 30. இரண்டாம் பாட்டு. க்ருத்யா க்ருத்ய விவேகம் பண்ணுகிறது. இதரவிஷயங்களில் விடப் படுமவை விடவும் அரிதாயிருக்கும்; பற்றப்படுமவை பற்றவு மரிதாயிருக்கும். அதுக்கடி - இவனுடைய கர்மாநுகுண மாக நன்றாயும் தீதாயுந் தோற்றுகிற வித்தனைபோக்கி, ஸ்வத: விஷயத்தைப் பற்றி வருவதொரு நன்மையும் தீமையுமில்லை.

---

**ஆறாயிரப்படி** :—இரண்டாம்பாட்டு:— முதற்பாட்டு, ப்ரா ப்யப்ராபக ஸங்க்ரஹம்; இரண்டாம்பாட்டில்-க்ருத்யாக்ருத்ய விவேகம்பண்ணுகிறார்கள்; மூன்றாம்பாட்டு - ப்ராபகஸங்க்ர

பி. 30—க்ருத்யாக்ருத்யவிவேகம் ஸ்வாபதேசத்தில்-க்ருத்யமா வது பரமன் அடிபாடுகை முதலியன, அக்ருத்யமாவது நெய் யுண்கை முதலிய போக்யாந்தராந்வயம். பரமபோக்யமான பகவத் விஷயத்தில் பற்றுகையும் விடுகையும் எளிதாயிருக்கும். முதற் பாட்டில் சொல்லப்பட்ட அதிகாரிக்கு, எம்பெருமான் குணங்களை அநுஸந்தித்தால் பரமன் அடிபாடுகை முதலிய எல்லாம் அவர்ஜ்ஜ நீயங்களாய்வரும். இப்படி வருகையே ஸம்பாவிதஸ்வாபாவங்கள் என்பதின் கருத்து.

எங்ஙனேயென்னில்; ஒருநாள் ஒருவன் ஒன்றை யாதரித்து, அவன்றானே, பின்பு சிலநாள் சென்றவாறே அது தன்னை உபேக்ஷியாநின்றான்; முன்பு உபேக்ஷித்ததுதன்னையே பின்பு ஒருநாளிலே ஆதரிப்பதும் செய்யாநின்றான்; ஆகையால், இவனுடைய கர்மமடியாக நன்றாயும் தீதாயும் தோற்றுகிற வித்தனைபோக்கி, விஷயத்தைப்பற்றி வரில் என்றும் ஒருபடிப் பட்டிருக்கவேணும்; அது இல்லாமையால் புறம்புள்ளவை விடவும் அரிது, பற்றவும் அரிது, விடுகிறவற்றுக்கும் பற்றுகிறவற்றுக்கும் வாசிதெரிவிக்க அரிதாகையாலே. இங்ஙனன்றியே, அல்பமுமாய் அஸ்திரமுமாய் ஹேயமுமாயிருக்கிற விஷயங்களைவிட்டு ஸமஸ்தகல்யாண குணாத்மகனைப் பற்றுகையாலே, விடுகையும் பற்றுகையு மிரண்டுமெளிதாயிருக்கும். கீழ்ப்பாட்டில் - ப்ராப்யஸ்வரூபத்தையும் ப்ராபகஸ்வரூபத்தையும் அதிகாரிஸ்வரூபத்தையும் சொல்லிற்று; இதில் - அந்த அதிகாரிக்கு ஸம்பாவிதமான ஸ்வபாவங்களைச் சொல்லுகிறது.

வையத்துவாழ்வீர்காள்நாமும்நம்பாவைக்குச்
செய்யுங்கிரிசைகள்கேளீரோபாற்கடலுள்
பையத்துயின்றபரமனடிபாடி
நெய்யுண்ணோம்பாலுண்ணோம்நாட்காலேநீராடி
மையிட்டெழுதோம்மலரிட்டுநாமுடியோம்
செய்யாதனசெய்யோம்தீக்குறளைச்சென்றோதோம்
ஐயமும்பிச்சையுமாந்தனையுங்கைகாட்டி
உய்யுமாறெண்ணியுகந்தேலோரெம்பாவாய். (உ)

பதவுரை:-க்ருஷ்ணன் திருவவதரித்தகாலத்தில், வையத்து - உலகத்தில், வாழ்வீர்காள்-வாழப்பிறந்தவர்களே, நாம்—, உய்யுமாறெண்ணி-உஜ்ஜீவிக்கும்வழியை ஆராய்ந்து, பாற்கடலுள்-க்ஷீராப்

---

றம். இப்பாட்டில், கருத்யாகருத்ய விவேகமபணணுகிறாகள். இதரவிஷயங்களில் விடுமவற்றோடு பற்றுமவற்றோடு வாசியில்லை, துல்யபலமாயிருக்கும், ஆயாஸத்தாலே பெறுமதாகையாலும் நிலையில்லாமையாலும். இங்கு மாற்பால்மனஞ்சுழிப்ப மங்கையர்தோள் கைவிட்டிறே.

தியிலே, பைய - மெள்ள, துயின்ற - யோகநித்ரைசெய்தருளுகிற, பரமன்-ஸர்வஸ்மாத்பரனுடைய, அடி- திருவடிகளை, பாடி—, நெய் புண்ணோம்-நெய்யுண்ணாதவர்களுமாய், பாலுண்ணோம்-பாலுண்ணாதவர்களுமாய், நாட்காலே - விடியற்காலத்திலே, நீராடி - ஸ்நாநஞ்செய்து, மையிட்டு-மையால், எழுதோம் - கண்ணை அலங்கரியாதவர்களாய், நாம் - நாங்கள், மலரிட்டு - ஸுகந்தபுஷ்பங்களாலே, முடியோம் - குழலை அலங்கரியாதவர்களாய், செய்யாதன - முன்னோர் பெரியோர்கள் அநுஷ்டியாத காரியங்களை, செய்யோம் - ஆசரியாதவர்களாய், தீ - பிறர்க்குத்தீங்கை விளைக்குமதான, குறளை - பொய்யான சொற்களை, சென்று-பிறரிடத்திற்சென்று, ஓதோம் - சொல்லாதவர்களாய், ஐயமும்-அறிவுடையோர்க்குமிகுதியாகப் பொருள் கொடுக்கையையும், பிச்சையும்-ப்ரஹ்மசாரிகளுக்கும் ஸந்யாஸிகளுக்கும் இடப்படும் பிக்ஷையையும், ஆந்தனையும் - அவர்கள் கொள்ளுமளவும், கைகாட்டி - கொடுத்து, நாமும் - அவனாலே பேறு என்றிருக்கும்நாமும், உகந்து - ஸந்தோஷசித்தராய்க்கொண்டு, நம்பாவைக்கு-நம்முடையநோன்புக்கு, செய்யும்-பண்ணுகிற, கிரிசைகள்-க்ரியைகளை, கேளீர் - கேளுங்கோளென்கிறார்கள்.

31. வ்யா.—(வையத்துவாழ்வீர்காள்) ஸர்வேச்வரன் திருவாய்ப்பாடியிலே க்ருஷ்ணனாய்வந்து திருவவதரித்துத் தன்னைத் தாழவிட்டுப் பரிமாறுகிறகாலத்திலே வாழப்பிறந்த

---

வ்யா.—(வையத்துவாழ்வீர்காள்) "புத்திநாசாத்ப்ரணச்யதி" என்கிறபடியே இதரவிஷயத்திலே மண்டிமுடியும் நிலத்திலே, வகுத்தவிஷயமே அநுபவிக்கப் பெற்றவர்க

---

பி. 31—வையத்து-தயை நீர்மை முதலிய குணங்கள் ப்ரகாசமாயிருப்பது வையத்திலே. இவைகளை அநுபவிக்கவே, நித்யஸூரிகளும் இங்கேவருவர். பகவதநுபவவிரோதித்வம்மிக்க இருள் தருமாஞாலமான ஸம்ஸாரத்திலே என்கையும் வையத்து என்பதற்கு மற்றொரு தாத்பர்யம். வையத்துள்ளீர் என்னாது வாழ்வீர்காள் என்பதற்குப் பலபடியாக தாத்பர்யம்: (1) க்ருஷ்ணன் கடாக்ஷத்துக்கு ஒத்த பருவமாயிருக்கை, (2) அவ்வூரில் பிறக்கை, (3) அவன் காலத்தில் பிறக்கை, (4) அவன் நித்யவாஸம் செய்யும் இடத்திலிருக்கையே வாழ்வு, (5) தங்கள் தனி அனுபவத்தை ரஸமாக்கித்தருமவர்களை யுட்படுத்தி வாழ்வீர்காள் என்று அழைத்தல்.

பாக்யவதிகாள்! இங்குத்தைவாழ்ச்சிக்கு பரமபதமும் ஸத்ருசமன்று. அங்கு மேன்மை காணலாமித்தனைபோக்கி, நீர்மைகண்டு அநுபவிக்கலாம்படி யிருப்பது இங்கேயிறே. அங்கு, போக்தாக்கள் அஸங்குசிதரா யிருப்பர்கள்; இங்கு போக்யம் அஸங்குசிதமாயிருக்கும். தயநீயருண்டான இடத்திலேயிறே தயாதிகுணங்கள் அநுபவிக்கலாவது. அங்கு விஷயமில்லாமையாலே தயாதிகுணங்கள் ப்ரகாசிக்கப் பெறுதே; அக்குறைதீருகைக்காகவிறே நித்யஸூரிகள் இங்கேவந்து அநுபவிக்கிறது. அவதாரத்தில் நீர்மையிலே யகப்பட்டார்க்கும் மற்றேரிடம் பெறுதபடியாயிருக்கும். "பாவோநாந்யத்ரகச்சதி" (34) என்றுனிறே திருவடி. "அச்சுவைபெறினும் வேண்டேன்" என்றுருமுண்டிறே. "கண்ட கண்கள் மற்றென்றினைக் காணுவே" என்றுரிறே. அதவா,

ளன்றே. "பலநீகாட்டிப் படுப்பாயோ" என்றும், "இன்னங்கெடுப்பாயோ" என்றும் உணர்ந்தவர்கள் கூப்பிடும் நிலமிறே. நாட்டார் பெறுவிடில் முடியும்படியான விஷயங்களினுடைய தர்சநத்திலே முடிகிறுர்களிறே யிவர்கள். (வையத்துவாழ்வீர்காள்) இந்தளத்தில் தாமரைபோலே. வையத்துவாழ்வீர்காள் - க்ருஷி பூமியிலே பலம் புஜிப்பதே! வானிலேபோய்ச் சிறையிராதே. க்ருஷ்ணகுணங்கள் திருவாய்ப்பாடியிலே ஆழிமூழையாய்ப்பரிமாறு நிற்க, வானிலிருப்பாகிறது - பெருமாள் காடேற வெழுந்தருள திருவயோத்யையி லிருப்புப்போலவும், க்ருஷ்ணன் திருவாய்ப்பாடியிலே வளர்ந்தருளாநிற்க ஸ்ரீமதுரையிலிருப்புப்போலவுமிறே. "அயோத்யாமடவீம்வித்தி" என்று—திரு அயோத்யை பட்டதுபட்டிறே அங்குக்கிடக்கிறது. அங்கு, மேன்மை; இங்கு, நீர்மை. குணுதிக்யத்தாலேயிறே வஸ்துவுக்கேற்றம். "நசபுநராவர்த்ததே" என்றும், "மீட்சியின்றி" என்றும் "ஏற்றிவைத் தேணிவாங்கி" என்றும் சொல்லுகிறபடியே - அங்குள்ளார்க்கு இங்குவரவொண்ணுதே: இங்குள்ளார்க்கு மேன்மையும் காணலாம்; ஆகையிறே, "விண்ணுளாரிலும் சீரியரே" என்கிறது. "முழுதுமித்யாதி, இறுதிகண்டாளே" "நித்யாஞ்ஜலிபுடா:" என்று-நாம் தொழுமத்தனையிறே அங்கு;

மருபூமியில் தண்ணீர்போலே இருள்தருமாஞாலமான ஸம்ஸாரத்திலேயிருந்து வைத்து க்ருஷ்ணாநுபவம்பண்ணி வாழப் பிறந்தீர்காளென்றுமாம். (வாழ்வீர்காள்) அவ்வூர்தன்னிலே பிறந்துவைத்துப் பருவம்நிரம்பியிருக்கையன்றிக்கே, அவனுடைய கடாக்ஷத்துக்கு இலக்காம்படி ஒத்த பருவமாயிருக்கை. க்ருஷ்ணாவதாரத்துக்கு முன்னாதல் பின்னாதலன்

---

சீலகுணத்துக் ககப்பட்டார் மற்றொருகுணத்துக் காளாகாரிறே. ஸ்நேஹோமேபரம: அங்குப்போருமளவல்லகாணும், என்னது ஸ்நேஹம் என் படுத்தாதுதான். "என்றனளவன்றால் யானுடைய அன்பு" என்கிறது. ஆச்ரயத்தினளவல்ல காணும் ஸ்நேஹம். ராஜந்த்வயி இதுதான் பரத்வத்திலேயோ வென்னில்; ப்ரதிகூலரானவர்களும் "ரஞ்ஜநீயஸ்யவிக்ரமை:" என்று மடலெடுக்கும் உம்முடைய பக்கலிலே. இப்போது தவறியிருந்தோமாகில், இனி ஒருக்கால் அங்குக்கொள்ளுகிறோமென்றார். நித்யம்ப்ரதிஷ்டித: காதாசித்கமன்றுகாணும்; ஸ்வரூபாந்தர்க்கதங்காணும். 'பக்திஸ்ச' ஸ்நேஹமாகிறதேது, பக்தியாகிறதேதென்னில்; "நில்" என்ன, "முடிந்தேன்" என்று முறையழியப்பரிமாறின இளையபெருமாள்படி — பக்தி; ஸ்நேஹமாகிறது — ஒன்றறிந்தன்றிக்கே, வ்யதிரேகத்தில் மூச்சடங்கும்படியான சக்ரவர்த்திபடி. "இப்படி வ்யதிரேகத்தில் முடியும்படியானவன் மோக்ஷபலம் பெறுதொழிவானென் ?" என்று நஞ்ஜீயர் பட்டரைக் கேட்க; "இவனுக்குள்ளது நரகமே, பெருமாளாந்ருசம்ஸ்யத்தாலே ஸ்வர்க்கஸ்தனானான்" என்றருளிச்செய்தார். ஸஸத்யவசநாத் "ராமோவிக்ரஹவாந்தர்ம:" என்று-பரமதர்மத்தைவிட்டு வசநத்தைப்பற்றினானாகையாலே. "வீர" இவர்தாம் தோற்றதுறையிருக்கிறபடி. "பாவோநாந்யத்ரகச்சதி" அந்யத்ர என்கிறான்-பேருங்கூட அஸஹ்யமானபடி.

(வாழ்வீர்காள்!) பெருமாள் "ஏகாம்தரணிமாச்ரிதௌ" என்றாப்போலே ஒருபூமியிலே ஆகப்பெறுவதாம்; ஸமகாலத்திலே பிறக்கப்பெறுவதாம்; ஒருஊரிலே யாவதாம்; அதிலும் அவன்காண வேண்டாத ஆண்களாகவும், பருவங்கழிந்த பெண்களாகவு மன்றிக்கே, ஒத்தபருவமாகப் பெறுவதாம்

றிக்கே ஸமகாலத்திலே பிறக்கப்பெறுவதாம் ; அது தன்னி லும் இவ்வூரையொழிந்தவிடத்தே யன்றியே இவ்வூரிலே பிறக்கப்பெறுவதாம் ; அதுதன்னிலும் அவனோடொத்த பருவமாகப் பெறுவதாம் ; இதொருபாக்யாதிசய மிருக்கும் படியென் ! (வாழ்வீர்காள்) அவ்வூரில் வர்த்தநமென்றும் வாழ்ச்சியென்றும் இரண்டில்லைகாணும். அவன்நித்யவாஸம் பண்ணுமிடத்தில் வர்த்தநமே வாழ்ச்சியாயிருக்குமிறே. "வேங்கடத்தைப்பதியாக வாழ்வீர்காள்" என்னக்கடவ திறே. இது கோயிலில்வர்த்தநம்போலே காணும். சொல்லு கிற தங்களுக்கும் வாழ்ச்சி ஒத்திருக்க, "வாழ்வீர்காள்" என்று பிறரைச் சொல்லுகிறதென்னென்னில் ; தாங்கள் தனியே அநுபவிக்குமநுபவம் ரஸாநுபவமாய்த் தோற்றாமை யாலே, அத்தை ரஸமாக்கித் தருமவர்களைக்கொண்டாடு கிறார்கள்.

32. (நாமும்) "அத்தலையாலே பேறு" என்றிருக்கிற நாமும். அவனாலே பேறாகிலும் ருசி இருந்தவிடத்தில் இருக்க

திருவயோத்யையி லுள்ளார்க்குப்போலே, விச்லேஷவ்யஸந மில்லாதவையாகப் பெறுவதாம் ; இதொரு வாழ்ச்சி யிருந்த படியென்தான் ! என்கிறார்கள். "வாழ்வீர்காள்" என்ற பன்மைக்குக் கருத்து-அதொரு விபூதியாக பகவதநுபவமே யாத்ரையா யிருக்குமாபோலே, இதுவும் ஓரூராக இதுவே யாத்ரையாகப் பெறுவதே! ஓரூருக்கொருவனையிறேபெற்றது "விபீஷணஸ்துதர்மாத்மா" என்று. "வக்தாச்ரோதாசதுர் லப:" என்று - சொல்லுவா னொருவனேயாய்க் கேட்பாரில் லாத லங்கைபோலன்றிக்கே, த்ரிபாத்விபூதி ஒருநாடாகச் சமைந்தாப்போலே இதொரு ஊராகச் சமையப்பெறுவதே!

(நாமும்) நம்மில் நாம்வக்தாக்களும் ச்ரோதாக்களுமாக விருந்தோமே யாகிலும், லாபாலாபங்களில் ஸமது:கஸு²க

பி. 32—நாமும் - (1) நாராயணனே நமக்கே பறைதருவான் என்று உபாயாத்யவஸாயத்தை உடையநாமும், (2) உபேயத்வராவி

வொட்டாதிறே. இந்தபலம் ஒருநாள் வரையிலே கைவந்ததாகவற்றே! என்றிருக்கிற நாமுமென்னவுமாம். (நம்பாவைக்கு) நம்முடைய நோன்புக்கு. அவனையும் அவனுடையாரையும் அழிக்கைக்குப்பண்ணும் இந்த்ரஜித் ப்ரப்ருதிகளுடைய யாகம்போலன்றியே, ததீயரும் அவனும் வாழ்க்கைக்குப்பண்ணும் யாகம். ப்ரயோஜநாந்தரபரமான நோன்பன்றியே, க்ருஷ்ணனும் க்ருஷ்ணவிபூதியும் உண்டாகைக்குப் பண்ணுகிற நோன்பு. (செய்யுங் கிரிசைகள்) பண்ணக்கடவ க்ருத்யங்கள். சேதநனுடையாலே ப்ராப்யஸித்தியளவும் காலக்ஷேபத்துக்காக இழிந்து அநுபவிக்கக்கடவ அநுஷ்டாநமென்றபடி. ஆரம்பித்துத் தவிருமவையல்ல; பத்தும் பத்தாகச்செய்தறவேணும்; மடல்போலே காட்டிவிடுமதல்ல.

ரரம்படி யிருக்கிற நாமும். "நாராயணனே" என்று - அத்தலையில் ந்யஸ்தபரரான நாமும். (நாமும் நம்பாவைக்குச் செய்யும் கிரிசைகள்) "ப்ராப்ய ப்ராபகங்கள் அவனே" என்று அறுதியிட்டபின்பு செய்யுமவை ப்ராப்யத்திலே புகுருமத்தனையிறே; இனி பேற்றுக்குடலாகச் செய்வதொன்றில்லை; அச்சமுறுத்திக்கார்யங்கொள்ளப் பார்க்கிறார்களிறே. த்வரை, இருந்தவிடத்தில் இருக்கவொட்டாமையாலே, ப்ராப்யப்ரதிபத்தி பண்ணியே ப்ராபக ஸ்வீகாரம்பண்ணுகிறது. ஆறியிருந்தானாகில் ப்ரதிபத்திபண்ணிற்றிலனுமத்தனையிறே. அதிகாரிதான் முமுக்ஷுவே, ஜ்ஞாநபலமுண்டாகவேணும்; த்யாகமாத்ரத்தையே ஸ்வீகரித்து, ப்ராப்யத்திலே ருசியின்றிக்கே, தான் நினைத்தபடியே நடக்கில் நாஸ்திகத்வமே பலித்துவிடு மத்தனையிறே. க்ஷுத்ரவிஷயத்திலே பிறந்த ச்ரத்தை செயலளவும் பலியாநின்றது, அது பகவத்விஷயத்திலே வேண்டாதன்றிறே. "செய்யுங்கிரிசைகள்" என்கையாலே-அவனும் அவனுடையாரும் வாழும்படியா யிருக்கை.

---

இஷ்டராகிய நாமும். நம்பாவைக்கு - பிறர் அழிதற்காகச்செய்யும் யாகம்போலன்றி, க்ருஷ்ணனும் ததீயரும் வாழ்தற்குச்செய்யும் நோன்பு.

33. (கேளீரோ)'பெண்கள்கிடாய்,க்ருஷ்ணன்கிடாய்' என்று, நிஷேதிக்கிறவூரிலே இங்ஙனே யொருசேர்த்தியுண்டாவதே! பகவத்விமுகர் கோலாஹலத்திலே க்ருஷ்ணாநுபவத்துக்கு இத்தனைபேருண்டாவதே!" என்று அவர்கள் இந்த லாபாநுஸந்தாநத்தாலே ஸ்தப்தைகளா யிருக்கையாலே "கேளீரோ" என்கிறார்கள். மேய்ச்சல்தலையிலே அசையிடுவாருண்டோ. இந்த நாலுநாளும் போனால் நம்மை ஒருவரையொருவர் சேரவொட்டுவர்களோ. (கேளீரோ) "ஸம்ச்ரவேமதுரம்வாக்யம்" (35) என்னும்படியே ச்ரவணந்தானே ப்ரயோஜநமாயிருக்கிறபடி. "புருஷார்த்தோயமேவைகோ யத்கதாச்ரவணம்ஹரே:" (36) என்றானிறே. சொல்லுகிறவர்கள்தான், ஆசார்யபதம்நிர்வஹிக்கைக்காகச் சொல்லுகிறார்களல்லர்; கேட்கிறவர்கள், தங்களுக்கு அஜ்ஞாதமாய்க் கேட்கிறார்களல்லர். "போதயந்த:பரஸ்பரம்" (37) என்று இங்ஙனே யல்லது போதுபோகாமலிருந்தபடி.

---

(கேளீரோ) "க்ருஷ்ணன்கிடாய், பெண்கள்கிடாய்" என்கிற வூரிலே கோபவ்ருத்தர்கள் அநுமதிபெற்று க்ருஷ்ணனோடேகூட அநுபவிக்கப்பெறுவதே! என்கிற ப்ரீத்யதிசயத்தாலே பரவச காத்ரைகளாய்க்கிடக்க, "கேளீரோ" என்கிறார்கள். மேய்ச்சல்தலையிலே அசையிடுவாருண்டோ. பெற்ற அம்சத்துக்கு த்ருப்தராமத்தனையோ, மேன்மேலன பரகு பரகு என்று வரவேண்டாவோ. கேட்கையே உத்தேச்யமாயிருந்தபடி. நாங்களும் வாய்படைத்த லாபம்பெற்று, நீங்களும் செவிபடைத்த லாபம்பெற வேண்டாவோ. "புருஷார்த்தோயமேவை கோயத்கதாச்ரவணம்ஹரே:" ஸபாதலக்ஷக்ரந்தத்தாலே தர்மார்த்தகாம மோக்ஷங்களைச்சொல்லி,

---

பி. 33—மேய்ச்சல்தலை க்ருஷ்ணசம்ஸ்லேஷம் செய்யும்காலம். கேளீரோ - (35-ம் ப்ரமாணம்படி ச்ரவணமேப்ரயோஜனம். மஹாபாரதத்திலே, லக்ஷக்ரந்தத்தால் தர்மார்த்தகாம மோக்ஷங்களைச் சொல்லி, அவற்றில் எது புருஷார்த்தம் என்று, வைசம்பாயன பகவான் தனது சிஷ்யனை ஜநமேஜயனைக்கேட்க, "தேவரீர் பகவத் குணங்களைச்சொல்ல நான் கேட்கையே புருஷார்த்தமாக எண்ணினேன்" என்பது 36-ம் ப்ரமாணக்கருத்து.

34. எங்களுக்கு ஏதாலும் நல்லது, ஆகில்சொல்லலாகாதோவென்ன; மேல்சொல்கிறார்கள் (பாற்கடலுள்பையத் துயின்ற) பரமபதத்தில் நின்றும் ஆர்த்தரக்ஷணத்துக்காகத் திருபாற்கடலளவும் ஒரு பயணமெடுத்துவிட்டு ஜகத்ரக்ஷண சிந்தையிலே அவகாஹிதனாய் ஆர்த்தத்வநிக்குச் செவிகொடுத்துக்கொண்டு கிடக்கிறபடி. (பையத்துயின்ற) "வெள்ளை வெள்ளத்தின்மேலொரு பாம்பை மெத்தையாகவிரித்ததன் மேலே கள்ளநித்திரைகொள்கின்ற" என்னக்கடவதிறே. இவ்வுறக்கத்தின் உண்மை யறிந்தவர், "கள்ளம்" என்று வெளியிட்டாரிறே. (பையத்துயின்ற) பிராட்டிமாரோட்டை போகத்துக்கு இடங்கொடாதே "ஆராலே ஆருக்கு என்ன நலிவு வருகிறதோ!" என்று அதிலே அவகாஹிதனாய்க் கொண்டு சாய்ந்தபடி.

---

"இவற்றில் உன்நெஞ்சில்பட்டதென் ?" என்ன; "நாலிலுமொன்றுமன்று, பகவத்குணவித்தராயிருக்கும் உன்போல்வாரைப் பேசவிட்டு, தென்றலும் சிறுதுளியும் பட்டாப்போலே குளிரச் செவிமடுத்துக் கேட்டுக் கிடக்க வமையுமென்றுபட்டது" என்றான்.

"ஸம்ச்ரவேமதுரம்" ஜ்ஞாநப்ரஸரத்வாரா இந்த்ரியங்கள் புறப்பட்டு பாஹ்யவிஷயங்களை க்ரஹித்து பின்பிறே ரஸிப்பது; அங்ஙனன்றிக்கே, தென்றலும் சிறுதுளியும் பட்டாப்போலே, பட்ட இடமேபிடித்து ரஸிக்கை. "கேட்டாரார்" என்னுமாப்போலே. "மதுரம்" அறிவு கொடுத்து ரஸிப்பிக்கவற்றாயிருக்கை. "வாக்யம்" பூர்வாபரஸங்கதி வேண்டாதே தனியேயினிதாயிருக்கை. "வைதேஹ்யா:" குடிப்பிறப்புவாசிதோற்ற உடம்புபேணாதே யிருந்தபடி. "வ்யாஜஹார" உடம்பில்லாதார்க்குச் செவியில்லையிறே. செவிகொடுத்து வார்த்தைசொன்னானென்கிறது. (கேளீரோ) செவிபடைத்த லாபம் பெறவேண்டாவோ. (பாற்கடலுள்) சொல்லுகிறபடிதான். கீழே "நாராயணன்" என்றார்களே, அந்தநாராயண சப்தவாச்யனான ஸர்வேச்வரன், திருப்பாற்கடலிலே ப்ரஹ்மாதிகளுடைய கூக்குரல் கேட்கும்படி,

35. முதற்பாட்டில்-நாராயணத்வஞ்சொல்லி, இப்பாட்டில் - அங்கு நின்றும் திருவவதாரார்த்தமாகத் திருப்பாற்கடலிலே சாய்ந்தபடியைச் சொல்லுகிறது (பரமன்) தகட்டிலழுத்தின மாணிக்கம்போலே திருவநந்தாழ்வான்மேலே சாய்ந்தருளினபின்பு வடிவிற்பிறந்த புகரின் பெருமையைச் சொல்லுகிறது. அன்றியே, ஜகத்ரக்ஷணார்த்தமாகவந்து கண்வளர்ந்தருளுகையாலே குணத்தினேற்றத்தைச் சொல்லிற்றாகவுமாம். ஸர்வத்தாலும் அதிகனென்றபடி. (அடிபாடி) அவனுடைய ஆதிக்யத்தி னெல்லையை அநுஸந்தித்தால், பின்னை தங்கள்தாழ்ச்சியினெல்லையிலேநிற்கு மத்தனையிறே.

குடில்கட்டிப் பயிர்நோக்கும் க்ருஷிகனைப்போலே, தோள் தீண்டியாகவந்து கண்வளர்ந்தருளுகிறு னென்கிறார்கள். " மன்னுவடதுரைமைந்தன் " என்று மேலே சொல்லப்புகுகிறார்களாகையாலே, " நாராயணன் " என்பது, " பாற்கடலுள் பையத்துயின்ற பரமன் " என்பதாகா நின்றார்கள் ; ஸ்ரீபீஷ்மர் பரத்வமே பிடித்து உபபாதித்துக் கொண்டுவாரா நிற்க, " ஸர்வஷப்ருதுதீர்க்காக்ஷஸ்ஸம்பந்தீதேஜநார்த்தந: " என்று முதலித்துக் காட்டினப்போலே. " அபரம்பவதோ ஜந்ம பரம் ஜந்மவிவஸ்வத: " என்ற அர்ஜுநனுக்குத் தானும் அருளிச்செய்தான். (பைய) "மெள்ளத்துயின்றானை" என்னுமாபோலே ஆர்த்தநாதம் கேட்கும்படி அசங்காதே கிடக்கிறபடி, (துயின்ற) தமோகுணாபிபவத்தாலே வந்த வுறக்கமன்றே: ஆர்த்தநாதம் கேளாதபோதுகாணும் பிராட்டிமார் போகமும்; "மதுராமதுராலாபா" என்று-பிச்சேறப்பண்ணுமவள் பேச்சும் அஸஹ்யமாம்-ஜகத்ரக்ஷணத்தில் திருவுள்ளம் பற்றினபோது. (பரமன்) இருந்தருளினபோதையிலும் சாய்ந்தருளினபோதுகாணும் அங்கப்ரத்யங்கங்களில் புக்கு அநுபவிக்கலாவது. நாட்டார்க்கு மற்றப்படியே; இங்கு "கிடந்ததோர்கிடக்கை" என்றும், "கோலந்திகழக்கிடந்தாய்" என்

பி. 35—அடிபாடி - உபலக்ஷணமாய் திருமேனியில் ஸௌந்தர்யத்தைச் சொல்லுகிறது. உத்தமநாயகிகளாய், தங்கள் போக்யதையாலே அவனைத் தொழுவித்துக்கொள்ளுமவர்கள் ஸௌந்தர்யத்தைப் பாடுவதே இயல்பு.

ஔசித்யத்தாலும் போக்யதையாலும் க்ருஷ்ணன் திருவடிகளைப் பாடாதே திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிறவனைப் பாடுவானென்னென்னில்; இரண்டுடமுமொருவனேயாகையாலும், "நோன்புநோற்கப்புக்கவர்கள் க்ருஷ்ணனைப் பாடாநின்றார்கள்" என்று சொல்லாமைக்காக ஒரு தைவத்தின்பேரைச் சொல்லிற்றாகச் சொல்லுகிறார்கள். (பாற்கடலுள் பையத்துயின்ற) க்ருஷ்ணனை அநுபவிக்கப் புகுந்து க்ஷீராப்திநாதனைச் சொல்லுகிறதென் ? என்னில் ; க்ருஷ்ணனைச் சொல்லிப்பண்டேசங்கித்திருக்கிற இடையர், நமக்கு தைவம்தந்த இச்சேர்த்தியை யழிக்கிறார்களோ !" என்று பயப்பட்டு,க்ருஷ்ணனுக்கடியான க்ஷீராப்திநாதனைச்சொல்லுகிறார்கள். "ஏஷநாராயண:ஸ்ரீமாந் க்ஷீரார்ணவ நிகேதந:— நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோமதுராம்புரீம்" (32) என்னக்கடவதிறே. (அடிபாடி) மஹிஷிகளோடு அல்லாதாரோடு வாசியற சேஷத்வம் ஸமாநமாயிருக்கையாலே, திருவடிகளைப்பாடி என்கிறார்கள். "பள்ளிகொள்ளுமிடத்தடிகொட்டிட" என்னக்கடவதிறே. அவனுடைய வடிவழகை ப்ரீதிப்ரேரிதைகளாய்க்கொண்டு பாடி.

---

றும் சொல்லலாம்படியிருக்கும். ஸர்வாதிகனென்று தோற்றுமாய்த்துக் கண்வளர்ந்தருளும்போது. ஸ: அழகில் ப்ரஸித்தி. மயாபோதித; காகமென்று ஒருவ்யாஜமிடுகிறே ணித்தனை ; என்னாலே கெட்டேன். "ஸ்ரீமாந்" கண்வளர்ந் தருளுகிற போதைகாந்தி ப்ராசுர்யம். "ஸுகஸுப்த:" படுக்கைக்கீடாயிறே உறக்கமிருப்பது. "பரந்தப:" எழுப்பிக்கொள்ள நினைத்த கார்யத்துக்கும் உறக்கமே யமையுங்கிடீர். ஸிம்ஹம் உறங்கும்போதும் துஷ்டம்ருகங்கள் அணையமாட்டாதே. "கௌஸல்யாஸுப்ரஜாராம" உண்ணப்புக்கு வாயைமறைப்பாரைப்போலே, வந்தகாரியத்தை மறந்தான். ஒருதிருவாட்டி பிள்ளைபெறும்படியே! என்கிறான். "படுத்தபைந்நாகணை." (பரமன்) கிட்டவந்து கிடக்கிற குணாதிக்யத்தாலே வந்த ஏற்றமாகவுமாம்.

(அடிபாடி) "பரமன்" என்கிறார்களே; அவனுடைய சேஷித்வத்தை யநுஸந்தித்தால் நடுவு தங்குமவர்களல்லாமை

36. (பாடிநெய்யுண்ணோம் பாலுண்ணோம்) போக்யாந்தரங்களில் அந்வயியோம். உண்டார்க்கு உண்ணவேண்டாவிறே. இவர்கள் உண்டார்களோவென்னில்; ஓம். "உண்ணுநாள்பசியாவ தொன்றில்லை - நமோநாராயணவென்று - உன பாதம் நண்ணுநாள்-அவை பட்டினிநாளே" என்றும், "எல்லாம்கண்ணன்" என்றும், "கூறைசோறிவைவேண்டுவதில்லை" என்றும், "பாதேயம் புண்டரீகாக்ஷ நாமஸங்கீர்த்தநம்ருதம்" (38) என்றும், "வாஸுதேவஸ்ஸர்வம்" (39) என்றும் இப்படியாயிறே ஜ்ஞாநம்பிறந்தாலிருப்பது. "குடியோம்" என்னாதே, "உண்ணோம்" என்பானென்னில்; "உண்ண" என்று-குடிக்கைக்கு ஜாதிப்பேச்சு. ஆகையிறே, "நெய்யுண்டான், வெண்ணெயுண்டான்" என்று க்ருஷ்ணனுக்குப் பேராகிறது. முதல்தன்னிலே க்ருஷ்ணன் பிறந்தபின்பு அதில் வ்யுத்பத்தியில்லாமை. அவன் வருமளவும் உபவாஸக்ருசைகளா யிருக்கக் கடவோம். இவர்கள் தாம் ஆரைக்கெடுக்கப் பட்டினிகிடக்கிறதென்னில்; இவர்கள் உண்ணுதொழிந்தால் பட்டினி விடுவான் அவன்போலே காணும்; ஆகையிறே இவர்கள் இங்ஙனே சொல்லுகிறது.

---

திருவடிகளிலே விழுகிறார்கள். அவனுறக்கம் புருஷோத்தமத்துக்கு ஸூசகமானாப்போலே, இவர்களும் நாரீணாமுத்தமைகளானமைக்கு ஸூசகம் திருவடிகளைப்பாடுகை. அவன் சேஷித்வத்துக்குச் சமைந்தாப்போலே, இவர்கள் சேஷத்வத்துக்குச் சமைந்தபடி. ஸ்தநந்தயப்ரஜை முலையிலேயிறே வாய் வைப்பது. "செவ்வடி செவ்வி திருக்காப்பு" என்னுமவர்களிறே.

(அடிபாடி நெய்யுண்ணோம்) அடிபாடுவதுக்கு முன்பு போலே அவை தாரகமாவது; "எல்லாங்கண்ணன்" என்றிறே பின்னையிருப்பது. "வாஸுதேவஸ்ஸர்வ"மிறே. எல்லாமவனே யென்றிருக்கையாலே, "கூறைசோறிவை வேண்டுவ

---

பி. 36-நெய் உண்ணோம்- விரஹதசைக்கு அநுகுணமாக ப்ரணயரோஷம் தோற்றச்சொல்லுகை - இடையர்பேச்சில் குடியோம் என்னாது உண்ணோம் என்கை.

37. (நாட்காலேநீராடி) அவன்வந்தால் குளிக்கவிராதே, முன்பே தத்போகபோக்யமாகக் குளித்து. விடிவோரை போய்க்குளிக்கக் கடவோம். அவன் திருப்பாற்கடலிலே

---

தில்லை " என்றார் தமப்பனார்; இவள், அவரிலும் உள்புக்கு, இடைச்சியான முறுக்கத்தாலே " நெய்யுண்ணோம் பாலுண்ணோம் " என்கிறாள். (அடிபாடி நெய்யுண்ணோம் பாலுண்ணோம்) உண்டார்க்கு உண்ண வேண்டாவே. " குடிக்கக் கடவது, உண்ணக்கடவது" என்று அறிகிறிலள்முதல் தன்னிலேவ்யுத்பத்தியில்லாமையாலே. இவர்கள் ஸௌகுமார்யந்தான் திருவடிகளைப் பாடுதல் நெய்யும் பாலும் குடித்தாப்போலே. (நெய்யுண்ணோம்) அவன் ஜீவநம் வாங்கோமென்கிறார்கள். (நெய்யுண்ணோம்) இவர்கள் ஆரைத்தான் பட்டினிகொள்ளப் பார்க்கிறது; இவர்கள் உண்டால் பசிகெடுவது அவனுக்குப்போலே. சரீரத்துக்கு வரும் நன்மை சரீரிக்கிறே. "யஸ்யாத்மாசரீரம்."

(நாட்காலேநீராடி) ப்ராஹ்மமுஹூர்த்தத்திலே குளிக்கக்கடவோம். அவன் திருப்பாற்கடலிலே கிடந்த கிடையென்னச்சுதுதான். மஹிஷியானவள் குளித்து விரல் முடக்குமதிற் காட்டில் மடலுண்டோ. "ஒதிநாமம்" அவனையழிப்பார் வார்த்தைகளிருக்கும்படியிறே. (நாட்காலே நீராடி) அதில் அவனைப் பிற்பாடனுக்கக்கடவோம். " நமேஸ்நாநம்" பர்த்தாவின் அஸந்நிதியிலே குளிக்கு இருப்க்கும் பார்யையைப்போலே. " வஸ்த்ராண்யாபரணநிச" உடம்பு தானே மிகையாயிருக்க, அதுக்குமேலே அந்தரமானவற்றைச் செய்யவோ. " உடம்பினால் குறைவிலமே " என்றாதேயிருக்கிறது. "தம்விநா" குளிப்பார்க்கு ப்ரதாநோபகரணம் வேண்டாவோ. " கைகயீபுத்ரம் " "நடுவிலாய்ச்சி

---

பி. 37-நீராடி-மூன்றுதாத்பர்யம்—(1) அவன் போகார்த்தம் (2) அவனைப்பெறுகைக்குசாதனம் (3) விரஹதாபம்மாறுகைக்கு. (1) அவன்வந்தால் குறிக்கோள்வேறாகும் (2) ஒதிநாமங்குளித்துச்சிதன்னால்...எனும்த்வரை (3) விச்லேஷதாபம் ஆறும்படி ஸ்ரீபராதாழ்வானைப்போலே அபரராத்ரியில் குளிக்கை.

வந்து சாய்ந்தருளினதை அஸத்யமாக்கக் கடவோம். மஹிஷியானவள் ஸ்வரக்ஷணத்திலே ப்ரவர்த்திக்கும்படியாக இருக்கைக்கு மேற்பட புருஷனுக்கு அவத்யமில்லையிறே. அதாவது - தங்கள் த்வரையாலே அத்தலையில் உபாயபாவத்தை அழிக்கிறார்கள். "ஓதிநாமங்குளித்துச்சி தன்னொளிமாமலர்ப் பாதநாளும்பணிவோம் நமக்கேநலமாதலில்" என்கிறார்கள். ஸ்ரீபரதாழ்வானைப்போலே, விரஹதாபமாறுகைக்காக "நோன்பு" என்று ஒரு வ்யாஜத்தையிட்டுக் குளிக்கத் தேடுகிறார்களிறே; "அத்யந்தஸுகஸம்வ்ருத்த ஸ்ஸுகுமாரஸ்ஸுகோசித: கதந்வபரராத்ரேஷு ஸரயூமவகாஹதே" (40) என்கிறபடியே.

38. (மையிட்டெழுதோம்) முதலிலே மையகண்ணளிறே. இனி அஞ்ஜநமிடுவதும் மங்களார்த்தமாகவிறே; அதுதவிரக்கடவோமென்கையாலே-அவனுக்கு அவகாசப்ர

---

பிள்ளையை நலிந்தாள்" என்று, நாமும் அவனை நலியவோ. "கைகயீபுத்ரம்" ரிஷிகளோடே ஸம்பாஷிக்கவும், அவர்கள் விரோதிகளைப் போக்கவும், அத்தால் வந்த புகழும், அவளால் வந்ததன்றோ; அவள் பெற்ற பிள்ளையன்றோ. "பரதம்" அவள் ஸம்பந்தம் மிகை யென்னும்படி யன்றோ அவன்றன்படி. "தர்மசாரிணம்" நம்மைப்பிரிந்தால் அவனிருக்கும்படியிருந்தால், அவனைப் பிரிந்தால் நாமிருக்கும்படி இருக்க வேண்டாவோ. இப்படி சேஷபூதர் அஸந்நிதிகளிலே சேஷிகள் குளிக்குஇருப்பர்களிறே; அத்தைப் பொய்யாக்கி அவனையொழிய நாங்கள்குளிக்கக்கடவோ மென்கிறார்கள். (நாட்காலேநீராடி) ஸ்ரீபரதாழ்வானைப்போலே. "அத்யந்த ஸுகஸம்வ்ருத்த:" இத்யாதி. "சேதேசீதேமஹீதலே பரதஸ்யவதேதோஷம்" என்றவன்வார்த்தையிறே. "அநுகூலன்" என்றறிந்தவாறே நாம் தலைமுறித்திட்டாகிலும் கிடப்புதோம், அவன் தறைக்கிடை கிடக்கிறான் என்கிறார்.

(மையிட்டெழுதோம்) மையகண்ணளிறே. இனி அதுதனக்கு நிறங்கொடுக்கையிறே உள்ளது. அவனைக்கெடுக்

தாநம் பண்ணக்கடவோ மல்லோமென்கிறார்கள் ; இவர்கள் அஞ்ஜநமெழுதப்புக்கால் குறையும் தலைக்கட்டுவான் அவனேயிறே. பரிபூர்ணவிஷயத்தில் இப்படி அவகாசப்ரதாநம் பண்ணப் பெறுதவன்று கிஞ்சித்கரித்ததாக விரகில்லையிறே. அவனும் பரமப்ரணயியாகையாலே "இங்கே கிஞ்சித்கரித்து ஸ்வரூபம் பெறவேணும்" என்றிருக்கும். (மலரிட்டு நாம் முடியோம்) "சுரும்பார் குழற்கோதை" என்றும், "வாசஞ் செய்பூங்குழலாள்" என்றுமிறே யிருப்பது. இனி, பூவுக்குத் தான்நாற்றங்கொடுக்கைக்காகவாய்த்துப் பூமுடிப்பது; அதுசெய்யக்கடவோமல்லோமென்கை. (நாம்முடியோம்) அவன்தான் மாலையைக்கொடுவந்து மயிரைமுடித்து அலங்கரித்து விரல்கவ்வி "இது வாங்காதொழிய வேணும்" என்னுமாகில், செய்யலாவதில்லை. அவன் தன்தீம்பாலே செய்யுமத்தை நம்மால்செய்யலாவதில்லையே ; நாமாகச் செய்யாதொழியு மித்தனையிறே வேண்டுவது. "அத்ரோபவிச்யஸா தேநகாபிபுஷ்பைரலங்க்ருதா-அந்யஜந்மநிஸர்வாத்மா விஷ்ணுரப்யர்ச்சிதோயயா" (41) என்னக்கடவதிறே.

---

கிறான் காணும். இவர்கள் தொடங்கினுலிறே அவன் குறையும் கற்பிப்பது. அவன் கிஞ்சித்காரத்துக்கு அவகாசப்ரதாநம் பண்ணேமென்கிறார்கள். சேஷிக்கு கிஞ்சித்கரியாதபோது சேஷத்வமில்லை. அவன் நிரபேக்ஷனுகையாலே கிஞ்சித்காரத்துக்கிடமில்லை ; இவன் ஸ்வரூபலாபத்துக்காகவே அவன் ஸாபேக்ஷரைப் போலே இவர்கள் கிஞ்சித்காரங்கொள்ளக்கடவன். இவன் சேஷத்வம் தன்னுடைய சேஷித்வத்திலே சேருகையாலே இது ஸ்வரூபாந்தர்க்கதம். (மலரிட்டுநாமுடியோம்) சுரும்பார்குழற்கோதையிறே. அப்போதலர்ந்த செவ்விப்பூவினின்றும் வண்டுகள் கால்வாங்கி இவள் குழலிலே படியும்படியிறே திருக்குழலிற் செவ்வியிருப்பது. தான் "மாலைசூட" என்று தொடங்கினுல், குறையும் அவன் வந்து சூட்டி அலங்கரிக்குமிறே ; அதுக்கு அவனுக்கு அவகாசம் வையோமென்கை. (நாம்முடியோம்) அவன்றானே வந்து சூட்டில் செய்யலாவதில்லையே.

39. (செய்யாதனசெய்யோம்) விதியுண்டாகிலும், பூர்வர்கள் ஆசரித்ததற்கு மேற்பட ஆசரிக்கக்கடவோ மல்லோம். அதாகிறது-"ஸுஹ்ருதம்ஸர்வபூதாநாம்"(42) என்று-அவன் ஸர்வபூதஸுஹ்ருத்தாக விருந்தானேயாகிலும் ததீயரை முன்னிட்டுக்கொண்டல்லது அவனைக்கிட்டக்கடவோ மல்லோ மென்கை. பெண்களில் முற்படவுணர்ந்தார் ஒருவரை யொருவர் எழுப்பி, எல்லாருங்கூடியல்லது க்ருஷ்ணனைக்கிட்டக்கடவோ மல்லோ மென்கை. "நிவேதயதமாம் க்ஷிப்ரம்" (43) என்றும் "பிதாமஹம்நாதமுநிம்விலோக்யப்ரஸீத" (44) என்றும் இவையிறே ப்ரமாணங்கள். ஸ்ரீபரதாழ்வானை முடிசூடச் சொன்னவிடத்தில் ஸர்வப்ரகாரத்தாலும் யோக்யதையுண்டாயிருக்க "இக்குடியில் இதுக்கு முன்பு செய்யாதன நான்செய்யமாட்டேன்" என்றானிறே. (தீக்குறளைச்சென்றோதோம்)பிறர்க்கு அநர்த்தாவஹமாகப்பொய் சொல்லக்கடவோமல்லோம். பிராட்டி, பெருமாள்பக்கல் ஏகாந்தத்திலும் ஏசாக்ஷி ஏககர்ணிகள் நலிந்தபடி சொல்லிற்றுகவில்லையே ஸ்ரீராமாயணத்தில். நம்மில் நாம் "நப்பின்னை நங்காய்" என்றும் "நாயகப்பெண்பிள்ளாய்" என்றும்,

(செய்யாதனசெய்யோம்) வசநஸித்தமேயாகிலும் பூர்வர்கள் அநுஷ்டாநமேயொழிய வேறுசெய்யக்கடவோ மல்லோம். ப்ரஸக்தத்துக்கிறே ப்ரதிஷேதமுள்ளது, இது இப்போதென்னென்னில்; ஸ்வரூப கதநம். ஆழ்வான் "எங்கள் பூர்வர்கள் தேவதாந்தரபஜநம்பண்ணுமையாலே" என்றானும். ப்ரதிபுத்தாநஸே வந்தேயிறே. ப்ராப்யப்ராபகங்கள் அவனே

---

பி. 39-புருஷகாரத்தை முன்னிட்டுக் கொண்டல்லது அவனைக்கிட்டாமை பூர்வர்கள் செய்யாதன-ஆகையால் ததீயரை முன்னிட்டுக் கொண்டல்லது அவனைக் கிட்டக்கடவோம் அல்லோம் (இதுஸ்வாபதேசத்தில்) - ஸ்ரீபரதாழ்வானை முடிசூடச்சொன்ன இடத்தில் சர்வப்ரகாரத்தாலும் யோக்யதை உண்டாயிருக்கவும் "இக்குடியில் இதற்குமுன்பு செய்யாதன நான் செய்யமாட்டேன்" என்றது அந்யாபதேசத்தில் உதாரணம். குறளை - குற்றம், பொய். "நாயகப்பெண்பிள்ளாய்" - நிர்வாஹகையாயிருந்தபடி இதுதானோ என்று வெறுத்துச்சொல்கையால் குறளையாயிற்று.

“ பேய்ப்பெண்ணே ” என்றும் ஒருவர்க்கொருவர் இட்டீடு கொண்டுசொன்னவை க்ருஷ்ணன் செவிப்படுத்தக்கடவோ மல்லோம்.

40. (ஐயமும் பிச்சையு மாந்தனையும் கைகாட்டி) ஐயமாவது-யோக்யவிஷயத்திலே குருவாக வ்யயிக்குமது; பிச்சையாகிறது - ப்ரஹ்மசாரிகளுக்கும் ஸந்யாஸிகளுக்கும் இடுமது. “இங்கு க்ருஷ்ணனுபவம்பண்ணுவோம்” என்பார்க்கு அவனையநுபவிப்பித்தும், “ ததீயரையநுபவிப்போம் ” என்பார்க்கு அவர்களை யநுபவிப்பித்தும் போரக்கடவோம். (ஆந்தனையும்) அவர்கள் கொள்ளவல்லராந்தனையும் ; அர்த்திகள் ஆமளவும். (கைகாட்டி) ஸர்வத்தையும் கொடுத்தும் “ ஒன்றும் செய்யப்பெற்றிலோம் ” என்றிருக்கை. இவர்களை க்ருஷ்ணநுபவம் பண்ணிவைத்தும் இவர்கள் திறத்தில் ஒன்றும்செய்யப் பெற்றிலோம் என்றிருக்கையைச் சொல்லுகிறது. அதவா, ஐயமாகிறது-ஈச்வரனுடைய ஸ்வரூப ரூப குணவிஷயஜ்ஞாநம் ; பிச்சையாகிறது - ஆத்மஸ்வரூபமாத்ர ஜ்ஞாநம். இவற்றைத்தனக்குள்ள வளவும் உபதேசிக்கையென்றுமாம். (கைகாட்டி) இப்படி ஜ்ஞாநோபகாரகனைனும் அவ்வுபகாரம் தன்னெஞ்சில் தட்டாதிருக்கை.

---

யாகிலும், அநாத்மகுணங்கள் தவிருகையும் ஆத்மகுணங்களுண்டாகையும் தவிராதே, சேதநனைகையாலே. “ ஸர்வபூதாத்மகேதாத ” கார்யகாரணங்களினுடைய அநந்யத்வத்தைச் சொல்லுகிறது. “ஜகந்நாதே” ஜகத்துக்கும் அவனுக்

---

40. பி—ஐயம் - விபுவானக்ருஷ்ணனை அனுபவிக்கை பிச்சை-அணுஸ்வரூபரான ததீயரை அனுபவிக்கை (“இங்கு க்ருஷ்ணனுபவம் பண்ணுவோம்...போரக்கடவோம்” என்பதன் தாத்பர்யம்) அர்த்திகள் ஆமளவும்-வந்த அர்த்திகள் எல்லோருக்கும் கொடுத்து இனி அர்த்திகளில்லை எனுமளவும். ஐயம்-ஈச்வரனுடைய ஸ்வரூப ரூபகுணவிஷய ஞானம் ; பிச்சை - ஆத்மஸ்வரூபமாத்ர ஞானம் - “கொடுத்து” என்றது, “கைகாட்டி” என்பதன்கருத்து, ஞானோபகாரகன் ஆனாலும், அந்த உபகாரம் தனது நெஞ்சில் தட்டாதிருக்கை, ஸர்வத்தையும் கொடுத்தும் ஒன்றும் செய்யப்பெற்றிலோம் என்றிருக்கை.

41. (உய்யுமாறெண்ணி) இப்ரகாரங்களாலே உஜ்ஜீவிக்கும் படிகளையெண்ணி. பகவத்விஷயத்திலே உள்புக்கவன்றிறே இவன் உஜ்ஜீவித்தானாகிறது; அது இல்லாதபோது "அஸந்நேவ ஸ்ரீறே." (45) (எண்ணிப்புகந்து) மநோரதவேளையே தொடங்கி ரஸிக்கிறபடி. "ஸாஸா கம்கர்துமவ்யயம்" (46) என்கிறபடியே-ஸ்மர்த்தவ்யவிஷயத்தில் ரஸ்யதையாலேஸ்ம்ருதிவேளையே தொடங்கி ரஸிக்குமிறே. "எண்ணியுகந்து-செய்யும் கிரிசைகள் கேளீரோ" என்றந்வயம்... ... ... உ

42. ஸ்வாபதேசவியாக்யானம் அவதாரிகை.—இரண்டாம்பாட்டு. (வையத்தித்யாதி) இப்பாட்டில், பகவத்கைங்கர்யத்திலே ருசியுடையராய் அவனையே உபாயமாகப்பற்றியிருக்கிற இவ்வதிகாரிக்கு ஸம்பாவித ஸ்வபாவ விசேஷங்களை அருளிச் செய்கிறார். வ்யா.—(வையத்து வாழ்வீர்காள்) இருள்தருமாஞாலமான இவ்விபூதியிலே பிறந்துவைத்து பகவதநுபவம் பண்ணப்பெற்ற பாக்யவதிகாள். பகவத்குணங்கள் ஸ்வஸ்வ விஷயத்திலே சேர்ந்து விளங்காநின்றுள்ள

கும் ஸம்பந்தம்-சேஷசேஷிபாவத்தாலேயென்கிறது. "ஜகந்மயே" சரீரசரீரிபாவத்தாலே இஸ்ஸம்பந்தமென்கிறது. "பரமாத்மநி" இவற்றுக்குத் தான்வ்யாபகனைப்போலே தனக்கு வ்யாபகாந்தரமில்லை யென்கிறது. "கோவிந்தே" இவ்வைச்வர்யத்தைக்கொண்டு கடக்கவிராதே கிட்டநிற்குமவனென்கிறது. "மித்ராமித்ரகதாகுத:" ஸம்பந்த மிதுவானபின்பு மித்ரத்வ ப்ரதிஸம்பந்தியான அமித்ரத்வமுமில்லையென்கிறது. முக்தனுக்கு ததீயத்வாகாரத்தாலே லீலாவிபூதி உத்தேச்யமாகாநிற்கச்செய்தே த்யாஜ்யமுமாகிறதிறே. விபூதிமாத்ரமே உத்தேச்யமாமன்று, அவனுக்கு தநுபூதரான ப்ரஹ்மாதிகளோடொக்க "நீராய் நிலனாய்" என்கிறதுவும் உத்தேச்யமாமிறே. இவை ஆச்ரயணீயமானாலும் ஈச்வராபிமாநிகள் த்யாஜ்யரிறே. அக்நிஹோத்ராக்நிக்கும் ச்மசாநாக்நிக்கும் அக்நிஸாம்யமுண்டா யிருக்கச்செய்தே, விதிதந்த்ரங்களிலே ஒன்று நிஷித்தமாகவும் ஒன்று சுத்தமாகவும் சொல்லா நின்றதிறே. இப்படி பூர்வர்கள் அநுஷ்டாநமுண்டிறே. "ஸாஹ்ருதம் ஸர்வபூதாநாம்" என்கிறபடியே ப்ராப்தி உண்டாகிலும் ஒரு

இவ்விபூதியிலே பிறந்து பகவத்குணநுபவம்பண்ணுகிற பாக்யவதிகாளென்கிருர்க ளாகவுமாம். இத்தால் - "விண்ணுளாரினுஞ் சீரியர்" என்கிறது. விண்ணுளாருக்கும் இங்கேவந்திறே சீலாதிகுணங்களையநுபவிக்கவேண்டுவது. இங்குள்ளார்க்கு ஸ்வரூபஜ்ஞாநமுண்டாஞல் யாவத்குணவிசிஷ்டனை இங்கேயநுபவிக்கலாமிறே. (நாமும்) "அவனுலே புருஷார்த்தம்" என்றிருக்கிற நாமும். (நம்பாவைக்கு) ப்ராப்யருசிபரவசராய் நாமநுஷ்டிக்கிற நோன்புக்கு. அவனும் அவன் விபூதியும் வாழ்கைக்கு பகவத்விஷய மங்களாசாஸநபரரான நாமநுஷ்டிக்கிற நோன்புக்கென்னவுமாம். (செய்யுங்கிரிசைகள்) அவச்யமநுஷ்டேயமான க்ரியைகளை. (கேளீரோ) அந்யபரதையில்லாமல் கேளுங்கோள். பகவத்விமுககோலாஹலத்திலே தாங்கள் பகவதநுகூலராய், பகவதநுகூலரைத்தேடி அழைக்கும்படி யித்தனைபேருண்டாவதே! என்று அந்யபராயிருக்க, "கேளீரோ" என்று அந்யபரதையைத் தவிர்க்கிருர்கள்.

---

வர் ஒருவரையெழுப்பி எல்லாரும் திரளவல்லது அவன் முன்பு நிற்கக்கடவோமல்லோம்; நாம் தனியே சென்று நிற்கில் வைரூப்யாவஹமாம். (செய்யாதனசெய்யோம்) "ஸர்வாத்மநாபர்யநுநீயமாந:" என்ற இளையபெருமாளைப்போலேயும், சக்ரவர்த்தியும் பெருமாளும் கொடுக்கையாலே ராஜ்யம் பண்ணுகை சாஸ்த்ரார்த்தமா யிருக்க, "இவ்வம்சத்தில் முறை தப்புவாரில்லை" என்று ஸ்ரீபரதாழ்வான் முடிக்கு இருய்த்தாப்போலேயும்.

(தீக்குறளைச் சென்ருேதோம்) "பேய்ப்பெண்ணே" என்றுவையவுங்கடவோம்; "நாயகப்பெண்பிள்ளாய்" என்று காலிலே விழவுங்கடவோம்; அவன்செவிப்படுத்தோம். பத்துமாஸம் சுற்றுமிருந்து ராக்ஷஸிகள் பண்ணின தர்ஜநபத்ஸநாதிகளை ஏகாந்தத்திலும் பெருமாளுக்கு விண்ணப்பஞ்செய்யாத பிராட்டியைப்போலே. (சென்ருேதோம்) அவன்ருன் கலந்து நின்று அறியுமாகில் செய்யலாவதில்லை. (சென்ருேதோம்) பிறர்செய்யுமவை அறிவிக்கச் சென்ருலும் அவன் முகத்தில்தண்ணளிகண்டால் அறிவிக்கவொண்ணுதபடியிருக்குமே. "ஸகிந்த்யம்ப்ராசாந்தாத்மா" என்றிறே யிருப்பது.

**43.** (*பாற்கடலித்யாதி*) திருப்பாற்கடல்நடுவே திருவநந்தாழ்வானுகிறபடுக்கையிலே பிராட்டிமார்திருமுலைத்தடத்தாலே நெருக்கியணைத்தாலும் அவர்களுக்கு முகங்கொடாதபடி ஜகத்ரக்ஷண சிந்தையிலே அவஹிதனாய்க் கண்வளர்ந்தருளுகிறவனாய்; அதனைவபரமபதத்தில் நின்றும் ஸம்ஸாரிசேதநஸம்ரக்ஷணார்த்தம் திருப்பாற்கடலிலே அவஸரப்ரதீக்ஷணாய்க்கொண்டு கண்வளர்ந்தருளுகையால் வந்த குணநிசயத்துக்கொப்பில்லாதவனாய்; திருவநந்தாழ்வான்மேலே சாய்ந்தருளுகையால் வந்த பரபாகசோபைக்கொப்பில்லாதவனாயிருக்கிற வெம்பெருமானுடைய திருவடிகளை, ப்ரீதிக்குப் போக்குவீடாகப்பாடி போக்யாந்தரங்களில் அந்வயியோம். (*நாட்காலேநீராடி*) ப்ராதஸ்நாநத்தைப் பண்ணி. இத்தால்-கர்மயோகத்தை உபலக்ஷிக்கிறது. இத்தால்-தத்தத்வர்ணாச்ரமோசிதமான ஸ்நாநாதி நித்யகர்மங்கள் இவ்வதிகாரிக்கு யதாவதநுஷ்டேய மென்றதாய்த்து. "பாடி" என்றது-பாடக்கடவோமென்றபடி. "நீராடி" என்றது-நீராடக்கடவோமென்றபடி. "தத்துகர்மஸமாசரேத்" என்று-இவ்வதிகாரிக்கு அநபிஸம்ஹிதபலமானகர்மம் அநுஷ்டேயமென்றதிறே. (*மையிட்டெழுதோம் மலரிட்டு நாம் முடியோம்*) மை, கண்ணுக்குப்ரகாசகமாகையாலே, ஆத்மயாதாத்ம்யப்ரகாசகமான ஜ்ஞாநயோகத்திலந்வயிக்கக்கடவோமல்லோம்; பூச்சூடுகைபோகரூபமாகையாலே, "மலரிட்டுநாமுடியோம்" என்று - பகவதநுபவரூபமான பக்தியோகத்திலந்வயிக்கக்கடவோ மல்லோமென்கிறது. (*நாம்முடியோம்*) நாமாய் பக

---

(*ஐயமும்பிச்சையும்*) ப்ராப்தகாலங்களிலே ஆர்த்தரையும் யோக்யரையும் பார்த்து இடுமவை. (*ஆந்தனையும்*) அவர்கள் கொள்ள வல்லராந்தனையும், கொடுத்து. (*கைகாட்டி*) எல்லாம் கொடுத்தாலும், கொடுத்ததுண்டோ என்றிருக்கை. அதாவது-ஒருவரையொருவர் எழுப்புகையும், அவர்களுக்கு ஸர்வஸ்வதாநமாகத் தங்களைக்கொடுக்கையும், எல்லாரையும் கொண்டுபோகையும், க்ருஷ்ணாநுபவம் பண்ணிவைக்கையும், இவையெல்லாம் செய்தாலும் ஒன்றும் செய்யப்பெற்றிலோமென்றிருக்கையும்.

வத்ப்ராப்தி ஸாதநங்களான ஜ்ஞாநயோக பக்தியோகங்களி ரண்டிலு மந்வயியா தொழிகையே வேண்டுவது; அவன்றுனே யிவ்வாத்மவஸ்துவை அநுபவிக்கும்போது ஜ்ஞாநபக்திக ளிரண்டையுங்கொடுத்து, “இவற்றை நீ தவிராதொழிய வேணும்” என்று நிர்ப்பந்திக்கும்போது நம்மால்செய்யலாவதொன்றில்லையிறே. நாமாயநுஷ்டிக்கிறபோதும் அவன் கொடுக்க நாம்பரிக்ரஹியாதபோதும் ஸ்வஸ்வாதந்த்ரியம் குலையாமையாலே, அது குலைகைக்காக நாமாயநுஷ்டியா தொழிகையும் வேணும்; அவன்தர நாம்பரிக்ரஹிக்கையும் வேணும்.

44. (செய்யாதன வித்யாதி) ப்ரமாணமுண்டேயாகிலும் பூர்வாசார்யர்கள் அநுஷ்டியாதவற்றை யநுஷ்டிக்கக் கடவோமல்லோம். அதாவது - எம்பெருமான் வாத்ஸல்யாதி குணவிசிஷ்டனேயாகிலும் ததீயரை முன்னிட்டல்லது அவனைப் பற்றக்கடவோமல்லோம். (தீக்குறளைசென்றோதோம்) பராநர்த்தாவஹமான பொய் சொல்லக்கடவோமல்லோம். (ஐயமித்யாதி) பகவத்வைபவத்தையும் பாகவதவைபவத்தையும் தாமறிந்தவளவு முபதேசித்து. “நாமொன்று முபதேசித்திலோம்” என்று தம் கார்ப்பண்யத்தை யநுஸந்தித்து. அர்த்திகளுள்ள வளவும் உபதேசிக்கக்கடவோம். (உய்யுமாறெண்ணியுகந்து)ஏவம்ப்ரகாரேண உஜ்ஜீவிக்கும்படியெண்ணியுகந்து-செய்யுங்கிரிசைகள் கேளீரோ என்றந்வயம் ........ உ

---

(உய்யுமாறெண்ணி) “அஸந்நேவஸபவதி” என்றிறே முன்புகிடந்தது; “ஸந்தமேநம்ததோவிது:” என்கிறபடியாகை. (எண்ணிஉகந்து) மநோரதமே பிடித்து தித்தியாநிற்கும் போலே. [நின்புகழ்இத்யாதி] உன்னுடைய கல்யாணகுணங்களை யநுஸந்திக்கும் அநுஸந்தாநத்தோடு ஒக்குமோ நீபோரப்பொலியக்கொடுக்கும் பரமபதம். “மாலேபடிச்சோதிமாற்றேலினி” “மறப்பின்மையான்வேண்டும்மாடு.” “உகந்து-செய்யுங்கிரிசைகள் கேளீர்” என்கிறார்கள். விதிபூர்வமாகச் செய்கையன்றிக்கே ப்ரீதிபூர்வமாகச் செய்கை .... .... உ

## மூன்றாம்பாட்டின் அவதாரிகை

**மூவாயிரப்படி** :—45. மூன்றாம்பாட்டு. ஸ்வர்க்கார்த்த மாகயஜிக்குமவனுக்கு ஸ்வர்க்கம்ப்ரதாநபலமாயிருக்கச்செய் தேயும், "ஆயுராசாஸ்தே" (47) என்கிறபடியே ஆயுஸ்ஸு புத்ரனென்று அவாந்தரபலமாயிருப்பன சில உண்டா யிருக்கும்; இவர்களுக்கு அங்ஙனமொன்றுமின்றிக்கே, "ஸர்வலா பாயகேசவ:" (48) "மாதாபிதாப்ராதா" (49) "சேலேய்கண் ணியரும்" என்றும்-எல்லாம் அவன்றானேயாகையாலே, தங் களுடைய நோன்புக்கநுமதிபண்ணினார்க்கு வரக்கடவதான பலமிருக்கும்படியைச் சொல்லுகிறார்கள். "அநஸூயவே" (50) என்று - அஸூயையைப் பண்ணுதொழியவமையுமிறே அதிகாரிகளாகைக்கு. "யத்ராஷ்டாக்ஷரஸம்ஸித்த:" (51) இத்யாதியாலே ஒருத்தனைச் சொல்லக்கடவது. ஆனபின்பு இவர்களித்தனைபேரிருந்தால் நாடுவாழச்சொல்ல வேண்டா விறே.

---

**ஆறாயிரப்படி** :—அ. மூன்றாம்பாட்டில், சேதநர் "ஜ்யோ திஷ்டோமேநஸ்வர்க்க காமோயஜேத" என்று-ப்ராதாநபலம் ஸ்வர்க்கமென்றிருப்பர்கள். இனி, "ஆயுராசாஸ்தே" என்று தந்தாமுக்கு நன்மைவேண்டியிருக்கையாலே அவாந்தரபலம் புத்ரர்கள் க்ருஹக்ஷேத்ரங்கள் த்ருஷ்டாதிகளென்றிருப்பர் கள்; இவர்களுக்கு இரண்டும் த்யாஜ்யமிறே. "உன்றன்னோ டுற்றோமேயாவோ முனக்கே நாமாட்செய்வோம்" என்னுமது இறே இவர்கள் ப்ரதாநபலமாகநினைத்திருப்பது; இனி அவாந் தரபலமாக நினைத்திருப்பது தாங்கள் இருந்தநாடு ஸம்ருத்தமா யிருக்கை; ஆகையாலே இனி அதுக்கு அநுமதிபண்ணினார்க்கு நன்மையை ஆசைப்படுமித்தனையிறே. "ப்ரவக்ஷ்யாம்யநஸூ

பி. 45 - எம்பெருமானையே ப்ராப்யமும் ப்ராபகமும் என்று நிச்சயித்திருக்கும் இவர்கட்கு, நாட்டின் செழிப்பும் பசுக்களின் செழிப்பும் ப்ரதானபலம் அல்லவாயினும், தங்கள் நோன்புக்கு அநுமதிபண்ணினவர்களுக்குத் தாங்கள் நோன்பிருப்பதால்வரும் நன்மைகளைச் சொல்கிறார்கள். ஸ்வர்க்கம் பெறுதற்கு யாகம் செய்

ஓங்கியுலகளந்தவுத்தமன்பேர்பாடி
நாங்கள்நம் பாவைக்குச்சாற்றிநீராடினால்
தீங்கின்றிநாடெல்லாம்திங்கள்மும்மாரிபெய்து
ஓங்குபெருஞ்செந்நெலூடுகயலுகளப்
பூங்குவளைப்போதிற்பொறிவண்டுகண்படுப்பத்
தேங்காதேபுக்கிருந்துசீர்த்தமுலைபற்றி
வாங்கக்குடநிறைக்கும் வள்ளற்பெரும்பசுக்கள்
நீங்காதசெல்வம்நிறைந்தேலோரெம்பாவாய்.

பதவுரை :—மஹாபலிவார்த்தநீர் கையிற்பட்டவாறே ஓங்கி-ஆகாசத்தளவும் வளர்ந்து, உலகு-மூன்றுலோகங்களையும், அளந்த-திருவடிகளாலே யளந்துகொண்ட, உத்தமன் - புருஷோத்தமனுடைய, பேர்-திருநாமங்களை, பாடி-ப்ரீதிக்குப்போக்குவிட்டுப்பாடி, நாங்கள்—, நம்பாவைக்கு - எங்களுடைய நோன்புக்கு, சாற்றி - ஒருப்பட்டு, நீராடினால்—, நாடெல்லாம் - தேசமெங்கும், தீங்கு - வெள்ளக்கேடும் வறட்கேடுமாகிய தீங்கு, இன்றி - இல்லாமல், திங்கள்-மாஸந்தோறும், மும்மாரி - மூன்றுமழை, பெய்து - வர்ஷித்து, அத்தாலே, ஓங்கு-ஆகாசத்தளவும் ஓங்கி, பெரு - ஒரு முதலே ஒரு செய்யை நிறைக்கவற்றான, செந்நெல்-செந்நெற்பயிர்களினுடைய, ஊடு - நடுவே, கயல்-கயல்களானவை, உகள-துள்ளவும், பூ-அழகு மிக்கிருக்கிற, குவளைப்போதில்-நெய்தல்மலரிலே, பொறி-ஒளியையுடைத்தான, வண்டு - வண்டுகளானவை, கண்படுப்ப - கண்வளரவும், புக்கு-தொழுவத்திற்புக்கு, தேங்காது-அசையாமல், இருந்து-பொருந்தியிருந்து, சீர்த்தமுலை-பருத்தமுலைகளை, பற்றி - இடையர்கள் இருகையாலும் பற்றி, வாங்க - வலிக்க, குடம - குடங்களை, நிறைக்கும் - நிறையாநின்றுள்ளதாய், வள்ளல் - சிறுபிள்ளைகளும் கட்டவும் அடிக்கவுமாம்படி உதாரஸ்வபாவத்தையுடைத்தான, பெரு-மிகப்பருத்திருந்துள்ள, பசுக்கள்-பசுக்களும், நீங்காத - அழிவில்லாத, செல்வம் - ஸம்பத்தும், நிறைந்து-நிறைந்திருக்கவேணுமென்கிறார்கள்.

---

வோர்க்கும் ஆயுள், புத்ரர்கள் என்று அவாந்தரபலங்களும் உண்டாயிருக்கும். அஷ்டாக்ஷரவித்தர் ஒருவர் இருந்தாலே நாடு செழித்து வாழும் ; பலர் இருப்பதால் நோன்புக்கு அனுமதி பண்ணினார் பண்ணுதர் எனும் வாசியற எல்லோரும் வாழச்சொல்லவேண்டாம் என்பது 50, 51-ம் பிரமாணங்களின் கருத்து.

46. வ்யா.—(ஓங்கி யுலகு அளந்த) இவர்கள் முதலே தொடங்கி "நாராயணன்" என்று உபயவிபூதியோகத்தைச் சொல்லி, "பாற்கடலுள்பையத்துயின்ற" என்று - அவதாரார்த்தமாகப் பள்ளிகொண்டருளினபடியைச் சொல்லி, அங்கு நின்றும் போந்து அவதரித்தவளவும்வர அடியொற்றுகிறார்கள். (ஓங்கி) ஜகத்ரக்ஷணார்த்தமாகத் திருப்பாற்கடலிலே சாய்ந்தருளினபோது ஆர்த்தரக்ஷணம் பண்ணப்பெறாமையாலே; பனிப்பட்டுச்சாய்ந்த மூங்கில்போலேயாய், அது ஆதித்யகிரணம்பட்டுக்கிளம்புமாபோலே, மஹாபலியாலே

---

யவே" என்றாணிறே. அதிர்ந்திராத மாத்ரமேயிறே வேண்டுவது. அவனுகப்பைப் பின்செல்லுகை ஸ்வரூபம் என்றிருக்குமவர்களே யிவர்களும்; அவனும், பரஸம்ருத் த்யைகப்ரயோஜநனே.

வ்யா.—(ஓங்கி) கீழிற்பாட்டிலே-"பாற்கடலுள்பையத் துயின்றபரமன்" என்றார்கள்; ஆர்த்தரக்ஷணத்துக்காகவிறே இக்கிடை. இந்த்ராதிகள் ஆர்த்தத்வநிகேட்டு ஸ்ரீவாமநனாய் வந்தவதரித்து அவர்கள் கார்யஞ்செய்தபடி. "ஓங்கி" என்கையாலே - இவ்வளர்த்திக்குப் பூர்வதசையில் வாமநத்வம் தோற்றுகிறது. இந்த்ரன் கண்ணீர்கண்டு சிறும்பினபடியும், மஹாபலிநீர்வார்த்தவாறே வளர்ந்தபடியும். பனிப்பட்டுச் சாய்ந்தமூங்கில் ஆதித்யகிரணம் பட்டவாறே வளருமாப் போலே, அபேக்ஷிதம் பெற்று வளர்ந்தபடி. "ஸதைகரூப

---

பி. 46 - வளர்ந்தகடுமையாவது வேகம். வாமனன் கையில் ஏற்றநீரும், ஓங்கிவளர்ந்த, த்ரிவிக்ரமன் திருவடியை ப்ரஹ்மதேவன் விளக்கியநீரும் ஒன்றாக விழுந்தன என்றபடி. குணகுணநிரூபணம் பண்ணாதே - தனது திருவடி ஸ்பர்சத்துக்கு எவர்தகுதியுடையார் எவர்தகுதியில்லார் என்று தாரதம்யம் பண்ணாதே, சர்வப்ராணிகள் பக்கலிலும். வரைதல் - தாரதம்யம் செய்து வரையறுத்தல். சர்வப்ராணிகளுடைய ஸத்தையுண்டாக்குகையே, வ்யாப்தியின் கருத்து. திருவடிகளின் ஒட்டைஸ்பர்சம்லோகத்திற்குத் தாரகமாயிருக்க, அவாப்தஸமஸ்தகாமனை தனக்குத் தாரகமாவது, உறங்கும் குழந்தையை அணைத்துக்கொண்டு, தாய் அந்த அணைப்பை உகக்கிறதுபோலத் தானும் உகப்பது.

நோவுபட்ட தேவர்களார்த்தத்வநி கேட்டபின்பு பேர்ந்து வளர்ந்தபடி. பிறர்காரியஞ் செய்யப் பெறுகையாலே வளர்ந்தபடியென்னவுமாம். "உவந்த வுள்ளத்தனா யுலகமளந்து" என்னக்கடவதிறே. அங்ஙனன்றிக்கே, இரப்புப் பெறுவதற்குமுன்னே வாமநனானவன் இரப்புவாய்த்த ப்ரீதியாலே வளர்ந்தபடியாகவுமாம். கையில் நீர்விழுந்தபின்பு வளர்ந்தகடுமை, ப்ரஹ்மா திருவடிகள் விளக்கின நீருங்கூட விழுந்தபடியிறே. (உல்கு அளந்த) "விசக்ரமேப்ருதிவீமேஷ எதாம்"(52) என்கிறபடியே-குணாகுணநிரூபணம்பண்ணாதே ஸர்வப்ராணிகள்பக்கலிலும் திருவடிகளைவைத்தபடி. வ்யாப்தியில் வரைதலில்லாதாப்போலேயாய்த்திதுவும். வ்யாப்திக்

---

ரூபாய" என்கிற தத்த்வமிறே சிறுப்பது பெருப்பதாகிறது. ஸம்ஸாரிகளுடைய வ்ருத்திஹ்ராஸாதிகள் கர்மாநுகுணமாகையாலும், ஸ்வார்த்தமாகையாலும், தோஷாய ஆகாநிற்கும்; ஸர்வேச்வரன்செயல் பரார்த்தமாகையாலும், க்ருபையாலேயாகையாலும், குணாயவாமத்தனையிறே. "ஸ்ரீவைகுண்டத்திலிருக்கும்போது ஸம்ஸாரிகளுடைய இழவுக்குத் திருவுள்ளம் நொந்திருக்கும்" என்று பட்டருளிச்செய்ய; சிலர் அத்தைக்கேட்டு, "அவாப்தஸமஸ்தகாமனாய் நிரதிசய ஆநந்தயுக்தனாயிருக்கிற ஸர்வேச்வரனுக்கு ஓரிழவுண்டோ திருவுள்ளத்தில்" என்ன; 'வ்யஸநேஷுமநுஷ்யாணாம்' என்கிறது குணப்ரகரணமோ, தோஷப்ரகரணமோ" என்றருளிச்செய்தார். "து:கித:" என்னாநிற்கச் செய்தே குணமாகிறதிறே. "ப்ருசம்" இவர்களளவல்ல திருவுள்ளம் நொந்திருக்கிறபடி. இவன் தன் காவற்சோர்வாலன்றே படுகிறது. "பவத்விஷயவாஸிந:" என்று எல்லைக்குள்ளே கிடக்குமத்தனையிறே யிவனுக்கு வேண்டுவது. இவன் இடரைக்காண்கையாலும் நம் காவற்சோர்வாலே வந்ததென்றிருக்கையாலும் து:கமிரட்டித்திருக்கும். "பவதி" இவன் வ்யஸநங் கழிந்தவாறே, உண்டு புடைவையுடுத்து வெற்றிலையும் தின்று ஸுகித்துப்போம். "ரிணம்ப்ரவ்ருத்தமிவமே" என்று-உள்ளதனையும் இழவுபட்டிருக்கும் அவன். இங்ஙனே யிருப்பது திவ்யாந்த:புரத்துக் கோவென்னில் "மநுஷ்யாணாம்" ஜநிதர்ம்மாக்க ளெல்லார்க்

குக்கருத்து-இவற்றினுடைய ஸத்தையுண்டாக்குகைக்காக. இங்கு இவற்றேட்டை ஸ்பர்சம் தனக்கு தாரகமாகவிறே நினைத்திருப்பது. இவற்றுக்கு அபேக்ஷிதமின்றிக்கேயிருக்கச் செய்தேயும், உறங்குகிற ப்ரஜையை யணைத்துக்கொண்டு கிடக்கும் மாதாவைப்போலே, இவற்றேட்டை ஸ்பர்சத்துக் குத் தானுகக்கிருனிறே. வரையாமையும், அதிமாநுஷ சேஷ்டிதங்களும், வடிவழகும் க்ருஷ்ணவதாரத்தோடொத் திருக்கையாலே, ஸ்ரீவாமநாவதாரத்தை யநுபவிக்கிருர்கள்.

---

கும் மாறனேரியிலே "ராமாநுஜதாஸன்" என்பாரொருத்தர் "அவன் வருகிறபடியைக் கண்டு கடக்கப்போவென்பதே! நாலடிவிலங்கிப்போதல், இல்லையாகில் ஒரு முழுக்கிட்டுக் கொள்ளுதல் செய்யவன்றேவடுப்பது" என்ன; "'சண்டாளனேயாகிலும் ஆர்த்தனை ஸமயத்தில் அல்லாதார் விலங்கிப்போவார், த்விஜனாகில் அவன் விலங்குவான்' என்று விதி விசேஷித்த அம்சம் அழிந்ததே" என்று அவர்கள் சொல்ல; "கெடுவிசாள்! விதிபூர்வகமாயோ க்ருபை யிருப்பது" என் றருளிச்செய்தார். "பாபாநாம்வாசுபாநாம்வா" என்றுனிறே பிராட்டி. இவர்களுடைய பூர்வவ்ருத்தம்கிடக்கிடாய், உன் கையிலே யகப்பட்டு வதப்ராப்தைகளாய் நிற்கிறமைமெய்யே யென்கிருர்கள். ஆகையாலே ஸர்வேச்வரன் செயல்களுக் கெல்லாம் குணுதிக்யமுண்டித்தனையிறே. "ஏகதாபவதி, த்விதாபவதி" என்று முக்தரும் பரார்த்தமாகப் பலவடிவு கொள்ளாநின்றுர்களிறே. அதுவும் குணத்திலே சேருகாநின் றதிறே. (உலகளந்த) எதிர்த்தலை அறிந்து அபேக்ஷிக்கப்பெற்ற தில்லைகிடீர். "என்னிதுமாயம்! என்னப்ப னறிந்திலன்" என்ற நமுசிப்ரப்ருதிகளைப்போலே விளக்குகையில்லாமையே பற்றுசாகச்செய்ததத்தனைகிடீர். "அடிச்சியோந்தலைமிசை நீயணியாய்" என்று ஆசைபட்டு மடலெடுக்கவேண்டும்படியான அத்திருவடிகளைக் கொண்டுகிடீர் காடுமோடையுமளந்தது. "பொல்லாக்குறளுருவாய்ப் பொற்கையில் நீரேற்று" என்றும், "நீயணியாய்" என்றும், இரந்து பெறவேண்டும் கையைக்கொண்டுகிடீர் இரந்தது. "கொண்டானையல்லால் கொடுத்தாரை யார்பழிப்பார்" ஈச்வரனுடைமையை "என்

47. (உத்தமன்) இத்தை, இவர்களுக்கு ஒரு உபகாரம் பண்ணினானாகவன்றிக்கே தன்பேருக நினைத்திருக்கிறபடி. பிறரை ஹிம்ஸித்துத் தன்வயிற்றை வளர்க்கவேணு மென்

னது" என்றிருந்தவன் பக்கலிலே குணங்கொண்டு, தன்னுடைமையை "தன்னது" என்று எல்லை நடந்துகொண்டவன் பக்கலிலே குற்றங்கொள்வதே! "நீள்வான்குறளுருவாய்" வளருகைக்கு நரிப்பூணூலிட்டவித்தனை. "தக்கணைக்குமிக்கானை" பூஜ்யதமனானவனை. "கேளாச்செவிகள் செவியல்ல கேட்டாமே." "பிலேபதோருக்ரம" ஸர்ப்பங்கள் புகும்பிலத்தோடு அச்செவிகளோடு வாசியில்லை. ப்ரஸ்துதம் க்ருஷ்ணாவதாரமாயிருக்க ஸ்ரீவாமநாவதாரம் ப்ரஸங்கிப்பானென்னென்னில்; செய்யும் ஆனைத்தொழில்களும், ஆச்ரித பக்ஷபாதமும், வடிவழகும். வாத்ஸல்யமும், அவனொரு ஊருக்குக் கையாளானாப்போலே, இவனொருநாட்டுக்காக எளியனானபடி யாலுமாக, அணைந்திருக்கையாலே சொல்லுகிறார்கள்.

(உத்தமன்) பரஹிம்ஸைபண்ணியும் தந்தாம்வயிறுவளர்ப்பார் - அதமர்; பிறர் ஜீவநத்தை அநுமதிபண்ணியிருப்பார் - அவனிலும் உத்க்ருஷ்டர்; "பிறரும் ஜீவிக்கவேணும், நாமும்

---

பி. 47–இத்தை-மஹாபலி நிரஸநார்த்தமாக, உலகளந்ததைத் தன்பேருகநினைத்திருப்பதால் உத்தமன் என்பதே சிறந்த அர்த்தம். தன்னை அழியமாறிப் பிறர்காரியம்செய்கையும் உத்தமன்செயலே. பேர் என்பது எல்லாத் திருநாமங்களையும். உத்தமன்பேர் என்பது அஷ்டாக்ஷரமாகிய பெரிய திருமந்த்ரத்தை. முதற்பாட்டில் "நாராயணன்" என்ற சப்தமும், 2-ம் பாட்டில் "பரமன்" என்று திருமந்த்ரார்த்தமான குணபூர்த்தியும், இந்த 3-ம் பாட்டில் மந்த்ரோக்த வ்யாப்திக்கு, த்ரைவிக்ரமாபதாநத்தைச் சொல்லுகையால், குணகுணநிரூபணமின்றிக்கேயிருக்கும் ஸாத்ருச்யஸ்மாரகமும். பாடி என்றுதே, உத்தமன்பேர்பாடி என்பது, கட்டிப் பொன்போன்ற அவனைக்காட்டிலும், பொன்னாற்செய்த ஆபரணம்போன்ற அவன் திருநாமம், பரமபோக்யமாயிருக்கிற தன்மையை. இதுவரையில், போக்யதையால் வந்த வைபவம் சொல்லப்பட்டது. இனி, பலப்ரதத்வத்தாலும், அவனிலும் அவன் நாமத்துக்குள்ள பெருமை சொல்லப்படுகிறது. அவன் தன்னை இல்லை செய்கிறவர் நிரீச்வரமீமாம்

றிருக்குமவன் - அதமன்; " பிறரும் ஜீவிக்கவேணும், நாமும் ஜீவிக்கவேணும்" என்றிருக்குமவன்-மத்யமன்; தன்னை அழியமாறியாகிலும் பிறர் ஜீவிக்கவேணுமென்னுமவன்-உத்தமன். "பக்தாநாம்" (53) " அப்யஹம்ஜீவிதம்ஜஹ்யாம் " (54) என்றிருக்கை. (பேர்பாடி) இக்குணங்களுக்குவாசகமான திருநாமங்களை ப்ரீதிபூர்வகமாகப்பாடி. " உத்தமன்பேர் " என்கிறது திருமந்த்ரத்தை. முதற்பாட்டில். "நாராயணன்" என்

பிக்கவேணும்" என்றிருப்பார் - மத்யமர் ; உதாரனானவன் பக்கலிலே தன்னையழியமாறியும் பிறரை ஜீவிப்பிக்குமவன் - உத்தமனாகிறான். "அப்யஹம்ஜீவிதம்ஜஹ்யாம்"என்கிறபடியே என்னையும் என்னுடைமையையும் நேர்ந்தாகிலும் ஆச்ரிதர்க்கு ஓரங்கொடுத்துச் செய்யக்கடவோமென்றிருக்குமவனே. " அன்றுகருமாணியாய் " உனக்குவேண்டிச் செய்தாயோ, உன்னுடையார்க்கு வைத்த சந்தாநச்சாபமிறே.

(பேர்பாடி) கழஞ்சுமண்பெறுவாரும் இழப்பாருமாய், அதில் லாபாலாபமிறே அவர்களுக்குள்ளது. அங்ஙனன்றிக்கே, பேர்பாடுகையே எங்களுக்கு உத்தேச்யமென்கிறார்கள். கட்டிப்பொன்போலே யவன்; பணிப்பொன்போலே திருநாமம். வாச்யபூதனானவன் ஸத்தையையுண்டாக்கும் ; அவனுக்கு வாசகமான திருநாமங்களாலேயிறே அநுபவிப்பது. " திருநாமம் சொல்லுகைக்கு அதிகார ஸம்பத்திவேண்டாவோ " என்று நஞ்ஜீயர்பட்டரைக் கேட்டருள; "யோக்யனாகில் இருந்தபடி சொல்லுகிறான்; அயோக்யனாகில் யோக்யதை ஸம்பாதிக்கவேண்டா" என்றருளிச் செய்தார். எங்ஙனே யென்ன ;— "மேலுள்ள நன்மைகளைத் தரக்கடவதாக விச்வஸித்தவனுக்கு கீழுள்ள விரோதிகளையும் போக்கமாட்டாதோ" என்று அருளிச்செய்தார்; "கங்கையாடப் போமவனுக்கு வேறொருகுழியிலே முழுகிப்போகவேணுமோ."

---

ஸகர். மாத்ருகாதகன், தனது தாயைக் கையால் அடித்துத் துன்புறுத்துபவன். அடிப்பதனால், கைநோகும்போது, தன்னையறியாமலே, " அம்மா " என்று சொல்லி, சிரமபரிகாரம் செய்வான். அம்மா என்கிற தாய் ஆகாவிட்டாலும், "அம்மா" என்கிற பெயர் பெருமை அடைகின்றது.

வுமாம். "ப்ரஸாதம் நிம்நகாயாதா" (71) என்று-நீரில் தெளிவைச் சொல்லிற்றாகவுமாம். (பெருநீர்) "யமுநாஞ்சாதிகம்பீராம் நாநாவர்த்தசஷாகுலாம்" (72) என்று-அத்யகாதமான ஆறு பாங்காக வற்றிக்கொடுத்தது. மநோஹரமாகையாலும் பாவநமாகையாலும் ச்லாக்யதையைச் சொல்லிற்றாகவுமாம். (யமுனைத்துறைவனை) திருக்குரவை ஸ்தாநமாகையாலே பெண்கள் படுந்துறையையுடையவனை.

70. (ஆயர்குலத்தினிற்றோன்றும் அணிவிளக்கை) பரமபதத்திற் காட்டில் குணங்கள் இடைச்சேரியிலே அத்யுஜ்ஜ்வலமானபடி. அந்தகாரத்தில் தீபம்போலே. (தோன்றும்)

---

நீர்) க்ருஷ்ணனும் பெண்களும் ஜலக்ரீடை பண்ணுகைக்குப் போரும்படி ஸம்ருத்தமான ஜலம். பெண்களுடைய விரஹதாபங்கெடக் குளிக்கப்போரும்நீர்என்றுமாம். அன்றியே, நீரினுடைய ச்லாக்யதையைச் சொல்லிற்றாகவுமாம். (யமுனைத்துறைவனை) கவிபாடுவார்க்கு ஊரும் பேரும் ஆறும் வேண்டக்கடவதிறே. (யமுனைத்துறைவனை) "முத்துப்படும் துறை" என்னுமாப்போலே, "சங்கணித்துறைவன்" என்னுமாப்போலே, க்ருஷ்ணனுக்குப் பெண்கள்படும் துறை. நற்சரக்குப் படுவது நீரிலேயாகாதே. "அமுதில்வரும்பெண்ணமுது" என்னுமாப்போலே. (துறைவன்) "கம்ஸபயத்துக்கு அஞ்சி ஒளிக்கவந்து சேர்ந்தாரைச் சொல்லுமாப்போலே சொன்னபடி பாரீர்" என்று பட்டர்.

(ஆயர்குலத்தினில் தோன்றும்) பிறவாதபரமபதத்தோயாதிஸ்ரீமதுரையில்பிறப்பும். முலைப்பால்குடித்து அழுதவிடமிறேபிறந்தவிடமாவது. (தோன்றும்) "ஆவிர்ப்பூதம்மஹாத்

---

பி. 70-அணிவிளக்கு - பரமபதத்தைவிட இடைச்சேரியில் குணங்கள் அத்யுஜ்ஜ்வலமாயிருக்கை, அந்தகாரத்தில் தீபம்போலே தயை, க்ருபை, நீர்மை முதலியன பிரகாசிக்கை. இவளோடு அவனுக்கு-தேவகியோடு க்ருஷ்ணனுக்கு சூரியன் உதிக்கும் கிழக்குத் திசைக்கும் சூரியனுக்கும் எவ்வளவுசம்பந்தமுண்டோ, அவ்வளவே தேவகிக்கும் க்ருஷ்ணனுக்கும் உண்டு. (73-ம் பிரமாணத்தை விளக்கும் கருத்து)

"அச்யுதபாநுநா! தேவகீபூர்வ ஸந்த்யாயாமாவிர்ப்பூதம்"(73) என்றுகொண்டு கர்ப்பத்தில் தொற்றில்லாமை. கீழைதிக்குக்கு ஆதித்யனேடுள்ளஸம்பந்தம் இவளோடு அவனுக்குள்ளது. ஸ்ரீமதுரையிலே யவதரித்திருக்கச்செய்தே திருவவதார ப்ரகாசம் திருவாய்ப்பாடியிலே சென்றது என்றுமாம். (மணி விளக்கை) திருவாய்ப்பாடிக்கு மங்களதீபமென்றுமாம்.

71. (தாயைக் குடல்விளக்கஞ்செய்த தாமோதரனை) வயிற்றில் தழும்பாலே யசோதைப் பிராட்டியை விளங்சப் பண்ணினவனை. (தாயைக் குடல் விளக்கஞ்செய்த) "கௌமநா" கிழக்கே உதிக்கிற ஆதித்யனுக்கு ஸ்பர்சமுண்டாகில் இவள் வயிற்றில் ஸ்பர்சமுண்டாவ தென்முன் ரிஷி. பிறந்தது குணமாகைக்காக "பிறந்தவாறு" என்று ஈடுபட்டார் ஆழ்வார். (அணிவிளக்கை) ஸ்ரீவைகுண்டத்திலும் ஸ்ரீமதுரையிலும் அநுஜ்ஜ்வலனாய்ப்போலேயிருப்பது. "ஆயர்பாடிக் கணிவிளக்கு" என்கிறபடியே இவர்களுக்குக் கண்காட்டியாயிருக்கை. அந்தகாரத்தில் தீபம்போலேதாழ்ந்தார் பக்கலிலேயிறே குணம்ப்ரகாசிப்பது. பிறப்பாயொளிவருமுழுநலமிறே. "மணிவிளக்கு" என்றபோது, இங்கே புகுந்தபின்பு பரமபதத்தில் அழுக்கற்றபடி.

(தாயைக்குடல் விளக்கஞ் செய்த) வயிற்றில் கட்டின தழும்பாலே ஒருத்திக்கு ஒருபிள்ளை கட்டலாம்படி பவ்யனுவதே! என்றுயசோதைப் பிராட்டியை விளங்கப் பண்ணினவனை. "கௌஸல்யாசுசுபே" "இவனைப் பெற்றவயிறுடை

பி. 71-தாமோதரன்-(1) க்ருஷ்ணன் கண்ணிநுண்சிறுத்தாம்பால் கட்டுண்ணப்பட்டபடியால், உதரத்தில் கயிற்றின் தழும்புடையவன், அதனால் யசோதை விளக்கம்பெற்றனள். (2) என்னநோன்புநோற்றாள் கொலோ இவனைப் பெற்ற வயிறுடையாள் என்று நாட்டார் புகழ்வதால், யசோதை வயிற்றுக்குப் பட்டம் கட்டியதால், அவள் குடல்விளக்கம் செய்த தாமோதரன். அவனுடைய பந்தம் அனுக்ரஹ கார்யமாகையாலே, அவனாலே அறுக்கவொண்ணாது. அந்த பந்தத்தை அநுஸந்தித்தால், ஆச்ரிதருடைய ஸம்ஸாரபந்தம் அற்றுப்போகும்.

ஸல்யாசுசுபேதேநபுத்ரேணுமிததேஜஸா" (74) என்றும் "என்ன நோன்புநோற்ருள் கொலோ இவனைப்பெற்ற வயிறு டையாள்" என்றும்-நாட்டார்புகழ்ச்சியாலே பெற்றவயிற்றுக்குப் பட்டங்கட்டினவனை. (தாமோதரனை) தன்னுடைய பவ்யதையாலும் அவனை நாட்டார் கொண்டாடும்படி பண்ணினவனை. நம்முடைய பந்தம் நம்மாலறுக்கப்போகாதாப் போலே, அவனுடைய பந்தமும் அவனாலறுக்க வொண்ணுதே இப் பந்தத்தை அநுஸந்தித்தால் ஆச்ரிதருடைய ஸம்ஸார பந்தம் போமென்கை.

72. (தூயோமாய்வந்து நாம்) அங்குத்தைக்கு நாம் யோக்யரோ அயோக்யரோ என்று பாராதே இருந்தபடியே வந்து. இருந்தபடியே வருகைக்கு மேற்பட சுத்திதேட வேண்டாவிறே. "சுத்தம் வேத்தி விபீஷணம்" (75) என்ற

---

யாள்-என்ன நோன்புநோற்ருள் கொலோ." (தாமோதரனை) நம்முடைய பந்தம் நம்மால் அறுக்கவொண்ணுதாப்போலே, அவனுடையபந்தமும் அநுக்ரஹத்தாலேயாகையாலே அவனாலும் அறுக்கவொண்ணுது. நம்முடைய பந்தம் அவன்காலிலே விழத்தீரும்; அவனது அநுக்ரஹகார்யமாகையாலே அநுபவித்தே யறவேணும். "அவனுடையபந்தத்தை யநுஸந்திக்க ஸம்ஸாரபந்த மறும்" என்ஞநின்றதிறே. இவன் வயிற்றில் தழும்பைக்கொண்டாடுகை, அவள் வயிற்றுக்குப் பட்டங் கட்டுகை. "பணைகளிலே தாவினவாறே உடைநழுவத் தழும்பைக்கண்டு இடைச்சிகள்சிரித்தார்கள், அத்தழும்பு தோன்ருமைக்கிறே நம் பெருமாள் கணையம் மேல்சாத்து சாத்துகிறது" என்று ஜீயர்.

(தூயோமாய்) இடைச்சிகள் தூய்மையிறே. தலையிருக்க உடம்பு கழுவியும், உடம்பிருக்கத் தலைகழுவியும் போருவர்களிறே. பகவத் ஸம்பந்தமொழிய தனக்கொருசுத்திஸம்பா

---

பி. 72-ப்ரபத்திக்கு ஸ்நானம் முதலியன அபேக்ஷிதங்களல்ல. ஆகையாலே, யோக்யரோ அயோக்யரோ என்று பாராது, இருந்தபடியே வருவதே தூய்மை. (ஸுக்ரீவன், விபீஷணன் முதலியோர் ப்ரபத்தி எடுத்துக்காட்டு)

திறே இருந்தபடியே வந்த ஸ்ரீவிபீஷணாழ்வானை. (வந்துநாம்) அவன்வர விருக்கக்கடவ நாம் வந்து. "உபஸ்தேயை ருபஸ்திதः", (76) என்றும், "பத்ப்யாமபிகமாச்சைவ" (77) என்று மிறே அவன் வார்த்தை. முறைகெட வருவானென் னென்னில்; உபாயத்தில் துணிவு புறப்பட வொட்டாதாப்போலே உபேயத்தில் த்வரை முறைபார்த்திருக்கவொட்டாதிறே.

73. (தூமலர்)"மிக்கசீர்த்தொண்டரிட்ட பூந்துளவம்" என்றும், "சூட்டுநன்மாலைகள் தூயனவேந்தி" என்றும்-

---

துகையாவது-அசுததனுய விடுகையிற்றே. அவனுடைய ஸம்பந்தத்தை அநுஸந்திக்கையொழிய தனக்கொரு சுத்தியில்லை.விபீஷணன் கடலிலேயொரு முழுக்கிட்டன்றிறே வந்தது; அர்ஜுநன் யுத்தத்தின்நடுவே முழுக்கிட்டன்றிறே சரமச்லோகம் கேட்டது; த்ரௌபதி முழுகியன்றே ப்ரபத்திபண்ணிற்று. ஆகையால்ப்ரபத்திக்குஒருசுத்தியும் தேடவேண்டா; அசுத்தி ஸம்பாதிக்கவும் வேண்டா; நின்றநிலையிலதிகாரமமையும். "மமசாபி" கடல்கலங்கித்தெளிந்தாப்போலே ராமபக்தியாலே கலங்கின என் நெஞ்சும் தெளிந்தது. ஸம்ஸாரஸம்பந்தத்தால் வந்தகலக்கம் தெளிகைக்கு பகவத்குணங்களுண்டு; அந்த குணங்களால் வந்தகலக்கத்தை யெத்தாலே தெளியப்பண்ணுவது. "சுத்தம்வேத்திவிபீஷணம்" வந்தவனுடைய சுத்தியடங்கலும் வடிவிலே தெரியாநின்றது. அவனுக்குசுத்தியாக நினைக்கிறது-ராமஸம்பந்தத்தையிறே. "பாவநஸ்ஸர்வலோகாநாம்." (தூயோமாய்) அநந்யப்ரயோஜநதையைச் சொல்லிற்றாகவுமாம்.(வந்து)"வந்துனதடியேன்மனம்புகுந்தாய்"என்று அவன் வரவை நாம் செய்யக்கடவோம். "உபஸ்தேயைருபஸ்திதः" என்றும், "பத்ப்யாமபிகமாச்சைவ" என்றும் இட்டநாலடிக்கும் புண்பட்டிருக்குமவனிறே. உபாயத்தில் துணிவுபுறப்படவொட்டாது, உபேயத்தில் துணிவுபுறப்படாதிருக்கவொட்டாது. (நாம்) க்ரமப்ராப்தி பற்றாத நாம். (தூமலர்) ப்ரயோஜநத்தைக் கணிசியாதிட்ட மலர்.மிக்கசீர்த்தொண்டரிட்டபூ. கள்ளார் துழாயும், கணவலர்-அலரி;

---

பி. 73-தூமலர் - மலருக்குத்தூய்மை, அநந்யப்ரயோஜனமாய், எம்பெருமானுக்கே அர்ப்பணம் செய்யப்பெறுகை. அவனுக்கும்

அநந்யப்ரயோஜநமான பூவிறே. (மலர்) யோக்யமென்றும் அயோக்யமென்றும் பாராதே கண்ணுக்குத்தோற்றினமல ரென்றுமாம். (தூவி) "யதாததாவாபி" (78)என்னும் ந்யாயத் தாலே அடைவுகெடப் பரிமாறி. ப்ரேமம், அடைவுபார்க்க வொட்டாதிறே. (தொழுது) அவனுக்குப் பொறுக்கவொண் ணாதபடி அஞ்ஜலிகளைப்பண்ணி. "ரிணம்ப்ரவ்ருத்தமிவமேஹ்ரு தயாந்நாப ஸர்ப்பதி" (79) என்றிறே அவன்படி. அவனைத் தொழுவித்துக் கொள்ளுமவர்களிறேதொழுகிறார்கள். பித்ரா திகளுக்கு அடைவுகேடென்றுதோற்றாதபடி அஞ்ஜலிபண் ணுகிறார்கள் என்றுமாம். (வாயினாற்பாடி) வாய்படைத்த லாபம் பெற்றோமென்று, திருநாமத்தைச்சொல்லி. மநஸ்ஸ ஹகாரமின்றிக்கே யென்றுமாம். "உவாசச" (80) என்னுமா போலே - வருவதற்குமேலே, சொல்லுவதும் செய்தோ மென்றுமாம். (மநத்தினாற் சிந்திக்க) மநஸ்ஸைப்படைத்தலா பம் பெற்றோமென்று. "யத்புருஷோமநஸாதிகச்சதி, யத்திம நஸாத்யாயதி,தத்வாசாவததி,தத்கர்மணாகரோதி"(81) என்று

விஜாதீயங்களையுஞ்சொல்லுகிறது.அநந்யப்ரயோஜநர் தொட் டது ஏதேனுமாம். [புள்ளாயோரேனமாய்] இவனேதேனு மிடிலுங் கொள்ளுகைக்குத் தன்னை அமைத்தபடி.ஸ்ரீவராஹ கல்பத்திலே முத்தக்காசை [1]அமுதுசெய்விக்கச்சொல்லிற்று. "பத்ரம்புஷ்பம்" த்ரவ்யதாரதம்யம்பார்ப்பதில்லை, இடுகிறவன் நெஞ்சிலீரமே பார்ப்பது. எல்லாங்கூட அச்நாமியிறே. (தூவி) "யதாததாவாபி" என்கிறபடியே-க்ரமலிவக்ஷையன் றிக்கே அடைவுகெட்டிருக்கை. (தொழுது) விரோதிகள் கண் டால் முறைதப்பாமைக்கு; கைபடைத்த ப்ரயோஜநம் பெறுகை. (வாயினாற்பாடி) வாக்குப்படைத்த ப்ரயோஜநம் பெறுகை. "உவாசச" என்று-வருகைக்குமேலே வார்த்தை யுஞ் சொல்லுவதே! என்று அவனை நோவுபடுத்துகை. (மநத் தினாற்சிந்திக்க) "மநஸாதிகச்சதி" "வாகுத்தர:" என்கிற

பொறுக்கவொண்ணாத அஞ்சலி அவனைத் தொழுவித்துக்கொள்ளு மவர்களே தொழுவதால் வருவது

1. முத்தக்காசு-கோரைக்கிழங்கு.

மநஸ்ஸடியாக வரக்கடவ உக்தியும் வ்ருத்தியும்தவிர்ந்து, தொழுது. "வாயினாற்பாடிமநத்தினாற்சிந்திக்க" என்று-தனித் தனியே கரணங்கள் மேல்விழுந்தபடி சொல்லுகிறது.

74. (போயபிழையும் புகுதருவான்நின்றனவும்) உத்தர பூர்வாகங்கள். (தீயினில் தூசாகும்) நெருப்பிலிட்டபஞ்சு போலேயாம். தூசு-பஞ்சு. பாலும் கண்டசர்க்கரையும் குடிக்

---

நிலைகுலைந்து, மநஸ்ஸுக்கு முன்னே தொழுகையும் பாடுகை யும் முற்படுகையாலே ஆற்றாமையின் மிகுதி சொல்லிற்று. மநோவாக்காயங்கள் மூன்றும் அங்கே ப்ரவணமானபடி. உபாயமாகிலிறே ஒன்றமைவது.

(போயபிழையும்புகுதருவான்நின்றனவும்) உத்தரபூர்வா கங்கள். பால்குடித்து வ்யாதி போக்குமாபோலே, இனியது அநுபவிக்க இன்னாதது குலையும். பூர்வாகமாகிறது. ஜ்ஞாநம் பிறப்பதற்குமுன்பு புத்திபூர்வகமாகப் பண்ணின பாபம்; உத்தராகமாவது-பகவத்ஸமாச்ரயணத்துக்குப் பின்பு ப்ரக் ருதிவாஸநையாலே ப்ராமாதிகமாகச் செய்யுமது.

(தீயினில்தூசாகும்) நெருப்பிற்பட்ட பஞ்சுபோலே யாம். "இஷீகாதூலமக்நௌப்ரோதம் ப்ரதூயேத" என்று வேதத்தில் சொன்ன அர்த்தம், பெரியாழ்வார்மகளா கையாலே இடைச்சியான பின்னும் [1]பின்னாட்டுகிறபடி.

(செப்பு)வாங்மந:காயங்களால் அநுபவிக்கவேணுமென் றது மிகை. விரோதிபோகைக்கு உக்திக்குமேல் வேண்டா வென்கை. அவன், இவனநுகூலித்தவாறே பூர்வாகத்தை விஸ்மரிக்கும்; உத்தராகத்துக்கு அவிஜ்ஞாதாவாம். இனி

பி. 74-போயபிழை - அநாதிகாலம் புத்திபூர்வமாகப் பண் ணிப் போந்தவை - புகுதருவான் நின்றன - பகவத்ஞானம் பிறந் தால் ப்ரக்ருதிவாசனையாலே ப்ராமாதிகமாகப் பிறந்த உத்தராகங் கள். தீயினில்தூசு ஆகும் - பாலும் கற்கண்டும் அருந்தப் பித்தம் தானே போகிறதுபோலே, பகவதனுபவம் பண்ண, நெருப்பி லிட்ட பஞ்சுக்குவைபோலே உருமாய்ந்துபோம்.

1 பின் நாட்டுகை-பின்செல்லுகை; அநுவர்த்திக்கை.

கப் பித்தம் தன்னடையே போமாபோலே, பகவதநுபவம் பண்ணநெருப்பிலிட்ட பஞ்சுக்குவைபோல உருமாய்ந்து போம்.-“ இஷீகதூலமக்நௌ ப்ரோதம் ப்ரதூயேத” (82) என்றுமுண்டிறே. (செப்பு)சொல்லவமையுமென்கை.பூர்வாகமாவது-அநாதிகாலம் புத்தி பூர்வகமாகப் பண்ணிப்போந்தவை ; உத்தராகமாவது-பகவத்ஜ்ஞாநம் பிறந்தால் ப்ரக்ருதி வாஸநையாலே ப்ராமாதிகமாகப் பிறந்தவை. ... ... ஞ

75. ஸ்வாபதேசவ்யாக்யாநம் அ.— ஐந்தாம்பாட்டு. (மாயனை இத்யாதி) மாயனை “ஸதாபச்யந்தி” என்கிறபடியே விச்ருங்கல ஜ்ஞாநிகளான நித்யஸூரிகளாலும் கரைகாணவொண்ணாத பரத்வத்தை யுடையவனை. (மன்னுவடமதுரை மைந்தனை) பகவத்ஸம்பந்தம் மாறாத வடமதுரையிலே யிருக்கிற ராஜாவாய், மிடுக்கனாய், யுவாவானவனை. (தூய) ஸ்ரீவஸுதேவர் கண்ணனை யெழுந்தருளப் பண்ணிக்கொண்டு திருவாய்ப்பாடிக் கெழுந்தருளுகிறபோது ஜாநுமாத்ரோதகரா யெழுந்தருளலாம்படி பாங்காக வற்றிக்கொடுத்த தூய்மையாகவுமாம் ; ஜலக்ரீடையிலே பெண்களும் அவனுமாகக் கொப்பளிக்கையால் வந்த தூய்மையாகவுமாம். (பெருநீர்) மஹாஜலத்தை யுடைத்தாகையாலே அத்யகாதமான. (யமுனைத் துறைவனை) யமுனையினுடைய துறையைத் தனக்கு நிரூபகமாகவுடையவனை. (ஆயர்குலத்தினில் தோன்றும்மணிவிளக்கை) திருவாய்ப்பாடியிலே வளராநின்றுகொண்டு அக்குலத்துக்கு மங்களதீபமாயுள்ளவனை. (தாயைக்குடல்விளக்

---

யார் அநுபவிப்பார்?. புண்யபாபங்களாகின்றன. அவனுடைய அநுக்ரஹ நிக்ரஹங்களிறே. அவன் “பொறுத்தேன்” என்னத்

“தூயோமாய்வந்து நாம்தூமலர் தூவித்தொழுது வாயினல்பாடி மநத்தினற்சிந்திக்க, போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும் ; மாயனைமன்னுவடமதுரை மைந்தனைத்தூயபெருநீர் யமுனைத்துறைவனை ஆயர் குலத்தினிற்றோன்றும் மணிவிளக்கைத்தாயைக் குடல்விளக்கஞ்செய்ததாமோதரனை - செப்பு ” என்று அந்வயம். .... ஞ

கம் செய்த தாமோதரனை) கண்ணிக் குறுங்கயிற்றாலே உர லோடே கட்டுண்டு பெற்றதாயான யசோதைப்பிராட்டியி னுடைய ஹ்ருதயத்துக்கு ப்ரகாசகனானவனை. (நாம்) "அவனே உபாயம்" என்றிருக்கிற நாம். (தூயோமாய்) அநந்ய ப்ரயோஜநராய். (வந்து) ப்ராப்யருசி இருந்தவிடத்தி லிருக்கவொட்டாமையால் வந்து. (தூமலர்) யோக்யமோ, அயோக்யமோ என்று தேடப்படாத மலர்களை. (தூவி) [1]அக்ரமமாக அவன்திருவடிகளிலே பரிமாறி. (தொழுது) ஸேவித்து. (வாயினால்பாடி மநத்தினால் சிந்திக்க) "அவன் கொடுத்தகரணத்தால் அவனை யாச்ரயிக்கப் பெற்றோம்" என்றுபாடி நினைக்க. (போயபிழையும்) கழிந்த அநாதியான பூர்வாகங்களும். (புகுதருவான்நின்றனவும்) ப்ரவேசத்தைத் தருகிறவையாய் நின்ற உத்தராகங்களும். (தீயினில் தூசாகும்) நெருப்பிலிட்ட பஞ்சுபோலேயாம். (செப்பு) ஆகையால் உக்தகுணவிசிஷ்டனான வெம்பெருமானை அநுஸந்தியுங்கோள். ஆயர்குலமென்றது-அநந்யஸாதநரான பாகவதகுலமென்றபடி. .... ... .... .... .... ரு

## ஆறும் பாட்டின் அவதாரிகை

**மூவாயிரப்படி**:—76. ஆறும்பாட்டு. முதற்பாட்டில்-பகவத்ஸம்ச்லேஷமே ப்ராப்யமும், அநந்யஸாத்யமான விதுக்கு ஸாதநமுமவனே, அந்த ஸாதநத்திலே அந்வயிக்கைக்கு அதிகாரிகளும் அந்தப்ராப்யத்தில் இச்சையுடையவர்களே என்று ஸாத்யஸ்வரூபத்தையும் ஸாதநஸ்வரூபத்தையும் அதிகாரிஸ்வரூபத்தையும் ஸாதித்து; இரண்டாம்பாட்டில்-ப்ராப்ய ப்ராபகங்கள் இரண்டும் ஈச்வரனே யென்றிருக்கும் இச்சாதிகாரிகளுக்கு ஸம்பாவிதமுமாய் குர்வத்ரூபமான கரணங்களுக்கு வகுத்தவ்யாபார விஷயங்களைக்காட்டிக் கொடுக்கவேண்டு

---

**ஆறுயிரப்படி**:—6-ம் பாட்டின் அவதாரிகையாக மூவாயிரப்படியிலுள்ள அவதாரிகை முழுவதையும் அப்படியே

---

[1] அந்தக்ரமமாக.

கையாலும் காலக்ஷேபத்துக்காகவும் ராகப்ரேரிதமாக அநுஷ்டேயமான கர்த்தவ்யாம்சத்தைச்சொல்லிற்று; மூன்றும்பாட்டில் - பகவதநுபவஸஹகாரிகள்பக்கல் உபகாரஸ்ம்ருத்யதிசயத்தாலே அவர்களுக்கு யாவையாவை சில அபேக்ஷிதங்கள், அந்தஸம்ருத்திகளடைய அபேக்ஷிக்கக் கடவதென்கிறது; நாலாம்பாட்டில்-தேவதாந்தரஸ்பர்சரஹிதராய், இப்படி அநந்யப்ரயோஜநராய், பகவதேகப்ரவணராய், பகவதநுபவோபகரணமானவற்றிலே யிழிந்தவர்களுக்கு அந்த தேவதாந்தரங்களும் ஏவல்செய்யுமென்னுமிடஞ் சொல்லிற்று; அஞ்சாம்பாட்டில் - இப்படியே பகவதநுபவத்தி லிழிந்தவர்களுக்கு வரும் அநுபவவிரோதிகளை அவ்வநுபவந்தானே நிரோதிக்குமென்னுமிடஞ் சொல்லிற்று. ஆக, இப்படி கீழஞ்சுபாட்டாலே - ப்ராப்யமான க்ருஷ்ணநுபவத்துக்கு ஏகாந்தமான உபகரணங்களைச் சொல்லி, அநந்தரம், மேல் பத்துப்பாட்டாலே - அந்த உபகரணங்களைக்கொண்டு அநுபவிக்குமவர்களை யெழுப்புகிறது.

77. தந்தாமுக்கே அவ்வநுபவத்துக்கு ப்ரதாநோபகரணமான ப்ரேமமும், கர்த்தவ்யதயாஉக்தமான உபகரணங்களும், அநுபாவ்யனான க்ருஷ்ணனும், அதுக்கு ஏகாந்தமான காலமும், ஊரில் கோபவ்ருத்தருடைய இசைவும் உண்டான பின்பு தனித்தனியே அநுபவிக்க அமைந்திருக்க, ஒருவரையொருவர் எழுப்ப வேண்டுகிறதென் னென்னில்; பெருக்காற்றி லிழிவார்க்குத் துணைதேட்டமாமாபோலே, "காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்" என்றும், "உயிர்காத்தாட்செய்ம்மின்" என்றும், "ஆழியொடு பொன்னார்சார்ங்கமுடைய வடிகளை யின்னாரென்றறியேன்" என்றும் இழிந்தாரைக் குமிழிநீரூட்டக் கடவதான விஷயத்திலே யிழிகிறவர்களாகையாலே துணை தேட்டமாய் ஒருவரை யொருவர் எழுப்புகிறார்கள். "அடியார்கள்குழாங்களை - உடன்கூடுவ

கொண்டு மேலும் கீழ்வருவனவற்றையருளுகிறார் 6000படி ஆசிரியர். மேலிற்பாட்டாலும்-' செய்யாதனசெய்யோம்" என்று-அடியில்பண்ணின ப்ரதிஜ்ஞையைத் தலைக்கட்டுகிறார்கள். பெருமாள் "நத்யஜேயம்" என்ற ப்ரதிஜ்ஞையை

தென்றுகொலோ" என்று சொல்லுகிறபடியே பராவஸ்தை யில் புருஷோத்தமனை யநுபவிக்கும்போதும் விச்ருங்கலமான ஜ்ஞாநபலங்களையுடையரான நித்யஸூரிகளுக்கும் துணை தேட்டமாகாநிற்க, " இமையோர்தமக்கும் - செவ்வேநெஞ் சால் நினைப்பரிதால் வெண்ணெ யூணென்னு மீனச்சொல்" என்று - அந்தநித்யஸூரிகளுக்கு மநுபவிக்கவொண்ணுதபடி நீர்மைக்கும் மேன்மைக்கும் அழகுக்கும்நிரவதிகஸாகரமான க்ருஷ்ணனை யநுபவிக்குமிடத்தில், இடக்கையும்வலக்கையுமறி யாத இடைச்சிகளுக்குத்துணைதேட்டமென்னுமிடம்சொல்ல வேணுமோ. அதுக்குமேலே, "ஏகஸ்ஸ்வாது நபுஞ்ஜீத" (83) என்று நிரதிசயபோக்யமான அவ்விஷயத்தைத் தனியநுப விக்கமாட்டாத ப்ரக்ருதிகளாகையாலும் எழுப்புகிறுர்கள்; அதுக்குமேலே, இவ்வஸ்துவை அநுபவிக்கைக்கு ருசியுடை யராயிருக்குமவர்களிழக்க வொண்ணுதென்னும் நினைவாலு மெழுப்புகிறுர்கள்; அதுக்குமேலே, பகவத்விஷயத்தை யநு

---

"ஏதத்வ்ரதம்மம" என்று தலைக்கட்டினுற்போலேயும், அர்ஜுநன் பண்ணின ப்ரதிஜ்ஞையை க்ருஷ்ணன் செய்துதலைக் கட்டினுற்போலேயும், பஞ்சலக்ஷம்குடியில் பெண்களும் வந்துதிரண்டு, " நாம் நீராடவே நம் விரோதிகளும்போம்" என்றுபுறப்பட, சிலர் வாராதொழியப் போகமாட்டிற்றிலர். உறங்குகிறவர்களை யெழுப்பிக்கொண்டு போகவே அத் தலைக்கும் நமக்கும் புருஷகாரமாவர்களென்றும், போத யந்த:பரஸ்பரம் பண்ணுகைக்காகவும் இவர்க ளிழவு பொறுக்க மாட்டாமையாலும், " ஏகஸ்ஸ்வாதுநபுஞ்ஜீத" என்கிறபடியே யொருவரை யொழிய வொருவர் புஜிக்க மாட்டாமையாலும், க்ருஷ்ணனிற் காட்டிலும் இவர்கள் உத்தேச்யராகையாலும், தனி அநுபவிக்கும் விஷயமல் லாமையாலும், உணராதவர்களை உணர்ந்தவர்கள் எழுப்பு கிறுர்களாய்ச் செல்லுகிறது. பரமபதத்துக் ககப்பட "அடி யார்கள் குழாங்களை-உடன்கூடுவதென்று கொலோ"என்று கூட்டுத்தேடவேண்டா நின்றது, க்ருஷ்ணுநுபவத்துக்குக் கூட்டுத்தேடச்சொல்லவேணுமோ. "இமையோர்தமக்கும்

பவிக்கும்போது ததீயரை முன்னிட்டல்லது அநுபவிக்க மாட்டாதவர்களாகையாலும் எழுப்புகிறார்கள். விஷயம் தனி யநுபவிக்க அரிதாகையாலும், இவர்கள் தனி யநுப விக்கவல்ல ப்ரக்ருதிகளல்லாமையாலும், ருசியுடையாரி ழுக்கை நெடுந்தட்டென்றிருக்கையாலும், ததீயரையொழிய வநுபவிக்க மாட்டாமையாலும், முந்துறவுணர்ந்தவர்கள், உறங்குகிறவர்களை யெழுப்பத் தட்டில்லை.

78. எல்லார்க்கு மொக்க க்ருஷ்ணாநுபவத்தில் கௌது கம் அவிசிஷ்டமாயிருக்குமாகில், சிலர் எழுப்பச் சிலருறங் குகை கௌதுகத்துக்குக் குறையன்றோவென்னில்; அநுபா வ்யமான க்ருஷ்ணகுணங்கள், நஞ்சுண்டாரைப்போலே சிலரை மயங்கப்பண்ணுகையாலும், சிலரை இருந்த விடத்தி லிருக்கவொட்டாதே துடிக்கப்பண்ணுகையாலும், அவர்கள் கௌதுகத்துக்குக் குறையில்லாமையாலே, சிலரை சிலர் எழுப்பத்தட்டில்லை. இதில் இப்பாட்டுக்கு வாக்யார்த்தம், பகவத்விஷயத்தில் புதியளாகையாலே இந்நோன்பின் சுவ டறியாதா ளொருத்தியை யெழுப்புகிறார்கள்.

புள்ளுஞ்சிலம்பினகாண்புள்ளரையன்கோயிலில்
வெள்ளைவிளிசங்கின்பேரரவங்கேட்டிலையோ
பிள்ளாயெழுந்திராய்பேய்முலைநஞ்சுண்டு
கள்ளச்சகடங்கலக்கழியக்காலோச்சி

---

செவ்வே நெஞ்சால் நினைப்பரிதால் வெண்ணெயூணென்னு மீனச்சொல்" என்று-நித்யஸூரிகளுடைய எத்திறமிருக்கும் படி. இத்தையநுபவித்த ஆழ்வார் "எத்திறம்!" என்றார். தன்னையும் "ஜந்மகர்மசமே திவ்யம்" என்னப்பண்ணிற்றிறே. ஒருவிடாயாற்றிக்குவேண்டும் மனிசர் போரத்திரண்டு இவ் வூருக்காக க்ருஷ்ணஸம்ச்லேஷத்தில் புதியாளொருத்தியை "போதுவிடிந்ததுகாண்" என்று எழுப்புகிறார்கள்; "உத் திஷ்ட நரசார்த்தூல" என்று-விச்வாமித்ரன், போதுவிடிந்தது என்று எழுப்பினாற்போலே.

வெள்ளத்தரவிற்றுயிலமர்ந்தவித்தினை
உள்ளத்துக்கொண்டுமுனிவர்களும்யோகிகளும்
மெள்ளவெழுந்தரியென்றபேரரவம்
உள்ளம்புகுந்துகுளிர்ந்தேலோரெம்பாவாய். கூ

பதவுரை :— இந்நோன்பின் வாசியறியாதா ளொருத்தியை, புள்ளும்-பக்ஷிகளுங்கூட, இரைதேடுகைக்காக எழுந்திருந்து, சிலம்பினகாண்-கூவிபோகா நின்றனகாண், எழுந்திராய் என்ன ; நீங்கள் அவற்றை உறங்கவொட்டாதே கிளப்பினிகோ ளாகவேணும், வேறடையாள முண்டாகில் சொல்லுங்கோள் என்ன ; புள்-பக்ஷிகளுக்கு, அரையன்-தலைவனை பெரியதிருவடிக்கு, கோ-நிர்வாஹகனை ஸர்வேச்வரனுடைய, இல்லில் - கோயிலிலே, திருப்பள்ளியெழுச்சியில் ஊதுகிற, வெள்ளை-வெளுத்த நிறத்தையுடைத்தாய், விளி-யாவரையும் அழைப்பதுபோலிருக்கிற த்வநியையுடைய, சங்கின்-சங்கத்தினுடைய, பேர் அரவம் - பேரோசையையும், கேட்டிலையோ - கேட்கவில்லையோ என்றபின்பும் பேசாதேயிருக்க ; பிள்ளாய் - பகவத்விஷயரஸமறியாதபெண்ணே, எழுந்திராய்-எழுந்திரு என்ன ; என்னை இப்படி எழுப்புகைக்கு உங்களையெழுப்பினாரா ரென்ன; கள்ளம்-வஞ்சகத்தையுடைத்தாய், சகடம்-அஸுராவேசமான சக்ரமானது, கலக்கழிய-கட்டுக்குலையும்படியாக, கால்-மூலை வரவுதாழ்த்துச் சீறிநிமிர்த்த திருவடிகளாலே, ஓச்சி - முறித்துப் போகட்டு, வெள்ளத்து-திருப்பாற்கடலிலே, அரவு-திருவநந்தாழ்வானுகிற திருப்பள்ளியிலே, துயிலமர்ந்த — கண்வளர்ந்தருளுகிற, வித்தினை-ஜகத்காரணபூதனை, முனிவர்களும் - மநநசீலரான ரிஷிகளும், யோகிகளும் - யோகாப்யாஸம் பண்ணுமவர்களும், உள்ளத்துக்கொண்டு-மநஸ்ஸில்வைத்துக்கொண்டு, மெள்ள-அசையாமல், எழுந்து-எழுந்திருந்து, அரி என்ற-"ஹரி:, ஹரி:" என்கிற, பேர் அரவம்-பெரிய த்வநியானது, உள்ளம்புகுந்து - எங்கள் மநஸ்ஸில் புகுந்து, குளிர்ந்தது—குளிர்வவ்வலிடப்பண்ணிற்றென்கிறார்கள்.

79. (புள்ளும்சிலம்பினகாண்) இப்பெண்பிள்ளைகள் "போதோடேவாசலிலே சென்று யுணர்த்தக் கடவதாக

---

வ்யா.—(புள்ளும்சிலும்பினகாண்) இப்பெண்களை, போதோடே வாசலிலே யுணர்த்தக்கடவதாகஸங்கல்பித்து,

---

பி. 79-அல்லவீஎன்ன - அடையாளம் அல்ல என்ன. ஆவதென்னென்ன - அடையாளம் ஆகாமையாவதென் என்ன. கரிய

ஸங்கல்பித்துப் போதுவிடியச்செய்தே கிடந்துறங்குவதே" என்று . சிஷ்டகர்ஹை பண்ணினவாறே, போது விடிய வேண்டாவோ எழுந்திருக்கவென்ன ; போதுவிடிந்தது எழுந்திராயென்ன : விடிந்தமைக்கடையாளமென் என்று கேட்க ; நாங்களுணர்ந்து வந்தது போராதோவென்ன ; உறங்கினு ருணரிலன்றே விடிவுக் கடையாளமாவது, "உண்டோ கண்கள் துஞ்சுதல்" என்கிறபடியே உங்களுக்கு உறக்கமுண்டோ, உங்களுணர்த்தி விடிந்தமைக்கு அடையாளமன்று, வேறடையாளமுண்டோவென்ன (புள்ளுஞ்சிலம்பினகாண்) போதுவிடிந்துபக்ஷிகளகப்படக்கிளம்பி யிரைதேடிப் போகாநின்றனகாணென்ன ; அது விடிந்தமைக்கடையாளமோ வென்ன; என் அல்லவோவென்ன; ஓம், அல்லவீ என்ன; ஆவதென்னென்ன; நீங்கள் அவற்றையுறங்கவொட்

---

போதுவிடியச்செய்தே கிடந்துறங்குவதே! என்று சிஷ்டகர்ஹை பண்ணினவாறே; போது விடியவேண்டாவோ வெழுந்திருக்க, போதுவிடிந்தமைக்கு அடையாளமென் ? என்று அவள்கேட்க; நாங்கள் உணர்ந்துவந்தது அடையாளமாகப் போராதோவென்ன; உறங்கினர் உணரிலன்றே விடிவுக்கு அடையாளமாவது, "உண்டோ கண்கள் துஞ்சுதல்" என்கிறபடியே உங்களுக்கு உறக்கமுண்டோ, உங்களுணர்த்தி விடிவுக்கு அடையாளமன்று, வேறடையாளமுண்டாகில்சொல்லுங்கோளென்ன (புள்ளுஞ்சிலம்பினகாண்). "மார்கழிநீராடவேணும்" என்னும் த்வரையுமின்றிக்கே, வைகியெழுந்திருக்கில் ப்ரத்யவாயமுமின்றிக்கே, காலமுணர்த்த உணருமவை யன்றோபுட்கள். நாழிகைவட்டில்நீர் நிரம்பினவாறேகீழே விழுமாபோலே, இரையறுதியிலேயுணரும் திர்யக்குக்களுங்கூடவுணர்ந்தன. (சிலம்பினகாண் )தலை

குருவிக் கணங்கள் - க்ருஷ்ணன் வடிவை ஞாபகப்படுத்துமவை. மாலின் வரவு - அவன் வ்யாமுக்தனாய் வருவது. மருள்பாடுதல் - ப்ரேமாந்த்யத்தாலே பாடுதல். ஆகையால் உங்களைப்போலே, வ்யாமோஹத்தாலே புள்சிலம்புதல் பொழுது விடிவதற்கு அடையாளமாகாது என்று கருத்து.

டாதே கிளப்பினவாறே கிளம்பிற்றின வல்லது விடிந்தமைக் கடையாளமோ வென்ன ; இவ்விடத்திலே "பிள்ளைப்பிள்ளை யாழ்வான், 'பகவத்ஸமாச்ரயணத்துக்கு அநுகூலமான காலத்தை ஸூசிப்பிக்கிற பக்ஷிநாதமல்லது இவ்வாத்மாவுக்கு உத்தேச்யமில்லை என்று பணிக்கும்" என்றருளிச் செய்வர். நீங்கள் பிறந்தவூரில் பக்ஷிகளுக்கு உறக்கமுண்டோ; "காலை யெழுந்திருந்து கரியகுருவிக்கணங்கள்" என்றிறேயிருப்பது, வேறடையாளமுண்டாகில் சொல்லுங்கோளென்று கிடந்தாள்.

---

யிலே இடிவிழுந்ததுமறியாமேயுறங்குமத்தனையோவென்ன; உங்களுணர்த்தி விடிவுக்கடையாளமல்லாதாப்போலே நீங்களிருந்தவூரில் பக்ஷிகளுணர்த்தியும் விடிவுக்கு உடலன்று; "ஊரும் நாடும் உலகமும்தன்னைப்போல்" என்று [காலையெழுந்திருந்து] ப்ராஹ்மமுஹூர்த்தத்திலே யெழுந்திருந்து. [கரியகுருவிக்கணங்கள்] க்ருஷ்ணனுடைய வடிவை ஸ்மரிப்பிக்குமவை. [மாலின்வரவுசொல்லி] அவன் வ்யாமுக்தனாய்க் கொண்டுவரும்படியைச் சொல்லி, மருள்பாடக் கடவதாம் படியிறே பண்ணிவைப்பது. "பக்ஷிணோபிப்ரயாசந்தே" என்று-நீங்களிருந்தவூரில் பக்ஷிகளுடைய வுணர்த்தியும் விடிவுக்குடலன்று,மற்றையடையாளங்களுண்டாகில் சொல்லுங்கோளென்று கிடந்தாள்;

அது கிடக்கிடாய், இதுவும் உன் செவியில் பட்டதில்லையோ, திருப்பள்ளியெழுச்சிக்கு ஊதின சங்கத்வநியும் விடிவுக்கு உடலன்றோ வென்கிறார்கள் (புள்ளரையன்கோயிலில்) க்ருஷ்ணனுடைய குணங்களிலே யீடுபட்டிருக்கும் திருவாய்ப்பாடியிலும் ஒருதிருமுற்றம் திருவடித்தொழுவாருமாய்ச் செல்லுமோ வென்னில் ; "ராமோராமோராம இதி ப்ரஜாநாமபவந்கதா:" என்றும்,"பாலா அபிக்ரீடமாநா:"என்றும் சிறுப்ரஜைகளு மகப்படப் பெருமாளுடைய குணங்களிலே தோற்றுச்செல்லா நிற்கச்செய்தே திருவயோத்யையில், "ஸஹபத்ந்யாவிசாலாக்ஷ்யா நாராயணமுபாகமத்" என்று-பெருமாள் பிராட்டியோடேகூட பெரியபெருமாளை

80. (புள்ளரையனித்யாதி) அதுகிடக்கிடாய், இதுவு முன் செவிப்பட்டதில்லையோ, புள்ளுக்கு நிர்வாஹகனை பெரியதிருவடியுண்டு, அவனுடைய கோவுண்டு-ஸர்வேச்வரன், அவனுடைய இல் என்னுதல். "புள்" என்று-பக்ஷியாய், அத்தாலே-பெரிய திருவடியாய், அவனுக்கு நிர்வாஹகனை வனுடைய கோயிலென்னுதல். திருப்பள்ளியெழுச்சியில் சங்கத்வநிகேட்டிலையோ. க்ருஷ்ணன் திருவவதரித்து திருவாய்ப்பாடியிலே இருந்ததே குடியாக அவனழகிலே பத்தபாவராய்ச் செல்லுகிறகாலத்திலே கொண்டாடுகைக்கு ஒரு திருமுற்றமுண்டோ வென்னில்;சக்ரவர்த்தித் திருமகன் திருவவதாரம்பண்ணி, இருந்ததே குடியாக அவனழகிலேஈடுபட்டுச் செல்லாநிற்க,"ஸஹபத்ந்யா விசாலாக்ஷ்யா நாராயணமுபாகமத்" (84) என்று-அவர் தாம் பெரியபெருமாளை ஆச்ரயிக்குமாபோலே, க்ருஷ்ணனையும் கும்பிடுகொள்ளுகைக்கு ஒரு திருமுற்றமுண்டு (புள்ளரையன்) பெரியதிருவடியைநிரூபகமாகவுடையவன்.ஆச்ரிதர்தனக்கு நிரூபகமாம்படியிறே அவர்களுக்குக் கொடுத்த ஐச்வர்யம் ; " லக்ஷ்மணபூர்வஜஞ்ச." (85) பகவத் விஷயத்தில் வழியே யிழியுமவர்க ளாகையாலே உபாஸிப்பரென்றதிறே; அப்படியிலே திருவாய்ப்பாடியிலும் ஒரு திருமுற்றமுண்டுபோலே. (புள் அரையன்) என்று-க்ருஷ்ணன்றன்னைச் சொல்றிற்றாகவுமாம். (புள்ளரையன்) "லக்ஷ்மணபூர்வஜம்" என்று-இளையபெருமாளையிட்டுப் பெருமாளை நிரூபிக்குமாபோலே, திருவடியை நிரூபகமாகவுடையவன். அவர்களையிட்டுத் தன்னை நிரூபிக்கவேண்டும்படியிறே யிவர்களுக்கு வைத்துக்கொடுத்த தரம். தாங்கள் இருந்தவிடத்தே கொடுவருமவனுகையாலே " புள்ளரையன் " என்றதாகவுமாம். "புள்ளின் பின்போன தனிநெஞ்சமே" என்றிருக்கு

பி. 80-திருவாய்ப்பாடியிலே இருந்ததேகுடியாக - திருவாய்ப்பாடியிலே இருக்கையாலே, அங்குகுடியிருந்தவர்கள் எல்லாரும். கொணடாடுகைக்கு-புள்ளரையன் கோயிலில் தோத்திரம் சொல்லுகைக்கு. இவர்களுக்குக் கொடுத்த ஐச்வர்யம் -தன்னையும் தன் விபூதியையும் ஆச்ரிதர் இட்டவழக்காக்கிவைக்கை, வழியே இழியுமவர்கள்-புருஷகாரத்தை முன்னிட்டுச் செல்பவர்கள்.

பெரியதிருவடியை முனனிடுகிறுர்கள். (வெள்ளை விளிசங்கு) சங்கு வெளுத் ருக்குமது விடிந்தமைக்கடையாளமோ,இது வ்யர்த்தவிசேஷணம். (விளிசங்கு) சாமங்கள்தோறும் முறையுடையாரை அழைக்கிறுர்களாகில் போதுவிடியவேணுமோ; அங்ஙனல்ல,(பேரரவம்)விடிந்தமைக்கு அடையாளமன்றே, ஸ்ரீபாஞ்சஜந்யத்வநியிலும் மிக்கன்றே த்வநியிருப்பது. நீயு முணருகைக்குப் போரும் த்வநி, இவர்கள் சங்கின் வெளுப் புச் சொல்லுவானென்னென்னில்;சங்கத்வநி வழியே யூதும் போதை முகமுத்ரையும் சங்கின் வெளுப்பும் உத்தேச்யமாகையாலே. (விளிசங்கு)விளிக்கை- அழைக்கை."கைவிளிக் கின்றதுங்கண்டேனின்றேன்" என்னக்கடவதிறே.கையாலே யழைக்கையென்றபடி. ஸத்த்வோத்தரமான காலத்திலே அடிமைசெய்ய வாருங்கோளென்று அழைக்கிறபடி. (கேட்டிலையோ) இது கேட்க பாக்யமின்றிக்கேயொழிவதே.இவர்கள் இப்படி சொல்ல, பின்பு நிருத்தரையாய்க்கிடந்தாள் (பிள்ளாயெழுந்திராய்) பகவத்விஷயத்தில் புதியையிறே.பாகவத ஸம்ச்லேஷத்திலினிமையறியாயிறே. அநுபாவ்யங்களில்

---

மவர்களிறே. (வெள்ளையித்யாதி) சங்கினுடைய வெளுப்பு, போதுவிடிவுக்கு உடலல்லாமையாலேவ்யர்த்த விசேஷணம். (விளிசங்கு)சாமங்களிலே பணிக்குக்கடவாரை யழைக்கைக் குறுப்பாகையாலே அநைகாந்திகம். (பேரரவம்) ஏகார்த்தாபிலாஷையுண்டு, எனக்கு மொக்கக்கேளாமையாலேஅப்ரஸித்தம்;ஆகையாலே,போதுவிடிவுக்கு உடலன்றென்கிருள். "வெள்ளை விளிசங்கிடங்கையில்கொண்டவிமலன்" என்று- உங்கள் பாவநாப்ரகர்ஷத்தாலே சொல்லுகிறிகோள், இது போதுவிடிவுக்குடலன்று என்ன (பேரரவம்கேட்டிலையோ) இத்த்வநிகேளாதபடி யுள்ளுச்செய்கிற அந்யபரதையேதோ. (பேரரவம் கேட்டிலையோ) நாங்கள் சொல்லுகிற இவற்றுக்கு அநுபபத்தி சொல்லுகிறஉனக்குமகப்படக் கேட்கும்படியன்றே த்வநியின்பெருமை.

(பிள்ளாய்) பகவத்விஷயத்திலே அவகாஹிக்கையாவது.பாகவதஸம் ச்லேஷபர்யந்தமாகை; அவ்வளவன்றிக்கே

காஷ்டாபூமியான பாகவதஸம்ச்லேஷரஸம் பிறக்குமளவும் பகவத்விஷயத்திலே அவகாஹிக்கப் பெற்றிலேயோ. நாங்கள் உன்னைக் காணவாசைப்பட்டவோபாதி நீயுமெங்களைக்காண வாசைப்படவேண்டாவோ.

---

க்ருஷ்ணஸம்ச்லேஷத்தளவிலே பர்யவஸிக்கிறது உன்னுடையமௌக்த்யமிறேயென்ன; க்ருஷ்ண ஸம்ச்லேஷத் தளவிலேயோ நான் நிற்கிறது, உங்களுடைய பேச்சே தாரகமாகக் கேட்டுக்கிடக்கிறவென்னை "பிள்ளாய்" என்கிற நீங்களன்றோ பிள்ளைகளென்ன; பேச்சுக்கேட்டுக் கிடக்கவமையுமோ, "அடியார்கள்தம் ஈட்டங் கண்டிடக்கூடுமேல்" என்றும், "அடியார்கள் குழாங்களை-உடன்கூடுவ தென்று கொலோ" என்றும், "பேராளன்பேரோதும் பெரியோரையொருகாலும் பிரிகிலேன்" என்று மன்றோ நம்முடைய பூர்வர்களுடைய வார்த்தை; அப்படியே உன்வடிவை நாங்கள் கண்டு எங்கள் வடிவை நீ கண்டு அநுபவிக்கவாசைப்படாதே யிருக்கிறநீயன்றோ பிள்ளை, நாங்கள் சொல்லிற்றையெல்லா மழிக்கைக்கடி-உன்பால்யமிறே. பட்டர், "திருவாய்ப்பாடியிலுள்ளாரில் சிந்தயந்தியோபாதி க்ருஷ்ணஸம்ச்லேஷத்தில் புதியாரில்லை" என்று அருளிச்செய்வர். என் செய்யவென்னில்; குருதர்சநம் பண்ணக்கண்ணுண்டாய்த்தே, "தச்சித்த விமலாஹ்லாத" இத்யாதி, "யயௌச காசித் ப்ரேமாந்தா" என்று-ஒருத்திக்குப்ரேமமானது இருளைப்பண்ணுகையாலே காவல் கிடந்தாரைக் காணுமைக்குடலாய்த்து; அதுதானே வழிபோகைக்குடலாய்த்து. " குரவ:கிங்கரிஷ்யந்தி " குருக்கள்கிடா யென்ன ; அவர்கள் விரஹாக்நிக்கு ஒரு குடநீர்சொரிய வல்லர்களோ; அன்றியே வழித்துணையாவர்களோ என்றுர்கள்.

நீங்கள் சொன்னபடியே நான் பிள்ளையாகிறேன், உங்களுணர்த்திக்கடி யேதென்ன; தாங்களுணர்ந்தமைக்கு ஹேதுசொல்லுகிருர்கள் (பேய்முலைநஞ்சுண்டு) தாய்வடிவு கொண்டு வந்த பூதனையுடைய ஸ்தந்யபாநத்தைப் பண்ணி. இது சொல்லுகிறதென்னென்னில்; இவள் பயப்பட்டுக் கடு

81. அறிந்திருக்கிற உங்களை யெழுப்பினாரென்ன (பேய்முலை இத்யாதி)எங்களை யெழுப்பினீரில்லை, தந்தாங்காரி யஞ்செய்வார் த்வநி கேட்டெழுந்திருந்தோம் என்கிறார்கள். (பேய்முலை நஞ்சுண்டு) பெற்ற தாயுமுதவாத தனிமையிலே பாதிக்கவந்த பூதனையை முடித்து. இத்தலையை முடிக்க வந்தவள் தன்னோடேபோம்படி பண்ணி. (கள்ளச்சகடம்) பேயாகில் ஆராய்ந்து கொள்ளலாம்; தாயே ரக்ஷையாக வைத்த சகடம், அஸுராவேசத்தாலே பிறந்த அபாயமாகையாலே "கள்ளச்சகடம்" என்கிறது.(கலக்கழியக்காலோச்சி) சகடமானது கலக்கழியும்படி திருவடிகளையோச்சி. முலைவரவு தாழ்த்ததென்று மூரிநிமிர்த்ததிருவடிகள் பட்டு முறிந்தது. இப்போது இவ்வபதாநங்கள் சொல்லுகிறது — பிறந்த அபாயங்கள்கேட்டு துணுக்கென்றெழுந்திருக்கைக்காக. (வெள்ளத்தரவிற்றுயிலமர்ந்தவித்தினை) இவ்வபாயப்

கவெழுந்திருக்கைக்காக. ஸர்வேச்வரனை துக்கநிவர்த்தகனென்றிருப்பார் அல்லாதாரிறே; பெரியாழ்வார் ஸம்பந்திகள் "அங்குத்தைக்கு என்புகுருகிறதோ" என்று வயிறு பிடிக்குமவர்களிறே. அவள் பயநிவ்ருத்தியளவு மனுஸந்தித்து பயங்கெட்டுக்கிடக்கிறாள். (கள்ளச்சகடம்) க்ரித்ரிமசகடமானது. (கலக்கழியக்காலோச்சி) கட்டழிந்து சிதறும்படியாகத் திருவடிகளை நிமிர்த்து. (கள்ளச்சகடம்) நம்மை முடிக்கவந்த சகடம். பூதனை தாய் வடிவுகொண்டாகிலும் வந்தாள், அப்படியன்றிக்கே காவலாகவைத்த சகடந்தானே அஸுராவேசத்தாலே தன்மேலே ஊரப்புக, தன்னினைவன்றிக்கே முலைவரவு தாழ்த்து ஸ்தந்யார்த்தியாய்த் தொட்டிலையுதைத்ததிருவடிகள் புறப்பட்டுமுடித்தவத்தனையிறே.[ஊாந்த

பி. 81-காலோச்சி - சகடத்தை உடைப்பதற் கென்றே காலோச்சாது, மூரிநிமிர்த்த திருவடிகள் பட்டபடியால் சகடம் கலக்கழிந்தது. முனிவர்கள் = மநந சீலர்கள், குணநிஷ்டர்கள். யோகிகள் = யோகாப்யாசம் செய்பவர்கள், வ்ருத்தி நிஷ்டர்கள், (இங்கு உறங்குகிறவர்களைப்போலிருப்பவர்கள். எழுப்புவோர் போல முனிவர்கள்). வளையம் - திருமாலை.

ரஸங்கமில்லாத விடத்திலே, பரிவனான திருவநந்தாழ்வான் மேலே சாயப்பெற்றதே! என்று ஹ்ருஷ்டைகளாகிறார்கள். (வெள்ளம்) ஸௌகுமார்யத்துக்குச் சேரக்குளிர்ச்சியுண்டானபடி. (அரவில்) அநந்தரூறுத்தாமைக்குப்படுத்தபடுக்கை. மென்மை குளிர்த்தி நாற்றங்கள் ப்ரக்ருதியான திருவநந்தாழ்வான் மேலே. இவன்மூச்சுப்பட்டு மதுகைடபர்கள்பொடிபட்டுப் போகையாலே, பயப்படவும் வேண்டாவென்கை. (துயில்)ஜகத்ரக்ஷண சிந்தை. "பனிக்கடலிற் பள்ளிகோளைப் பழகவிட் டோடிவந்தென் மனக்கடலில் வாழவல்லமாயமணாளநம்பி". என்று-ஓராச்ரிதனுடைய ஹ்ருதயத்தைக்கணிசித்துக்கிடக்குமவனென்னவுமாம். (அமர்ந்த) பிராட்டிமார் திருமுலைத்தடத்தாலே நெருக்கினாலும் உணராமை. (வித்தினை) திருவவதாரத்துக்கு நாற்றங்கால், பிறந்த பிறவிகள் போராமே . திரியப் பிறக்கைக்கு அடியிட்டபடி. (உள்ளத்துக்கொண்டு) "அரவத்தமளியினோடு மழகியபாற்கடலோடு மரவிந்தப் பாவையுந்தானு மகம்படிவந்துபுகுந்து" என்கிற

---

சகடமுதைத்த பாதத்தன்] ப்ரேமத்தாலே பயப்படுகைக்குடலாய் அச்சங்கெடுகைக்கு முடலாயிருக்கும்.[பாதத்தன்] இவன் மௌக்த்யத்தாலே உறங்கத் திருவடிகளாலே பெற்றோம். அவனுடைய வாபத்துக்கும் சேஷபூதனுடைய வாபத்துக்கும் ரக்ஷகமான திருவடிகள். "திருக்காலாண்ட பெருமானே." ராமாவதாரத்துக்கு இளையபெருமாளைப்போலே. (வெள்ளத்தரவில்) விரோதி ப்ரஸங்கமில்லாத தொருதேசமும், ஒருபரிவனையும்பெறுவதே! (வெள்ளத்தரவில்) நீருறுத்தாதபடி, நாற்றம், மென்மை, குளிர்த்தி தொடக்கமானஸ்வபாவங்களையுடைய திருவநந்தாழ்வான்மேலே. (துயிலமர்ந்த) பிராட்டிமார் திருமுலைத்தடத்தாலும் நெருக்கி யெழுப்பினாலும் கிளம்பாதபடியாயிருக்கை.(வித்தினை)க்ருஷிகர் விரையை நீரிலேசேர்க்குமாபோலே, பிறந்தது நினையாதிருக்கையும், பிறந்ததெல்லாம் கிடக்க இன்னமும் பிறக்கைக் கடியாயிருக்கையும். இவ்வருகுண்டான கார்யவர்க்கத்துக்கெல்லாம் காரணமாயிருக்கிறவனை. (உள்ளத்துக்கொண்டு) திருப்பாற்கடலிலே திருவநந்தாழ்வான்மேலே அவதார கந்தமாய் அநி

படியே திருப்பாற்கடலோடும் திருவநந்தாழ்வாளோடும் நாய்ச்சிமாரோடுங் கூடத் தங்கள் நெஞ்சிலே கொண்டு. (முனிவர்களும் யோகிகளும்; யோகாப்யாஸம்பண்ணுகிறவர்களும், மநநசீலரும். அவர்களாகிறார்-வ்ருத்தி நிஷ்டரும், குண நிஷ்டரும். இங்கு உறங்குகிறவர்களையும் எழுப்புகிறவர்களையும் போலே யிருக்கிறவர்கள். (மெள்ள எழுந்து) கர்ப்பிணிகள் ப்ரஜைகளுக்கு நோவுவாராமே எழுந்திருக்குமாபோலே. "ஹ்ருதயேநோத்வஹந்ஹரிம்" (86) என்று-வலையம் அலையாமேயிறேயெழுந்திருப்பது. திருவாய்ப்பாடியிலே முநிவர்களும் யோகிகளு முண்டோ வென்னில்; க்ருஷ்ணன் வந்து அவதரித்தபின்பு இடையருடைய பசுக்கொட்டில்களிலே வந்து அவர்கள் படுகாடுகிடப்பர்கள். (அரியென்ற) அரி யென்கையாவது-"ஹரிர்ஹரதிபாபாநி"(87) என்கிறபடியே பகவதநுபவ விரோதிகளைப் போக்கியருளவேணுமென்கை. பின்னையிவர்களுக்கு பாபமாவது-க்ருஷ்ணனுக்கு அஸுரர்களாலே வருந் தீங்கு; அத்தையவன்றானே போக்கித்தந்தருளவேணு

ருத்தரூபியாய்க்கொண்டு கண்வளர்ந்தருளுகிறவனை, "அரவத்தமளியினோடும்" என்கிறபடியே தங்கள் நெஞ்சாகிற நாடுகளிலே குடிகொள்ளும்படி பண்ணி. (முனிவர்களும் யோகிகளும்) ஒரு ப்ரவ்ருத்திக்கு க்ஷமரன்றிக்கே யிருக்கிற குணநிஷ்டரும், கைங்கர்யநிஷ்டரும். லக்ஷ்மணபரதர்களைப் போலேயிருக்குமவர்கள். பரமபதத்திலும், "வைகுந்தத்தமரரும் முனிவரும்" என்று இரண்டுகோடியாயிறேயிருப்பது. திருவாய்ப்பாடியில் அவர்களுண்டோவென்னில்; க்ருஷ்ணன் இங்கே யவதரிக்கையாலே, ஊரில் பசுநிரைக்கொட்டில்களிலே படுகாடுகிடப்பர்கள்; பாண்டவர்கள் வர்த்திக்கிற பணிக்கொட்டில்களிலும் இடைச்சேரியிலும் க்ருஷ்ணன் படுகாடு கிடக்குமாபோலே. (மெள்ளவெழுந்து) கர்ப்பிணிகள் பிள்ளைக்கு நோவுவாராதபடிமெள்ளவெழுந்திருக்குமாபோலே. ஹ்ருதயேநோத்வஹந்ஹரிம்'என்று-ப்ரஹ்லாதாழ்வான் தான்மலையில் நின்றும் விழாநிற்கச்செய்தேயும், "பார்த்தருள், பார்த்தருள்" என்று ஸர்வேச்வரனைப் பிடித்துக்கொண்டாற்போலேயும், ஹ்ருதயத்திலிருக்கிற ஸர்வேச்

மென்று மங்களாசாஸநம் பண்ணுகையென்றுமாம். "அத ஸோபயங்கதோபவதி" (88) என்று-அவனாலே பயங்கெட்டால் பின்பு அந்தலைக்கு பயப்பட்டுத் திருப்பல்லாண்டு பாடுமித்தனையிறே. பகவத்ஸம்பந்தஜ்ஞாநம் பிறப்பதற்கு முன்பு இழவுபேறுகள் தன்னளவிலேயாயிருக்கும்; ஸம்பந்தஜ்ஞாநம் பிறந்தபின்பு, இழவு பேறுகள் அவனளவிலேயாயிருக்கக்கடவதிறே. (பேரரவம்) பஞ்சலக்ஷம்குடியிலுமிந்தத்வநியேயாயிருக்கை. எல்லாரும் ப்ரபுத்தரான காலமாகையாலேயொருவர் சொல்லு மளவன்றிக்கே எல்லாருஞ்சொல்லுகை. (உள்ளம் புகுந்து குளிர்ந்து) படுக்கைக்கீழே வெள்ளங்கோத்தாற்போலே, திருநாமம் செவிவழியே புகுந்துவவ்வலிட்டது; அவன் அவர்கள் நெஞ்சிலே புகுந்து ஆநந்திப்பித்தாற்போலே க்ருஷ்ணவிரஹத்தாலே கமர்பிளந்து கிடக்கிற நெஞ்சு பதஞ்செய்யும்படி இவர்களுடைய த்வநியும் எங்கள் நெஞ்சிலே புகுந்து எங்களை ஆநந்திப்பித்தது. ஆகையாலே எழுந்திராய் என்கிறார்கள். ... ... ... ௬

82. ஸ்வாபதேச வ்யாக்யாநம். ஆறும்பாட்டு. (புள்ளுமித்யாதி) முதற்பாட்டில்-ப்ராப்யஸ்வரூபத்தையும் ப்ராபகஸ்வரூபத்தையும் அதிகாரி ஸ்வரூபத்தையும் ஸங்க்ரஹேண அருளிச்செய்து, இரண்டாம்பாட்டில்-அவ்வதிகாரிக்கு ஸம்

---

வரன்தளும்பாதபடியெழுந்திருந்து. (அரியென்ற) "ரக்ஷதுத்வாமசேஷாணும்" என்னுமாபோலே நீயேயுன்னை நோக்கிக்கொள்ளவேணுமென்று மங்களாசாஸநம் பண்ணின. "அதஸோபயங்கதோபவதி" தன்பயங்கெட்டால் அங்குத்தைக்குப் பரிகையிறேயுள்ளது. (பேரரவம்) ஒருத்தன் அரியென்றதுகேட்டு ஒருவரிருவராய் ஊராக "ஹரி:" என்கையாலே ப்ராதேசிகமன்றிக்கே திருவாய்ப்பாடியெல்லாம் இந்தமஹாத்வநியேயாய்த்து (உள்ளம்புகுந்து) க்ருஷ்ணவிரஹத்தாலே கமர்பிளந்து கிடந்த ஹ்ருதயமானது ஒருநீர்ப் பாய்ச்சினாற்போலே பதஞ்செய்து. (குளிர்ந்து) மறுநீர்பாய்ந்தாற்போலே குளிர்ந்தது; அத்தாலே நாங்களுமுணர்ந்தோம்-பிள்ளாயெழுந்திராய் ... ... ... ௬

பாவிதமான ஸ்வரூபதர்மங்களை யருளிச்செய்து, மூன்றும் பாட்டில்-இவ்வதிகாரிக ளநுஷ்டாநத்தாலே இவர்களிருக்கும் நாட்டிற்பிறக்கும் ஸம்ருத்தியைச்சொல்லி, நாலாம்பாட்டில்-அவ்வதிகாரிகளுக்கு பகவதநுகூலரானவர்கள் கிஞ்சித்கரிக்கும்படிசொல்லி, அஞ்சாம்பாட்டில்-அவ்வதிகாரிகளுக்கு பூர்வாகோத்தராகங்கள் ஸித்தோபாயபலத்தாலே நெருப்பிலிட்ட பஞ்சுபோலே தன்னடையே நசித்துப்போம்படி சொல்லி, இனி, மேல் பத்துப்பாட்டாலே-பகவதநுபவ ஸஹகாரிகளை யெழுப்புகிறபடியைச் சொல்லுகிறது. அதில், இப்பாட்டில்-நூதநமாக பகவத்ஸம்பந்தம் பெற்றவதிகாரியை யெழுப்புகிறார்கள். வ்யா.—(புள்ளும்சிலம்பினகாண்) இப்போது இவள்புள்ளென்கிறது, "சேர்ப்பாரையில்" சொல்லுகிறபடியே ஜ்ஞாநாநுஷ்டாநங்களாலே பகவத்ஸம்பந்தகடகரான பாகவதர்களை. ஆகையாலே, ஸத்த்வோத்தர காலமானவாறே ஸாத்த்விகரானபாகவதர்கள் பகவத்குணாநுஸந்தாநபூர்வகமாக பகவத்கைங்கர்ய ரூபங்களாய் தத்தத்வர்ணாச்ரமோசிதங்களான காலிககர்மங்களை யநுஷ்டிக்கைக்காக ஸர்வதோதிக்கமாக வெழுந்திருந்து புறப்பட்டார்கள். (பிள்ளாயெழுந்திராய்) பகவதாராதந காலமாய்த்து, எழுந்திராயென்ன; அவர்களும் உங்களாரவாரம் கண்டெழுந்திருந்தார்கள், வேறுடையாளமுண்டோவென்ன (புள்ளரையன்கோயிலில் வெள்ளைவிளிசங்கின்பேரரவங் கேட்டிலையோ) புள்ளுக்கு - பெரியதிருவடிக்கு, அரையன்-அரையனை வெம்பெருமானுக்கு ப்ரதிபாதகத்வேந கோயிலானதிருமந்த்ரத்தில் உகாரத்தை மத்யத்திலே யுடைத்தாகையாலே பரிசுத்தமாய், அகிலாத்மவர்க்கத்துக்கும் பகவத்கைங்கர்யோபயுக்தமாய் பகவத்ஸம்பந்த ஜ்ஞாபகமாய் தக்ஷிணாவர்த்த சங்கதுல்யமான ப்ரணவத்தின் மகாரத்வநியைக் கேட்டிலையோ. (பேய் இத்யாதி) பேய்-ப்ரக்ருதி முலையுண்டு-அஹங்கார மமகாரங்கள், நஞ்சுண்டு-அதுகளாகிறவிஷம், உண்டு-அநுபவித்து. அதாவது-ப்ரக்ருதிஸம்பந்த நிபந்தநமாய் சேதநருக்குவரும்அஹங்கார மமகாரங்களைப்போக்கியென்றபடி. (கள்ளச்சகடங் கலக்கழியக்காலோச்சி) காமக்ரோதங்களையும் நிவர்த்திப்

பித்து. (வெள்ளத்து) திருப்பாற்கடலிலே. (அரவில்) திருவநந்தாழ்வான்மேலே. (துயிலமர்ந்த) யோகநித்ரையிலே அந்யபரதையில்லாம லமர்ந்திருக்கிற. (வித்தினை) ஜகத்காரணபூதனை. (உள்ளத்துக்கொண்டு) ஹ்ருதயத்தில் த்யாநித்து. (முனிவர்களும் யோகிகளும்) குணாநுபவபரரும், கைங்கர்யபரரும். (மெள்ள) ஸாவதாநமாக. (எழுந்து) ஜாகரூகராய். (அரியென்ற) ஹரிர்ஹரி: என்ற. (பேரரவம்) மஹாத்வநியானது. (உள்ளப்புகுந்து) ஹ்ருதயத்தில் ப்ரவேசித்து. (குளிர்ந்து) குளிர்ந்தது. எழுந்திராய் இத்யந்வய:. (௬)

## ஏழாம் பாட்டின் அவதாரிகை

**மூவாயிரப்படி**:—83. ஏழாம்பாட்டு.—பகவத் விஷயத்தில் சுவடறிந்தேமறந்து உறங்குகிற ளொருத்தியை யெழுப்

---

**ஆறுயிரப்படி**:—ஏழாம்பாட்டு.—ஆறும்பாட்டில், பகவத் விஷயத்தில் புதியாளொருத்தியை யெழுப்பிற்று; இதில், பழையாளாயிருந்து வைத்து புதுமைபாவிக்கிற ளொருத்தியை யெழுப்புகிறார்கள். சிலரை யெழுப்பினல் "எழுந்திருந்தவர்களைக்கொண்டு க்ருஷ்ணன்பாடு போகிறோம்" என்னுமவர்களன்றிறே; "எல்லார்க்கும் நன்மை வேணும்" என்றிருக்குமவர்களிறே. பகவத்ஸம்பந்தம் மெய்யாகில் தன் வயிற்றில் பிறந்த ப்ரஜையினுடைய ஸம்ருத்திக்கு உகக்குமாபோலே, எல்லாருடைய ஸம்ருத்திக்கும் உகக்கவேணுமிறே. "அடியார்கள் குழாங்களை - உடன்கூடுவதென்றுகொலோ" என்றும், "அந்தமில்பேரின்பத் தடியரோடிருந்தமை" என்றும் சொல்லுகிறபடியே - இக்குழாத்திலினிமை யுண்டானாலிறே அங்கும் இனிமையுண்டாவது. ஆட்கொண்டவில்லிஜீயரெழுந்தருளா நிற்கச்செய்தே, நஞ்ஜீயர் தெண்டனிட்டு நிற்க; "பகவத்விஷயத்தில் ருசி நமக்கு மெய்யாகப் பிறந்ததில்லைகாணும்" என்றருளிச்செய்ய; "உம்மைப்போலே

---

பி. 83—சுவடறிந்தே என்கையால் நாயகப்பெண்பிள்ளை - பேய்ப்பெண்ணே என்கையால் மறந்துகிடக்கிறாள் என்று பலிதம்.

புகிறார்கள். "போதுவிடிந்தது, எழுந்திராய்" என்ன; விடிந்தமைக்கடையாளமென்னென்ன; ஆனைச்சாத்தன் கீசுகீசென்றுநின்றது.

கீசுகீசென்றெங்குமானைச்சாத்தன்கலந்து
  பேசினபேச்சரவங்கேட்டிலையோபேய்ப்பெண்ணே
காசும்பிறப்புங்கலகலப்பக்கைபேர்த்து
  வாசநறுங்குழலாய்ச்சியர் மத்தினால்
ஓசைபடுத்ததயிரரவங்கேட்டிலையோ
  நாயகப்பெண்பிள்ளாய்நாராயணன்மூர்த்தி
கேசவனைப்பாடவும்நீகேட்டேகிடத்தியோ
  தேசமுடையாய்திறவேலோரெம்பாவாய் (எ)

பதவுரை:—பகவத்விஷயத்தின் சுவடறிந்துமறந்து கிடக்கிறாளொருத்தியை, எங்கும்-எல்லா திக்குக்களிலும், ஆனைச்சாத்தன்-வலியன் எனும் பாரத்வாஜபக்ஷிகளானவை, கலந்து—தம்மில் ஒன்றோடொன்றுகூடி, கீசுகீசென்று—, பேசின—பேசிய, பேச்சு அரவம்-பேச்சினுடைய ஆரவாரத்வநியும், கேட்டிலையோ-கேட்கவில்லையோ, எழுந்திராயென்றபின்பும் பேசாதேகிடக்க; பேய்ப்பெண்ணே-மதிகெட்டவளே, நறு-நல்ல, வாசம்-பரிமளம்வீசாநின்றுள்ள, குழல்-மயிர்முடியையுடைய, ஆய்ச்சியர்-இடைச்சிகளானவர்கள், கண்டத்திலணிந்திருக்கும், காசும்—அச்சுத்தாலியும், பிறப்

ஆசார்யவான்களுண்டோ, இங்ஙனே யருளிச்செய்வானென்?" என்ன; "பகவத்விஷயத்திலே மெய்யே ருசியுண்டென்றிருக்கையாவது - பாகவதர்களைக்கண்டால் உகக்குமன்றுகாணும்"என்றருளிச்செய்தார். இப்படியெல்லார்க்குமொக்க இந்நன்மை யுண்டாக வேணுமென்று எல்லாரையுங் கூட்டிக்கொண்டு ஒருத்தி வாசலிலேசென்று, "போதுவிடிந்ததுகாண், எழுந்திராய்" என்ன; "விடிந்தமைக் கடையாளமென்?" என்ன, ஆனைச்சாத்தனுடைய த்வநி அடையாளமன்றோ வென்கிறார்கள். கீழ்ச்சொன்ன "முநிவர்களும் யோகிகளும்" என்றதோடு, "ஆனைச்சாத்தன்" என்றதோடு, "அவர்கள் "ஹரிர்ஹரி:" என்றதோடு, இவை "கீசுகீச" என்றதோடுவாசியற, எல்லாம் உத்தேச்யமாயிருக்கிறபடி.

பும்-மூளைத்தாலியும் ஆமைத்தாலியும். கலகலப்ப-கலகலவென்று சப்திக்கும்படியாக, கைபேர்த்து-கையையெடுத்து, மத்தினால்-மத்தாலே, ஓசைபடுத்த-ஓசைபடுத்திய, தயிர் அரவம் - தயிர்கடைகிற ஓசையும், க்ருஷ்ணன் கண்ணழகிலே தோற்றுப்பாடுகிற மிடற்றோசையும், கேட்டிலையோ-கேட்கவில்லையோவென்ன; இவ்வூரில் இரவும் பகலும் கடைகையே ஸ்வபாவமாயன்றோ போருகிறதென்று பேசாதே கிடக்க; நாயகப்பெண்பிள்ளாய்-பெண்களுக்கெல்லாம் தலைமையானவளே, நாராயணன் - ஆச்ரிதர் பக்கல் வாத்ஸல்யமுடையனாய், கண்ணாலேகண்டு அநுபவிக்கலாம்படி, மூர்த்தி-க்ருஷ்ணனாய் வந்து ஸௌசீல்யத்தாலே திருவவதரித்து,. கேசவனை-கேசியை நிரஸித்தவனை, பாடவும்-பாடாநிற்கச் செய்தேயும், கேட்டு-அத்தைக்கேட்டிருந்தும், கிடத்தியோ-கிடந்து உறங்குகிறாயோ; தேசமுடையாய்-மிக்க தேஜஸ்ஸையுடையவளே, நாங்கள் உன்னழகு காணும்படி, நீதிற-நீயே வந்து திறக்கவேணும் என்கிறார்கள்.

84. வ்யா.—(கீசு) அநக்ஷரரஸமாயிருக்கை. ஒரு ஆனைச்சாத்தன் பேசுங்காட்டில் விடிந்ததாக வேணுமோவென்ன; எங்கும் பேசாநின்றதென்ன; அவற்றைக் கலக்குகைக்கு நீங்களுண்டேயென்ன; எங்களாலன்று, தானேயுணர்ந்தன வென்ன ; அதுக்கடையாளமென்னென்ன

---

வ்யா.—(கீசுகீசு) இது அநக்ஷரரஸமாயிருக்கிறபடி. ஆனைச்சாத்தனுடைய த்வநி விடிவுக்கடையாளமன்றோவென்ன; ஒரு ஆனைச்சாத்தனுணர்ந்தவிதுவிடிவுக்கு அடையாளமாகப் போருமோவென்ன; "எங்கும்" என்று இவர்கள் சொல்ல; எங்கும் நீங்களில்லையோ அவற்றையுணர்த்துகைக்கென்ன; நாங்களுணர்த்தவுணர்ந்ததன்று, கலந்து பேசின பேச்சுக்காண் என்ன; இராவெல்லாமுறங்கிப் போதுவிடிந்தவாறேயோ கலப்பது என்று அவள்சொல்ல; இரவெல்லாங் கலந்து, மரக்கலமேற்றுமவன் மீண்டுவருமளவும் ஜீவநமேற்றிக்கொண்டுபோமாபோலே, பகல் முப்பதுநாழிகைக்கும்

---

பி. 84—அநக்ஷரரஸமாயிருக்கை-அவ்யக்தமதுரதையைஸூசிப்பிக்கிறது. கலக்குகை-உறங்கவொட்டாதே கிளப்புகை. கலந்து - ஸம்ச்லேஷித்து.

(கலந்து பேசினபேச்சரவங் கேட்டிலையோ) கலந்துபேசின படி, அறிந்தபடியென்னென்ன; பிரிந்துபோனால் பகலெல் லாம் தரிக்கும்படி கலந்து பிரியப் புகாநின்றோ மென்னும் தளர்த்தி தோற்றப்பேசுகிறமிடற்றோசைகேட்டிலையோ. கேளாமைக்கு அங்கே ஆரவார முண்டாகையாகாதேசெல்லு கிறது என்று மர்மம் சொல்லுகிறார்கள் "கேட்டிலையோ" என்று.

85. (பேய்ப்பெண்ணே) இவர்களாகி விப்படிசொல் லுகையே பணியென்று பேசாதேகிடக்க; அறிந்துவைத்துக் காற்கடைக் கொள்வாயே! மதிகேடீ! என்கிறார்கள். இவர்

---

வினைநீரடைத்துக்கொண்டு "பிரிவுவருகிறது" என்னும் தளர்த்திதோற்றப் பேசுகிறபேச்சு விடிவுக்குடலன்றோ வென்கிறார்கள். (கேட்டிலையோ) இத்த்வநிகேளாதபடியோ, அங்கோடுகிற தென்னென்கிறார்கள். "நிஸ்வநம் சக்ரவாகா நாம் நிசம்ய" என்கிறபடியே இவற்றின் த்வநியைக்கேட் டால் கடுகக்ருஷ்ணன் பக்கலிலே சென்று நிற்கவேண்டா வோவென்ன;

மாளிகைகளிலே வைத்தாளிகள் வம்சாவளி சொல்லக் கேட்டு எழுந்திருக்குமவர்கள், பக்ஷிகளினுடைய பேச்சுக் கேட்டு எழுந்திருக்கும்படியாவதே! இதென்ன தர்மஹாநி! என்று அவள்வெறுத்துக் கிடக்க, (பேய்ப்பெண்ணே) என் கிறார்கள். உன்னுடைய அந்யதாஜ்ஞாந மிருந்தபடியென்! பகவத்ஸம்ச்லேஷம் பாகவதஸம்ச்லேஷபர்யந்தம் என் றறிந்துவைத்து ஆறியிருப்பதே! என்று க்ஷேபிக்க, போது விடியாதிருக்கச்செய்தே "விடிந்தது" என்று சொல்லுகிற நீங்களன்றோ பேய்ப்பெண்களென்ன; போதுவிடியச் செய்தே "விடிந்ததில்லை" என்று சொல்லுகிற நீயன்றோ பேய்ப்பெண்ணென்ன; இதுபோதாது, வேறடையாளமுண் டாகில் சொல்லுங்கோளென்ன; இவ்வூரில் தயிர்கடைகிற

---

பி. 85—அச்சுத்தாலி-அச்சால் அடித்துக் காசுகளைக் கோவை யாகக் கழுத்தில் அணியும் காசுமாலை. முளைத்தாலி-முளைமுளையாகச் செய்து கோவையாக அணியும் ஆபரணம். நாலுகை-இழுக்கை.

களுக்கு அறிவாகிறது—பகவத் விஷயத்திலும் ததீயவிஷயம் நன்றென்று அறிகை. அத்தையறிந்தும் பேசாதே கிடக்கை யாலே சொல்லுகிறார்கள். என் அறியாமை சொல்லாமே விடிந்தமைக்கடையாளஞ்சொல்லுங்கோளென்ன ; தயிர் கடைகிற வோசை கேட்டிலையோ. (காசும்பிறப்பும்) அச் சுத்தாலியும் முளைத்தாலியும். (கலகலப்ப) கடைகிறபோதை வ்யாபாரத்தாலே. " அரவூறுசுலாய் மலைதேய்க்கு மொலி " என்னுமாபோலே த்வநிக்கை (கை பேர்த்து) தயிரின் பெரு மையாலும் இவர்கள் ஸௌகுமார்யத்தாலும் மலைபேர்த்தாற்

வோசை விடிவுக்கு அடையாளமன்றோவென்கிறார்கள். காம் யத்தில் பல ச்ரத்தையில்லையாகில் தவிரலாம், நித்யகர்மம் அவச்யம் அநுஷ்டித்தே யறவேணும், அநுஷ்டாநத்துக்கு பலமில்லை, அகரணே ப்ரத்யவாயமுண்டு; அப்படியே ஜாத் யுசிதமான நித்யாநுஷ்டாநமன்றோ விவர்களுக்குத் தயிர் கடைகை, இது விடிவுக்கடையாளம் போராதோ வென்கி றார்கள் (காசும்பிறப்பும்) அச்சுத்தாலியும் ஆமைத்தாலியும். (கலகலப்ப) ஆபரணத்வநியு மிவர்களுக்கு உத்தேச்யமா யிருக்கை. (கைபேர்த்து) தயிர் ஸம்ருத்தியாலும், தங்களு டைய ஸௌகுமார்யத்தாலும், க்ருஷ்ணனுடைய அஸந்நிதி யாலே கைசோருகையாலும், ஸந்நிதியில் "தயிரை மோராக்க வொட்டேன்" என்று பிடித்து வலிக்கையாலே கடைகையி லுண்டான அருமையைச்சொல்லுகிறது. (வாசநறுங்குழல்) கடைகிற ஆயாஸத்தாலே மயிர்முடி கட்டு நெகிழ்ந்து முடை நாற்றத்தை மறைக்கும்படியாய்த்து பரிமளம் வெள்ளமிடு கிறபடி. " தெருவெல்லாங் காவிகமழ் திருக்கார்க்கரை " என்னக்கடவதிறே. (ஆய்ச்சியர்) ஒருத்தியன்றோ என்று சொல்லவொண்ணாதபடி இருந்ததேகுடியாக. (மத்தினை லோசைபடுத்ததயிரரவம்) மந்தரத்தாலே கடலைக்கடைகிற போது, " அரவூறுசுலாய் மலைதேய்க்குமொலி " என்றபடி. " உத்காயதீநாமரவிந்தலோசநம் வ்ரஜாங்கநாநாம்திவமஸ்ப்ர் சத்த்வநி: தத்நசசநிர்மந்தநசப்தமிச்ரிதோநிரஸ்யதேயேந திசாமமங்களம்." க்ருஷ்ணனுடைய கண்ணழகுக்குத்தோற் றுப்பாடுகிற இடைப்பெண்களுடைய த்வநி, தயிர்கடைகிற

போலே கை பேர்க்கப்போகாதபடி. க்ருஷ்ணன் ஸந்நிதியில் லாமையாலே கைசோர்ந்த தென்னவுமாம். அன்றியே, அவன்ருனே ஸந்நிஹிதனாய் நின்று "தயிரைமோராக்கவொட்டேன்" என்று கையைப்பற்றி நாலுகையாலேயென்றுமாம். "மோரார் குடமுருட்டி" என்னக்கடவதிறே. (வாசமித்யாதி) ஆயாஸத்தாலே மயிர்முடி நெகிழ்ந்து பரிமளந்தானே புறப்பட்டு ப்ரவஹிக்கிறபடி. (மத்தினாலோசைபடுத்த) மந்தரத்தாலே கடலைக் கலக்கினாற்போலே, இந்த கோஷமும் செவியில் பட்டதில்லையோ. "உத்காய தீநாமரவிந்தலோசநம் வ்ரஜாங்கநாநாம் திவமஸ்ப்ருசத்த்வநி:| தத்நச்சநிர்மந்தநசப்தமிச்ரிதோநிரஸ்யதேயேநதிசாமமங்களம்"(89) என்று-அவன் கண்ணழகிலே தோற்றுப் பாடுகிற த்வநியும் கடைகிற தயிர் ஓசையும், ஆபரண ஓசையும் கிளர்ந்து ஊர்த்த்வலோகங்களிலே சென்று கிட்டுவதான ஓசை உன் செவியில் படாதொழிவதே! இவ்வூராகில் "முப்போதும் கடைந்தீண்டிய

---

வோசையோடே கலசி பரமபதத்திலே சென்று த்வநித்தது; அப்போது, க்ருஷ்ணகுணங்கள் பூமியிலே நடையாடாநிற்க, மலையிலே யிருப்பாரைப்போலே உயர இருப்பதே! என்று அவர்களை வசைபாடினாற்போலே யிருந்தது. "விக்ரீது காமா கிலகோபகந்யா முராரி பாதார்ப்பிதசித்த வ்ருத்தி: தத்யாதிகம் மோஹவசாதவோசத்கோவிந்த தாமோதர மாதவேதி" முரனைக்கொன்ற வீரத்திலே தோற்று க்ருஷ்ணன்பக்கலிலே பத்தபாவைகளாயிருக்க, இதினின்று மிவளை மீட்கும் விரகேதோ என்று பார்த்து, தாயார், பாலையுந் தயிரையும் நெய்யையுங் கொடுத்து, "இத்தை விற்றுக்கொண்டுவா" என்று சொல்ல; விற்கப்போன விடத்திலும் நினைவு இங்கேயாகையாலே, "கோவிந்தனைக்கொள்ளுங்கோள், க்ருஷ்ணனைக் கொள்ளுங்கோள், ஸ்ரீய:பதியைக்கொள்ளுங்கோள்" என்று கூறிக்கொண்டு திரிந்தாள். (ஓசைபடுத்த தயிரரவம் கேட்டிலையோ) இது கேளாதபடி யுள்ளேயு மொரு தயிருண்டோ கடைகிறது. "கெண்டை" இத்யாதி, "தாமோதரா மெய்யறிவன்நானே." பண்டுபோலேயோ, க்ருஷ்ணன் பிறந்த பின்பு வாங்கக்குடம் நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்களா

வெண்ணெய்" என்று-இரவும் பகலும் இடைவிடாதே தயிர் கடைகை ஸ்வபாவமன்றோ வென்று பேசாதே கிடக்க.

86. (நாயகப்பெண்பிள்ளாய்) இப்பெண்களுக்கெல்லாம் நிர்வாஹகையானபடி இதுவோவென்கிறார்கள்; சொல்லிற்றுக் கெல்லாம் மறுமாற்றஞ் சொல்லிக்கிடக்கிறது உன்னுடைய ஐச்வர்யச்செருக்காலே யென்னவுமாம்; "பேய்ப் பெண்ணே" என்றதோடு "நாயகப்பெண்பிள்ளாய்" என்றதோடு வாசியில்லையிறே அகவாயில் பாவம் ஒன்றாகை யாலே. என்ற விடத்திலும் வாய்திறவாதே கிடக்கையாலே. (நாராயணன்மூர்த்தி கேசவனைப்பாடவும் நீகேட்டே கிடத்தியோ) நீ எழுந்திருப்புதியென்று நாங்கள் பாட, அதுவே குறங்குகுத்தக்கிடந்துறங்குகிறாயோ (நாராயணன்) முகம் தோற்றாமேநின்று வாத்ஸல்யத்தாலேரக்ஷிக்கக்கடவ ஸர்வேச்வரன். (மூர்த்தி) தன்னுடைய ஸௌசீல்யத்தாலே பிறந்தது. (கேசவனை) கண்ணுக்குத்தோற்ற நின்று நம் விரோதிகளைப் போக்குமவனை. (பாடவும்) இப்படி வாத்ஸல்

கையாலே அறுபதுநாழிகையும் கறப்பது கடைவதாய்ச் செல்லு மத்தனையன்றோ, இது விடிவுக்குடலாமோவென்று அவர்கள் நிருத்தராரம்படி சொல்ல.

(நாயகப்பெண்பிள்ளாய்) என்கிறார்கள். ஆகையாலே சொன்னதுக்கெல்லாம் மறுமாற்றம் சொல்லிக்கிடக்கிறது உன் செல்வக்கிடப்பிறே. "பேய்ப்பெண்ணே" என்றதோடு, "நாயகப்பெண்பிள்ளாய்" என்றதோடுவாசியற்றிருக்கிறது. ஒரு மிதுநமாய்ப் பரிமாறா நின்றால், தாழச் சொன்னபோதும் உயரச்சொன்னபோதுமாயிறேயிருப்பது. "நித்யாபிவாஞ்சித பரஸ்பர நீசபாவை:" சேஷபூதர் சேஷி

---

பி. 86-அகவாயில் பாவம் ஒன்றாகையாலே சேஷியாகிய நாயகப்பெண்பிள்ளையைப் பேய்ப்பெண்ணே என்கையும் தவறில்லை. குறங்குகுத்த-தொடையில்குத்த. நிரவதிகதேஜஸ் - கேசவநாமம் கேட்டவுடன் பிறந்த தேஜஸ். திண்ணகத்தை - ப்ரவாஹத்தை. அணைசெய்யாதே வெட்டிவிடாய் - கதவை மூடிவைத்துத் தடை செய்யாதே, கதவைத் திறந்து ப்ரவாஹம் செல்லுதற்கு வழிவிடு.

யத்தையும் ஸௌசீல்யத்தையும் ஆச்ரிதவிரோதி நிரஸநத்தை யும் பேசினவிடத்திலும், பின்னையும் இவர்கள் பேச்சே தனக்குதாரகமாய்க்கிடக்கையாலே "கேட்டேகிடத்தியோ" என்கிறார்கள். இவள் துணுக்கென்றெழுந்திருக்கைக்காக, நிருபாதிகஸ்வாமியான ஸர்வேச்வரன் ஆச்ரித வத்ஸலனாய் க்ருஷ்ணனாய் வந்து அவதரித்த விடத்திலே கேசிவந்து நலி யப்புக, அவனை க்ருஷ்ணன்கொன்றான்காண் என்ன; அதுக் கும் பேசாதே கிடந்தாள். (பாடவும் நீகேட்டே கிடத் தியோ) அவனுடைய விஜயத்தைக் கேட்டு, கேசி வந்து நலி யப்புக்கான் என்கிற துணுக்கும் கேட்டு, கரவதாநந்தரம், " பர்த்தாரம் பரிஷஸ்வஜே" (90) என்று சக்ரவர்த்தித் திரு மகனை ஸ்ரீஜநகராஜன் திருமகள் அணைத்தாற்போலே, நீயும் க்ருஷ்ணனை யணைக்கப் புறப்படுவாயோ என்றுசொன்னோம், அதுவுமுனக்கு க்ருஷ்ணவிரோத பயந்தீர்ந்து மார்பிலே கை வைத்து உறங்கலாம்படியாய்விடுவதே ! என்றுமாம். (தேச முடையாய்திற) உன்னைக் காணப்பெறாதே அந்தகாரமாய்க் கிடக்கிற எங்களுக்கு இத்தைத்திறந்து புறப்பட்டு, உன்னு

---

பக்கல் சொல்லுவதொன்றுண்டோ, இதுக்கெல்லா மழகி தாய் நிர்வாஹகையானாயென்று இவர்கள் பேசாதிருக்க ; நான் உங்களுக்கடிமையன்றோ, திறக்கிறேனென்ன; இவள் துணுக்கென்று எழுந்திருந்து கடுகத் திறக்கைக்காக, கேசி வத வ்ருத்தாந்தத்தை ஸ்மரிப்பிப்போமென்று அத்தை ப்ர ஸங்கிக்கிறார்கள், பெரியாழ்வார் பெண்பிள்ளையாகையாலே துணுக்கென்று உணருமென்று. (நாராயணன்மூர்த்தி கேச வனைப்பாடவும்) கண்ணுக்குத்தோற்றாதே நின்று ரக்ஷிக்கும் ஸர்வேச்வரன் ஆச்ரிதவத்ஸலனா யிங்கேவந்து அவதீர்ணனா னான், அங்கே கேசிவந்து கிட்டினான்கா ணென்கிறார்கள். அதுதன்னை விஜயாந்தமாக அநுஸந்தித்துப் பேசாதே கிடந் தாள் (நீகேட்டேகிடத்தியோ) அழகிதாக உன்னையெழுப்ப வழி பார்த்தோம், தொடைகுத்தி யுறக்கினோமாகாதே. கேசி பட்டவநந்தரம், கரவதத்தினன்று, பிராட்டி " பர்த்தாரம்பரி ஷஸ்வஜே" என்று - பெருமாளை யணைத்தாற்போலே க்ருஷ் ணனை யெழுந்திருந்து அணைக்கப்பாராய். பேச்சி னினிமை

-டைய நிரவதிக தேஜஸ்ஸாலே வெளிச்செறிப்பிக்கைக்காக வும், உன்னுடைய அழகு காண்கைக்காகவும் நீயே வந்து திற. (தேசமுடையாய் திற) இவள் பின்னையும் பேசாதே கிடக்கையாலே ஜாலகரந்த்ரத்தாலே பார்த்தார்கள். இவ ளுக்கு க்ருஷ்ண விஜயாநுஸந்தாநப்ரீதியாலே வடிவிற்பிறந்த புகரைக்கண்டு கிண்ணகத்தை அணைசெய்யாதே வெட்டி விடா யென்கிறார்க ளாகவுமாம். ... ... ... எ

87. ஸ்வாபவதேச வ்யாக்யாநம்.— ஏழாம் பாட்டு. (கீசுகீசு இத்யாதி) இப்பட்டில், பகவத்விஷயத்திலும் பாக வத விஷயம் நன்றென்றறிந்தும் மறந்திருப்பா ரொருவரை யெழுப்புகிறார்கள். வ்யா.—(எங்குமானைச்சாத்தன் கலந்து-கீசுகீசு என்று பேசின பேச்சரவம் கேட்டிலையோ) ஸர்வ தோதிக்கமாக, அஹங்கார நிவர்த்தகரான மஹாபாகவதர், "நாம்பிரியப்புகாநின்றோமே!" என்று பிரிந்தால் மறுபடி கூடுந்தனையும் தரித்திருக்கைக்காக பரஸ்பரம்ஸம்ச்லேஷித்து, கத்கதஸ்வரமாகையாலே அநக்ஷரரஸமாக, பேசின பேச்சர வம்-விச்லேஷவ்யஸநம் தோற்றும்படியாகப் பேசின பேச்சி னுடைய த்வநியைக் கேட்டிலையோ. (பேய்ப்பெண்ணே) அறிந்துவைத்து, பேசாதே கிடக்கையாலே மதிகேடீ! என் கிறார்கள். அவர்களை யெழுப்புகைக்கு நீங்களுண்டே, வேற டையாள முண்டோவென்ன ; சொல்லுகிறார்கள் (காசும் பிறப்பும் கலகலப்பக்கைபேர்த்து) திருமந்த்ரமும் த்வய சரம ச்லோகங்களும் ஒன்றோடொன்று சேர்ந்து த்வநிக்க, ஸ்வரூ போபாய புருஷார்த்தஜ்ஞாநம் தலையெடுத்து. (வாசநறுங் குழல் இத்யாதி) மிக்க பரிமளத்தையுடைய பகவத்விஷய

---

யைக்கேட்டு இவள் வாய்திறவாதே கிடந்தவாறே, ஜாலக த்வாரத்தாலே பார்த்தார்கள்; அவனுடைய விஜயத்தை யநு ஸந்திக்கையால் வந்த புகரடைய வடிவிலே காணலாம்படி கிடந்தாள் (தேசமுடையாய் திற) கிண்ணகத்துக்கு அணை செய்யாதேவெட்டிவிடாய், நாங்கள் வாழ்ந்துபோக. எங்க ளுடைய ஹ்ருதயத்தில் அந்தகாரம்போம்படி உன்வடிவைக் காட்டி எங்களையநுபவிக்கப்பாராய். ... ... ... எ

வ்யாமோஹத்தையுடைய அநந்யார்ஹ சேஷபூதரான ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸங்கல்பத்தாலே சிக்ஷிதரான ஸம்ஸாரி சேதநருடைய திவ்யப்ரபந்தாநுஸந்தாந த்வநியைக் கேட்டி லையோ.

88. (நாயகப்பெண்பிள்ளாய்) இதுவன்றே நமக்கு நீ நிர்வாஹகையானமைக்கடையாளம். அதாவது - சொன்னதுக்கெல்லாம் மறுமாற்றுஞ் சொல்லி யெழுந்திராமலிருக்கை. (நாராயணன் மூர்த்தி கேசவனைப்பாடவும் நீகேட்டே கிடத்தியோ) ஸர்வஸ்மாத்பரனை நாராயணனுடைய அவதாரமாய் கேசிஹந்தாவான க்ருஷ்ணனைப் பாடச்செய்தேயும், "தம்த்ருஷ்ட்வா" என்கிறபடியே க்ருஷ்ண விஜயத்தைக் கேட்டுப் புறப்பட்டு அவனை யணைக்கக்கடவநீ, அதுவே தொடைகுத்தாக பகவதபாய பயந்தீர்ந்து உறங்கக் கடவையோ. (தேசமுடையாய் திற) இப்படிசொன்னவிடத்திலுமெழுந்திராமையாலே ஜாலகரந்த்ரத்தாலே பார்த்து, பகவத்குணாநுபவத்தாலுண்டான மஹாதேஜஸ்ஸையுடையவளே. இத்தேஜஸ்ஸை, காட்டிலெறித்த நிலாவாகாமே நாங்களநுபவிக்கலாம்படி எங்கள் அஜ்ஞாநத்தை நீக்காயென்கிறார்கள். .... ... ... .... .... எ

## எட்டாம்பாட்டின் அவதாரிகை

**மூவாயிரப்படி** :—89. எட்டாம்பாட்டு. எல்லாரும் வந்தழைக்கும்படி க்ருஷ்ணனோலே வேண்டற்பாடுடையாளொருத்தியை யெழுப்புகிறார்கள்.

---

**ஆறாயிரப்படி** :—எட்டாம் பாட்டு. இதுக்கு முன்பு உணர்ந்த பெண்களெல்லாம் திரண்டு, தங்கள் அபிமதலாபமாவளொருத்தி முன்னாகப் பெறலாயிருக்கிறது, அதுக்கீடாக க்ருஷ்ணன் கொண்டாடும்படி செல்வக்கிடப்புடையாளொருத்தியை யெழுப்புகிறார்கள். ஸம்ஸாரிகளுக்கு ராத்ரியில் பரஹிம்ஸாதி சிந்தநமும், நரகாவஹமான விஷயாநுபவமும், தமோகுணபிபவத்தால் வந்த நித்ரையுமாய்ச் செல்லுகையாலே, ராத்ரிதண்ணியதென்றுபுருஷார்த்தோபயோகியான

கீழ்வானம்வெள்ளென்றெருமைசிறுவீடு
    மேய்வான் பரந்தனகாண்மிக்குள்ளபிள்ளைகளும்
போவான்போகின்றாரைப்போகாமற்காத்துன்னைக்
    கூவுவான்வந்துநின்றோம்கோதுகலமுடைய
பாவாயெழுந்திராய்பாடிப்பறைகொண்டு
    மாவாய்பிளந்தானைமல்லரைமாட்டிய
தேவாதிதேவனைச்சென்றுநாம்சேவித்தால்
    ஆவாவென்றாராய்ந்தருளேலோரெம்பாவாய். (அ)

பதவுரை :—எல்லாரும் வந்தழைக்கும்படி க்ருஷ்ணனாலே வேண்டப்படுவாளொருத்தியை, கீழ்-கீழ்திசையில், வானம்-ஆகாசமானது, வெள்ளென்று-வெளுத்தது எழுந்திராயென்ன; மதிமுக மடந்தையரான உங்களிலே ஒருத்தி அத்திக்கைப் பார்க்கையாலே முகத்தினொளி அத்திசையில் தாக்கிக் கிழக்கு வெளுத்ததாகத் தோற்றிற்றித்தனை, வேறடையாள முண்டாகில் சொல்லுங்கோளென்ன; எருமை - எருமைகள், சிறு - வைகறையில், வீடு - விடப்பட்டு, மேய்வான்-பனிப்புல் மேய்கைக்காக, பரந்தனகாண்-தன்னிச்சைப்படி நாற்றிசையிலும் பரவினகாண் எழுந்திராயென்ன; நான் புறப்பட்டு வருகைக்கு உங்களை யொழிந்தா ரெல்லாரும் போனார்களோவென்ன ; மிக்குள்ள பிள்ளைகளும்-உன்னையொழிந்தாரெல்லாரும், திருவேங்கட யாத்ரைபோலே, போவான் - போகையே ப்ரயோஜநமாக, போகின்றாரை-போகிறவர்களை, போகாமல் காத்து - போகாதபடி தடுத்து, உன்னை - அவனருளுகைக்கு ஹேதுபூதையானவுன்னை, கூவுவான்-அழைக்கைக்காக,வந்து-உன் வாசலிலேவந்து,நின்றோம்-நிற்கிறோம்,கோதுகலமுடைய-கௌதூஹலமுடைய, பாவாய் - பெண்பிள்ளாய், எழுந்திராய் - எழுந்திரு என்ன; எழுந்திருந்து செய்வதென்னென்ன; க்ருஷ்ணகுணங்களை பாடி - வாயாரப்பாடி, பறைகொண்டு-அவனை ஸேவிக்கையாகிற

---

பகல் விருப்பத்துக்கு உடலாயிருக்கும், இவர்கள் க்ருஷ்ணாநுபவம்பண்ணப் பெறுகையாலே ராத்ரி அடிக்கழஞ்சு பெற்று விடியில் கோபவ்ருத்தர்கள் விரோதிப்பார்களென்று விடியப் புகாநின்றதென்று பயப்பட்டு, க்ருஷ்ணனையும் நம்மையுஞ் சேரவொட்டாதவர்கள் உணருங்காலம் வந்து தோற்றச் செய்தே நீ கிடந்து உறங்குகையாவதென்னென்ன ; அவள் உள்ளேகிடந்து அக்காலம் வருகையாவ தென்னென்ன;

கண்ணினுள் விடவேசெய்து விழிக்கும்பிரான்" என்று இவர்களைத் தோற்பித்துக் கொள்ளும்கண்ணிறே. "ஆழியொடும் பொன்னார் சார்ங்கமுடைய வடிகளை யின்னாரென் றறியேன்" என்று-அநுபவிப்பாரைப் பிச்சேற்றக்கடவ திருவாழியையும், திருமேனிக்குப் பரபாகமான ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும், முற்படத்தன்னை யெழுதிக்கொடுத்துப், பின்னை எழுதிக்கொள்ளுகிற திருக்கண்களையுமுடையவனை. (பாட) உன் ப்ரீதிக்குப்போக்குவிட்டு எங்களையும் உஜ்ஜீவிப்பிக்க. க்ருஷ்ணன்கையில் இப்போது ஆழ்வார்களுண்டோ வென்னில்; எப்போதுமுண்டு; அது பெண்களுக்குத்தோற்றும்; அல்லாதார்க்குத் தோற்றாது. "உபஸம்ஹர" (67) என்றதும் உகவாதார்க்குக் கூசியிறே. இவர்களுக்குத்தோற்றத் தட்டில்லையே. .... .... ... ... ... ... கச

129. ஸ்வாபதேசவ்யாக்யாநம். பதினாலாம் பாட்டு. (உங்களித்யாதி) இப்பாட்டில் - பாகவதஸமுதாயத்துக்கெல்லாம் தாமே கடவராய் இவர்களுக்கெல்லாம் பகவத்ஸம்பந்தகடகர் தாமேயாம்படி ஜ்ஞாநபக்தி வைராக்யங்களாலே

---

செய்து விழிக்கும்" "கண்களுக்கு அற்றுத்தீர்ந்தும்" ஜிதந்தே" "விண்ணோர்பரவுந்தலைமகன்" என்று-உபயவிபூதியையுந்தோற்பிக்கும் கண்ணழகுடையவனை. சந்த்ராதித்யர்கள் சேரவுதித்தாற்போலேயிருக்கிறஇரண்டுதிவ்யாயுதங்களையும் கண்டு, "ஆங்குமலருங்குவியும்" என்கிற திருநாபீகமலம்போலே, திருக்கண்களும் அலருவதுமொட்டிப்பதாகா நிற்கும். க்ருஷ்ணன் கையில் ஆழ்வார்களுண்டோவென்னில், எப்போதுமுண்டு; அதுபெண்களுக்குத் தோற்றும்; ஆண்களுக்குத் தோற்றாது. "உபஸம்ஹர" என்றது உகவாதார்க்குக் கூசியிறே. "நெய்த்தலைநேமியுஞ் சங்கும் நிலாவிய" என்று - யசோதைப்பிராட்டி தாலாட்டுகையாலே இவர்களுக்குத் தோற்றத் தட்டில்லையே. (பாட) உன் ப்ரீதிக்குப் போக்குவிட்டுப்பாடி, ஒரு நீர்ச்சாவிபோலே கிடக்கிற சித்திரள் உஜ்ஜீவிக்கும்படி வர்ஷியாய். (பங்கயக்கண்ணனைப் பாட) "உத்காயதீநாமரவிந்தலோசநம்" ... ... கச

பூர்ணரான பாகவதரை யெழுப்புகிருர்கள். வ்யா.—(உங்கள் புழைக்கடையித்யாதி) ஆகாரத்ரய விசிஷ்டரான வுங்களு டைய விஹாரஸ்தாநமான திருமந்த்ரத்தினுடைய மத்யேவர்த் திக்கிற நமஸ்ஸிலே பாரதந்த்ரியம் ப்ரகாசமாய் ஸ்வாதந்த்ரி யம் தலைமடிந்ததுகாண். (செங்கல்பொடிக்கூறை வெண்பல் தவத்தவர்தங்கள்திருக்கோயில் சங்கிடுவான் போகின்ருர்) ராகப்ரயுக்தமான சேஷத்வஜ்ஞாநமுடையமந்தஸ்மிதமுடைய ரான ப்ரபந்நாதிகாரிகள் தங்கள் தங்களெம்பெருமான் ஸந்நிதியிலே திருவாராதநம் பண்ணுகைக்குப் போந்தார்கள். (எங்களை முன்ன மெழுப்புவான் வாய்பேசும் நங்கா யெழுந் திராய்) எங்களையெல்லாம் நாங்கள் அபேக்ஷிப்பதற்கு முன் னேஜ்ஞாநிகளாக்கும்படி ஸ்ரீஸூக்திகளை யருளிச்செய்யும் பூர்த்தியை புடையவரே யெழுந்திராய். (நாணாதாய்) சொல் லும் செயலு மொத்திராதார்க்கு நாணமுமின்றிக்கே யொழி வதே. இப்படியென்னை க்ஷேபித்துக்கொண்டாகிலும் என் பக்கல் ஸாபேக்ஷராய் வருவதேதென்ன; (நா உடையாய்) வாங்மாதுர்யமுடையவரே. நீர் அஹ்ருதயமாகச்சொல்லி லும் பேச்சினினிமையைப் பார்த்தால் ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனை வீச்வரனுக்கு மிதுஸஹ்ருதயம் அவச்யம் கர்த்தவ்யம் என் னும்படியாயிருக்கை. ஜ்ஞாநமுண்டானல் செய்வதென் னென்ன; (சங்கொடித்யாதி) "ஏதத்ஸாமகாயந்நாஸ்தே" என்கிறபடியே திருவாய்மொழிபாடுகையே ப்ரயோஜநம், எழுந்திராயென்கிருர்கள். கச

## பதினைந்தாம் பாட்டின் அவதாரிகை

**மூவாயிரப்படி**:—130. பதினைந்தாம்பாட்டு. எல்லாரு டைய திரட்சியுங் காணவேண்டியிருப்பா ளொருத்தியை யெழுப்புகிருர்கள்.

---

**ஆருயிரப்படி**:—பதினைந்தாம்பாட்டு. (எல்லே) பெண்க ளெல்லா ருடையவும் திரள் காணவேண்டியிருப்பாளொருத் தியை யெழுப்புகிருர்கள். கீழ்ப்பத்துப் பட்டாலும்சொன்ன உக்திப்ரத்யுக்தியை முக்தகண்டமாகச்சொல்லுகிறது- இப்

எல்லேயிளங்கிளியேயின்னமுறங்குதியோ
சில்லென்றழையேன்மின் நங்கைமீர்போதருகின்றே
வல்லையுன்கட்டுரைகள்பண்டேயுன்வாயறிதும் [ன்
வல்லீர்கள் நீங்களேநானேதானுயிடுக
ஒல்லைநீபோதாயுனக்கென்னவேறுடையை
எல்லாரும்போந்தாரோபோந்தார்போந்தெண்ணிக்
வல்லானைகொன்முனைமாற்றுரைமாற்றழிக்க [கொள்
வல்லானைமாயனைப்பாடேலோரெம்பாவாய்.

பதவுரை:—எல்லாருடைய திரட்சியையும் காணவேண்டி யிருப்பாளொருத்தியை.இளங்கிளியே-இளமைதங்கிய கிளிபோன்ற சொல்லையுடையவளே, எல்லே-உன்பேச்சில் இனிமை இருந்தபடி என்னே,இன்னம்-நாங்கள் உணர்ந்துவந்த பின்பும்,உறங்குதியோ-தூங்குகிருயோ வென்ன; நங்கைமீர்-பூர்ணைகளானவர்களே, சில் என்று-சிலுகுசிலுகென்று, அழையேன்மின்-அழையாதே யுங்கள், போதருகின்றேன்-புறப்பட்டுவருகிறேனென்ன ; வல்லை-பேசுவதில் ஸமர்த்தையான, உன்-உன்னுடைய, கட்டுரைகள்-உறுதிமொழியையும், உன்—உன்னுடைய, வாய்-பேசும்வல்லமையையும், பண்டே-முன்னமே, அறிதும்-அறிவோமென்ன; நீங்களே—, வல்லீர்கள்-பேசுந்திறமுடையவர்கள், நானேதான்-நான்முனே, ஆயிடுக-ஆகக்கடவேனென்று சொல்லிவிட்டு, உங்களுக்குச் செய்யவேண்டுவதென்னென்ன; நீ—, ஒல்லைபோதாய்-எங்கள் திரளிலே சடக்கென வந்து நிற்கவேணும், உனக்கு—,வேறு-வேறே,என்ன-என்னப்ரயோஜநத்தை, உடையை-உடைத்தாயிருக்கிருய் என்று கேட்க; எல்லாரும்-உணரவறியாத சிறுப்பெண்களும். போந்

---

பாட்டில். அந்விதாபிதாநம் பண்ணியிறேகிடக்கிறது. திருப்பாவையாகிறது இப்பாட்டிறே. பகவத்விஷயத்திலிருக்கும்படி யெல்லாம் சிற்றஞ்சிறுகாலையிலே சொல்லுகிறது; பாகவதவிஷயத்திலிருக்கும்படியெல்லாம்இப்பாட்டிலேசொல்லுகிறது. "பங்கயக் கண்ணனைப்பாட" என்று-அசலகத்தில் பெண்பிள்ளையையெழுப்புகிற பாசுரத்தைக் கேட்டு, இவர்கள் பாசுரத்தைத் தன் மிடற்றிலேயிட்டு நுடங்கிப்பாடுகிறபடியைக்கேட்டு,த்வநிவழியேசென்றுபேச்சிலினிமையாலே, "எல்லே! இளங்கிளியே" என்கிருர்கள்.

தாரோ-உணர்ந்துவந்தார்களோ வென்ன, போந்தார்-வந்திருக்கிறார்கள், போந்து-புறப்பட்டுவந்து, எண்ணிக்கொள்-எண்ணிக்கொள்ளாயென்ன; நாமெல்லாருங் கூடினால் செய்வதென்னென்ன; வல்-வலிமையையுடைத்தான, ஆனை-குவலயாபீடத்தை, கொன்றானை-கொன்றவனாய், மாற்றாரை-சத்ருக்களான கம்ஸாதிகளுடைய, மாற்று-"நம்மை வெல்லவல்லாரில்லை" என்கிற மதிப்பை, அழிக்கவல்லானை-அழிக்கைக்கு ஸமர்த்தனாய், மாயனை-பெண்கள் மாயையில் அகப்படுமவனை. பாட-பாடுகைக்காக, என்கிறார்கள்.

131. வ்யா.—(எல்லே இளங்கிளியே) "சங்கொடு சக்கரமேந்துந் தடக்கையன் பங்கயக்கண்ணனைப்பாட" என்று அசலகத்துப்பெண்பிள்ளையையெழுப்புகிறபாசுரத்தைக்கேட்டு, இவள் அந்தப்பாசுரத்தைத்தன்மிடற்றிலேயிட்டுப் பாட, எழுப்புகிறவர்கள், அந்தத்வநிவழியே கேட்டுச்சென்று இவள்பேச்சி னினிமையாலே (எல்லே! இளங்கிளி

---

வ்யா.—(எல்லே இளங்கிளியே) பாழிலே யிட்டுப்பாடி, அது பண்பட்டு இனிதானவாறே தம்தாம்மிடற்றிலே மாற்றுவாரைப்போலே, தங்கள் பேச்சுக்கு இவள்பேச்சு. (எல்லே இளங்கிளியே) திருவான மிடறும் பாட்டுமிருந்தபடி யென்றான்! பேச்சிலினிமையிருந்தபடி. எழுப்புகைசால தர்மஹாநியாயிருந்தது. பேச்சிலினிமையாலே, "எல்லே" என்று ஆச்சர்யப்படுகிறார்கள். (எல்லே) ஸம்போதனையாகவுமாம். (இளங்கிளியே) என்று-கிளியை வ்யாவர்த்திக்கிறது. பசுமைக்கும் பேச்சுக்கும் கிளியொப்பாமித்தனை, பருவத்துக்கு ஒப்பாகமாட்டாது; ஒக்கிலும், பிராட்டிமார் பருவத்துக்கு ஒப்பாமித்தனை. இவர்கள் கிளி; தான் இளங்கிளி. "மென்கிளிபோல் மிகமிழற்றும்", "அணிமழலைக்கிளிமொழியாள் என்னக்கடவதிறே. "நாணாதாய் நாவுடையாய்" என்று-கீழ்ப்பாட்டிலே அவளையுட்பட வெறுத்தவர்கள், அவளிலும் பிற்பாடையாய் ஸாபராதையாய்க்கிடக்கிற

---

பி. 131-திருவாய்மொழிபாடுகை திருவரங்கம் பெரியகோயிலில் திருப்புன்னையின் கீழே.

யே!) என்கிறார்கள். (இளங்கிளியே) கிளியை வ்யாவர்த்திக்கிறது. கிளி இவள்பேச்சுக்கொப்பாமித்தனே, பருவத்துக்கொப்பன்றென்கை. (எல்லே!) என்னே; "எல்லே" என்று-பேச்சி னினிமையாலே ஆச்சர்யப் படுகிறார்கள். (இன்னம் உறங்குதியோ) இவர்களழைக்கிறது தன் அநுஸந்தாநத்துக்கு விக்நமாகையாலே பேசாதேகிடக்க(இன்னமுறங்குதியோ) என்கிறார்கள். க்ருஷ்ண விரஹத்தாலே தளர்ந்து உறக்கமின்றிக்கே உன்கடாக்ஷமேபற்றாசாக நாங்கள் நின்றபின்பும் உறங்குமத்தனையோ. க்ருஷ்ணாநுபவத்துக்கு ஏகாந்தமான காலம் ஸித்தித்திருக்க உறங்கக்கடவையோ என்றுமாம். உத்தேச்யம் கைபுகுத்தாலும் உறங்கக்கடவா ருண்டோவென்ன; (சில்லென் றழையேன்மின்) தன்னநுஸந்தாநத்துக்கு இவர்களழைக்கிறது விக்நமாகையாலே, சிலுகிடாதேகொள்ளுங்கோளென்கிறாள். இவர்கள்

---

நம்மை ச்லாகிக்கக் கூடாது. "மாசுடையுடம்பொடுதலையுலறிவாய்ப்புறம் வெளுத்து" என்னும்படியே-தங்களுடம்பு விவர்ணமாய் வாயும் வெளுத்திருக்க, க்ருஷ்ணஸம்ச்லேஷத்தாலே உடம்பு பசுகுபசுகென்று வாயுஞ்சிவந்து நாம் குறியழியாதிருந்தோமென்று நம்மை நிந்திக்கிறார்கள்; இவ்வளவில் இவர்களுக்குவாய்திறக்கில்வெறுப்பாமென்றுபேசாதேகிடக்க; (இன்னம் உறங்குதியோ) என்கிறார்கள். நாங்கள் வருவதுக்கு முன்பு உறக்கத்தைப் பொறுத்தோமாகிலும்நாங்கள்வந்தால் உறங்கக்கடவதோ. (இன்னம் உறங்குதியோ) க்ருஷ்ணவிரஹத்தாலும் உன்கடாக்ஷம் படாமையாலும் துவண்ட எங்களார்த்தத்வநி கேட்டும் கண்ணுறங்குவதேயுனக்கு! (இன்னம் உறங்குதியோ) உத்தேச்யம் கைபுகுந்தால் உறங்குவாருண்டோ. க்ருஷ்ணாநுபவத்துக்கு ஏகாந்தம் பெற்றாலும் உறங்கக்கடவதோ.

தான அநுபவிக்கிற பங்கயக்கண்ணனுடைய அநுஸந்தாநத்துக்கு "இளங்கிளியே" என்பது, "இன்னமுறங்குதியோ" என்பது, இவர்கள் சொல்லுகிறவை விக்நமாகையாலே,சிலுகிடாதேகொள்ளுங்கோ ளென்கிறாள்;(சில்லென்

வார்த்தை அஸஹ்யமோ வென்னில்; திருவாய்மொழி பாடா நின்றால் செல்வரெழுந்தருளுகையும் அஸஹ்யமாமாபோலே. (நங்கைமீர் போதருகின்றேன்) நாங்களும் எங்கள் சொல்லும் பொறுதபடி யுன்பூர்த்தி யிருந்தபடி யென்னென்ன; சிவிட்கென்னக்கூசி (நங்கைமீர்போதருகின்றேன்) நீங்கள் வாய்திறவாதிருக்கவல்லிகோளாகில் நான் புறப்படுகிறேனென்ன;

132. (வல்லை உன்கட்டுரைகள் பண்டே உன் வாயறிதும்) "நங்கைமீர்" என்று—உறவற்ற சொல்லாலே வெட்டிமை யெல்லாஞ் சொல்லவல்லையென்னுமிடம் நாங்களின்றுகவறிகிறோமோ, சொல்லிற்றைச்சொல்லி யெங்கள் தலையிலே குற்றமாம்படி வார்த்தை சொல்லவல்லையென்னுமிடம் பண்டே யறியோமோ வென்றுமாம். (வல்லீர்கள் நீங்களே) "இன்னம் உறங்குதியோ" என்றும், " வல்லை யுன்கட்டுரை

றழையேன்மின்) திருவாய்மொழி பாடாநின்றால் செல்வரெழுந்தருளுகையும் அஸஹ்யமாமாபோலே, பிராட்டிமாரும் ஸர்வேச்வரனும்கூட எழுந்தருளி யிருந்தால் ஒட்டுவட்டின் காளாஞ்சியோபாதி பிரியாதேயிருக்கக்கடவ ஸ்ரீநாரதபகவானையும், ச்வேதத்வீபத்திலே யெழுந்தருளுகிறபோது உன் வன்மை யவர்கள் பொறுதேயிருக்கக்கூடுமென்று"நான்வருமளவுமிங்கேயிரு"என்று அருளிச்செய்து எழுந்தருளினிறே. தன்னாலல்லது செல்லாதவெங்களைச் சிவிட்கென்பதே!என்று இன்னாதாய், நாங்களும் எங்கள்தர்சநமும் எங்கள் பேச்சும் அஸஹ்யமாம்படி உன்னுடைய பூர்த்தியிருந்தபடியென்னென்ன; (நங்கைமீர் போதருகின்றேன்) என்ப்ரக்ருதி யறியாதே " இளங்கிளியே " என்று என்னை பாதிக்கிற நீங்களன்றோ பூர்ணைகள், வாய்திறவா திருக்கவல்லிகோளாகில் நான் புறப்படுகிறேனென்ன;

(வல்லையுன் கட்டுரைகள்) எங்கள் தலையிலே குற்றஞ் சொல்லலாவதெல்லாஞ்சொல்லி, உன்தலையில் குற்றமில்லை யென்னும்படி உபபாதிக்கவல்லையிறே. (பண்டேயுன்வாய்

பி. 132—வெட்டிமை-நிஷ்டூரம்.

கள்" என்றும்வெட்டிமை உங்களதன்றே வென்ன; உன் வாசலிலே வந்தெழுப்ப, "சில்லென்றழையேன்மின்" என்றது உன்னதன்றேவெட்டிமையென்ன ; அதுஎன்குற்றமன்று, அதுவும் உங்கள் குற்றமே. நம்முடைய வார்த்தை கேட்கவுகக்குமிவள், நம்வார்த்தை அஸஹ்யமாம்படியிறே க்ருஷ்ணகுணங்களிலே அவகாஹித்தது என்று உகக்க வேண்டி யிருக்க, அதிலே தோஷத்தை யேறிட்டதுங்களதன்றேகுற்றம் ; அதுகிடக்க, "பரஸ்பரநீசபாவை:" (129) என்றன்றே ஸ்வரூபமிருப்பது, ஆகையாலே (நானேதான் ஆயிடுக) இல்லாதகுற்றத்தையுஞ் சிலர் "உண்டு" என்றால் இல்லை செய்யாதே யிசைகையிறே வைஷ்ணவத்வ லக்ஷணம். "மத்பாபமேவாத்ர நிமித்தமாஸீத்" (130) என்று பிறர் குற்றத்தையும் தன்னுடைய பாபபலமென்றானிறே ஸ்ரீபரதாழ்வான்.

---

அறிதும்) "நங்கைமீர்" என்று உறவற்றசொல்லாலே வெட்டிமை சொல்லவல்லையென்னுமிடம் நாங்களின்றாக வறிகிறோமோ, பண்டேயறியோமோ. குணதோஷங்களென்று ஒன்றுண்டோ. நீ சொல்லிற்றுவார்த்தையாமித்தனையன்றே.

உன்வாசலிலே நாங்கள்எத்தனைகாலமுண்டு துவளுகிறதென்ன ; (வல்லீர்கள் நீங்களே) உங்கள் வாசலிலே நான் வந்து துவளப்பேசாதே கிடந்து வெட்டிமை சொல்லிப் படுத்தவல்லிகோள் நீங்களன்றே. உங்கள் வாசலிலே வந்தெழுப்ப நான் எத்தனை பண்ணைக்கேட்டேனென்ன; அது ஸாத்யம், இது ஸித்தம் ; ப்ரத்யக்ஷம்கிடக்க அநுமானத்தைக் கொள்ளவோவென்ன; பதகம் மூட்டினவாறே. (நானேதான் ஆயிடுக) "பரஸ்பரநீசபாவை:" என்றன்றே ஸ்வரூபமிருப்பது. இல்லாதகுற்றத்தைச் சிலர் "உண்டு" என்றால் இல்லை செய்யாதே இசைகையிறே வைஷ்ணவ லக்ஷணம். "மத்பாபமேவாத்ர நிமித்தமாஸீத்" என்று-பிறர் குற்றத்தையும் தன்குற்றமாக இசைந்தாரிறே ஸ்ரீபரதாழ்வான். ஸ்வகுணபதாநத்துக்காக கௌரவ்யரை அதிநிர்ப்பந்தம் பண்ணலாகாதென்றும் வேதார்த்தம் ப்ரகாசிக்கிறது.

133. உங்களுக்குச் செய்யவேண்டுவ தென்னென்ன (ஒல்லை நீ போதாய்) எங்தளுக்கு ஒருக்ஷணமும் உன்னை யொழியச் செல்லாமையாலே எங்கள்திரளிலே சடக்கெனப் புகுந்துகொடு நில்லாய். "சாதுகோட்டியுட் கொள்ளப் படுவாரே" என்று-அவளுக்கும் இத்திரளேயிறே ப்ராப்யம். (உனக்கென்ன வேறுடையை)பஞ்சலக்ஷங்குடியில் பெண்களுக்குள்ளதொழிய தனியே ஸ்வயம்பாகம்பண்ணுவாரைப்போலே உனக்கு வேறேசிலவுண்டோ. வைஷ்ணவ

---

இப்படி தோஷதுஷ்டையான நான்உங்களுக்குச் செய்யவேண்டுவதென்னென்ன; (ஒல்லை நீபோதாய்) உன் குற்றத்துக்கு இசைந்தபின்பு சடக்கெனப் புறப்பட்டு இத்திரளிலே புகுந்து பொறுப்பித்துக்கொள்ளாயோ. (ஒல்லை) "ஒல்லைக்கூடுமினோ" என்றாரிறே. "சாதுகோட்டியுட்கொள்ளப்படுவார்" என்று - ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டியிலே புகுருகை ஏற்றமென்று அருளிச்செய்தாரிறே.(ஒல்லைநீபோதாய்) உன்னை அரைக்ஷணம்காணுதொழியில் எங்களுக்கு ப்ராணஹாநி; புறப்படாதொழியில் உனக்கு அநர்த்தமாய்த் தலைக்கட்டும். ஆகில் புறப்படாநின்றே னென்ன; துடித்துக்கொண்டு புறப்பட்டுநின்று தாங்கள் பட்டது படாமையாலே சிவிட்கென்று (உனக்கு என்னவேறுடையை) என்கிறார்கள்.இவளொருஸத்துவிளம்பித்துப் புறப்படுங்காட்டில் அஞ்சுலக்ஷம் குடியில்பெண்களுக் கொழிய உனக்கென்ன ஒரு ஸ்வயம்பாகம் வேணுமோ; உன் ஸ்வயம்பாகம் தவிர்ந்திலையோ பெருமானை கண்ட பின்பும். வைஷ்ணவ விஷயத்தை பஹிஷ்கரித்துப்பற்றும் பகவத்விஷயத்தோடு தேவதாந்தரத்தோடு வாசியில்லை.

இளையபெருமாள், ஸ்ரீபரதாழ்வானுடைய வதத்திலே உத்யோகித்து, வில்லிலே நாணேறிடுவது, அம்பைத் திரிப்பதாகிறபடியைக் கண்டு, பெருமாளுக்கு அஸஹ்யமாய், "அவனுக்கு ராஜ்யத்தில் ச்ரத்தையில்லை, உனக்கு அபேக்ஷையுண்டாகில் வாங்கித்தருகிறோம்" என்று அருளிச் செய்த போது இளையபெருமாள் தரைப்பட்டாற்போலே, இவளும்

விஷயத்தை பஹிஷ்கரித்துப் பற்றும் பகவத்விஷயத்தோடு தேவதாந்தரத்தோடு வாசியில்லை; "நீயொருவர்க்கும் விரோதி யல்லை, நீ புக்குத்திருவடி தொழு" என்ற ஆழ்வான் வார்த்தையை நினைப்பது. (எல்லாரும் போந்தாரோ) எனக்கு உங்களை யொழியஸுகமுண்டோ, உணரவறியாத சிறுபெண்களுமுணர்ந்தால் புறப்படவிருந்தேன், எல்லாரும் போந்தாரோவென்ன; (போந்தார்) க்ருஷ்ண விரஹத்தாலே துவண்ட பெண்களுடைய வுன்னைக் காண்கைக்கு உன் வாசலிலே வந்து கிடந்தார்களென்ன; ஆகில் உள்ளே புகுரவிடுங்கோளென்ன; (போந் தெண்ணிக்கொள்) புறப்பட்டு மெய்க்காட்டுக் கொள். மெய்க்காட்டுக் கொள்ளுகைக்குப்ரயோஜநம் தனித்தனியே பார்க்கையும், அநுபவிக்கையும்.

---

"உனக்கென்ன வேறுடையை" என்றது-பொறுக்கமாட்டாமே. (எல்லாரும் போந்தாரோ)உங்களையொழிய எனக்கு ஒரு ஸுகமுண்டோ. நம்மிலே சிலர் உறங்கிக்கிடக்கப் போகவொண்ணுதென்னு மின்னுப்பாலே சொன்னேனித்தனையன்றோ. உணரவறியாத சிறுபெண்களும் உணர்ந்தால் புறப்படுவதாகவிருந்தேன், எல்லாருமுணர்ந்து புறப்பட்டார்களோ வென்ன; (எல்லாரும் போந்தார்) க்ருஷ்ணவிரஹத்தாலே துவண்ட பெண்களுடைய உன்னைக் காண்கைக்கு உன்வாசலிலே வந்து கிடக்கிறது. நான் எழுந்திருக்கைக்காக ஒன்றைச் சொல்லுகிறிகோளத்தனையன்றோ, வந்தார்களாகில் உள்ளே புகுரவிடுங்கோளென்ன; (போந்தெண்ணிக்கொள்) வந்தமை நிச்சிதம், புறப்பட்டு மெய்க்காட்டுக்கொள். மெய்க்காட்டுக்கொள்ளுகைக்கு ப்ரயோஜநமாக இவர்கள் நினைக்கிறது-தனியே பார்க்கையும், பேர்சொல்லுகையும, தொட்டு எண்ணுகையும், ஸ்பர்சஸுகமநுபவிக்கையும், பெண்களுக்கு ஸங்க்யையில்லாமையாலே யெண்ணி முடிக்குந்தனையும் இவனைப்பிரியாதே அநுபவிக்கையும்.

நாமெல்லாருங்கூடிச் செய்யப்பார்த்த தென்னென்ன; க்ருஷ்ணனுடைய விஜயங்களை நீ பாட நாங்கள் கேட்க வேணுமென்கிறார்கள். (வல்லானைகொன்றானை) குவலயா

134. நாமெல்லாரும் கூடினால் செய்வதென்னென்ன; (வல் ஆனைகொன்றானை) குவலயாபீடத்தைக் கொன்று நம் ஜீவநமான தன்னை நோக்கித்தந்தவனை. (மாற்றாரைமாற்றழிக்க வல்லானை) எதிரிட்ட கம்ஸாதிகளை அநாயாஸேந நசிப்பித்து

பீடத்தைக்கொன்று நம்ஜீவநமான தன்னை நோக்கித்தந்தவனை. பெருமிடுக்குண்டாம்படி மதப்படுத்திநின்ற குவலயாபீடத்தைக் கொன்று. "ஸக்ய:பச்யத" என்று காவிமலர் நெடுங்கண்ணார் கைதொழவீதிவந்து நம்மோட்டைப்பெண்களை வாழ்வித்தவனை. "கவளயானைக் கொம்பொசித்த கண்ணன்" என்றிறே பெண்கள் வாய்வெருவுவது. "கவளமால் யானை கொன்ற கண்ணன்" என்று-ஆண்களை யெழுதிமுடிக்கப் பண்ணினது, பெண்களையெழுத்துவாங்குவிக்கச் சொல்லவேணுமோ. "வெஞ்சினவேழ மருப்பொசித்த வேந்தர்கோ லேந்திழையார் மநத்தை, தஞ்சுடையாளர்கொள்" என்னக் கடவதிறே. "வாரணத்தை மருப்பொசித்தபிரா னென்மாதவனே" "பாரணங்காளான் வாரணந் தொலைத்தகாரணன்." "பின்னை மணாளனைக் கருந்தாள்களிறென்றொசித்தான்" என்று ப்ரதாநமஹிஷிகள் மூவரும் இவ்வபதாநத்துக்கிறே தோற்றுக்கிடப்பது. ஸ்ரீகஜேந்த்ராழ்வானை ரக்ஷித்ததிலுங்காட்டில் இத்தை குணமாக, "ஓரானைகாத்தோரானை கொன்று" என்று அருளிச்செய்தாரிறே. (மாற்றாரைமாற்றழிக்கவல்லானை) சக்ரவர்த்தித் திருமகனைப்போலே, "கச்ச" என்றுவிடாதே, குவலயாபீடத்தின் கொம்பைப்பிடுங்கி, மல்ல ரங்கத்திலே புக்கு சாணூரமுஷ்டிகர் தொடக்கமான மல்லரைக்கொன்று உயர்ந்தமஞ்சத்திலேயிருந்த கஞ்சனை மயிரைப் பிடித்திழுத்து, பூதலத்திலேபுரட்டித் திருவடிகளாலே யுதைத்து, மதிப்பறுத்து, குஞ்சிபிடித்தடித்து தன்னை யுபகரித்து, "ஸமம் யுத்தமித்யாஹு:" என்றஞ்சின பெண்களை வாழ்வித்தவனை. "வார்கடாவருவியில்" செய்தவற்றை

பி. 134-வல் ஆனைகொன்றானை-(1) வலிய குவலயாபீடம் என்னும் யானையைக்கொன்றானை (2) நமது ஸ்த்ரீத்வாபிமானத்தைப் போக்கினவனை. இந்த அபிமானம் யானைக்குள்ள வலிவுடையது.

"நஸமம்யுத்தமித்யாஹு:" (131) என்று அஞ்சின பெண்களை வாழ்வித்தவனை. (மாயனை) தன்கையில் அவர்கள்படுமத்தைத் தான்பெண்கள் கையிலேபடுமவனை. (வல்லானை கொன்றானை) குவலயாபீடத்தைக்கொன்றாற்போலே நம்முடைய ஸ்த்ரீத்வாபிமாநத்தைப் போக்கினவனை. (மாற்றாரை மாற்றழிக்கவல்லானை) சாணூரமுஷ்டிகாதிகளை நிரஸித்தாற்

---

யெல்லாம் நினைத்துச்சொல்லுகிறார்கள். (மாயனை) தன்கையிலே எதிரிகள் படுவதெல்லாம் நம்கையில் தான்பட்டு நமக்குத்தோற்று, அத்தோல்வியாலே நம்மைவென்றிருக்குமவனை. (வல்லானைகொன்றானை) குவலயாபீடத்தை யழித்தாற்போலே நம்முடைய ஸ்த்ரீத்வாபிமாநத்தைப்போக்கி, மல்லரை நிரஸித்தாற்போலே தன்தோளோடணைய வொட்டாத இடையருடைய ஸங்கல்பத்தைப்போக்கி, எதிரிகள் தனக்குத்தோற்றாற்போலே, நமக்குத்தான் தோற்றிருக்கிற ஆச்சர்யபூதனை. (பாட) நம்முடைய தோல்வியும் அவனுடைய வெற்றியும்தோற்றப் பாட. "ஏத்துகின்றோம் நாத்தழும்ப" என்று தோற்றவர்கள் பாடுமாபோலே, "வாயினால்பாடி" என்று-அவதாரக்ரமம் பாடினபடி சொல்லிற்று; "கேசவனைப் பாட" என்றும், "பாடிப்பறைகொண்டு" என்றும், "கீர்த்திமைபாடி" என்றும்-விரோதி நிவர்த்தகத்வம்பாடினபடி சொல்லிற்று; "முகில் வண்ணன்பேர்பாட" என்று-வடிவழகுக்குத்தோற்றுப்பாடினபடி; "சங்கொடு சக்கரமேந்தும்" என்று-திவ்யாயுதங்களுக்கும் அவயவசோபைக்கும் தோற்றுப்பாடினபடி; இங்கு, வெறுங்கையோடே நின்று வென்றபடிக்கும், தங்களுக்குத் தோற்றபடியையும் பாடுகிறார்கள்.

"எல்லே யிளங்கிளியே" என்று-பகவத் விஷயத்திலே ருசியுடையார் பேச்சும் உத்தேச்ய மென்கிறது; "இன்னமுறங்குதியோ" என்று - பாகவதஸஹவாஸம்ஸித்தித்தால் புறம்பு அந்யபரதைபண்ணுமிடம் தப்பென்கிறது; "சில்லென்றழையேன்மின்" என்றதால்-ருசியுடையார்க்கு எல்லாஞ் சொன்னாலும் பொறுக்க வேணுமென்னுமிடம் சொல்

போலே, நம்மைத் தன்னோடு சேரவொட்டாத இடைய ருடைய ஸங்கல்பத்தைப் போக்கினவனை. (மாயனை) எதிரிகளைத் தான்தோற்பிக்குமாபோலே நங்கையிலேதோற்ற ஆச்சர்யபூதனை.(பாட)பாடுகைக்கு. நமக்கு அவன்தோற்குந் தோல்விக்குத் தோற்றுப்பாட. ... .... கரு

135. ஸ்வாபதேசவ்யாக்யாநம். பதினைந்தாம்பாட்டு (எல்லேயித்யாதி) இப்பாட்டில்-பாகவத கோஷ்டியைக்காண ஆசைப்பட்டிருப்பாரொருவரை யெழுப்புகிறார்கள். வ்யா.— (எல்லே) அசஞ்சகத்துப்பிள்ளையை யெழுப்புகிறவர்கள், "சங்கொடு சக்கரம" இத்யாதியைப்பாட, அப்பாசுரத்தைத் தன்

---

னுகிறது; "நங்கைமீர் போதருகின்றேன்" என்கிறதால்-சாபலத்தாலே சிலபிறந்தாலும் பகவத்விஷயத்தில் அவகாஹித்தவர்களை சாபலத்தால் பிறந்தவற்றை நினையாதே, கௌரவ்யதை தோற்றச் சொல்லவேணுமென்கிறது;"வல்லையுன்கட்டுரைகள்" என்றதால்-"சில்லென்றழையேன்மின்" என்றது இவர்களுக்கு உத்தேசமானவோபாதி உன்வெட்டிமை யறிந்தோமென்றதும் அவளுக்கு உத்தேச்யமாகக் கடவதென்கிறது; "வல்லீர்கள் நீங்களே நானேதான் ஆயிடுக" என்கிற வித்தால்-பரதோஷத்தையும் ஸ்வதோஷமாக்கிக் கொள்ளவும், கௌரவ்யரை அதிநிர்ப்பந்தம் பண்ணக் கடவதல்லவென்னுமிடத்தையும் சொல்லுகிறது. "ஒல்லைநீ போதாய்" என்கிற வித்தால் பாகவத ஸம்ச்லேஷம் ஸத்தாஸித்தியென்கிறது; "உனக்கென்னவேறுடையை" என்கிற வித்தால்-"யதாதேதத்ரவர்த்தேரந்" என்கிற வேதாந்த ப்ரக்ரியையாலே ச்ரேஷ்டர் வர்த்தித்தபடிவர்த்தியாதொழிகை தப்பென்கிறது; "எல்லாரும் போந்தாரோ" என்கிறவித்தால்-ஸ்ரீவைஷ்ணவர்களெல்லாரும் உத்தேச்யரென்கிறது;"போந்தெண்ணிக்கொள்" என்கிறவித்தால்-ஒருவர் குறைந்தாலும் பகவதநுபவத்துக்குக் குறையென்றது; வல்லானைகொன்றானை" என்று தொடங்கி-திரண்டபாகவதர்களுக்கு உஜ்ஜீவநம் "உண்ணுஞ்சோறு" என்கிறபடியே பகவத்விஷயாநுபவ மென்கிறது. ... ... ... கரு

மிடற்றிலே வைத்துப்பாடுகையாலே, அதுதானும் இவர்களுக்கு அத்யந்தம் ஆகர்ஷகமாயிருக்கையாலே, அவரைக் கொண்டாடுவதற்கு முன்பு " எல்லே !" என்று-ஆச்சர்யப்படுகிறார்கள். (இளங்கிளியே) கிளி பேச்சுக்கொப்பாமத்தனையல்லது பருவத்துக் கொப்பாமோ. இவ்விடத்தில்,பருவமென்பது-அபிநிவேசத்தை. அவற்றுக்கு அபிநிவேச பூர்வகமாக வார்த்தைசொல்லவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லையிறே. (இன்னம் உறங்குதியோ) நாங்களனைவரும் வந்த பின்பும் உறங்கக்கடவையோ. (சில்லென் றழையேன்மின்) இப்படி அவர்களழைக்கை ஸ்வாநுபவ விரோதியாகையாலே, " சில்லென் றழையேன்மின் " என்கிறார். (நங்கைமீர்போதருகின்றேன்) நாங்களும் நம்பேச்சும் போராதபடி உன்பூர்த்தி யென்னென்ன ; நம்பாசுரத்தை மிடற்றிலே வைத்துப் பாடுகிற இவ்வநுபவத்துக்கு விரோதம் பண்ணலாகாதே யென்று எழுப்பாதே யிருக்க வேண்டியிருக்க, அதுபொறாதே யெழுப்புகிற நீங்களன்றோ பூர்ணைகள், நீங்கள் வெறுமனேயிருந்திகோளாகில் நான் புறப்பட்டு வருகிறேனென்ன; (வல்லை யுன்கட்டுரைகள்) நீர்கட்டுவார்த்தை சொல்ல ஸமர்த்தர். (பண்டேயுன்வாயறிதும்) இவ்வர்த்தம் முன்பே யுன் பாசுரங்களாலேயறிவோம். (வல்லீர்கள் நீங்களே) உங்கள் பாசுரத்தை யநுபவிக்கிற என்னுடைய அநுபவத்துக்கு விரோதத்தைப் பண்ணி, அதுக்குமேலே யென்மேலே பழியாம்படி வார்த்தை சொல்லவல்ல நீங்களன்றோ ஸமர்த்தர்களென்ன; (நானேதான் ஆயிடுக) பாகவதசேஷத்வம் ஸ்வரூபமானால் அவர்களிடும் பழியும் தம்மாலேறிட்டுக் கொள்ளுகை ஸ்வரூபமன்றோ, ஆகையாலே நானே அபராதையாயிடுக. (ஒல்லைநீ போதாய்) இப்படிபழியைத் தம்மேலே யேறிட்டுக்கொண்ட விவரை, சடக்கென இக்கோஷ்டியிலே ப்ரவேசியாய் என்கிறார்கள். (உனக்கென்ன வேறுடையை) உனக்கென்று ப்ருதக்கான பகவத்குணாநுபவமென். நாம் புறப்படுகைக்கு எல்லாரும் போந்தாரோவென்ன ; (போந்தார் போந்தெண்ணிக்கொள்) எல்லாரும் போந்தார்கள், நீயுமிக்கோஷ்டியிலே ப்ரவேசித்து மெய்க்காட்டுக்கொள். புறப்

பட்டுச் செய்யவேண்டிய தென்னென்ன ; (வல்லானை இத்யாதி) ஸ்வயத்நத்தால் கடக்க வரிதாய் ப்ராயச்சித்த விநாச்யமு மின்றிக்கேயிருக்கிற அஹங்கார நிவர்த்தகனாய் மற்றுமுள்ள காமக்ரோதாதிகளுக்கும் நிவாரகனாய் ஆச்ரிதபரதந்த்ரனைப்பாட, ஒல்லைநீ போதாய் இத்யந்வய:. ... ... கரு

## பதினாறும் பாட்டின் அவதாரிகை

**மூவாயிரப்படி**:—136. பதினாறும்பாட்டு. கீழில் பத்துப் பாட்டாலும் - முற்பட வுணர்ந்தவர்கள் உறங்குகிறவர்களை

---

**ஆறாயிரப்படி**:—பதினாறும்பாட்டு. பஞ்சலக்ஷம் குடியில் பெண்களையும் தனித்தனியே யெழுப்பினபடிக்கு உபலக்ஷ

---

பி. 136—திருப்பாவையில் ஒன்று முதல் 5 பாட்டுக்களில் பகவதனுபவ உபகரணங்கள் அருளிச்செய்யப்பட்டன. பிறகு 6 முதல் 15-ம் பாட்டுவரையிலுள்ள "எழுப்புகிற" பாட்டுக்களின் ஸாரம் கீழ்வருமாறு :—6-ம் பாட்டில் (=எழுப்புகிற முதற்பாட்டில்) பகவத் ஏகபோகரான ஸ்ரீவைஷ்ணவர்கள் அநந்யப்ரயோஜனராய், இவ்விஷயத்தில் தேசிகரன்றிக்கே இருப்பாரை, அவர்கள் பக்கல் பரிவாலே தேசிகர் ஆக்குகை, தங்களுக்குக்ருத்யம் என்றிருக்கை ஸ்ரீவைஷ்ணவத்வலக்ஷணம் என்று, அவர்களுடைய ஸ்வபாவத்தைச் சொல்லுகிறது, 7-ம் பாட்டில் (=எழுப்புகிற 2-ம் பாட்டில்) பகவத்விஷயத்தில் ஜ்ஞாதமான அர்த்தம் ஒருவனுக்கு விஸ்ம்ருதமானால், தங்கள் பரிவாலே, " போதயந்த:பரஸ்பரம் " என்கிறபடியே அறிவிக்கை ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸ்வரூபம் என்கிறது. 8-ம் பாட்டில், பகவதனுபவத்தில், ப்ரத்யாஸந்நராய் இருப்பாரைக்குறித்து. ஸாபேக்ஷராயிருக்கையும், அவர்களை முன்னிட்டு ஈச்வரனைப்பற்றுகையும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸ்வரூபம் என்கிறது. 9-ம் பாட்டில், " தத்தஸ்யஸத்ருசம்பவேத் " என்று பூர்வார்த்த நிஷ்டராயிருப்பாரை, பகவத் ப்ரேமாதிசயத்தாலே ததீபோகராயிருப்பார் போகார்த்தமாக ப்ரேரிக்கை ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸ்வரூபம் என்கிறது. 10-ம் பாட்டில், " ஜ்ஞாநீத்வாத்மைவமேமதம் " என்றும், "அஹம்ஸசமமப்ரிய:" என்றும் அவன் பக்ஷபதித்திருப்பார்பக்கல் நித்யஸாபேக்ஷராயிருக்கை ஸ்வரூபம் என்கிறது. 11-ம் பாட்டில், பகவத்ஸம்பந்தம் விச்சேதியாதே

யெழுப்ப, எல்லாரும் கூடிவந்து ஸ்ரீநந்தகோபர்திருமாளிகை யிலே சென்று கோயில்காப்பானையும் திருவாசல் காப்பானை யும் எழுப்புகிறார்கள். "செய்யாதன செய்யோம்" என்று பண்ணின ப்ரதிஜ்ஞையை அநுஷ்டாநபர்யந்த மாக்க

ணாம் - இப்பத்துப் பெண்களையும் எழுப்பினது. முற்பட வுணர்ந்த பெண்கள் உறங்குகிறவர்களையும் எழுப்பி, எல்லா ரையும் கூட்டிப் பெருங்கூட்டமாகத் திரண்டு ஸ்ரீநந்தகோபர் திருமாளிகைவாசலிலே சென்று, கோயில்காப்பானையும் திரு வாசல்காக்கும் முதலிகளையும், திருவாசல் திருக்காப்பு நீக்க வேணுமென்று இரக்கிறார்கள். "செய்யாதன செய்யோம்" என்று பண்ணின ப்ரதிஜ்ஞையை அநுஷ்டாந பர்யந்தமாக்க வேணுமிறே. உகந்தருளின நிலங்களில் உள்ளேப்புகும்போது க்ஷேத்ராதிபதிகளையும் த்வாரத்யக்ஷர்களையும் அநுமதி கொண்டு புகவேணுமென்று ஸ்ரீபகவச்சாஸ்த்ரங்களில்சொல் லுகிற வர்த்தம் இவர்கள் ஆயர் சிறுமியராயறிந்திலர்களே

போந்த ஆசார்யஸந்தானப்ரஸூதர் நமக்குபூஜ்யர், அவர்களடி யாக பகவத்ஸமாச்ரயணம் பண்ணுகையும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸ்வரூபம் என்கிறது. 12-ம் பாட்டில், பகவத்விச்லேஷம் அஸ ஹ்யமாம்படி அவகாஹித்தவர்கள், நமக்கு உத்தேச்யராமளவன் றிக்கே, தத்ஸம்பந்தி ஸம்பந்திகளும் உத்தேச்யர் என்றிருக்கை ஸ்வரூபம் என்கிறது. 13-ம் பாட்டில், பகவதனுபவ பரிகரமான ஞானவைராக்ய பக்திகளால் பூர்ணராயிருப்பார்திறத்து, ததர்த்த மாக ஸ்ரீவைஷ்ணவர் ஸாபேக்ஷராயிருக்கை ஸ்வரூபம் என்கிறது. 14-ம் பாட்டில், பகவத்விஷயத்தில் மூட்டுகையாலே, அதிகரித்த நிர்வாஹகர்முன்னாக, பகவதனுபவம்செய்கை ஸ்வரூபம் என்கிறது. 15-ம் பாட்டில், ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸமூஹம் அபிமதமாயிருக்கு மவர்களைக் கண்டால், அந்த ஸமூஹமாக அவர்களை உகத்தல் ஸ்வ ரூபம் என்கிறது (6000படி ஸ்வாபதேசஸாரம்) "நோன்புக்கு வந்து எழுப்புங்கோள்" என்று சொல்லி நப்பின்னைமாளிகையுட் சென்ற க்ருஷ்ணனை, நேரில் எழுப்பாமல், "கோயில்காப்பானே வாயில்காப்பானே" என்பது ததீயரைமுன்னிட்டு பற்றுகையாகிற முன்னோர்முறையை வற்புறுத்துகிறது ("செய்யாதனசெய்யோம்" என்பவர்கள்முறை) "பெரியாழ்வார் திருமகளிறே இவள்" என் பது, ஆண்டாளே கோபிமார்பாவனையில் செய்வதைப்பற்ற.

வேணுமே. ததீயரை முன்னிட்டுப் பற்றுதவன்று முறை தப்பின சூர்ப்பணகை பட்டதுபடுமத்தனை. "வல்லபரிசுவருவிப்பரேலதுகாண்டும்" என்னும் பெரியாழ்வார்திருமகளிறே யிவள்.

---

யாகிலும் உள்ளேபுகுரவிடவேணுமென்கிற ஆசையோடேயிருக்கையாலே, ஜ்ஞாநாதிகருடைய அநுஷ்டாநமும் கோல்விழுச்காட்டாலே பலிக்கிறது. "ஜநபதஸரிதந்தரீப" "ஸ்மேராநநாக்ஷிகமலே:" "த்வதீயகம்பீரமநோநுஸாரிண:" என்கிறபடியே-ஸ்ரீவைஷ்ணவர்க ளாசாரத்தை வைதிகவிதிகள் பின்செல்லுமத்தனையிறே. ராகத்தாலே ஸ்வயமேவ ப்ரவ்ருத்தராமிடத்தில் ராகத்துக்கு விதி முற்படமாட்டாது. ராகந் தனக்கும் விதிப்படியாகாதே; "அருளினன்" என்கிற பகவத்ப்ரஸாத மடியாய்த்திறே. இனி ஓரடியிடவேண்டிலும் ருசிகார்யமாகையாலே ருச்யுத்பாதகனை அவன்றனே அடியாமித்தனையிறே. இதுதான் இதர விஷயத்தில் ருசியன்றே; வகுத்தவிஷயத்தில் ருசியிறே. காம்யகர்மாதிகாரிகளுக்கும் த்யாஜ்யமாயிறே இருப்பது. "தச்ச்ரேஷ்டம் ஜந்ம" என்கிறது ஜந்மமாய், "ஸாவித்யாயா" என்கிறது வித்யயாய், "யந்நபந்தாய" என்கிறது கர்மமாய் வரும் வழியேயறியும்போது சாஸ்த்ரஸங்கத்தை வரியடைவேகற்று அர்த்தநிர்ணயத்துக்கும் அநுஷ்டாநத்துக்கும் நெடுங்காலஞ் செல்லும்; அத்தை அப்யஸித்தவர்கள், அதினுடைய தாத்பர்யத்தைக் கேட்ட வநந்தரம் அநுஷ்டிக்கலாயிருக்கும். குளிகை கைப்பட்டால் இரும்பு பொன்னுமாபோலே, பலிப்பதுஞ் செய்யும். நஞ்சீயர், பிள்ளைக்கு, "ரஸவாதம் கைப்பட்டவனிருந்தவிடமெல்லாம் பொன்னுமாபோலே, ப்ரமேயம் கைப்பட்டவனுக்குச் சொல்லிற்றெல்லாம் வார்த்தையாம்" என்றார். "மும்க்ஷுர்வைசரணமஹம்ப்ரபத்யே" என்கிற ச்ருதியினுடைய உபப்ரும்ஹணமான அபயப்ரதாநத்தில், "நிவேதயதமாம்" என்கிற ச்லோகத்திலே அவனைப்பெறுமிடத்தில் ததீயர் முன்னுகப்பெறவேணுமென்று சொன்னவர்த்தத்தை இப்பாட்டாலே சொல்லுகிறது.

*நாயகனாய்நின்றநந்தகோபனுடைய*
*கோயில்காப்பானே! கொடித்தோன்றுந்தோரண*
*வாசல்காப்பானே! மணிக்கதவந்தாள்திறவாய்*
*ஆயர்சிறுமியரோமுக்கறைபறை*
*மாயன்மணிவண்ணன்நென்னலேவாய்நேர்ந்தான்*
*தூயோமாய்வந்தோம்துயிலெழப்பாடுவான்*
*வாயால்முன்னமுன்னம்மாற்றாதேயம்மாநீ*
*நேசநிலைக்கதவம்நீக்கேலோரெம்பாவாய்.*

பதவுரை :—முற்பட வுணர்ந்தவர்கள் உறங்குமவர்களை யெழுப்ப எல்லாரும் திரண்டுசென்று, நாயகனாய்நின்ற-எங்களுக்கு ஸ்வாமியாயிருக்கிற, நந்தகோபனுடைய - ஸ்ரீநந்தகோபருடைய, கோயில் - திருமாளிகையை, காப்பானே - காக்குமவனே, உள்ளே புகுரவிடவேணுமென்ன ; அவன் கண்ணாலே போங்கோளென்று சைகைகாட்டி நிற்க, அங்கு நின்றும் இரண்டாம் வாசலருகே சென்று, கொடி - துகில்கொடிகள், தோன்றும் - விளங்காநிற்குமதாய், தோரணம்-தோரணங்கள் கட்டியிருப்பதான, வாசல் - திருவாசலை, காப்பானே-காக்குமவனே, மணி-அழகிய, கதவம் - கதவினுடைய, தாள்-தாழ்ப்பாளை, திறவாய்-திறந்து உள்ளே புகுரவிட வேணுமென்ன ; பூதனையைப்போலே நீங்கள் வஞ்சகைகளாயிருப்பீர்கள், உங்களைப்புகுரவிட அச்சமாயிராநின்றதென்ன ; ஆயர் - இடக்கையும் வலக்கையும் அறியாத இடையர் வயிற்றிற் பிறந்தவர்களாய், சிறுமியரோமுக்கு-சிறுபெண்களானஎங்களுக்கு, மாயன்-ஆச்சரியச்செய்கைகளை யுடையனாய், மணி - நீலரத்நம் போன்ற, வண்ணன்-திருநிறத்தையுடைய ஸர்வேச்வரன், அறை - சப்தியாநின்றுள்ள, பறை - பறை தருகிறோமென்று, நென்னலே - நென்னேற்றே, வாய்நேர்ந்தான் - திருவாய் மலர்ந்தருளினானென்ன ; அவன் சொன்னானே யாகிலும் நீங்கள் ப்ரயோஜநாந்தரபரைகளன்றோவென்ன; தூயோமாய்-அநந்யப்ரயோஜநராய், துயில்-தூக்கத்தைவிட்டு, எழ - அவன் எழுந்திருக்கும்படி, பாடுவான் - திருப்பள்ளியெழுச்சி பாடுகைக்கு வந்தோம்-வந்திருக்கிறோம்; அம்மா - ஸ்வாமீ, முன்னம் முன்னம் - முதல் முதலிலே, வாயால் - உன் வாயாலே. மாற்றாதே - மறுக்காதொழியவேணும் ; அன்றியும், நேசம்-சேர்ந்திருக்கிற, கதவம்-கதவையும், நிலை - நிலையையும், நீ - நீயே, நீக்கு-திறக்கவேணுமென்கிறார்கள்.

137. வ்யா.—(நாயகனாய் நின்ற நந்தகோபனுடைய கோயில்காப்பானே) ஸ்ரீநந்தகோபர்திருமாளிகைக்குக் காவலாய் எங்களுக்கு நாயகனானவனே. "நாயகன்" என்று-ஸ்ரீநந்தகோபரைச் சொல்லவுமாம். இவர்களால் பெறுமவனன்றோ நாயகனாவான், இவனை "நாயகன்" என்கிறதென்னென்ன; "பாபிஷ்ட: க்ஷத்ரபந்துச்சபுண்டரீகச்ச புண்யக்ருத் ஆசார்யவத்தயாமுக்தௌ தஸ்மாதாசார்யவாந் பவேத்" (132) என்று-பலஸித்தி ஆசார்யனாலே யாகை

வ்யா.—(நாயகனாய்நின்ற) "நாயகனாய்"என்கிற நாயகத்வம், திருவாசல்காக்கும் முதலிகளுக்கு விசேஷணமாகவுமாம்; ஸ்ரீநந்தகோபர்க்கு விசேஷணமாகவுமாம்; உத்தேச்யமாக பாவிக்கிற க்ருஷ்ணன்பக்கல் சொல்லாதொழியுமத்தனை வேண்டுவது. கடகரைசேஷியென்று இருக்குமவர்களிறே யிவர்கள். ஆளவந்தார், எம்பெருமானை ஸ்தோத்ரம்பண்ணவென்றுபுக்கு, ஆசார்யஸ்தோத்ரத்திலே இழிந்தார்; அதுக்கடி, ஒருவன் ஒரு ரத்நத்தைக்கொடுத்தால் அதின்விலையறியவறியக்கொடுத்தவன்பக்கலிலே விருப்பம்பிறக்குமாபோலே; சாஸ்த்ரங்களெங்கும் அப்யஸித்துப்பார்க்குமிடத்து, உபாயமாகத் தோற்றுகிற கர்மஜ்ஞாநபக்திகள், பேற்றுக்கு ஸாதநமாகமாட்டாது, பகவத்ஸம்பந்திகளை முன்னிட்டுக்கொண்டு அவனையே உபாயமாகப் பற்றுமது பேற்றுக்குடலென்று ஸ்வப்ரபந்தத்திலே முதலிலும் முடிவிலும் பரமாசார்யரான பெரியமுதலியாரைப் பற்றினார். "த்வத்பாதமூலம்சரணம்

பி. 137–க்ருஷ்ணனை "நாயகன்" என்னாது, வாயில்காப்பானையோ, நந்தகோபரையோ நாயகன் என்பது, 132-ம் பிரமாணத்தின் கருத்தையொட்டி. பலஸித்தி ஆசார்யனால் என்னுமாபோலே, பரதானசேஷியைவிட, த்வாரசேஷிக்குப் பெருமை அதிகம் எனும் காரணத்தாலே (த்வாரசேஷியின் பெருமை, உத்யோகநிமித்தம் பெரிய அதிகாரிகளைப் பார்க்கச் செல்வோர்க்கு நன்றாகத் தெரியும் இன்றைய உலக வழக்கு.) ஸ்வாபதேசத்திலே, த்வாரசேஷிகள் ததீயர். எம்பெருமானைப்போலே, க்ருஷ்ணனும் பரதந்த்ரன் ஆகையாலே, தங்களை சேஷிகளாக்க இசைவாரோடே பரிமாறுவதற்கே, இங்கு வந்து அவதரித்தான்.

யாலே, உபகாரகனை " நாயகன் " என்கிறார்கள். ப்ரதாந சேஷியிற் காட்டில் த்வாரசேஷிகளே யெங்களுக்கு சேஷிக ளென்கிறார்கள். (நந்தகோபனுடைய கோயில்) தாங்களாச்ர யிக்கிறவன் பரதந்த்ரன், தங்களை சேஷிகளாகவைக்க விசை வாரோடே பரிமாறவிறே இவன் இங்கு வந்தவதரித்தது. " அடியார் நிலாகின்ற வைகுந்தமோ " என்று-பரமபதத்தி லும் தான் பரதந்த்ரனாய் அவர்களிட்ட வழக்காயிறே யிருப் பது. (கோயில் காப்பானே) சிறுப்பெண்களாகையாலே, அவன் தொழிலையிட்டுச் சொல்லுகிறார்கள். " இன்னது பிடிப்பான் " என்னுமாபோலே. அவனும் உகக்கும்படி

---

ப்ரபத்யே" என்று தாம்பண்ணின ப்ரபத்தியையும் கீழவற் றோடே காற்கடைக்கொண்டு, "நாதமுநிம்விலோக்ய" என்று பெரியமுதலியாரை முன்னிட்டார். ப்ரபத்திபண்ணுகிறவன் இவனாகில், பேறு அவனாலேயாகில், இவர்களை முன்னிடுகிற தென்னென்னில் ; ஸாபராதனான இவன் ப்ரபத்திபண்ணு கிறான் என்று இவனுடைய பூர்வாவஸ்தையை நினைத்து ஈச் வரன் சிவிட்கென்னவும் கூடும், அதுசெய்யாதபடி, மறுக்க வொண்ணாத மனிச்சரையிட்டுப் பொறுப்பிக்கவும் வேணும். இவனுக்குப் பிறக்கும் அத்யவஸாயமும் போட்கனுகை யாலே மெய்யான வ்யவஸாயமுடையாரை முன்னிட்டா லல்லது கார்யகரமாகாதென்று முன்னிடுகிறது. "பாபிஷ்ட: க்ஷத்ரபந்துச்சபுண்டரீகச்சபுண்யக்ருத் ஆசார்யவத்தயாமுக் தௌ தஸ்மாதாசார்யவாந்பவேத் " " வேறாக வேத்தியிருப் பாரை வெல்லுமே மற்றவரைச் சாத்தியிருப்பார் தவம் " " தொண்டர் தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோ பன்" "அடிகளடியேநினையுமடியவர்கள்தம்மடியான்" "ஆர் தொழுவார் பாதமவை தொழுவதன்றே" என்றும் இவை யிறே ஆழ்வார்கள் படி. "உன்னடியார்க் காட்படுத்தாய்," " அடியார்க்கென்னை யாட்படுத்த," ஈச்வரனுடையக்ருஷிக் கும்பலம் இவர்களோடே ஸம்பந்திக்கையிறே. "செல்வனைப் போல" "எத்தவல்லாரடியோம்" என்று பெரியாழ்வாரிருக் கையிறே, " தங்கள் தேவரை வல்ல பரிசுவருவிப்பரேல் " என்று ஆண்டாளிருந்தது. பட்டர், நஞ்சீயரை, " பெரிய

யாலே சொல்லுகிருர்களாகவுமாம். இத்தால்-சேஷவ்ருத்தி ப்ரயுக்தமானபேரே ஆத்மாவுக்குப்பேரென்னுமிடந் தோற்று கிறது. "யதோசிதம் சேஷஇதிரிதேஜஜை:" (133) என்னக் கடவதிறே.

138. (கொடித்தோன்றும் தோரணவாசல் காப்பானே) அவன் கண்ணலே " போங்கோள் " என்று சொல்ல, திரு வாசல் காக்கிறவனை வந்தெழுப்புகிருர்கள். "கோயில் காப்

---

பெருமாள் தஞ்சமென் றிருக்குமவரைத் தஞ்சமென்றிரும் " என்றருளிச்செய்தார். (நாயகனுய் நின்ற நந்தகோபன்) " நாயகன் முழுவேழுலகுக்குமாய் " என்றும், " தொல்லை வானவர்தம் நாயகன் " என்றும் - ஸகல லோகங்களுக்கும் ஸகல தேவதைகளுக்கும் நாயகனை ஸர்வேச்வரன் நம்முடை நாயகனென்று யசோதைப்பிராட்டி யுட்படச்சொல்லும்படி ஆயர்நாயகனுய் நிற்க, " உந்தமடிகள் முனிவர் " என்று ப்ரஸித்தமாம்படி ஸ்வாமிகளாய்நியமிக்கிருர் ஸ்ரீநந்தகோபராகையாலே, உபயவிபூதி நாயகனை க்ருஷ்ணனுக்கும் நாயகராகையாலே, ஸ்ரீநந்தகோபரை "நாயகனுய் நின்ற நந்தகோபன்" என்கிருர்கள்.

(நந்தகோபனுடைய கோயில்) க்ருஷ்ணனுகப்பது பாரதந்த்ரியமாகையாலே, ஸ்ரீவைகுண்டத்திலிழவுதீர ஸ்ரீநந்தகோபற்குப் பிள்ளையாய், " நந்தகோபன்மகன் " என்று அவரையிட்டுத் தன்னைச் சொல்லும்படி தான் பரதந்த்ரனுய் க்ருதார்த்தனை விடமாகையாலே, அவர் அபிமாநத்திலே இவன் ஒதுங்கினுன் என்னுமிடந் தோற்ற க்ருஷ்ணனுடைய கோயிலென்னுதே "நந்தகோபனுடையகோயில்" என்கிறது. "யுவராஜமமந்யத" என்று - சக்ரவர்த்தி யாசைப்பட்டுப் பெருதே

பி. 138—கொடித்தோன்றும் தோரணம்-ஆர்த்தரக்ஷணத்துக்கென்றே கொடிகட்டுகையும் தோரணம்நடுகையும், பெண்கள் தடுமாற்றமின்றி, அவன் முகம் தரப்பெறுகைக்கே. புகுவாரைத் தன் அழகாலே கால்கட்டும் கதவின் தாள்போலே, புகுந்தவரைத் தன் அழகாலே புறப்படாதபடி கால்கட்டுவன் க்ருஷ்ணன்.

பான்" என்று - அங்குத்தைக்கு நிர்வாஹகனாய், அவன்றன்னையே கொடித்தோன்றும் தோரணவாசல் காப்பானென்னவுமாம். க்ஷேத்ராதிபதிதன்னை, "கோயில்காப்பான்" என்று, வேறே திருவாசல் காப்பானைச் சொல்லிற்றாகவுமாம். ஆர் விக்நம்பண்ணுகிறார்களோ வென்றுபயப்பட்டு எல்லார்கால்களிலும் விழுகிறார்கள். (கொடித்தோன்றுந் தோரணவாசல் காப்பானே) ஆர்த்தரக்ஷணத்துக்குக் கொடிகட்டித் தோரண

---

போனத்தை, "நந்தகோபனிளவரசு" என்கையாலே-ஸ்ரீநந்தகோபர் பெற்றார். "வாசுதேவன் மதுரைமன்னன்" என்கையாலே-இப்பேறு ஸ்ரீவஸுதேவர்க்குமில்லை. "நந்தன் பெற்றனன்; வாசுதேவன் பெற்றிலன்" என்று ராஜகுலங்களிலே ப்ரஸித்தமிறே. பரமபதந்தன்னிலும் வானிளவரசிறே. அதுவும் வானவர்நாடாய், கடவர்கள் முடியுடைவானவராய், அவர்கள்தான் மூதுவராய், இவன் அவர்கள் மடியிலே கிடப்பது, சிறகிலே ஒதுங்குவது, பிரம்புக்கு அஞ்சிச்சொன்னதுக்கெல்லாம் அப்படியப்படி யென்னு மிளவரசாயிறே வளருவது. "தத்ரகாஷாயிநோவ்ருத்தாந்" "மேலாப்பின் கீழ்வருவான்," "அநந்தபோகபர்யங்கே நிஷண்ணம்" என்றுஞ்சொல்லக்கடவதிறே. பக்வனைபின்பு ஸ்ரீஸத்யபாமைப் பிராட்டிபக்கலிலே ராஜ்யநூரை வைத்து தௌத்யஸாரத்யங்களிலேயிறே யதிகரித்தது. (நந்தகோபனுடைய கோயில்) "ராஜதாநீபிதுர்மம."

(கோயில்காப்பானே) தங்களுடைய மௌக்த்யத்தாலும் அவன் உகக்குமதாகையாலும் அவன் தொழிலையிட்டுச் சொல்லுகிறார்கள். (கோயில்காப்பானே) இத்தால் - சேஷவ்ருத்தி ப்ரயுக்தமான பேரே ஆத்மாவுக்கு நிலைநின்ற பேரென்னுமிடந் தோற்றுகிறது. "யதோசிதம்சேஷஇதீரிதேஜனை:" "ஏகாந்தீவ்யபதேஷ்டவ்ய:" என்றுஞ் சொல்லக்கடவதிறே. (கோயில்காப்பானே) தான் காக்குமியல்வினனைகயாலே பொழிலேழுங் காவல்பூண்டு ஸகல லோகரக்ஷணம்பண்ணுகிற எங்கள் நிதியைச்செப்போடே நோக்குகிறவனன்றோ. ஸ்ரீநந்தகோபர் தாழ்த்தார், கம்ஸன் வெட்டியன்,

மும் நட்டுவைத்தாற்போலே, பெண்கள் தடுமாற்றந்தீர முகப்தருகைக்கன்றே உன்னை யிங்கு வைத்தது. (மணிக்கதவம் தாள்திறவாய்) "பொன்னியலும்மாடக்கவாடம் கடந்து புக்கு" என்னுமாபோலே புகுவாரைத் தன்னழகாலே காந்

---

" காப்பாருமில்லை " என்று நாங்கள் வயிறெரிந்திருக்க, எங்கள் வயிறெரிதல், தீர்க்கிறவனன்றோநீ. (கோயில்காப்பானே) "ஏஷ ஸுப்தேஷு ஜாகர்த்தி" என்று-ஸம்ஸாரிகள் பக்கலுணர்த்தி பெறுதற்கு முன்பு தானுணர்ந்திருக்கும்; இவர்களநுமதி பெற்ற பின்பு, "நிஸ்ருஷ்டாத்மா ஸுஹ்ருத்ஸுச" என்று - தன்னுடைய ரக்ஷகத்வத்தை இவர்கள் தலையிலே வைத்துத் தான் உறங்காநிற்கும். "மஹேந்த்ரகல்பம் பரிபாலயம்ஸ்ததா" என்னக்கடவதிறே. (காப்பானே) " இவையனைத்தும் புறஞ்சூழ்காப்ப " என்று பலர்நோக்குமிடத்தில் ஆறிலொன்று கொள்ளாதே, எல்லாருடைய காவலை நீயொருவனும் கொள்ளுகிறவனே. (கோயில்காப்பானே) உன்னைக் காவலாக வைத்தது, உகவாதார் புகுராமைக்கும் உகப்பாரைப் புகுரவிடுகைக்கு மன்றோ. ஆன பின்பு, அவனை ஆசைப்பட்ட வெங்களுடைய ஆர்த்தியும் ஆராயவேண்டாவோ.

அவன் கண்ணாலே " போங்கோள் " என்று சொல்ல, திருவாசல் காக்கும முதலியை யெழுப்புகிறார்கள். (கொடித்தோன்றும்) இரண்டும் ஒருவனையே சொல்லிற்றாகவுமாம். "கோயில்காப்பானே" என்று க்ஷேத்ராதிபதியைச்சொல்லி, "வாசல்காப்பானே" என்று-திருவாசல்காக்கும்முதலியைச் சொல்லிற்றாகவுமாம். ஆராலே விக்நம்வருகிறதோ என்று பயப்பட்டு எல்லார்காலிலும் விழுகிறார்கள். " ஸர்வாந்தேவாந்நமஸ்யந்தி " என்று தேவதாந்தரங்களின் காலிலே விழுமவர்கள், பரிவர்காலிலே விழச்சொல்லவேணுமோ.

(கொடித்தோன்றும்) அல்லாத மாளிகைகளெல்லாம் தன்மாளிகையோ டொத்திருக்கையாலே, பெண்கள் மத்யராத்ரியிலே வந்தால் தடுமாறவொண்ணாது, அவற்றிற்காட்டில் நம் மாளிகைக்கு வாசிதெரியவேணும் என்று கொடியுங்

சட்டும் கதவினுடைய தாள்திறவாய். திருவாசலுக்குள் புகு வாரைக் காற்கட்டும் இது; அவன் புக்காரைப் புறப்படாத படி காற்கட்டும் தன்னழகாலே. "தாள்திறவாய்" என்ற

---

தோரணமும் நட்டுவைத்தார். பெருமாளைக் காணப்பெருதே ஆர்த்தனை ஸ்ரீபரதாழ்வான், ராமாச்ரமஸூசகமான தூம வல்கலங்களைக்கண்டு தரித்தாற்போலே, கொடியையும் தோர ணத்தையும் கண்டு இவர்கள் தரிக்கைக்காகவாய்த்து நட்டு வைத்தது. தண்ணீர்ப்பந்தல்கள் தடாகங்கள் சமைத்தவர் கள், த்ருஷார்த்தருக்கு தூரத்திலே தோற்றவேணுமென்று கொடியும் தோரணமும் நட்டுத் தண்ணீர்ப்பந்தலையும் கடை யையும் கட்டுமாபோலே யன்றே அடையாளங்களும் பண்ணி யெங்களுக்காக வன்றே வுன்னை யிங்குவைத்தது. வாசத்தடமிறேயுள்ளுக்கிடக்கிறது. "க்ரீஷ்மே சீதமிவஹ்ர தம்" என்கிற தண்ணீருக்கு கொடியணிநெடுமதிளும் வாச லில் வானவரும் வைக்குமாபோலேயும், தயரதன் பெற்ற மரதக மணித்தடத்துக்கு "பதாகாபி ரலங்க்ருதாம்" "தத்ர காஷாயிநோவ்ருத்தாந்" என்று கொடியுங்காவலும் கடை கட்டினாற்போலேயும். (வாசல்காப்பானே) கொடியுந் தோர ணமும் அசேதநமாகையாலே யழைக்கமாட்டாது, உள்ளுக் கொண்டு புகாது, நீ சேதநனைவாசி நாங்கள் பெறவேண் டாவோ. "அர்ஜுநன் ஸுபத்ரையைக்கொண்டு போகக் கடவனென்று வாசல்காக்கும் முதலிகளை யநுமதிபண்ணி யிருங்கோள்" என்று அருளிச்செய்து வைத்தாற்போலே, இவனுக்கும் பெண்கள் புகுரக்கடவார்களென்று க்ருஷ் ணன் சொல்லிவைக்கும்; அத்தாலே யிவன் நம்மையுள்ளும் புக அநுமதிபண்ணு மென்றிருக்கிருர்கள்.

(மணிக்கதவம்) "மாயன்மகளேமணிக்கதவம்" என்று- பெண்கள் மாளிகையெல்லாம் மணிக்கதவமாம்படி ஸாதர்ம் யம் கொடுக்கிற க்ருஷ்ணன் மாளிகைவாசல், மணிக்கதவ மாகச் சொல்லவேணுமோ. (மணிக்கதவம்) பூவியல்பொழி லுந் தடமுமவன் கோயிலுங்கண்டு புறவாயில் போக்யதை வாசலில்வரவொட்டாது. கார்யவசத்தாலே வருந்தி வாச

வாறே, அவன், பயமுள்ள தேசத்திலே மத்யராத்ரத்திலே வந்து திறக்கவழைக்கிற நீங்களாரென்ன ; " பயாநாமப ஹாரி " (134) யிருந்தவிடத்தில் பயமென்னென்ன ; காலம் த்ரேதா யுகமாய், தமப்பனார் சம்பராந்தகனுமாய், பிள்ளைகள் தாங்களும் ஆண்புலிகளாய், மந்த்ரிகள் வஸிஷ்டாதிக ளாய், ஊரும் திருவயோத்யையாய் பயமற்றிருக்கிறதோ ; காலம் கலிக்குத்தோள்தீண்டியான த்வாபராந்தம், தமப்ப னார் ஸாது ஸ்ரீநந்தகோபர், இவர்கள் சிறுபிள்ளைகள், அதுக்கு

---

விலே வந்தவர்களை " ஸததந்த:புரத்வாரம் " என்று-வாசல், தன்னழகாலே உள்ளுப்புகுவாரைக் காற்கட்டும் ; அவன், புக்காரைப் புறப்படாதபடி நுழையுஞ் சிந்தையராக்கிக் கால்கட்டும் தன்போக்யதையாலே. உள்ளுப்புகும்போது ஒருவண்ணஞ் சென்று புகவேணும் ; உள்ளுப்புக்கால் "மற் றொன்றினைக்காணவே" என்னப்பண்ணும். (மணிக்கதவந் தாள்திறவாய்) "பொன்னியலுமாடக்கவாடங்கடந்துபுக்கு" என்னுமாபோலே, கதவில் போக்யதையிலே நெஞ்சுங் கண் ணும் பிணிப்புண்ணுமல், திறந்து உள்ளேவிடுகிறிலையே. " தாள்திறவாய் " என்றவாறே, மத்யராத்ரத்திலே வந்து திறக்க வழைக்கிறவர்கள்தானார் பயம் மிக்க தேசத்திலே யென்ன ; பயாநாமபஹாரியிருந்த தேசத்திலே பயமென் னென்ன ; த்ரேதாயுகமாகையாலே காலமும் நல்லடிக்கால மாய், தமப்பனார் சம்பராந்தகனுமாய், பிள்ளைகள் தாங்களும் ஆண்புலிகளாய், அவர்கள்தான், வழியேபோய் வழியே வருமவர்களுமாய், ஊரும் திருவயோத்யையாய், அஞ்சாதே பாலிலேயுண்டு பனியிலே கிடக்கிறதோ.

காலம் கலிக்குத் தோள்தீண்டியான த்வாபராந்தமாய், தமப்பனார் ஸாது ஸ்ரீநந்தகோபராவது, இவர்கள், சிறு பிள்ளைகளாவது, அதிலே தீம்பராவது, ஊர் இடைச்சேரியா வது, அதுதான் கம்ஸன் படைவீட்டுக்கு அடுத்தணித்தாய் அவனுக்கு இறையிறுக்கு மூராவது, கம்ஸன்தான் சத்ருவா வது, எழும்பூண்டெல்லாம் அஸுரமயமாவது, ஆனபின்பு பயங்கெட்டோ இருக்கிறது ; பயப்பட வேண்டுமிடத்தில் மத்யராத்ரத்திலே கதவுதிறக்கச் சொல்லுகிறார்? என்றான் ;

பேலே தீம்பர்கள், ஊர் இடைச்சேரி, கம்ஸன் சத்ரு, எழும் பூண்டுகளெல்லாம் அஸுரப்பூண்டுகள், பயங்கெட்டிருக்க லாமோவென்ன ; பெண்களுக்கு பயப்படவேணுமோ வென்ன ; சூர்ப்பணகைபெண்ணன்றோவென்ன ; அவள் ராக்ஷஸி, நாங்கள் ஆயர் சிறுமியர், இவனுக்கு என்வரு கிறதோ! என்று வயிறுபிடிக்கு மிடையர்க்குப் பிறந்தவர் களன்றோவென்ன; பூதனைக்குப்பின்பு இடைச்சிகளுக் கன்றோ பயப்படவேண்டுகிறதென்ன; (சிறுமியரோமுக்கு) க்ரித்ரிமமறியாத சிறுபெண்களென்ன ; வார்த்தையிலே யறியலாம், வந்தகார்யத்தைச் சொல்லுங்கோளென்ன ; (அறைபறை) நோன்புக்குப் பறைவேண்டி வந்தோமென்ன; அதுவாகில் திருப்பள்ளி யுணர்ந்தால் விண்ணப்பம் செய்

எங்களுக்கஞ்சவேணுமோ, நாங்கள் பெண்பிள்ளைக ளல்லவோ வென்ன, சூர்ப்பணகை ஸ்த்ரீயன்றோ, "அஞ்சு வன் வெஞ்சொல் நங்காய்" என்று-பிற்பாடரும் கூட அஞ்சும்படியாக அவள் நலிந்தது, ஒருமாளிகையும் வாசல் காப்பாரு மில்லாமையன்றோ வென்ன; அவள் ராக்ஷஸி, நாங்களிடைப்பெண்களென்ன; பூதனை இடைச்சியன்றோ, இடைச்சிகளுக் கன்றோ மிகவு மஞ்சவேண்டுவ தென்றான்; (ஆயர்சிறுமியரோம்) இவனுக்கு என்வருகிறதோ! என்று வயிறுபிடிக்கும் இடையர்க்குப் பிறந்த க்ரித்ரிம மறியாத கந்நிகைகளன்றோ, எட்டுமிரண்டு மறியாத எங்கள் பருவத் தைப் பாராய், பூதனையைப்போலே தனித்துவந்தோமல் லோம், அஞ்சுலக்ஷம் குடியில் பெண்களெல்லாரும் கூடி யன்றோ வந்தது என்று (ஆயர் சிறுமியரோம்) என்கிறார்கள்.

பாலைகள் என்ன வொண்ணுமோ, கன்றாயன்றோ வந்து நலியப் பார்த்தது, பருவங்கொண்டு விச்வஸிக்கவொண் ணாது, உங்கள்வார்த்தையிலே யறியலாம், வந்த கார்யம் சொல்லுங்கோ ளென்றான்; (அறைபறை) நோன்புக்குப் பறைவேண்டிவந்தோமென்று தங்கள் மௌக்த்யந்தோற் றச் சொல்லுகிறார்கள். பறைவேண்டி வந்தோமென்ற வாறே, அதுவாகில் திருப்பள்ளி யுணர்ந்தவாறே விண்ணப் பஞ் செய்து தருகிறோம், நில்லுங்கோளென்றான்; (நென்ன

கிறேம், அவ்வளவும் நில்லுங்கோளென்ன; (மாயன் இத்யாதி) நீ இன்றறிவிக்க வேண்டாதபடி நென்னேற்றே சொல்லிப்போந்தான். (மாயன்) பெண்கள்கோஷ்டியில் தாழநின்று பரிமாறினபடி.

139. (மணிவண்ணன்) தாழநில்லாவிடிலும் விடவொண்ணாத வடிவழகு; பூவலர்ந்தாற்போலே வார்த்தை சொல்லுகிறபோதை ஓஷ்ட ஸ்புரணமென்னவுமாம். "வாக்மீ

லேவாய் நேர்ந்தான்) நீ இன்றறிவிக்க வேண்டாதபடி நென்னேற்றே தருவதாக வருளிச்செய்தான். (மாயன்) பெண்கள் கோஷ்டியில் தாழநின்று கையைக் காலைப்பிடித்துப் பரிமாறினபடி. (மாயன்) எங்களுக்கு இஷ்டவிநியோகார்ஹனானவன். (மணிவண்ணன்) தாழநில்லாதே அபவ்யனாய் காதுகனானாலும் விடவொண்ணாத வடிவழகை யுடையவன். (மணிவண்ணன்) இவர்களைக் கிடந்தவிடத்தில் கிடக்கவொட்டாதே யிப்படி படுத்துகிற வடிவழகு. (நென்னலே) நிவாரகரின்றிக்கே கிட்டி அநுமதிகொள்ளப்பெற்ற நென்னேற்றுமொருநாளே! இன்று உன்னை அநுமதிகொள்ளுகைக்கு உன்கால் பிடிக்க வேண்டுகிற வின்றுபோலேயோ அவன் காலைக்கையைப் பிடிக்க விருக்கும் நென்னேற்றை நாள். (வாய்நேர்ந்தான்) எங்களுக்கு ஸர்வஸ்வதாநம் பண்ணினான். (நென்னலேவாய்நேர்ந்தான்) திருமுளையினன்று நென்னேற்றை கையார்சக்கரமும் ஒருநாளே யென்னுமா போலே.

(மணிவண்ணன் - வாய்நேர்ந்தான்) பூவலரும்போதை நெகிழ்ச்சியாலே பிறக்கும் செவ்விபோலே, வார்த்தை யருளிச்செய்கிறபோதுபண்ணின ஸ்மிதமும் நின்ற நிலையும் வடிவுமிருந்தபடிகாண். "வாக்மீஸ்ரீமாந்" "சோதிவாய்

பி. 139. மணிவண்ணன் - பத்மராகத்தின் (மணி) வர்ணம் போன்ற, சிவப்பான உதடுகளையுடையவன் (வண்ணன்), ஸ்புரணம் - ப்ரகாசம். சொன்னான் என்னாமல் வாய் நேர்ந்தான் என்கையால், கௌரவம் தோற்ற ஓலக்கத்திலே சொன்னதாகத்தாத்பர்யம். ஒருத்திக்குச் சொன்னவார்த்தை-த்ரௌபதிக்குச் சொன்னது.

ஸ்ரீமாந்". (135) (நென்னலே) உன்காலைப் பிடிக்கவேண்டு கிற வின்று போலேயோ, அவன் காலைப்பிடிக்கவிருந்த நென்னேற்றும் ஒரு நாளே! என்கிருர்கள். (வாய்நேர்ந் தான்) ஓலக்கத்திலே ஒருவார்த்தை சொன்னுனுகில் மெய் யாக வேணுமோவென்ன; "க்ருஷ்ணேநமே மோகம்வசோ பவேத்" (136) என்று ஒருத்திக்குச் சொன்னவார்த்தை

திறந்து." (நேர்ந்தான்) ஓலக்கத்திலே யொருவார்த்தை யருளிச்செய்தாணுகில் அத்தை மெய்யென்றிருத்கவோ, அந்தரங்கமாகச் சொல்லவேண்டாவோ வென்முன். சொல் லாதொழிந்தவன் செய்யலாவதில்லை, இத்தனைசொன்ன பின்பு அவன்வார்த்தையில் பழுதுண்டோ. "ராமோத்விர்நாபி பாஷதே" என்றும், "அந்ருதம்நோக்தபூர்வம்மே" என்றும், "நமேமோகம்வசோபவேத்" என்று மன்றே அவன் வார்த்தையிருப்பது. செய்ய நினைத்திலனுகில் சொல்லான், சொன்னுனுகில் தப்பாது.

அவன்உங்கள்கார்யஞ் செய்கிறேமென்றாலும் எங்களை யிங்கு வைத்ததுக்கு ப்ரயோஜநம் வேண்டாவோ, பத்தெட் டுத் திருமுசம் மறுக்கப்பெற்றுடையோமன்றே நாங்கள், எங்கள்பணிக்குஅவனேகடவான்,ஆராயவிருக்கிறவெனக்கு உங்களுடைய அகவாய் அறியவேண்டாவோ, உங்கள் நினைவுதெரியாதே ஆராய்ந்தன்றி விடேனென்முன்; (தூயோ மாய்வந்தோம்) நாங்களாராயவேண்டும்படி வந்தவர்களல் லோம், உனக்கங்ஙன் பயப்படவேண்டும்படி பாவதோஷ மில்லை, எங்கள் தலையிலேயும் ஒன்று கிடக்கவந்தோமுமல் லோம், அவனுடைய ரக்ஷையும் அவனுடைய ப்ரயோஜந மும் ஒழிய ஸ்வயத்நமாதல், ஸ்வப்ரயோஜநமாதல் பற்றவந் தோமுமல்லோம், உபாயாந்தரங்களைக் கொண்டு பெறுவார் களுமல்லோம், ப்ரயோஜநாந்தரங்கொண்டு அகல்வாருமல் லோம். (தூயோமாய்வந்தோம்) தூய்மையாவது-தான்சில வற்றை யேறிட்டுக்கொள்ளாதே நம்முடைய ரக்ஷை அவ னுலேயென்றிருக்கை. ராவண பவநத்தை விட்டுப்போந்த வன் வழியிலே முழுகிவந்தா னென்றில்லையே; தூசியேறின படைநடுவே நின்றிறே பரமரஹஸ்யங் கேட்டது. (தூயோ

அவள் விஷயத்தில் பழுதாய்த்த தாகிலன்றே இவ்வார்த்தை யும பழுதாவதென்ன ; சொன்னனேயாகிலும் நீங்கள் ப்ரயோஜநாந்தரபரைகளன்றே வென்ன ; (தூயோமாய் வந்தோம்) "பறை" என்று-ஒரு வ்யாஜம், அநந்ய ப்ரயோஜ நைகள் நாங்கள். அதாவது-அவனுக்கு மங்களா சாஸநம் பண்ணுமதொழியத் தங்களுக் கொன் றின்றியிலே யிருக்கை (வந்தோம்) அவன்செய்வதை நாங்கள்செய்தோமென்கை.

---

மாய் வந்தோம்) திருவடி, திருவாழிமோதிரமுந் தன்வடிவுங் காட்டாதே மிடற்றோசையைக் காட்டி விச்வஸிப்பித்தாற் போலே, இவர்களும் தங்கள் ஆர்த்தத்வநியைக் காட்டுகிறார் கள். "ஹநூமாந்விலலாபஹ" "ப்ரஜாதச்சமஹாநேஷ:ஸ்வ ரேணமஹதாமஹாந்" என்று ஆர்த்தநாதம்கேட்டவாறே, "ஆநயைநம்" என்னவும், "அஸ்மாபிஸ்துல்யோபவது" என் னவும் பண்ணிற்றிறே. (வந்தோம்) எங்கள் வரவிலே தெரி யாதோ பாவசுத்தி, இங்குவர்த்திக்கிறவுனக்கு அடைவுதெரி யாமை யில்லையே. அவன் செய்யக்கடவதை நாங்கள் செய் தோம், எங்களோத்த ஆர்த்தியுடையா ரிருந்தவிடத்திலே யவன்சென்று காரியஞ்செய்ய வேண்டியிருக்க, நாங்க ளல்லவோ வந்துகொடு நின்றோம்.

உங்கள் தூய்மை நாடறியும்படி நீங்கள் அநந்யப்ரயோ ஜநைகளென்கைக்கு அடையாளஞ் சொல்லுங்கோள், உங்க ளாற்றாமை வந்தபோதே பறையினளவல்ல வென்றான்;(துயி லெழபாடுவான்) என்கிறார்கள். அவனுணர்ந்தருளும்போதை யழகுக்கும் மங்களாசாஸநம் பண்ணவன்றே நாங்கள் வந் தது. ப்ரயோஜநாந்தர பரரிறே ஓலக்கத்தில்புகுவார், அநந்ய ப்ரயோஜநரிறே கண்வளர்ந்தருளுகிற விடத்தில் புகுரப் பெறுவார். (துயிலெழபாடுவான்) "ஸமயாபோதிதச் ஸ்ரீமாந்" என்று பிராட்டி யுறங்குகிறபடி கண்டு உகந்தாள், இவர்கள் உணருமபடிகாண ஆசைப்படுகிறார்கள். "உறக லுறகல்" என்று உணர்ந்திருப்பாரையும் உணர்த்தி அசிர்க் கும பெரியாழ்வார்பெண்பிள்ளைகள்; உன்னையும் அசிரப் போம்சிலர். "மதியாதின்றேநீ துயில்மேவி மகிழ்ந்ததுதான்"

140. நீங்கள் அநந்ய ப்ரயோஜநைக ளென்கைக்கு அடையாளமென்னென்ன ; (துயிலெழபாடுவான்) திருப் பள்ளியெழுச்சி பாட வந்தோம். "ஸமயாபோதிதச் ஸ்ரீமாந் ஸுகஸுப்த: பரந்தப:" (137) என்று-பிராட்டியுறங்குகிற படியைக் கண்டு உகந்தாள்; இவர்கள் இவனுணருமபடி யைக் காணவாசைப்படுகிறார்கள். அங்ஙனேயாகில் திறக்

---

என்றும், "அரங்கத்தம்மா பள்ளியெழுந்தருளாயே" என்றும் எழுப்புமவர்களோட்டை வாஸநையாலே இப்போது பள்ளி யுணர்த்த வந்தோம்.

இவர்கள் பாவசுத்தியை யறிந்து குணக்ரஹணம் பண்ணிவைத்தே, இவர்கள் பேச்சுக் கேட்கைக்காக இன்னமும் ஒருநிலை நின்றுபுகுரவிடவேணுமென்று நினைக்குமே, அத்தையிவர்கள் பாவஜ்ஞைக ளாகையாலே அறிந்தாகள்; (வாயால் முன்ன முன்னமமாற்றுதே) நெஞ்சாலே சில நினைத்தாயாகிலும் வாயாலே நெருப்பைச் சொரிந்தாற் போலே நிஷேதியா தொழியவேணும். இவர்களுக்கு இவன் வாயதிறே வாளுள். "வாசாதர்மமவாப்நுஹி" என்று ஒரு வாய்ச்சொல்லாலே தண்ணீர்ப் பந்தல் வைக்கலாயிருக்க, என்றிய இழக்கிறாய். "மாற்றுதே" என்று நிஷேதிக்கிறது என்னப்ராப்தி கொண்டென்ன ; சேஷபூதராயிருப்பாரை மூட்டத் தொடரலாமோ, பிரானேயென்கிறார்கள். (அம்மா) ப்ரதாந சேஷிகளை நாங்களறிந்தோமோ, த்வாரசேஷிக ளன்றோ எங்களுக்குக் கடவர்கள், அவன் வாய் நேர்ந்தாலும் காரியம் தலைக்கட்டித்தருவாய் நீயன்றோ. "வத்யதாம" என்றவர்களே, " அஸ்மாபிஸ்துல்யோ பவது " என்ன வேண்டிற்றிறே. "தாநஹம்த்விஷத:" என்றவன் "ததாமி" என்றாலும், நீங்கள் வேண்டாத விடத்தில், "நக்ஷமாமி" என்னுமே. (அம்மா) "தாரா:பித்ருக்ருதா இதி" என்று நீபுக விட்டா லன்றோ எங்களை யுகப்பது.

இவர்களர்த்தித்வத்தைபும் தனக்கேற பாவசுத்தியையும் கண்டவாறே நான் நிஷேதிக்கிறேனல்லேன், தள்ளிக்

கிறேன், நில்லுங்கோளென்ன; (வாயால் முன்னமுன்னம் மாற்றுதே) எங்களை முற்பட நிஷேதியாதொழியவேணும். நெஞ்சால் நினைத்தாயாகிலும் வாயாலே நிஷேதியாதொழிய வேணும். உன் கையதுகிடா யிவர்களுக்கு; அவன் கைய திறேவாணாள். "வத்யதாம்"(138) என்றவர்தாமே, "அஸ்மாபிஸ்துல்யோபவது" (139) என்றபின்பிறே அவன் ஸத்தை பெற்றது. (அம்மா) பச்சையிடுகிறார்கள். உள்ளிருக்கிற வனே நாதன், நீ யல்லையோவென்ன; தானையுருவிக் கதவைத்தள்ளிக்கொடு புகுருங்கோளென்ன; (நீ நேசநிலைக் கதவம் நீக்கு) அது உன்னிலும் பரிவுடைத்தான கதவு, எங்களால் தள்ளப்போகாது, நீயே திறக்கவேணுமென்கிறார்கள். சேதநாசேதந விபாகமின்றியே, இவ்வூரிலுள்ளதெல்லாம் அநுகூலமாயிருக்கிறபடி. கம்ஸன்படைவீட்டில் எல்லாம் ப்ரதிகூலமாயிருக்குமாபோலே. (நேசநிலைக்கதவம்) செறிந்திருக்கிற கதவையும் நிலையையும். (நீக்கு) நீயேவந்து திறக்க வேணும். ... ... ... ... ... கசு

---

கொண்டு புகுருங்கோளென்றான்; (நீ நேசநிலைக் கதவம் நீக்கு) அது உன்னிலும் பரிவுடைய கதவு, எங்களால் தள்ளப்போகாது, நீயே திறக்கவேணும். இவன் விலக்குகிறது ஸ்நேஹத்தாலே யானால், தள்ளப்போகாதேயிருக்கிறது ஸ்நேஹத்தாலே யென்றிருக்கிறார்கள். திறந்துகொள்வார் முகத்திலே யறையும்போலே. கம்ஸன் பரிகரமடைய ப்ரதிகூலமாயிருக்குமாபோலே, திருவாய்ப்பாடியில் சேதநாசேதநவிபாக மின்றியிலே யெல்லா மநுகூலமாயாய்த்திருப்பது. "அகாலபலிநோவ்ருக்ஷா:" அபிவ்ருக்ஷா:பரிம்லாநா:" என்று- அந்வயவ்யதிரேகங்களில் ஹர்ஷசோக முண்டானால் ஸ்நேஹ முண்டாகத் தட்டில்லை. சகடத்திலே அஸுரன்கிடந்த வோபாதி, அநுகூலரும் சேதநஸமாதியிலே அங்குத்தைக்கு உறுப்பாவரே. "படியாய்க்கிடந் துன்பவளவாய் காண்பேன்" என்னும்படியாய்க் கிடக்கிறுரோபாதிநிலையும் கதவுமாய் நிற்பாரையும் கிடக்குமிறே (நேசநிலைக்கதவம்) நிலையும் கதவும்பொருந்தின பொருத்தமாகவுமாம். ஆனபின்பு நீயே திறந்து புகுரவிட வேணுமென்கிறார்கள். ... ... கசு

**141.** ஸ்வாபதேச வ்யாக்யாநம். பதினாறும்பாட்டு. (நாயகனாயித்யாதி) இப்பாட்டில்-முன்பு உணர்த்தினவர்களு முணர்ந்தவர்களும் எல்லாருங்கூடி பகவதநுபவத்துக்கு தேசிகனாக ஆசார்யன் திருமாளிகையிலே புக்கு, அங்கு கோயில் காப்பானையும் திருவாசல்காப்பானையு மெழுப்புகிறார்கள். ஆசார்ய ஸம்பந்த கடகரை முன்னிட்டு ஆசார்யனைத் தொழுகையும் பெரியோர் செயலிறே, வ்யா.—(நாயகனாய் நின்ற) தன்னுடைய சேஷித்வம் ஸித்திக்கைக்காக தனக்குப் புறம்பாயிருப்பானொரு சேஷியைத்தேடிப்போக வேண்டியிருக்கையன்றிக்கே, தானே சேஷித்வ காஷ்டையிலே நிற்கிற. (நந்தகோபனுடைய பகவதநுபவஜநிதாநந்த நிர்ப்பரனாய் ஸம்ஸ்ரீதரக்ஷகனான ஆசார்யனுடைய. (கோயில்காப்பானே) கோயிலுண்டு-அவனுக்கு ப்ரதிபாதகத்வேந இருப்பிடமான திருமந்த்ரம்; அத்தை அநதிகாரிகள் செவிப்படுத்தாதபடி ரக்ஷிக்குமவனே. (கொடித்தோன்றுந் தோரணவாசல் காப்பானே) இவனுடைய ரக்ஷகத்வம் விளங்காநின்றுள்ள அபார நமச்சப்தார்த்தங்களைக் காக்குமவனே.(மணிக்கதவம் தாள்திறவாய்) ஜ்ஞாநாநந்த ஸ்வரூபனாகையாலே ச்லாக்யமாயிருந்துள்ள ஆத்ம ஸ்வரூபாநுபவத்தையும், அத்தால்வரும் ஸ்வஸ்வாதந்த்ரியப்ரதிபத்தியையுந்தவிர்த்தருளாய்.பயமுள்ள தேசத்திலே அர்த்தராத்ரத்திலே வந்தெழுப்புகிறவர்கள் ஆரென்ன; (ஆயர் சிறுமியரோமுக்கு) "எம்பெருமானே உபாயோபேயம்" என்று அத்யவஸித்திருக்கும் ஜ்ஞாந ஜந்மாக்கள் திருவம்சத்திலே பிறந்த பகவதநந்யார்ஹ சேஷபூதரான பாலர்களான நமக்கு. நீங்கள்வந்தகார்யமேதென்ன; (அறைபறை) த்வநிக்கிறவாத்யம்வேண்டிவந்தோமென்ன;-புருஷார்த்தம்வேண்டிவந்தோமென்ன; ஆகில் திருப்பள்ளி புணர்ந்தவநந்தரம் விண்ணப்பஞ்செய்து தருவிக்கிறேனென்ன; (மாயன்மணிவண்ணன்நென்னலே வாய்நேர்ந்தான்) ஆச்ரிதபரதந்த்ரனாய் ஸுலபனாய் ச்ரமஹரமான வடிவையுடைய வெம்பெருமான் நென்னேற்றே பறைதருகிறோமென்று மந:பூர்வகமாகச்சொல்லிவைத்தான். ஆகிலும நீங்கள் ப்ரயோஜநாந்தர பரரன்றோவென்ன; (தூயோமாய்

வந்தோம்) பறையென்றது-வ்யாஜமாத்ரம், நாங்கள் அநந்ய ப்ரயோஜநராய் வந்தோம். அநந்ய ப்ரயோஜநருக்குக் கர்த்தவ்யமேதென்ன; (துயிலெழபாடுவான்) திருப்பள்ளியெழுச்சி பாடவந்தோம். ஆகில் நில்லுங்கோள், திறக்கிறேனென்ன; (வாயால் முன்னமுன்னம் மாற்றாதேயம்மா) வாக்காலே முந்துறமுன்ன பெங்களை நிஷேதியாதேகொள். உள்ளிருக்கிறவனே ஸ்வாமி, நீ யெங்களுக்கு ஸ்வாமியன்றோ ; ஆகில் கதவைத் தள்ளிக்கொண்டு புகுருங்கோளென்ன ; (நீ நேச நிலைக்கதவம் நீக்கு) நீ வாவெனிலும், ஸ்நேஹ யுக்தமான நிலையையுடைத்தான கதவைத் திறந்துவிடாய். நீ யெம்பெருமானிடத்தில் ப்ரேமாதிசயத்தாலே அநதிகாரிகளுக்கு அவனை யுள்ளபடி காட்டாதாற்போலே, ஆத்மஸ்வரூபம், ஸ்வவைலக்ஷண்யத்தாலே, அதிகாரிகளுக்கும் பகவத் விஷயத்தை மறைக்கக் கடவதாயிறேயிருப்பது... கசு

## பதினேழாம் பாட்டின் அவதாரிகை

**மூவாயிரப்படி** :-142. பதினேழாம்பாட்டு. இவர்களைத் திருக்காப்பு நீக்கி உள்ளேபுகுரவிட, ஸ்ரீநந்தகோபர்தொடக்க

---

**ஆறுயிரப்படி** :—பதினேழாம்பாட்டு. "நேசநிலைக் கதவம் நீக்கு" என்றார்கள் திருவாசல் காப்பானை; அவன் கருந்தானைபுருவி உள்ளே புகவிட்டான். ஒருவரை யொருவர் சென்றெழுப்புகிறபோது அங்குத் தனித்தனியே பட்டதையிங்கெல்லாரும் திரளப்படுகிறார்கள். இமையோர்கள் குழாம் தொழுவதுஞ் சூழ்வதும்செய்தொல்லைமாலைப்பெற்றநுபவிக்கிற திரளிறே உள்ளுத்திரள்; பெறுகைக்குப் படுகிற திரள் பெற்றநுபவிக்கிற ஸ்ரீநந்தகோபர் தொடக்கமானாரை யெழுப்புகிறார்கள், அவர்கள் முன்னுக க்ருஷ்ணனைப்பெற வேண்டுகையாலே. அதாவது-வேதம் வல்லார்களைக்கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிகையிறே; "காலநன்ஞானத் துறைபடிந்தாடி" என்னுமாபோலே. நன்ஞானமாகிறது-ப்ராப்யப்ராபகங்க ளிரண்டுமவனென்கை; "விஜ்ஞாநம்யதிதம்ப்ராப்தம்" என்னுமாபோலே. துறையாகிறது-

மாநுரை யெழுப்புகிறார்கள். முற்பட க்ருஷ்ணனைப் பெண்கள் களவுகாண்கிறார்களோ வென்று நினைத்துக் காவலாகப் புறக்கட்டிலே கிடக்கிற ஸ்ரீநந்தகோபரை யெழுப்புகிறார்கள்; அநிருத்தாழ்வானை யகப்படக் களவுகாணக் கடவ பெண்கள், அவனழுக்குக்கு வாய்த்தலையாய் "ஸாக்ஷாந்மந்மதமந்மத:" (140) என்கிற கிருஷ்ணனைக் களவுகாணச் சொல்லவேணுமோ.

அம்பரமேதண்ணீரேசோறேயறஞ்செய்யும்
எம்பெருமானந்தகோபாலாவெழுந்திராய்
கொம்பனார்க்கெல்லாங்கொழுந்தேகுலவிளக்கே
எம்பெருமாட்டியசோதாயறிவுறாய்
அம்பரமூடறுத்தோங்கியுலகளந்த
உம்பர்கோமானேயுறங்காதெழுந்திராய்
செம்பொற்கழலடிச்செல்வாபலதேவா
உம்பியும் நீயுமுறங்கேலோரெம்பாவாய்.

---

"முறைதப்பாமே குருபரம் பரைவழியே பற்றுகை." த்வயநிஷ்டர்க்கு குருபரம்பரையே ப்ரதாநமாகக்கடவது. துறை தப்பாத ஸ்ரீவிபீஷணாழ்வானைப்போலே. "வேதம் வல்லார்கள்" என்றவிடத்திலே குருபரம்பரையை நினைத்து கீழ்ப்பத்துப்பாட்டாலும் அநுஷ்டித்தார்கள். "விண்ணோர் பெருமானில்" விண்ணோராகிறவர்கள் த்வாரபாலகர் தொடக்கமாக திவ்யமஹிஷிகள் ஈறாக உள்ளவர்களிறே. திருவாசல் காப்பானை அநுமதிகொண்டு உள்ளே புகுந்தவளவிலே, முதல்கட்டிலே பிள்ளைக்குக் காவலாகக்கிடந்தார் ஸ்ரீநந்தகோபர்; க்ருஷ்ணனைப் பெண்கள் களவுகாண்பர்களென்று நோக்கிக்கிடப்பரே; அநிருத்தனை யகப்படக் களவுகாண்கிற பெண்கள் இவனுடைய ஸம்பந்தங்கொண்டு அவனழுக்கும் வாய்த்தலையான இவனைப்பெற்றால் விடார்களே. "ஸாக்ஷாந்மந்மதமந்மத:" என்கிற க்ருஷ்ணனைப்பெற்றால் விடார்களென்று நோக்கிக்கொண்டு கிடக்கிறவரைச் சென்று பற்றினார்கள். உள்ளேக்கிடக்கிறது வைத்தமாநிதியுமாய்த் தாம் எடுத்த பேராளனுமாய், நிதியெடுத்தவருமானால் நோக்காதிராரிறே.

குவலயாபீடத்தின் கொம்பைப் பறித்துக் கொண்டுவந்து செய்த கட்டிலிறே. வீரபத்நியாகையாலே இவளுக்கு இதி லல்லது கண்ணுறங்காது. எங்களைப்போலே ஸ்ரீப்ருந்தாவநந் தேடிப் போகவேண்டாதே உள்ளகத்துக்குள்ளே கூச்ச

---

களைப்போலே ஸ்ரீப்ரந்தாவநமும மணற்குன்றுந்தேடிப்போக வேண்டாதே உள்ளசத்துக்குள்ளே படுக்கை படுத்துக் கூச்சமறக் கிடக்கப்பெறுவதே! இதென்ன பாக்யபலந்தா னென்கிறார்கள். (கோட்டுக்கால்) ஆனைகளை உயிர்ப்பிடியே பிடித்து அவற்றின் கொம்புகளைப் பறித்து அவற்றை ஆதார மாகக் கடைந்து மடுத்துச்செய்த கட்டில். வீரபத்நியாகை யாலே இப்படி சமைந்த கட்டிலிலொழியமற்றையவற்றில் கண்ணுறங்குவதாகாதே. "கஜம்வாவீக்ஷ்ய ஸிம்ஹம்வா வ்யாக்ரம்வாபிவராநநா! நாஹாரயதிஸந்த்ராஸம்." பிராட் டிக்கு காட்டிலே ஆனையுள்ளிட்டன கண்டால் அபூர்வதர்ச நத்தாலே வந்த முகவிகாஸம் போக்கி, ஸ்த்ரீத்வ ப்ரயுக்த மான அச்சம் குடிபோய்த்து. அதுக்கடி யென்னென்னில் [பாஹுச்ராமஸ்யஸம் ஸ்ரீதா] தனக்கென்னத் தோள்படைக் கையாலே, உயிரோடே பிடித்துக்கொம்பை வாங்கவல்ல வீரருடைய பத்நிக்கு அஞ்சவேண்டாவே. வீரபத்நிக்கு நாயகனோடேயணையும்போது கையில் நாண் தழும்பால்வந்த சாசரப்புக் கண்டதில்லையாகில் தங்களோட்டைப் பெண் களை அணைத்தாற்போலே யிருக்கும். "பர்த்தாரம்பரிஷஸ் வஜே" என்று பிராட்டி பெருமாளுடைய வீரக்கோலங் கண்ட பின்பிறே ஆண் என்று அணைந்தது; மற்றைப்போது "ஸ்த்ரியம்புருஷவிக்ரஹம்" என்றிறே யிருப்பாள். ஜ்யாகிண கர்க்கசமான தோள்களாலே யணைக்கவேணும் ; [மாதங்க இவஸிம்ஹேந] ராவணனாகிற ஆனையை உயிர்ப்பிடிபிடித்த ஸிம்ஹமிறே பெருமாள்."உபதாயபுஜம்தஸ்ய லோகநாதஸ்ய" என்னும்படியான தோள்களாய்த்து. "லோகநாதஸ்ய" என்கிறது, "பதிம்விச்வஸ்ய" என்கிறபடியே அவனுக்கும் தங்களுக்குமுண்டான முறையையுணர்ந்திருப்பார்க்கு பயப் பட வேண்டாவென்றபடி. "ஆநந்தம்ப்ரஹ்மணோவித்வாந்" வீரபத்நிகள்படி ப்ரபந்நர்படிபோலே. தந்தாமுக்கென்ன

மறக்கிடக்கப்பெறுவதே! இதென்ன பாக்யம். (கட்டில்) மாணிக்கத்தாலே செய்யிலும் "கட்டில்" என்று ஜாதிப் பேச்சு. (மெத்தென்ற) நாங்கள் ஆர்த்தைகளாய் வந்து கிடக்க, படுக்கையின் உள்மாநம் புறமாநங்கொண்டாடிக்

---

மிடுக்கற்றவர்களுக்கு அவனுடைய பலமேபலமாக வேண்டாவோ. ஆநுகூல்யத்தில் தாரதம்யங்கொண்டு த்யாகஸ்வீகாரம் பண்ணுவது அவன் அபரிபூர்ணனாகிலிறே, பரிபூர்ணனானவனுக்கு இவன் விலக்காமையிறே வேண்டுவது. இவன் பண்ணின ப்ராதிகூல்யத்துக்கு அபுத்திபூர்வகமான ப்ரபத்தி ப்ராயச்சித்தமாய்போது சரண்யன்நீர்மையே பலிக்கிற வித்தனையிறே; பலத்தோடே ஸந்திப்பிக்குமதிறே உபாயமாகிறது. ஸர்வஸ்வதாநம் பண்ணின வெறுவியனுக்கு நன்மையுண்டாம்போது வேறேயொருவன் அநுக்ரஹத்தாலே பலமாக வேண்டாவோ, இரண்டுக்ரியையாலு மன்றிக்கேயிருந்ததிறே பலம், அத்தாலேயிறே "ஆர்த்தோவாயதிவாத்ருப்த:" என்கிறது. அங்ஙனேயாகில் ப்ரபத்திதானென்னென்னில்; சைதந்யகார்யம் வேண்டுகையாலே. இவனுடையஸத்தை உபாயமாமன்றிறே ஸ்வீகாரமும் உபாயத்தில் புகுவது. "ரக்ஷிதவ்ய:க்ருதாத்மநா" அவன் க்ருதாத்மாவாகையாலே யிவன்பக்கல் பெற்றது கொண்டு தன்நீர்மையாலே ரக்ஷித்து விடுமித்தனை. (கோட்டுக்கால்கட்டில்) குவலயாபீடத்தின் கொமபைப் பறித்துக்கொண்டு போந்து சமைத்த கட்டில். "ஸக்ய:பச்யத" என்று பார்த்துக்கொண்டு நின்ற பெண்களெல்லாம் கிடக்க, கோடுகள் கொண்டு கட்டில் சமைப்பது ஒக்கப்பட்டங்கட்டின ப்ரதாந மஹிஷியான விவளுக்கிறே; கோட்டிடையாடிற்றும் இவளுக்கு; கொடுத்தது மிவளுக்கு. "வேழமுமேழ்விடையும்." (கோட்டுக்கால்) "பின்னைதன் கேள்வன்தாள்கண்டுகொண்டு" என்று மேல் கிடக்கிற மிதுநத்தின்காலிலும், அம்மிதுநத்தைச் சுமக்கிற காலிலே தலையை மடுக்கிறார்கள். க்ருஷ்ணன் படுக்கையின் காலைப்பற்றினவர்களிறே—பர்யங்கவித்யையிற் சொல்லுகிற படுக்கையிற்காலிட்டேறுவார். ஆஸநத்தின் காலைக்கட்டின ஸர்ப்பம் ஆஸநத்தின் ஆகத்திலே எறினாற்போலே. (கட்டில்)

கொண்டு படுக்கைபொருந்துவதே! கண்ணுறங்குவதே! (பஞ்சசயநத்தின்மேலேறி) பஞ்சவிதமானப் படுக்கையின் மேலேறி. அதாவது-அழகு, குளிர்த்தி, மார்த்தவம், பரிமளம்,

---

பெருவிலையனை பொன்னாலும் ரத்நத்தாலும் சமைத்தாலும், இடையராகையாலே "கட்டில்" என்று ஜாதிப்பேச்சு. (கட்டில்மேல்) ப்ரஹ்மாதிகள் வரவிட்ட சிறுத்தொட்டில்களாகிவிறே கிழிய உதைத்துப் போகடுவது, படுக்கைப்பற்றில் படுக்கையாகையாலே ஆதரத்தோடே பேணிக்கொண்டு போரும்.

(மெத்தென்ற பஞ்சசயநம்) மெத்தென்றபஞ்சாலே செய்தபடுக்கை. (மெத்தென்ற) நாங்களார்த்தைகளாய்வந்து கிடக்க, படுக்கையின் உள்மாநம் புறமாநங்கொண்டாடிக் கண்ணுறங்குவதே! (மெத்தென்ற) நாங்கள் புறம்பேநின்றால் படுக்கை கடிநமாக வேண்டாவோ. அவனோடு கிலாய்த்த போது சீறுவது அவன்படுக்கையையிறே. "தம்பாம்புபோல்" "சரணேசரண்" என்று திருவநந்தாழ்வானைப் பெரியாழ்வர்ரோபாதியிறே நினைத்திருப்பது. (பஞ்சசயநம்) பஞ்சவிதமான சயநம். சீதபரிஹாரமுமாய், உஷ்ணபரிஹாரமுமாய் தர்சநீயமுமாய், பரிமளவத்துமாய், விஸ்தாரபாண்டரோபேதமுமாயிருக்கை.

(சயநத்தின்மேலேறி) நாங்களுள்ளுப்புகுரப் பெறுதே புறம்பேநின்றால், படுக்கை, காலிடவொண்ணுதபடி உறுத்த வேண்டாவோ. புத்ராதிகள் துகையாத படுக்கை பித்ராதிகளுக்கு அஸஹ்யமாமாபோலே,நாங்கள் துகையாத படுக்கை வெம்பள்ளியாகாதே தண்பள்ளியாவதே! அவர்களுக்கு நெருப்புநீராம் ஔஷதம் உன்கையிலேயுண்டே. (மேலேறி) நாங்களும் மிதித்தேறுவன்றோ நீ யேறுவது. "பாதேநாத்யாரோஹதி" என்று-ஸ்ரீய:பதியினுடைய பர்யங்க வித்யையிற் சொல்லுகிறபடியே குறைவற்ற படுக்கையிலே சென்றேறக்கடவன் இந்தமுக்தாத்மா; அவன் "கோஸி" என்னக்கடவன், இவன் "அஹம்ப்ரஹ்மாஸ்மி" என்னக்கடவன்; "யஸ்யாஸ்மி" என்கிறவன், "ப்ரஹ்மாஸ்மி" என்கிறது - ப்ர

தாவள்யம், ஆகவிவை. இவர்களுக்கு மென்மலர்ப்பள்ளி வெம்பள்ளியாயிறே யிருப்பது. அஞ்சு உருவிட்டுச்செய்த படுக்கை யென்றுமாம். பஞ்சாலேசெய்த படுக்கை யென்னவுமாம்.

155. (மேலேறி) "பாதேநாத்யாரோஹதி" (150) என்று நாங்கள் மிதித்தேறினலன்றே நீ படுக்கையிலேறுவ தென்கை. (கொத்தலர்பூங்குழல் நப்பின்னை) திருக்குழலின்

---

ஷ்ப்ரகாரபூதன் நானென்றபடி இவர்களும் அத்தையிறே கணிசிக்கிறது. (ஏறி) வெள்ளை வெள்ளத்தின்மே லொரு பாம்பை மெத்தையாக விரித்துறங்குகிறவன், [நாகபர்யங்க முத்ஸ்ருஜ்ய] இங்கேற வரவிட்ட படுக்கை, இங்கே தனக்கும் முற்பட அந்தவிஸ்மயத்தைக்கண்டு ஆச்சர்யத்தாலே ஸ்திமிதனாய் அதிலேயேறின வருத்தத்தைச் சொல்லுகிறது.

இப்படிக்கொத்த படுக்கையிலே துகைக்கைக்கு நிதானஞ் சொல்லுகிறார்கள் (கொத்தலர் பூங்குழல் நப்பின்னை) திருக்குழலில் ஸ்பர்சத்தாலே கொத்துக்கொத்தாக அலரா நின்றுள்ள பூவையுடைத்தான குழலையுடைய நப்பின்னை. கொத்தாகப்பறித்துக் குழலிலே சூட்டினல் தன்னிலத்திற் போலே குழலிலேயிருந்து செவ்விமாறுமல் அலருமாய்த்து. கொம்பினின்றும் போந்து குழலிலேயிறே அலருகிறது. இவள் மயிரில் பூவலருகைக்கு காலத்தோபாதியாகாதே "காலஃகலயதாமஹம்" என்றவனுடைய ஸ்பர்சம். (கொத்தலர்) ஒருப்ரணயகலஹத்திலே எடுப்பும் சாய்ப்புமாக மஹாபாரதம் நடவாநின்றால் பூவலராதொழியும்படி யெங்ஙனே. (பூங்குழல்) "மலரிட்டு நாமுடியோம்" என்று எங்கள் குழலில் பூவும்மாறி செவ்விப்பூவை வைக்கிலும் தொங்காதே, தொங்கினபூ விரஹாக்நியாலே சருகாம்படியிருக்க நீமுடிப்பது எங்கள்தலையில் பூப்பொறுத்தாலன்றே. இவளை இழவுசொல்லும்போது தங்களோடே கூட்டுவர்கள்; பேறு சொல்லும் போது அவனோடே கூட்டுவர்கள். அவளுக்கு இரண்டு தலையும் விடவொண்ணுது. (நப்பின்னை கொங்கைமேல் வைத்துக்கிடந்த) (பூங்குழல் நப்பின்னை) விலக்ஷணமாய் நிரதிசய

ஸ்பர்சத்தாலே கொத்துக்கொத்தாக அலராநின்றுள்ள பூவை யுடைத்தான குழல். காலம் அலர்த்துமாபோலே, அவ ளோட்டை ப்ரணயகலஹத்தாலே யலருகை. வாசஞ்செய் பூங்குழலாளிறே. (கொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர் மார்பா) கொங்கையைத் தன்மேல் வைத்துக்கிடக்க; கொங் கைமேல் தன்னைவைத்துக்கிடந்த என்னவுமாம். "நசாஸ்த்ரம் நைவசக்ரம:" (151) என்றிறே ப்ரணயமிருப்பது. "பர்யா

---

மான குழலையுடையவள். கேசவனையும் பிச்சேற்றவல்ல குழலையுடையவள். இவள் குழலை வாருகைக்கு அக்காக்கை வருவது "பின்னைமணாளனை" என்று இவளோட்டை ஸம்பந் தம் சொன்னலாய்த்து.

(கொங்கைமேல் வைத்துக்கிடந்த) நப்பின்னைப்பிராட்டி யினுடைய திருமுலைத்தடத்தைத் தன்மேலே வைத்துக்கிடந்த வென்னுதல்; கொங்கைமேலே தன்னைவைத்துக்கிடந்த வென்னுதல். "நசாஸ்த்ரம்நைவசக்ரம:" என்றிறே ப்ரணய மிருப்பது. "பர்யாயேணப்ரஸுப்த:" என்னக்கடவதிறே. [மலராள் தனத்துள்ளான்] பர்வதபார்ச்வத்தைப்பற்றி ஜீவிப் பாரைப்போலே (கிடந்த) திறக்கக்கணிசித்தவன் நஞ்சுண் டாரைப்போலே பரவசனாய் மயங்கிக்கிடக்கிறபடி. (மலர் மார்பா) அவன் அண்டைகொண்ட அரணும் இவள் ஜீவந மும். முலையைப்பற்றி அவன்கிடக்கும்; மார்பைப்பற்றி யிவள்கிடக்கும். இவள் முலைப்பரப்பெல்லாம் ஒருமுலைக்குப் போராதபடி அகன்றமார்பை யுடையவனே. பெரியவரை மார்பிறே அது. "முற்றாராவனமுலையாள்-அகலத்துள்ளிருப் பாள்" என்னக்கடவதிறே.

(மலர்மார்பா) திருமுலைத்தடங்களூறுத்தும்படி யணைத்த ஸ்பர்சஸுகத்தாலே பூவலருமாபோலே விகஸிதமான மார்பை யுடையவனே. "ஸதைகரூபரூபாய" என்னச் செய்தே "மலர்மார்பா" என்கிறதிறே இவ்விகாரத்தோடு விரோதியாமையாலே. கர்மநிபந்தநமாய்வரும் வ்ருத்திஹ்ரா ஸங்கள் தோஷாவஹங்களாகையாலே அவையில்லையென்கிற தித்தனையிறே. நித்யாநபாயிநியா யிருக்கிறவளுடைய ஸம்

யேணப்ரஸ்ரூப்தச்ச" (152) என்று முண்டிறே. மலையை யண்டைகொண்டு ஜீவிப்பாரைப்போலே. "மலராள் தனத் துள்ளான்" என்னக்கடவதிறே. (மலர்மார்பா) திருமுலைத் தடங்க ளூறுத்துகையாலே அகன்றிருந்துள்ளமார்பு. இவ் விக்ருதியால், "ஸதைகரூபரூபாய" (153) என்றத்தோடு விரோதியாதோ வென்னில்; விரோதியாது: அதுஹேய குணங்களில்லை யென்கிறது. ஆச்ரிதஸம்ச்லேஷத்தில் அவி காரித்வம் அவத்யமித்தனையிறே. (வாய்திறவாய்) உன்கப்பிர

---

ச்லேஷத்தால்வரும் விகாரம் இல்லையென்கிறதன்றே, ஆச்ரித ஸம்ச்லேஷத்தில் அவிகாரித்வம் அவத்ய மித்தனையிறே. இவ் விகார முண்டானால் கல்யாணகுணங்களிலே யாமித்தனை யிறே. "மலராது குவியாது" என்கிறவிடம் ஸ்வரூபமிறே. யசோதைப்பிராட்டி கட்டுக்கு அலருகிறமார்பு, இவளுடைய ஸ்தநபந்தத்துக்கு அலரச் சொல்லவேணுமோ. "புடைக் கலந்தானை" "வரைநெடுந்தோள்" "மூர்த்திகண்டீர்." இவ ளோடணைந்த பின்பு இவ்விகாஸம் பிறவாதாகில் இவர்க ளுக்குத்தான் என்செய்ய; அவனுக்கு விகாஸத்தைப் பண்ணி ஸ்வரூபம் பெறவிருக்கிறவர்களிறே யிவர்கள். "நித்யகிங்கர;", "ஓர் குற்றேவல்." அவனை விகஸிப்பிக்கை யிவர்களுக்கு ஸ்வரூபமாயிறே யிருப்பது. சேஷியை விகஸிப்பிக்கும்போது சேஷவஸ்துவேணும்; இல்லையாகில் ஸ்வதந்த்ரமா யிருப்பதொரு வஸ்துவுண்டாய் விகஸிப்பிக் கிறதன்றே. இச்சாநுகுணமாக விளையுமது சைதந்ய ப்ரயுக்தமிறே.

(வாய்திறவாய்) அவன்ஊமத்தங்காய் தின்றுகிடக்க இவர்கள்தான் ஆரையெழுப்புகிறது. (வாய்திறவாய்)கிடந்த விடத்தே கிடந்து உன் கம்பீரமான மிடற்றோசை கேட்கும் படி ஒருவார்த்தை சொல்லாய். "அநந்யா" என்கிறபடியே ஏகத்ரவ்யம்போலே யிருக்கிறவர்களைப் புறப்படச் சொல்லு வார் ராவணாதிகளோபாதியிறே; ஆகையாலே"எழுந்திராய்" என்கிறிலர்கள. (வாய்திறவாய்) "ஆர்த்தோவாயதிவாத் ருப்த:" என்று சொல்லிவைத்து, உன்னாலல்லது செல்லா

மான மிடற்றோசையாலே ஒரு வார்த்தை சொல்லாய். "ஆர்த்தோவாயதிவாத்ருப்த:" (155) என்ற நீ உன்னாலல்லது செல்லாதே உன் புறப்பாடு பார்த்திருக்கிற எங்களுக்கு ஒருவார்த்தையுமரிதோ. அவள் புறப்படவொட்டாளாகில் கிடந்தவிடத்தே கிடந்து "மாசுச:" (156) என்று ஒரு உக்தி நேருகையுமரிதோ.

156. (மைத்தடங்கண்ணினாய்) இவன் மறுமாற்றஞ் சொல்லப்புக, நம்மையொழியத் தாங்களே யெழுப்புவதே! என்று கண்ணாலே "வாய்வாய்" என்று வாயை நெரித்தாள். அழகாலும பரப்பாலும் கண்ணிலே யகப்பட்டவன் அக்கட

---

திருக்கிற எங்களுக்கு ஒருவார்த்தையும்அரிதாம்படிபேசாதே கிடக்கிறதென். திறக்கிறவர்களையும் திறக்கவொட்டாதே, நீயும் மூலைக்கீழே யமுக்குண்டால் கிடந்தவிடத்தே கிடந்து "மாசுச:" என்னவு மரிதோ. (மலர்மார்பா வாய்திறவாய்) மார்பை அவளுக்குக்கொடுத்தால், பேச்சை யெங்களுக்குத்தந் தாலாகாதோ; "கொங்கைமேல்" இத்யாதி. மார்பது மூலையா னால் வாயதமுத்தோ. "வாய்திறவாய்" என்றத்தைக்கேட்டு, போர நொந்தார்களாகாதே! என்று அவன் மறுமாற்றம் சொல்லப்புக; ஆர்த்தவிஷயத்தில் நம்மில் முற்பாடனாக வொண்ணாதென்று, கண்ணாலே "வாய்வாய்" என்று கழுத் தைக்கட்டி அமுக்கிக்கொண்டு கிடந்தாள்;

(மைத்தடங்கண்ணினாய்)என்கிறார்கள். நாம் ஆரேனையு மின்னாதாகிறதென், நம்பரிகரம நமக்குதவாதே கண்ணாலே வாயை நெரியாநிற்க. (மைத்தடங்கண்ணினாய்)உன்னுடைய கண்ணில்புகரும் பெருமையும் எங்கள் பேற்றுக்கு உடலென் றிருந்தோம், அது இழவுக்குஉடலாவதே. (மைத்தடங்கண்ணி னாய்) "மையிட்டெழுதோம்" என்றிருக்கிற எங்களையும்மையி டப்பண்ணினாலன்றோ நீ கண்ணுக்கு மையிடுவது. இரண்டு கண்ணுக்கும்ஒரு மையிறே யிடுவது; மைப்படி மேனியிறே. (மைத்தடங்கண்) "ஸஞ்ஜீவேயம் க்ஷணமபி" என்னப்பண்ணுங் கண்ணிறே அவனை. (தடங்கண்) இக்கடலைக் கரைகண்டா ரிறே அவன் நம்மைப்பார்ப்பது.

லைக்கரைகண்டாலிறே நம்மைப் பார்ப்பது. "ஸஹீவேயம் க்ஷணமபி" (157) என்னப்பண்ணும்கண்ணிறே. "மையிட்டெழுதோம்" என்றிருக்கிற எங்களையுந் மையிடப்பண்ணினலன்றோ நீ கண்ணுக்கு மையிடுவது. உன்னுடைய கண்ணிலழகும பெருமையும் எங்கள்பேற்றுக்குடலென்றிருந்தோம், அது இழவுக்குடலாவதே. (நீ) அவனைப் பெறுகைக்கு அடியான நீ அவனை விலக்கக்கடவையோ. (உன்மணாளனை) "கோபீஜநவல்லப:" (158) என்றும் "லோகபர்த்தாரம்" (159) என்றுஞ் சொல்லுகிற பொதுவை யொழிய உனக்கே

(நீ யுன்மணாளனை) அவன் நினைவே நினைவாயிருக்கும் நீ; உன் நினைவே நினைவாயிருக்கு மவன். அவனைப் பெறுகைக் கடியான நீ, உன் புருவம் நெறித்தவிடத்திலே குடநீர் வார்க்கும்படி பவ்யனாயிருக்கிறவனை விலக்கக்கடவையோ.உன்னுடைய போக்யதையிலே யவன் துவக்குண்கிறது உனக்கு இஷ்ட விநியோகார்ஹனாய் எங்களுக்குப் பெறுகைக்குடலென்றிருந்தோம், இனி உனக்கேசேஷமென்றிருக்கிறோம். பண்டு, இருவரும்கூட தங்களுக்கு ஸ்வம் என்றிருக்கையாலே கூடச் சொல்லிப்போந்தார்கள்; இப்போது, அந்யத்வம்தோற்றப்ரணயரோஷத்தாலே வேறிடுகிறார்கள். பேறு அவளாலேயானால் இழவும் அவளாலேயாகத்தட்டில்லையிறே. (உன்மணாளனை) "லோகபர்த்தாரம்" என்கிறநாட்டுப்பொதுவைத்தனித்து புஜிக்கக்கடவையோ. "கோபீஜநவல்லபன்" என்று விருதுபிடிக்கிற ஊர்ப்பொதுவை உன்னாலே உண்டறுக்கலாமோ. (உன்மணாளனை) இவனையிட்டிறே யவனை இவர்கள் அறிவது. "என் திருமகள்சேர் மார்பனே" "கோலமலர்ப்பாவைக்கன்பாகிய." அவனு மவ்வழியாலேயிறே யுகப்பது.

(எத்தனைபோதும் துயிலெழ வொட்டாய்காண்) ஒரு க்ஷணமும் அவனை எழுந்திருக்க வொட்டுகிறிலை ஸம்போக வர்த்தகமாகக் கட்டின கை நெகிழ்க்கிலும் உடம்பு வெளுப்பதி!,கலவிக்குடலான வ்யாபாரத்தையும் பிரிவுக்குடலென்று பிழைக்கமாட்டாய். புணர்ச்சிக்காகப் பிரியிலுமம தடுப்பது

ஸ்வம்மாய் நீ புருவம் நெறித்தவிடத்திலே கார்யஞ் செய்யும் படி பவ்யனுயிருக்கு மிருப்புளங்களுக்குடலென்றிருந்தோம் அங்ஙனன்றிக்கே இனி யுனக்கே சேஷமென்றிருக்கிறு மென்கிருர்கள்.(எத்தனைபோதும்துயிலெழவொட்டாய்காண்) ஒருக்ஷணமும் அவனை யெழுந்திருக்கவொட்டுகிறதில்லை. புணர்ச்சிக்காகப் பிரியவும் பயப்படுவுதி. (எத்தனையேலும் பிரிவாற்றகில்லாயால்) அது உன் குறையோ, அவனை க்ஷண காலமும் பிரியமாட்டாத உன்னுடைய பலஹாநியின் குறை

---

வனைப்பதாவுதி. இவர்கள் புகுந்தாலும் போகத்துக்கு வர்த் தகரென்றறிகிறிலை. இவர்கள் இச்சேர்த்தியிலே கிஞ்சித் கரிக்க ஆசைப்பட்டிறே வருகிறது. இருவர்க்கொருவரடிமை செய்வதாகவிறே உத்தரார்த்தத்தில்சொல்லுகிறது. கொண்டு புறப்பட்டாளாகில் உத்தரார்த்தத்திற்படியே அடிமை செய் கைக் குடலாகிறது; உள்ளே கிடந்து தாழ்த்தாளாகில் பூர் வார்த்தத்திற் படியே புருஷகாரத்துக் குடலாகிறது.

(எத்தனையேனும் பிரிவாற்றகில்லாயால்) ஒருக்ஷணம் பிரிபில் புறம்புநிற்கிற நாங்கள் பட்டது படாநின்ருய். நாங் கள் அகலநின்று படுகிறதெல்லாம் கூடியிருந்து படாநின் ருயே! நெகிழ்த்து அணைக்கில் பத்துமாஸம் பிரிந்தவள் பட்டது படாநின்ருய் இவ்விடத்தால் - இவள் வைலக்ஷண்யஞ் சொல்லுகிறது. (ஆற்றகில்லாயால்) உனக்காகவன்றே அவன் புறப்படமாட்டா தொழிகிறது, பிரியில் நீபிழை யாய். உன்னை யிழக்கில் ஒன்ருகமுடியும், உன்னையிழவா மைக்கு எங்களையும் விட்டு உன்னோடே பணிபோரும்படி யாக்குவதே.

(தத்துவம்) இது உண்மை சொல்லுகிறேம்; எங்களாற் ருமையாலே கண்ணுஞ்சுழலையிட்டுச் சொல்லுகிறேமல் லோம். (தகவன்று) இதுமெய்யே. நீர்மைக்கு உடலல்ல,தர்ம மன்று. (தத்துவம்தகவன்று) ஸத்யமே க்ருபையன்று, மெய்யே உனக்கு க்ருபையில்லை யென்னுதல் ; தகவு தத்துவ மன்றென்னுதல்;-உனக்குநீர்மையுண்டென்றுசொல்லுகிறது பரமார்த்தமன்று. " நகச்சிந்நாப ராத்யதி " என்னலாவது

யன்றே. "அசலகில்வேனிறையும்" என்று க்ஷணகால விச்லேஷமும் பொறுக்கமாட்டாமையாலே யவனோட்டை நித்ய ஸம்யோகம் எங்களுடைய லாபத்துக்குடலாகையொழிய விபரீதபலமாவதே. (தத்துவம்அன்றுதகவு) தத்வம்-ஸத்யம். தகவன்று-தர்மமன்று. எங்களறியாமையில்சொல்லுகிறோமல்லோம், மெய்யே; தர்மமன்று. (தகவு - தத்துவமன்று) "பாபாநாம்வா ஸுபாநாம்வா" (59) என்னுமுனக்கு "அஹத்வாராவணம்ஸங்க்யே" (160) என்ற அவனில் வாசியில்லையென்றிருக்கிறோம். அதவா, (தத்துவமன்று) தத்வம்-ஸ்வரூபம். உன் ஸ்வரூபத்துக்கும்போராது. (தகவன்று) உன்னு

அவன் பரிகரம் நலிகிறபோதோ, உன்பரிகரம் அவனாலே நோவுபடப் பார்த்திருக்குமத்தனையோ. "க்ஷிபாமி" என்றவனோடு, "நகச்சிந்நா பராத்யதி" என்றவுன்னோடு வாசியில்லை. "அஹத்வாராவணம்ஸங்க்யே" என்று கொன்றல்லது படைவீட்டில் புகோம் என்றவனோடு, அவன் றனக்கே, "மித்ரமௌபயிகம்" என்றவுன்னோடு வாசியில்லை என்றிருக்கிறோம். "பதிம்விச்வஸ்ய" என்று அவன் நினைத்திருக்குமோபாதி, "ஈச்வரீம் ஸர்வபூதாநாம்" என்கிற முதன்மையேயுள்ளதென்று நினைத்திருக்கிறோம். இவளுக்குக் குறைசொல்லுகையாவது அவனோடொக்குமென்னு மித்தனையிறே. நீர்மையால் விஞ்சினாரை "நீர்மையாலே குறைந்தவர்களோடொப்பர்கள்" என்னுமித்தனையிறே குற்றம். "த்விதாபஜ்யேயம்" என்றிருக்குமவனோடு, "சரணம்கத:" என்றிருந்தவனோடு வாசியறக் கைக்கொள்வனென்றவனை கபோதஸ்தாநீயனாக்கினால், கபோதியில்கேட்டபிராட்டியில்லையிறே, அரைக்ஷணம் தாழ்த்தது பொறுக்கமாட்டாமல் சொல்லுகிறவையிறே யிவை.

அன்றிக்கே, (தத்துவமன்று, தகவுமன்று) உன்னுடைய ஸ்வரூபத்துக்கும் போருமதன்று, ஸ்வபாவத்துக்கும் சேருமதன்று. புருஷகாரமாய் நின்று சேர்ப்பாருடைய ஸ்வரூபத்துக்கும் ஸ்வபாவத்துக்கும் சேருமதோ இது. "அகிலஜகந்மாதரம்" என்கிறதுக்கும் சேராது, "அசரண்யசரண்யாம்"

டைய ஸ்வபாவத்துக்கும் போராது; உன்னுடைய புருஷ காரபாவத்துக்கும்போராது; க்ருபைக்கும் போராது.... கக

157. ஸ்வாபதேச வ்யாக்யாநம். பத்தொன்பதாம் பாட்டு. (குத்து இத்யாதி) இப்பாட்டில் புருஷகார பூதை யான பிராட்டி கதவுதிறக்கப்புக, நம்முடையார்க்கு இவள் முற்படுவதே! என்று அவளை எழுந்திருக்கவொட்டாமல் கட்டிக்கொண்டு கிடக்கிற ஈச்வரனை யெழுப்பி, அங்கு மறுமாற்றம் பிறவாமையாலே, மீளவும் அவள்தன்னையே யெழுப்புகிறார்கள். வ்யா.—(குத்து விளக்கெரிய) ஜ்ஞாநம் ப்ரஜ்வலிக்க. (கோட்டுக்கால் கட்டில் மேல்) சதுர்த்தந்தியான குவலயாபீடத்தினுடைய தந்தங்களாலே செய்யப்பட்டகால்களையுடைய கட்டில்மேல். இத்தால்-சதுர்விதகர்த்ருத்வ மூலமான அஹங்கார கார்யமானசேஷத்வேகர்த்ருத்வம் ஜ்ஞாத்ருத்வேகர்த்ருத்வம் கர்த்ருத்வேகர்த்ருத்வம் போக்த்ருத்வேகர்த்ருத்வமாகிற கால்களை யுடைத்தாய், அந்த கர்த்ருத்வ விஷயமான தர்மார்த்த காம மோக்ஷங்களாகிற பட்டங்களை யுடைத்தாய் ததநுஷ்டாநாபிநிவேசமாகிற கச்சையை யுடைத்தாயிருக்கிற கட்டில் மேலென்கிறது. (மெத்தென்ற பஞ்ச சயநத்தின்மே லேறி) சேஷத்வாதி கர்த்ருத்வ ராஹித்யத்தாலே ம்ருதுவான அர்த்தபஞ்சகஜ்ஞாநமாகிறபடுக்கை மேலேறி. (கொத்தலர் பூங்குழலித்யாதி) வர்க்கம் வர்க்கமாக விகஸிதஜ்ஞாநரான ஆத்மாக்களாகிற புஷ்பங்களை யுடைய பகவத் விஷய ஸ்வவ்யாமோஹமாகிற அளக பாரத்தை யுடைய நப்பின்னைப்பிராட்டியுடைய போகோபகரணமான பக்தியை ஸ்வவிஷயத்திலே வைத்துக்கொண்டு, அத்தால் விகஸிதஹ்ருதயனானவனே. (வாய்திறவாய்) நீ வாய்திறந்து ஒருவார்த்தை யருளிச்செய்யவேணும் என்றவாறே, அவன் வாய்திறக்கப்புக, அவனை, "நீ க்ரமம் தப்பி நடப்பதே!" என்று கண்ணாலே அதட்ட, அவனை யெழுப்புகைக்காக மீளவும் அவளையெழுப்புகிறார்கள் (மைத்தடங் கண்ணினாய்)

---

என்கிறதுக்குஞ் சேராது, "தேவ தேவ திவ்யமஹிஷீ" என்று கட்டின பட்டத்துக்குச் சேருமித்தனை. ... கஎ

சுத்த ஸத்வமாகிற அஞ்ஜநத்தையுடைத் தாகையாலே விஸ்ருங்கலமான ஸ்வரூபயாதாத்ம்யஜ்ஞாந முடையவளே. (நீ) ஸ்வரூபயாதாத்ம்யதர்சியானநீ. (உன்மணாளனை) உனக்கு வல்லபனான க்ருஷ்ணனை. (எத்தனைபோதுந் துயிலெழவொட்டாய்காண்) அத்யல்பகாலமும் நித்ராப்ரதமான படுக்கையில் நின்று எழுந்திருக்கவொட்டுகின்றிலை. ஒட்டுதல்-ஸம்மதித்தல். என்னென்னில் (எத்தனையேலும் பிரிவாற்றகில்லாய்) ஸம ச்லேஷார்த்தமான விச்லேஷமும் பொறுக்குகின்றிலை, அது உன்குற்றமோ, உன் பலஹாநியின் குறை. ஆல்-ஆச்சர்யே. (தத்துவமன்றுதகவு) ஆகிலும் புருஷகாரபூதையான உனக்கு எம்பெருமானை நம்மோடே சேரவொட்டாமல் பண்ணுகை ஸ்வரூபமன்று. ... .... ... கசூ

## இருபதாம் பாட்டின் அவதாரிகை

**மூவாயிரப்படி** :—158. இருபதாம்பாட்டு. அவனுக்கும் எங்களுக்கும அடியானநீ எங்களை நீராட்டுவதி என்றுக்ருஷ்ணனையும் நப்பின்னைப் பிராட்டியையும்கூட எழுப்புகிறார்கள்.

---

**ஆறுயிரப்படி** :—இருபதாமபாட்டு. "துயிலெழவொட்டாய்காண், தகவன்று" என்று பெண்கள் ஆற்றாமையாலே நம்மைச் சிலகுற்றஞ்சொன்னார்களேயாகிலும திருவுள்ளம்பார்த்து இடம்பெற்றபோதிலே விண்ணப்பஞ்செய்யவேணுமென்று நப்பின்னைப்பிராட்டி பேசாதே பள்ளிகொண்டருள, இவளைப்பற்றினலும் கார்யஞ்செய்யக் கடவ அவன் இவள் தன்னையும் திறக்கவொட்டாதே போகப்ரஸக்தனைப்பேசாதே கிடந்தாயென்றவாறே,சிலிட்கென்று கிடக்கிறனுகக்கூடுமென்றுபார்த்து, நீ முன்பு ஆர்த்தரக்ஷணம்பண்ணி ஆர்ஜித்தகுணங்களெல்லாம், இப்போது எழுந்திராமையாலே இழக்கக்கிடாய் புகுகிறயென்று சொன்னவிடத்திலும் அவன் வாய்திறவாமையாலே, நப்பின்னைப்பிராட்டிதிறத்தில் ப்ரணயரோஷத்தாலே சொன்னவையும் இவனுக்கு அஸஹ்யம்போலே யிருந்ததென்று, புரிந்து, இவளுடைய தேஹகுணங்களையும் ஆத்மகுணங்களையும

முப்பத்துமூவரமரர்க்குமுன்சென்று
கப்பந்தவிர்க்குங்கலியேதுயிலெழாய்
செப்பமுடையாய்திறலுடையாய்செற்றார்க்கு
வெப்பங்கொடுக்கும்விமலாதுயிலெழாய்
செப்பன்னமென்முலைச்செவ்வாய்ச்சிறுமருங்குல்
நப்பின்னைநங்காய்திருவேதுயிலெழாய்
உக்கமுந்தட்டொளியுந்தந்துன்மணாளனை
இப்போதேயெம்மைநீராட்டேலோரெம்பாவாய்

பதவுரை:—முப்பத்துமூவர் - முப்பத்து மூன்றுவகையான, அமரர்க்கு - தேவர்களுக்கு, முன்-துன்பம் வருவதற்கு முன்னமே, சென்று - அவர்கள் நினைத்த விடத்திற் சென்று, கப்பம் (கம்பம்) அவர்கள் நடுக்கத்தை, தவிர்க்கும் - போக்கத்தக்க, கலியே - மிடுக்குடையவனே, நாங்கள் கண்டு வாழும்படி, துயிலெழாய் - திருப்பள்ளி யுணர்ந்து வரவேணும்; செப்பமுடையாய் - ஆச்ரிதரைக் காக்குமவனாய், திறலுடையாய் - அவர்கள் விரோதிகளை யடக்கும் வல்லமை யுடையனாய், செற்றார்க்கு - அவர்கள் விரோதிகளுக்கு, வெப்பம் கொடுக்கும் - துன்பத்தையே பண்ணுகின்றுள்ள, விமலா-பரிசுத்த னானவனே, துயிலெழாய் - துயிலொழிந்து வரவேணும்; செப்பு அன்ன-பொற்கலசத்தை யொத்து, மெல்-மிக மெல்லிதாயிருந்துள்ள, முலை - ஸ்தநங்களையும், செவ்வாய் - பவளம்போற் சிவந்த வாயையும், சிறு - நுண்ணிதான, மருங்குல் - இடையையுமுடையளாய், நப்பின்னை - நப்பின்னை யென்னும் பேரையுடையளாய், நங்காய்-ஸ்த்ரீத்வ பூர்த்தியை யுடையளாய, திருவே-பெரிய பிராட்டியாரை யொத்தவளே, துயிலெழாய் - துயிலொழிந்து வந்து, எங்கள் நோன்புக்குபரிகரமான, உக்கமும் - ஆலவட்டத்தையும், தட்டொளியும் - கண்ணாடியையும், தந்து - கொடுத்து, உன் - உன்னுடைய, மணாளனை - மணவாளனான க்ருஷ்ணனையும், எம்மை - விரஹத்தால் மெலிந்த சரீர முடையரான எங்களையும், இப்போதே—, நீராட்டு - ஸம்ச்லேஷிக்கும்படி செய்யவேணுமென்று இரக்கிறார்கள்.

---

சொல்லி யேத்தி, அவன் தனக்குரியனோ, பரதந்த்ரனானவனை நலிகிறதென் என்று, எங்களுக்கும் அவனுக்கும் கடவையான நீயே எங்களபேக்ஷிதம் தலைக்கட்டித் தரவேண்டாவோ என்று நப்பின்னைப்பிராட்டியை அர்த்திக்கிறார்கள்.

159. வ்யா.-(முப்பத்துமூவர்) ரக்ஷணத்துக்குஸங்க்யா நியதியுண்டோ. பஞ்சலக்ஷம்குடியில்பெண்களானால் ரக்ஷிக்கலாகாதோ. ஆர்த்தியே கையமுதலாக ரக்ஷிக்குமவனல்லையோ (அமரர்க்கு) எல்லாவளவிலும் சாவாதார்க்கோ உதவலாவது, உன்நோக்குப் பெறுவிடில் சாகும எங்களுக்கு உதவலாகாதோ. முகாந்தரத்தாலே ஜீவிப்பார்க்கோ உதவலாவது, உன் முகத்தாலே ஜீவிப்பார்க்கு உதவலாகாதோ. ப்ரயோஜ

---

வ்யா.—(முப்பத்துமூவர்) நீரக்ஷிக்குமிடத்தில் ஸங்க்யா நியதி வேணுமோ, க்ரமவிவக்ஷைதானுண்டோ, அஞ்சுலக்ஷக் குடியிலுள்ளாருமாய் நோவுபட்டால் உதவலாகாதோ; ஆண்களுமாய் ப்ரபலருமானாலோ ரக்ஷிக்கலாவது, பெண்களுமாய் அபலைகளுமானால் ரக்ஷிக்கலாகாதோ; ஸமிதைபாதி ஸாவித்ரிபாதியாய் ஸ்வரக்ஷணத்திலே அதிகரிப்பார்க்கோ உதவலாவது, உன்னையேபற்றித் தந்தாமும் ஒருதலைபற்றுதார்க்கு உதவலாகாதோ; "ஈச்வரோஹம்" என்றிருப்பார்க்கோ உதவலாவது, "அடியோம்" என்றிருப்பார்க்கு உதவலாகாதோ; அநந்யப்ரயோஜநரைப்போலே பதர்கழித்துக் கார்யந்தலைக்கட்டினவாறே அஜ்ஞதைகொண்டு எதிரிடுமவர்களையோ ரக்ஷிப்பது, கார்யஞ் செய்யாவிடிலும் அகதிகளாய் அநந்யப்ரயோஜநரா யிருப்பார்க்குக் கார்யஞ்செய்யலாகாதோ. "நீணகர் நீளெரிவைத்தருளாய்" என்று உன்னையெழுப்பி அம்புக்கு இலக்காக்குவார் கார்யமோ செய்வது, உன்னழகுகாண ஆசைப்பட்டார் கார்யம் செய்யலாகாதோ.

(அமரர்) கொன்றாலும் சாவாதார்க்கோ உதவலாவது, வ்யதிரேகத்தில் பிழையாத நாங்களிருக்க. உன்னையொழிய வேறொன்று தாரகம்ஒன்று முகாந்தரத்தாலே ஜீவிப்பார்க்கோ வுதவுவது, உன்முகமும் உன்நோக்கும் ஜீவநமாயிருப்பார்க்கு உதவலாகாதோ. சக்தர்க்கோ கார்யஞ்செய்வது, அசக்தர்க்குக் கார்யஞ்செய்யலாகாதோ. நோவுபட்

பி. 159. அரணிமை - கல்மதிளிட்டாற்போல், ஆழ்வார்களால் வந்த அரண்.

நாந்தர பரருமாய் மிடுக்கருமானார்க்கோ உதவலாவது, அநந்யப்ரயோஜநைகளுமாய் அபலைகளுமா யிருப்பார்க்கு உதவலாகாதோ. (முன்சென்று) நோவு வருவதற்கு முன்னே சென்று. ஏற்கவே ரக்ஷிக்கக்கடவநீ நோவுபட்டுவந்த எங்களை ரக்ஷிக்கலாகாதோ. (சென்று)நீசென்று உதவக்கடவஉனக்கு உன்வாசலிலே வந்த எங்களுக்கு உதவலாகாதோ. உன் பக்கலிலே வருகை மிகை என்னுமவ னல்லையோ. எழுது மென்னுமிதுமிகையாயன்றோ இருப்பது. (கப்பம் தவிர்க்கும்) "சம்பம்" என்கிற வித்தை "கப்பம்" என்று வலித்துச்

---

ஆற்றவல்லார்க்கோ கார்யஞ்செய்வது. (முன்) நோவுவருவதற்குமுன்னே, ஏற்கவே பரிஹரிக்கக்கடவநீ, நோவுபட்டவெங்களை ரக்ஷியாதொழிகிறதென். நினைவுக்கும் முற்பட்டுக் கார்யஞ் செய்யக்கடவநீ, எங்கள்நினைவைக் குற்றமாக்கினையோ. (சென்று) நீ இரந்துசென்று கார்யம்செய்வார்க்கோ செய்பலாவது, நாங்கள்வந்து இரந்தாலாகாதோ. உன்னையழைத்துவிட்டுக் கார்யம்கொள்வார்க்கோ உதவலாவது; உன்வாசலிலே வந்துநின்று துவளுகிற எங்கள் கார்யஞ் செய்யலாகாதோ. நாங்கள் உன்வாசலிலே வருகை குற்றமென்றிருக்கிறயோ. "ஸ்மராமி" என்னுமவனுக்கு நினைக்கை குற்றம்; "உவாச" என்னுமவனுக்கு வார்த்தைசொல்லுகை குற்றம்; "பத்ப்யாமபிகமாத்" என்னுமவனுக்கு வருகை குற்றம்; "உன்மனத்தால்" "வார்த்தையென்னே" "திருமாலும்போந்தானே" எழுதுமென்னுமிதுமிகையாயன்றோ அவ்விடத்துக் கிருப்பது.

(கப்பம்கவிர்க்கும்) "கப்பம்" என்கிறது-கம்பமென்றபடி. அதாகிறது-நடுக்கம். "கம்பம்"என்கிறவித்தை"கப்பம்" என்று வலித்துக் கிடக்கிறது."தேவாஸ்ஸ்வர்க்கம்பரித்யஜ்ய" என்று-அஸுரராக்ஷஸராலேகுடியிருப்புள்பட இழந்து புக விடமற்றுப்படுகிற நடுக்கத்தைத் தவிர்க்கை. நாட்டார்நடுக்கத்தைத் தவிர்க்கக் கடவநீ, எங்களை நடுங்கப்பண்ணுதே கொள்ளாய். அவர்கள்நடுக்கத்துக்கும் எங்கள்நடுக்கத்துக்கும் வாசியறியவேண்டாவோ. அவர்கள்நடுக்கம் எதிரிகள்

சொல்லுகிறது; அதாகிறது - நடுக்கம். கம்பம் தவிர்க்கையாவது-“தேவாஸ்வர்க்கம் பரித்யஜ்ய” (161) என்று-அஸுரராக்ஷஸாதிகளாலே குடியிருப்பும் ப்பட இழந்து க்லேசித்த அத்தைத் தவிர்க்கை. நாட்டார் நடுக்கத்தைத் தவிர்க்கக்கடவ நீ எங்களை நடுங்கப்பண்ணாதே கொள்ளாய். து:கநிவ்ருத்தியை யாசைப்பட்ட தேவர்களுக்கோ உதவலாவது, நீ உணரும்படி காண ஆசைப்பட்டார்க்கு உதவலாகாதோ. (கலியே) மிடுக்கையுடையவனே. அபலைகளான எங்களுக்கு

நிமித்தமாக; நீயுணரும்படி காணத்தொழியப் புகுகிறோயோ! உன்னைக்கிடையாதொழியப் புகுகிறதோ! என்று எங்களுக்கு நடுக்கம். “கப்பம்” என்று-இறைபாகவுமாம். ராவணாதிகளுக்குப் பணிப்பூவிட்டுத் திரியாமைக் காக்கை. (கலியே) மிடுக்குடையவனே. ஒருமேட்டுக்கு ஒருபள்ளம் நேராமாபோலே, உன்மிடுக்குக்குஎங்கள்பலஹாநியும்நேரன்றே. அபலைகளான எங்களுக்கு “க்ருஷ்ணபலா:” என்கிற உன்மிடுக்கல்லது உண்டோ. (துயிலெழாய்) தேவதைகளுக்குப்போலே எங்களுக்குக் குடியிருப்புப் பண்ணித்தரவும் மார்பிலே அமரேற்கவும் வேண்டா, உணரும்போதையருகுகாண்கையே எங்களுக்குக் குடியிருப்பும் ஜீவநமும். (துயிலெழாய்) நீயுகக்குமவர்களான முப்பத்துமூவராக நினை; ஆண்களாக நினை; ப்ரயோஜநாந்தர பரராக நினை; மருந்துதின்று சாவாதபேராக நினை; உன்னை ரக்ஷ்யமாக நினையாதே ரக்ஷகனாக நினைக்கும்பேராக நினை. எங்களுக்கு நீயுணரும்படியும் நீ நோக்கும்படியும நீவார்த்தை சொல்லும்படியுந் தொடக்கமானவற்றைக் காண்கையே வேண்டுவதென்கிறார்கள்.

(முப்பத்துமூவரித்யாதி) அஷ்டவஸுக்கள், ஏகாதசருத்ரர்கள், த்வாதசாதித்யர்கள், அச்விநீதேவதைகள், இவர்கள் தொடக்கமாக ப்ரஹ்மா எல்லையாக நடுவுண்டான தேவதாவர்க்கம், க்ருஷ்ணன் திருவவதரித்தபோதேதொடங்கி தொட்டில்கள் தொடக்கமான பிள்ளைப்பணிகள் வரவிட்டு, தாங்களும் மந்திரமாமலர்கொண்டு சிலநாள்மறைவதுவெளிப்படுவதாய்த்திரிந்து, ஆயர்பாடி நிறையப்புகுந்து, இடைச்சிகள்

உன்மிடுக்கை யொழியவுண்டோ. அரணாமையையுடைய வனேயென்றுமாம். (துயிலெழாய்) தேவதைகளுக்குக் குடியிருப்பும் ஜீவநமும்போலே எங்களுக்கு நீ உணரும்படி காண்கை.

160. (செப்பமுடையாய்) ஆச்ரிதர்க்குச் செவ்வையழியா திருக்குமவனே, எங்களுக்குச் செவ்வையழியா திருக்கவேண்டாவோ. செப்பம்-ரக்ஷை யென்றுமாம். (திறலுடையாய்) திறல் - பராபிபவநஸாமர்த்யம். அநாச்ரிதர்க்

பின்னடியிலே யொதுங்குகையாலும், இவர்கள்கார்யம் க்ருஷ்ணனேசெய்து திரிகையாலும், இடைப்பெண்கள் அறிகையாலே இவ் வ்ருத்தாந்தத்தைச் சொல்லுகிறார்கள். "கலி" என்று - மிகுதியாய், ஸகலதேவதைகளையும் ரக்ஷிக்கையாலே ஸர்வாதிகனானவனே யென்றுமாம்.

இப்படி தேவகார்யஞ்செய்து வ்யாபரியாநின்றால் தனக்கொரு தீங்குவருமபடியிருக்குமோவென்னில் (செப்பமுடையாய்) தனக்கு ரக்ஷையுண்டாம்படி வ்யாபரிக்கும் அரணிமையை யுடையவனே யென்கிறார்கள். அன்றிக்கே, "செப்பம்" என்று - செவ்வையாய், ஆச்ரிதரோடு செவ்வையழியாமே பரிமாறும் ஆர்ஜவகுணத்தை யுடையவனே யென்னுதல். "ரக்ஷிதாஜீவலோகஸ்ய" என்கிற ஸாமாந்யதர்மத்தால் வந்த தரமழிந்தாலும், "ஸ்வஜநஸ்யசரக்ஷிதா" என்கிற இவ் விசேஷத்தையும் இழக்கவோ. எங்கள் செவ்வைக்கேடும் உன்செவ்வையாலே நிரப்ப விருந்தோம், அது தன்னையும் அஸத்ஸமமாக்காநின்றாய் நாங்கள் வரக்கிடந் துறங்குகையாலே. விரகாலே நீரைமேட்டில் ஏற்றுமாபோலே, உன்னுடைய வாத்ஸல்யம எங்கள்பக்கலிலு மேறிப்பாய வேண்டாவே. இச்செவ்வைதானே அநாச்ரிதவிஷயத்திலும் ஒக்குமாகில் பாதகமாமிறே. அதுவாராமைச்சுக (திறலுடையாய்) என்கிறார்கள். திறலாவது - பராபிபவநஸாமர்த்யம்.

பி. 160. செப்பம் - ஆர்ஜவம்; ரக்ஷை. கண்ணற்று - தயையின்றி.

கன்றிக்கே எங்களுக்கு அணுகவொண்ணு திருக்கைக்யோ. (செப்பமுடையாய் திறலுடையாய்) பாண்டவர்களுக்குச் செவ்வியனாய் துர்யோதநாதிகளுக்கு அநபிபவநீயனானவனே. திறல் - மிடுக்காகவுமாம். (செற்றார்க்கு வெப்பம் கொடுக்கும் விமலா) ஆச்ரித விரோதிகளுக்குதுःகத்தைப் பண்ணும் நீ "செய்குந்தாவருந்தீமை" இத்யாதி, இப்போது அநுகூலர் பக்கத்திலாய்த்தோ. (விமலா) என்றது-ஸம்பந்த

ஆச்ரிதரோடு செவ்வியனான செயல்தன்னிலே அநாச்ரிதர்க்கும அநபிபவநீயனானவனே. பாண்டவர்கள் விஷயத்தில் செவ்வியனானநிலையிலே துர்யோதநாதிகளையழிக்கும்படியை நினைக்கிறது. ஆயுதமெடேனென்று ஆயுதமெடுக்கையும் பகலை இரவாக்குகையும் தொடக்கமானவை. அநுகூலரான எங்கள்பக்கலிலேயோ திறல்காட்டுவது, அது எங்களுக்கு அணுகவொண்ணுதபடியாயோ.

அத்திறலால் பலித்த அம்சம்சொல்லுகிறதுமேல் (செற்றார்க்கு வெப்பங்கொடுக்கும்) செற்றாராகிறார் - சத்ருக்கள். "ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்" என்றிருக்கிற தனக்கு சத்ருக்களில்லையிறே. ஆச்ரிதருடைய சத்ருக்களேயிறே தனக்கு சத்ருக்களாகிறார். ஆச்ரிதவிரோதிகளுக்கு துःகத்தைப்பண்ணிக்கொடுக்கும். (செற்றார்)சாத்ரவம இருவர்க்கும்பொதுவாயிருக்கிறபடி. இவர்கள், "சத்ரோஸ்ஸகாசாத்" என்பார்கள்; அவன், " த்விஷதந்நம் " என்னும். (வெப்பங் கொடுக்கும்) பயஜ்வரத்தைக்கொடுக்கும். பாண்டவர்களுடைய சலக்கமெல்லாம் அவர்களுக்கு எதிரிகள்பக்கலிலேயாக்குகை. "பாண்டவர்தம்முடைய பாஞ்சாலி மறுக்கமெல்லாம" "சந்தமல்குழலாள் அலக்கண் நூற்றுவர்தம பெண்டிருமெய்தி" (கொடுக்கும்) அருட்கொடையான ஔதார்யமிருந்தபடி. (விமலா) ஸம்பந்தமொத்திருக்கச்செய்தே ஆச்ரிதர்க்காகக் கண்ணற்று முடிக்கையாலேவந்த சுத்தியைச்சொல்லுகிறது, "செய்கும் தாவருந்தீமை" இத்யாதி. ஆச்ரிதர்காரியம் செய்தாரு யிருக்கையன்றிக்கே, தன்பேறு யிருக்கை. "போழ்ந்த புநிதன் " அநாச்ரிதர்க்கு முடிகைக்கு வேண்டுமவற்றைக்

மொத்திருக்க, ஆச்ரிதர்க்காகக்கண்ணற்று அழிக்கவல்ல சக்தி. (துயிலெழாய்) அம்பு எய்யவேணுமோ எங்களுக்கு, எழுந்திருந்து நோக்கவமையாதோ. (செப்பன்னமென்முலை) அவன்பக்கல் மறுமாற்றம் பெருமையாலே, புருஷகாரபூதை யான நப்பின்னைப் பிராட்டியை யெழுப்புகிறார்கள். மேல் அவன் அகப்படுஞ் சுழிகள் சொல்லுகிறது. நிதி இட்டுவைக் கும் செப்புப்போலே அவன் கிடக்குமிடம். "மலராள்தனத்

---

கொடுத்து, ஆச்ரிதர்க்கு உஜ்ஜீவந ஹேதுவான தன்னைக் கொடுக்கும் சக்தி. துர்யோதநனுக்கு பரிகாரத்தைக்கொடுத்து, அர்ஜுநனுக்குத் தன்னைகொடுத்துநின்றநிலை. (துயிலெழாய்) ப்ரயோஜநாந்தர பரர்க்குக் கார்யம்செய்ததால்வந்த புகழும், ஆச்ரிதரக்ஷணத்தால் வந்த ஏற்றமுமெல்லாம் அழியக்கிடாய் புகுகிறது, சடக்கெனவெழுந்திருந்து அவற்றை நிலைநிறுத் திக்கொள்ளாய்.

அவன் தாழ்திருந்தவாறே அவன்பக்கல் மறுமாற்றம் பெருமையாலே தன்னைப்பிரியில் தரியாதவனைச் சிறையிலே யிட்டுவைத்து முரட்டுதேவர்கள் கார்யஞ்செய்துதிரியுமவனை விடீர் என்று, திரியவும் நப்பின்னைப் பிராட்டியை எழுப்பு கிறார்கள் (செப்பன்ன மென்முலை) பரதந்த்ரனை இவனைக் கிடந்து நலிகிறதென் நம் ஆர்த்தத்வநி கேளாதபடி உள்ளே பொதித்துக் கிடக்கிறவளைச் சொல்லாதே. (செப்பன்ன) செப்புக்குள்ளே பொதிந்துவைத்த ஆபரணம் நினைத்தபோது பூணக்கிடையாதாபோலே, செப்புப்போலே யிருந்த ஸந்நி வேசத்தை யுடைத்தான அவள்முலையிலே அழுந்திக்கிடக்கிற வனை நமக்குக்கிடைக்கப்புகாநின்றதோ. "மாகடல் நீருள் ளான் மலராள் தநத்துள்ளான்" க்ஷாமகாலத்துக்கு அஞ்சி னார், கடற்கரையைப்பற்றிக் கிடத்தல், பர்வதங்களைப்பற்றிக் கிடத்தல் செய்யக்கடவது ; இவனும், கடலையும் மலையையும் விடான்; "திருமாலிருஞ்சோலை மலையே திருப்பாற்கடலே.' (செப்பன்ன) விலக்ஷமான பண்டமிட்டு வைக்கும் செப்பு அவன் ; அவன்றன்னையடக்கும் செப்பு இவள் முலைகள். " சுடர்வான் கலன் பெய்ததோர் செப்பினைத் திருமங்கை

துள்ளான்" என்னக்கடவதிறே. செப்புப்போலே ஸந்நிவேச மென்னவுமாம். (மென்முலை) விரஹஸஹமன்றிக்கேயிருக்கை. (செவ்வாய்) அவனைத் தனக்காக்கிக்கொள்ளும் ஸ்மிதம். அந்த முலையிலே யிருந்து அநுபவிக்கும் ஜீவநம். (சிறுமருங்குல்) அதரத்தை புஜிக்கும்போது துணுக்கோடே யிருக்க வேண்டி யிருக்கை. (சிறுமருங்குல்) மேலும் கீழுங்கொண்டு "இடையுண்டு" என்று அறியுமபடி பயஸ்தாநமாயிருக்கை. (நப்பின்னை நங்காய்) பூர்ணையானவளே. பூர்த்தியாகிறது - அநுக்த ஸௌந்தர்யஸமுச்சயம்.

---

மணாளனை." (மென்முலை) விரஹஸஹமான முலைபடைத்தாளாகிலிறே இழந்திருக்கலாவது, அவனுணரவும் வினவவுமுள்ள விளம்பம் பொறுதமுலை.

(செவ்வாய்) அம்முலையிலே வர்த்திப்பார் நுகருங்கனியும் தேனும்; "தொண்டையம் செங்கனிவாய்நுகர்ந்தான்" என்னும்படியே. (செவ்வாய்) க்ருஷ்ணனையுந் தனக்காக்கிக் கொண்ட அதரமும் ஸ்மிதமும். கோவைவாயாள் பொருட்டு, தளவேழ்முறுவல் பின்னைக்காய் - இவ்வதரமும் முறுவலும் புஜிக்கைக்கிறே ஏறுகள்பொருதது. "காந்தஸ்மிதா" "ஜகத் ஸசைலம் பரிவர்த்தயாமி." அவன் நெஞ்சை வருத்துமது என்னம்பாலே யென்னில்; நாட்டையழிப்பனென்று கலங்கப்பண்ணுவது இவ்வதரமும் முறுவலுமிறே. "ஈஷத்தந்மய பாஸ்யாமி ரஸாயநமிவோத்தமம்" என்றிருக்குமவனைப் பெற்றால் விடுமோ. (செவ்வாய்) செம்பவளத்திரள்வாயன் தோற்ற வாய். (சிறுமருங்குல்) அம்முலையிலேயிருந்து பக்வ பலத்தை புஜிப்பார்க்கு ஸுகமாயிருக்கவொண்ணாதபடியிருக்கிறதோ! முடிகிறதோ! என்று துணுக்கென்னப்பண்ணும் பயஸ்தாநமும், ஸந்தேஹஸ்தாநமும். மேலுங் கீழுங்கொண்டு நடுவுண்டு என்று அநுமிக்குமத்தனை; இதொரு நிராச்ரய ஸ்திதி யிருக்கிறபடி! "ஒசிந்த நுண்ணிடைமேல் கையை வைத்து." (நப்பின்னைநங்காய்) அநுக்தஸௌந்தர்யஸமுச்சயம். சொல்லிச் சொல்லாத ஸௌந்தர்யங்களெல்லாவற்றாலும் பூர்ணையானவளே. (நங்காய்) ஆய்ப்பாடி வளர்ந்த நம்பி யினுடைய பூர்த்திக்கும் அடியான பூர்த்தியையுடையவளே.

161. (திருவே) "ஒசிந்தவொண்மலராள்" என்னுமா போலே ஸம்ச்லேஷத்தாலே வந்த துவட்சி. (துயிலெழாய்) நீயுணர்ந்து எங்கள் ஸத்தையையுண்டாக்காய். (திருவே துயிலெழாய்) பிராட்டியைப்போலே, ஆச்ரிதைகளான எங்

(திருவே) "ச்ரத்தயாதேவோதேவத்வமச்நுதே" என்னும்படியாயிருக்கை. அழகு அவளாலே; குணங்கள் அவளாலே; மேன்மை அவளாலே; நீர்மை அவளாலே; நிரூபித்தால், அடங்கலும் அவள்தோயலாயிருக்கும். "பின்னை நெடும்பணைத்தோள் மகிழ்பீடுடை" "செப்பன்னமென்முலை" என்று தொடங்கி இச்சுழிகளிலே யகப்பட்டவன் தப்பி ஏறுனிறே நம்கார்யம்செய்வது. (திருவே) இனி அவ்வருகில்லை யென்னும்படி யாதொரு பதார்த்தம் ஸர்வோத்க்ருஷ்டம், அதுக்கு வாசகசப்தம் இதுபோலே. ஸர்வாதிகனானவன் றனக்கும் ஏற்றஞ்சொல்லும்போது இச்சப்தமிட்டாய்த்துச் சொல்லுவது. "கச்ச்ரீச்ச்ரீய:" "ச்ரீயச்ரீய:" "திருவுக்குந் திருவாகிய" என்றும் சொல்லக்கடவதிறே. "யஸ்யா:கடாக்ஷணம்" இத்யாதி. உதாரவாக்குக்களாகிறார் - திருமங்கையாழ்வாரும், ஆளவந்தாரும், ஆழ்வானும், பட்டரும். (திருவே) உன்னாலே அவனுக்குப் பெருமையுண்டாம்படியான ஏற்றமுடையவளே. (திருவே துயிலெழாய்) அவள் பேர் படைத்தால், செய்வதும் அவளைப்போலே யிருக்கவேண்டாவோ. அவளுடைய வாசகசப்தத்தை உனக்குச்சொல்லும்போது தேஹகுணங்களும் ஆத்மகுணங்களுமுண்டானாலும், பத்துமாஸம் ஆச்ரிதார்த்தமாக உறங்காதிருந்த அவள்படி உனக்கும் உண்டாகவேணுங்காண். (திருவே துயிலெழாய்) பெண்ணின் வருத்த மறியாதவனைப்போலே யுறங்கவாமோ ஸஜாதீயையாய்ப்பிறந்த வுனக்கு. நீயுணர்ந்தெழுந்து எங்கள் ஸத்தையை உண்டாக்காய்.

பி. 161—திருவே-ஸம்போக ஸ்ரீயை உடையவளே. உக்கமும் தட்டொளியும் உன்மணாளனையும்தந்து என்று அந்வயம். நீதரும் க்ருஷ்ணனே எங்களுக்கு உகப்பு-பிராட்டியின் ஸௌந்தர்யாதிகள் இடக்க, ஐயர் செய்துவைத்த விவாஹம் என்று சக்ரவர்த்தித் திருமகன் உகக்குமாபோலே.

களுக்காக உணரவேண்டாவோ; ஆச்ரிதர்க்காகவன்றோ பத்துமாஸம் உறங்காதிருந்தது. எழுந்திருந்து உங்களுக்குச் செய்யவேண்டுவ தென்னென்ன; (உக்கமும் இத்யாதி) உக்கம்-ஆலவட்டம், தட்டொளி-கண்ணாடி. பறையென்றுமாம். (உன்மணாளனை) உன்புருவம் நெறித்த விடத்திலே கார்யஞ் செய்யும்படி பவ்யனானவனை. உக்கத்தோபாதி அவனையும் இவள் தரவேணுமென்கை. உன்மணாளனை யிப்போதே யெம்மை நீராட்டு என்றுமாம். (இப்போதே) பிற்றைப்போதைக்கு இராதஸங்கனை. (எம்மை) "ஏஹிபச்யசரீராணி" (162) என்று விரஹம் தின்றவுடம்பைக்

---

நான் உறங்குகிறேனல்லேன், அவனையிடுவித்து உங்களுக்குத் தருமவை மநோரதிக்கிறேனித்தனை, நான் எழுந்திருந்து செய்யவேண்டுவது சொல்லுங்கோளென்ன; ஆகில் அவற்றைக் கேளென்கிறார்கள் (உக்கமும் தட்டொளியும்) ஆலவட்டமும், கண்ணாடியும். நோன்புக்கு வேண்டுமுபகரணங்களுக்கெல்லா முபலக்ஷணம். (உன்மணாளனை) இவற்றோபாதி உனக்கு உபகரணகோடியிலேயாய், தன்கார்யம் உன் புத்யதீநமாம்படி யிருக்கிறவனை. நீ புருவம் நெறித்த விடத்தே கார்யஞ்செய்யும்படி பவ்யனானவனை.

(இப்போதே) அநந்தரக்ஷணத்தில் ஊராருமிசையார்கள், நாங்களும் ஜீவியோம். (எம்மை) பிற்றைப்போதைக்கு இராத வெங்களை. (எம்மை) "ஏஹிபச்யசரீராணி" என்று வசநஞ் சொல்லவேணுமோ! என்று விரஹம் தின்ற வுடம்பைக் காட்டுகிறார்கள். "எம்மை" என்ற இந்தப் பன்மையாலே-"பேய்ப்பெண்ணே" என்னுதல், "பிள்ளாய்" என்னுதல், "நாயகப்பெண்பிள்ளாய்" என்னுதல் எத்தனையிழிச்சம் சொன்னார்களேயாகிலும் பலதசையிலேயெல்லாருமொத்திருக்கிறபடி. எல்லார்க்கும் உபாயமொன்றானாற்போலே உபேயமுமொன்றாயிருக்கை. ஒருத்தன் திருவடிகளைப் பலர் ஆச்ரயித்தால் ஸுக்ருத தாரதம்யத்தாலே விளம்பமுண்டானாலும் பலம் எல்லார்க்கும் ஒத்திறே யிருப்பது. எம்பெருமான் பக்கலிலே ந்யஸ்தபரனானால், தேஹயாத்ரையிலே அல்பம் ஸத்

காட்டுகிறார்கள். (எம்மை) "பேய்ப்பெண்ணே" என்றும், "நாயகப் பெண்பிள்ளாய்" என்றும் தங்களில் தாங்கள் சொல்லுமித்தனை, பேற்றில் வந்தால் எல்லாரு மொத்திருப்பர்கள் என்றுமாம். (எம்மை) எங்களையும் அவனையுங்கூட முழுக்காட்டவேணும் என்றுமாம். (நீராட்டு) "தாரா:பித்ருக்ருதா இதி" (163) என்னுமாபோலே இவர்களுகப்பது இவள்தந்த க்ருஷ்ணனென்று. பெருமாள், பிராட்டியுடைய ஸௌந்தர்யாதிகள் கிடக்க ஐயர் பண்ணிவைத்தவிவாஹ மென்று உகப்பர்; அதுபோலே, க்ருஷ்ணன்பக்கல் ப்ராப்தியும் போக்யதையும்கிடக்க இவள்தந்த க்ருஷ்ணனென்று உகப்பர்கள். ... .... ... ... .... ௨௦

---

தர்க்கும், அவனையொழியச் செல்லாதார்க்கும், இங்குள்ள வைஷம்யமொழியபலதசையிலேஒப்புச்சொல்லாநின்றதிறே.

(உன்மணாளனை எம்மை நீராட்டு) எங்களையும் அவனையுங்கூட முழுக்கூட்டவேணும். (நீராட்டு) "தாரா:பித்ருக்ருதா இதி" என்று-பெருமாள், பிராட்டியுடைய ஸௌந்தர்யங்களெல்லாம்கிடக்க, "ஐயர்செய்வித்தவிஷயம்" என்று பிராட்டியை ஆதரித்தாற்போலே, க்ருஷ்ணனை நீதந்த விஷயமென்றுய்த்து நாங்கள்விரும்புவது. (உன்மணாளனை எம்மை நீராட்டு) "ஏஷப்ரஹ்மப்ரவிஷ்டோஸ்மிக்ரீஷ்மேசீதமிவஹ்ரதம்" "அப்பன் திருவருள் மூழ்கினள்." எங்கள்விடாயுங் கெட்டு, எங்களையெல்லாருங் கொண்டாடும்படி பண்ணு. (திருவே-எம்மைநீராட்டு) எங்களையும் அவனையு மொருதுறையிலே சேராதபோது நீ திருவாகைக்கு உபாயமுண்டோ. "ஶ்ரீயதே-ச்ரயதே" என்றிறே-ஶ்ரீயாய்த்து ஸ்வதந்த்ரரோடு பரதந்த்ரரோடு வாசியில்லை, இவள்கையார்த்திருக்கவேணும். (உன்மணாளனைஎம்மை) உனக்கு ஒருக்காலெழுதித் தந்து ப்ரதிக்ஷணம் எழுத்துவாங்குகிறவனை. "நீராட் டமைத்து வைத்தேன்" என்று உனக்கும் அவனுக்குங் கூடக்குளிக்கச் சமைத்த நீரிலே எங்களையுங்கூட முழுக்கூட்டு. (உக்க மித்யாதி) எங்கள் ச்ரமத்தை ஆற்றும்பரிகரத்தையும, எங்கள் வைலக்ஷண்யத்தை நாங்கள் கண்டுகக்கும் பரிகரத்தையுங்

162. ஸ்வாபதேச வ்யாக்யாநம். இருபதாம்பாட்டு. (முப்பத்துமூவ ரித்யாதி) இப்பாட்டில், மீளவும் எம்பெருமானையெழுப்பி, அங்கு மறுமாற்றங்காணமையாலே நப்பின்னைப் பிராட்டியை யெழுப்பி, வந்தகார்யத்தை அறிவிக்கிறார்கள். வ்யா.—(முப்பத்துமூவர்) முப்பத்து மூவரான, அபரிமிதஸங்க்யாகரான. இத்தால்-துர்லபத்வஞ் சொல்லுகிறது. (அமரர்க்கு) ஜ்ஞாநஸங்கோச மில்லாதவர்களுக்கு. "ஸந்தமே நம்ததோவிது:" என்னைக்கடவதிறே. (முன்சென்று) அவர்களுக்கு ப்ரக்ருதி ஸம்ஸர்க்கத்தாலேஜ்ஞாநஸங்கோசம் வருவதற்கு முன்னே ரக்ஷகனை தான் அவதரித்து நின்று. (கப்பம் தவிர்க்கும்) அவர்களுக்கு ஜ்ஞாநஸங்கோச நிபந்தமாய்வரும் பீதியைப் போக்கடிக்கிற. (கலியே) ஸாமர்த்யத்தை யுடையவனே. (துயிலெழாய்) நீ நித்ரையில் நின்றும் எழுந்திருக்கவேணும். (செப்பமுடையாய்) ஆச்ரிதர் தன்னையநுபவிக்கும்படி தான் பாங்காயிருக்கிறவனே. (திறலுடையாய்) அநாச்ரிதர்க்குக் கிட்டவொண்ணாதவனே. (செற்றார்க்கு வெப்பங்கொடுக்கும் விமலா துயிலெழாய்) பாகவத விரோதிகளுக்கு நடுக்கத்தைக் கொடுக்கும் சுத்தியோகமுடையவனே. இத்தால்-பயநிவ்ருத்தி மாத்ரமன்றிக்கே, பயஹேதுநிவ்ருத்தியும் ரக்ஷககார்ய மென்றதாய்த்து. (துயிலெழாய்) நித்ராப்ரதமான படுக்கையில்நின்றும் எழுந்திருக்கவேணும். அங்கு மறுமாற்றம் பிறவாமையாலே அவனையெழுப்புகைக்காக நப்பின்னைப் பிராட்டியை யெழுப்புகிறார்கள் (செப்பன்னமென்முலையித்யாதி) விஷயக்ராஹகமாய் விஷயவிரஹாஸஹிஷ்ணுவாயிருக்கிற பகவத்விஷய பக்தியையும் அவனுக்குமிகவும போக்யமான பரமபக்தியையும் விஷயாந்தர வைராக்யத்தையு முடையவளாய், நப்பின்னை என்கிற திருநாமத்தையுமுடையையாய், ப்ராப்யத்வ புருஷகாரத்வோப யுக்தகல்யாணகுணபூர்ணையானபெரியபிராட்டியாரே நீ படுக்கையில் நின்று மெழுந்திருக்கவேணும். நானெழுந்

தந்து எங்கள் விரஹதாபமாறும்படி வாசத்தடத்திலேஅவகாஹிக்கும்படி பண்ணவேணும். ஜ்ஞாநதர்சந ப்ராப்திகளைப் பண்ணித் தரவேணுமென்றபடி ... ... ௨௦

திருந்து வுங்களுக்குச் செய்யவேண்டுவ தென்னென்ன (உச்கமுமித்யாதி) உக்கம்-ஆலவட்டம். தட்டொளி-கண்ணாடி-ஸ்வாபதேசத்தில், கைங்கர்யத்தில் அஹங்காரமமகார நிவ்ருத்தியும் யதாவஸ்திதஸ்வரூபஜ்ஞாநமும் இவ்விரண்டையுங்கொடுத்து உனக்குபவ்யனை ஈச்வரனை இந்தரக்ஷணத்திலே மற்றைரக்ஷணத்துக்குப்பிழையாத வெங்களை ஸம்ச்லேஷிப்பி யென்கிறார்கள். உன்மணாளனையும் தந்து நீராட்டு என்கிறார்க ளாகவுமாம். இந்தயோஜனையில் பிராட்டிக்கு எம்பெருமான் அத்யந்த விதேயனென்னு மிடம் தோற்றுகிறது. .... ... ... ... .... உ௦

## இருபத்தோராம் பாட்டின் அவதாரிகை

**மூவாயிரப்படி**:—163. இருபத்தோராம்பாட்டு. நப்பின்னைப்பிராட்டி, போகத்திலே வந்தால் நானுமுங்களிலே யொருத்தியன்றோ,நாமெல்லாருங்கூட க்ருஷ்ணனை அர்த்திக்க வாருங்கோளென்ன; அவன்குணங்களிலே தோற்றார் தோற்றபடி சொல்லி யெழுப்புகிறார்கள்.

---

**ஆறுயிரப்படி** :-இருபத்தோராம்பாட்டு. புருஷகாரபூதையான நப்பின்னைப்பிராட்டியையெழுப்ப ; அவள் உணர்ந்தெழுந்திருந்து நான் உங்களிலேஒருத்தியன்றோ,உங்கள்காரியங்களெல்லா மழகிதாகச்செய்து தருகிறோம், நம்மைப்பற்றினார்க்கு ஒருகுறைகளுண்டோ, நாமெல்லாருங்கூடி க்ருஷ்ணனையெழுப்பி அர்த்திக்கவாருங்கோளென்ன; அவன்குணங்களிலே தோற்றார்தோற்றபடியே சொல்லி, உகவாதார் அம்புக்குத் தோற்றுவந்து விழுமாபோலே, " குணைர்தாஸ்யமுபாகத:" என்ற இளையபெருமாளைப்போலே குணங்களுக்குத் தோற்றுவந்தோமென்று சொல்லி க்ருஷ்ணனை எழுப்புகிறார்கள். உகவாதார் உன்வீரத்துக்குத் தோற்றாற்போலே,உகந்த நாங்கள் உன் நீர்மைக்குத் தோற்றபடி.

---

பி. 163-தோற்றார் தோற்றபடி – தோற்றாராய்த் தாங்கள் தோற்றபடியை.

*ஏற்றகலங்களெதிர்பொங்கிமீதளிப்ப*
*மாற்றாதேபால்சொரியும்வள்ளல்பெரும்பசுக்கள்*
*ஆற்றப்படைத்தான்மகனேயறிவுறாய்*
*ஊற்றமுடையாய்பெரியாயுலகினில்*
*தோற்றமாய்நின்றசுடரேதுயிலெழாய்*
*மாற்றாருனக்குவலிதொலைந்துன்வாசற்கண்*
*ஆற்றாதுவந்துன்னடிபணியுமாபோலே*
*போற்றியாம்வந்தோம்புகழ்ந்தேலோரெம்பாவாய்.*

பதவுரை:—ஏற்ற—சாந்தபாலை யேற்ற, கலங்கள்-கலங்களெல்லாம், எதிர்-எதிரே. பொங்கி—, மீது-மேலே, அளிப்ப-வழியும்படியாக, மாற்றாதே - இடைவிடாமல், பால்-பாலை, சொரியும்—சொரியாநிற்பனவாய், வள்ளல்-பெண்களும் பேதைகளும் அணையலாம்படியான ஔதார்யத்தையுடையனவாய், பெரு-ஸ்ரீசத்ருஞ்ஜயனைப்போலே பருத்திருப்பனவாய், ஆற்ற-எண்ணில்லாதனவான. பசுக்கள்-பசுக்களை, படைத்தான - படைத்த நந்தகோபருடைய, மகனே-பிள்ளையானவனே, அறிவுறாய் - திருப்பள்ளி யுணரவேணும்; ஊற்றமுடையாய்-வேதத்தால் பரதிபாதிக்கப் படுகையாகிற திண்மையையுடையனாய், பெரியாய்-அநந்த வேதத்தாலு மறியப்படாமையாகிற பெருமையையுடையனாய் உலகினில்-லோகத்திலே, தோற்றமாய்நின்ற - ஆச்ரிதபக்ஷபாதம் விளங்கும்படி நிற்கிற, சுடரே-தேஜோரூபனானவனே, துயிலெழாய்- திருப்பள்ளி யுணரவேணும்; மாற்றார் - சத்ருக்களானவர்கள், உனக்கு-உன்னுடைய வலிமையைக்கண்டு, வலிதொலைந்து - தங்கள்வலிமாண்டுபோய், உன்வாசல்கண் - உன்வாசலிலே, ஆற்றாது - தங்கள் எளிவரவை நினைத்து ஸஹிக்கமாட்டாமல், உன் தேவரீருடைய, அடி-திருவடிகளிலே வந்து—, பணியுமாபோலே-விழுமாபோலே, யாம்-தாஸபூதரான நாங்கள், புகழ்ந்து-ஸ்துதித்து, போற்றி—மங்களாசாஸநம் பண்ணிக்கொண்டு, வந்தோம் - வந்து ஆச்ரயித்தோமென்கிறார்கள்.

164. வ்யா.—(ஏற்றகலங்கள் எதிர்பொங்கி மீதளிப்ப) ஏற்றகலங்களெல்லாம எதிரே பொங்கி வழியும்படி.

---

வ்யா.—(ஏற்றகலங்கள்) உன்னை ஆராக நினைத்து உறங்குகிறாய், உன்னை யுணராய். க்ஷீராப்திசாயியாகவாதல்,

கலமிடாதார் தாழ்வே, இட்ட கலங்களெல்லாம் நிறையும்; ஏலாதகலங்கள் நிறையாதொழிகிறது பாலின்குறையன்றே. (ஏற்றகலங்கள்) பெருமை சிறுமையில்லை; கடலைமடுக்கிலும் நிறைக்குமித்தனை. இவையும் கிருஷ்ணன் படியா யிருக்கை. அர்த்தியாதார் குற்றமத்தனைபோக்கி அவன் பக்கல் குறையில்லை, ஸ்வீகாரமே யமையுமிறே அவனுக்கு.

---

சக்ரவர்த்திப் பிள்ளையாகவாதல் நினையாநின்றாய், ஸ்ரீநந்த கோபர்மகனாக நினைக்கிறாயில்லையே யுன்னை. ஸ்ரீநந்தகோபர் ஆர்ஜித்த ஐச்வர்யத்தைச் சொல்லுகிறார்கள்;—ஸ்ரீநந்தகோப ருடைய சௌர்ய வீர்யங்களும், தார்மிகத்வமும், புஜபலமு மிறே கீழ்ச்சொல்லிற்று. (ஏற்றகலங்கள்) இட்ட இட்ட கலங்களெல்லாம் எதிரேநிரம்பிவழியும்படி அநுஸந்தமாகப் பால்சொரியக்கடவனவா யிருக்கும் பசுக்கள். (ஏற்றகலங் கள்) கலமிடுவார் தாழ்வே. இட்ட கலம் நிறையாததில்லை. நாலாயிரம், இரண்டாயிரம் என்று ஒரு ஸங்க்யையில்லை. (ஏற்றகலங்கள்) கலத்தில் சிறுமை பெருமையில்லை, கடலை மடுக்கிலும்நிறைக்குமத்தனை. ஏலாதகலங்கள்நிறையாதொழி கிறது பாலின் குற்றமன்றிறே; கொடுப்பார்க்கும் ஒருகொள் வார் தேட்டமாயிறே யிருப்பது; இவையும், க்ருஷ்ணன் படியா யாய்த்திருப்பது. அர்த்தியாதார் குற்றமேயாய் அவன்பக்கல் குறையில்லையா யிருக்குமாபோலே "உதாரா:" என்று-அர்த்தித்த பாத்ரங்களைக்கொண்டாடியிறே இவன் உபகரிப்பது. அர்த்தித்வந்தான் உபாயமாகாதோவென்னில்; இவனுடைய தாதர்த்யம் ஸ்வரூபத்திலே புகுமாபோலே இது வும் ஸ்வரூபத்திலே புகுமித்தனை, உபாயத்திலே புகாது. அங்ஙனேயாகில் அர்த்தித்வந்தான் வேணுமோவென்னில்; முக்தனானாலும் இல்லையாகில் போகந்தான் ப்ராப்யமாக மாட்டாது. ஸம்ஸாரத்திலே போகம் ஸாவதியாகையாலே அர்த்தித்வமும் அவ்வளவிலே பர்யவஸிக்கும்; அங்கு நித்ய

---

பி. 164-இவையும் க்ருஷ்ணன் படியாயிருக்கை—பசுக்களும் (கலங்களல்ல) க்ருஷ்ணஸ்பர்சத்தாலே பால் பொங்கிவழியும்படி யிருக்கை. உள்ளுச்செல்லுகிறது-அலாபக்லேசம்.

(மாற்றாதே பால்சொரியும்) முலைக்கடுப்பாலே கலமிடுவாரில்லை யென்று அதுதவிராது. (வள்ளல்) சிலர்க்கு உபகரித்ததாக விருக்கை யன்றிக்கே தன்கார்யம் செய்ததாக வுபகரிக்கை. க்ருஷ்ணனைப்போலே பெண்ணுக்கும் பேதைக்கு மணைக்கலாம்படி பவ்யனாயிருக்கை யென்றுமாம். (பெரும்

---

மாதையாலே அது உருவச்செல்லும் நித்யாநபாயினியானவளும் "இறையும்-அகலகில்லேன்" என்றிறே அங்கிருப்பது. "மருந்தே நங்கள் போகமகிழ்ச்சிக்கென்று பெருந்தேவர் குழாங்கள் பிதற்றும்பிரான்." ஸ்தாபச்யந்தியிறே அவ்விடம். "ஸதா இத்யேவ வாதிந:" என்றதிறே. அவதரித்தவிடத்திலும் "இரவுநன்பகலும் துதிசெய்யநின்ற" என்னக்கடவதிறே. (எதிர்பொங்கி மீதளிப்ப) முலைக்கண்ணின் பெருமையாலே ஒருக்கால் தொட்டுவிட்டாலும் ஒருபீறிலே கலத்தைநிறைத்து வழிந்துபோகாநின்றாலும் முலைக்கடுப்பாலே மேலே மேலே சொரியும்.

(மாற்றாதே பால்சொரியும்) இட்டகலம் நிரம்பிற்று, கலமிடுவாரில்லையென்றுக் கண் அடையாது, ஊற்றமாறாதே பால்சொரியுமத்தனை. "பூயஏவமஹாபாஹோ ப்ரஹ்ருஷ்டோ வாக்யமப்ரவீத் இதஞ்சச்ருணு மைத்ரேய" என்று சொல்லக் கடவதிறே. ஸ்ரீமைத்ரேயபகவான் கேளா திருக்கச்செய்தே நல்லவர்த்தம் இவனிழக்கவொண்ணா தென்று — "நித்யைவேஷா ஜகந்மாதா" என்று ரிஷிதான் சொன்னானிறே.

(வள்ளல் பெரும்பசுக்கள்) சிலர்க்கு உபகரித்ததாயிருக்கையன்றிக்கே தன்கார்யஞ் செய்ததாக வுபகரிக்கும்படி உதாரஸ்வபாவமாயிருக்கை; "வேண்டிற்றெல்லாந்தரும் கோதில் என்வள்ளல்" என்கிற க்ருஷ்ணனைப்போலே. இத்தை நினைத்திறே "உதார:" "ஸந்தர்சயந்" என்று ஆளவந்தார். சிலர் அர்த்திபாதி நக்கச்செய்தேயிறே "வீடுமின்முற்றவும்" என்றருளிச்செய்தது; அத்தைநினைத்திறே ஸ்ரீ ரதாகவிகள் "அருள்கண்டீரிவ்வுலகினில் மிக்கதே" என்றது. வண்சடகோபரான இவரைப்போலே அருளமாரியானகயாலே திருமங்கையாழ்வாரும், "முந்துறவுரைக்கேன்"

பசுக்கள்) க்ருஷ்ண ஸ்பர்சத்தாலே வளருகையாலே ஸ்ரீசத்ருஞ்ஜயனைப்போலேயிருக்கை. (ஆற்றப்படைத்தான்) "கழியாருப் கநசங்கம் கலந்தெங்கும் நிறைந்தேறி - வழியாரமுத்தீன்று வளங்கொடுக்கும் திருநறையூர்." அதாவது-தொகையின்றிக்கே யிருக்கை. (படைத்தான் மகனே) அவர்க்கு

"சொல்லுகேன்வம்மின்" "நமருமுரைமின்" என்றருளிச்செய்தார். (வள்ளல்) க்ருஷ்ணனைப்போலே, பெண்ணுக்கும் பேதைக்கு மணையலாம்படி தன்னைத் தாழவிட்டுக் கொடுத்துக்கொடு நிற்கும் பவ்யதையைச் சொல்லுகிறது. (பெரும் பசுக்கள்) க்ருஷ்ணஸ்பர்சத்தாலே வளருகிறவை யாகையாலே அவன்றன்னோடொக்கப் பெருத்திருக்கை. "பெருங்கண்ணன்," "மஹாத்மந:" "பேரோதும் பெரியோர்." (வள்ளல் பெரும்பசுக்கள்) "சிறுமாமனிசர்" என்னுமாபோலே.

(ஆற்றப்படைத்தான்) மிகவும் படைத்தான். "குணநாமபரோமஹாந்" "குணநாமயுதைகமம்சம்" "யதாரத்நாநிஜலதேரஸங்க்யேயாநிபுத்ரக" "ஈறிலவண்புகழ்" "ஸமஸ்த கல்யாணகுணம்ருததோததி:" "அகிலஹேயப்ரத்யநீக" "அபரிமிதகுணகணௌகமஹார்ணவ" "வர்ஷாயுதைர்யஸ்ய குணநசக்யா:" என்று க்ருஷ்ணகுணங்களுக்கு எல்லை காணுதல், "கண்ணபிரான் கற்றகல்வி" என்று க்ருஷ்ணன் தீம்புக்கெல்லை யுண்டாதல், "அமர்யாத:க்ஷுத்ர:" என்று - ஸம்ஸாரிகள் அநாத்மகுணங்களுக்கு ஸங்க்யையுண்டாதல், திருநறையூரில் திருவீதிகளில் முத்துக்களுக்கு எண்ணுண்டாதல் செய்யிலாய்த்துத் திருவாய்ப்பாடியில் பசுக்களுக்கு எண்ணுண்டாவது. [கழிஆருங்கநசங்கம்] கர்ப்பிணிகளைப் போலே. [கலந்தெங்கும் நிறைந்தேறி] பெரிய திருநாளில் ஸர்வதோதிக்கமாக வந்தேறுமாபோலே. [வழியாரமுத்தீன்று] சிலர்தார்மிகர் மநுஷ்யர்க்கு ஸஞ்சரிக்கைக்குறுப்பாகக் குறுந்தெருவும் நெடுந்தெருவுமாகக்கண்டு வைப்பார்களானால், இவை வழிபோக வொண்ணாதபடி முத்தாலே நிரப்பிவைக்கும். (ஆற்றப்படைத்தான் மகனே) ஸ்ரீநந்த கோபர்க்கு ஸம்பத்து ஸ்வயமார்ஜிதமாகையாலே தான்

ஆர்ஜித்துவந்தது, இவன் பிறந்து படைத்த ஸம்பத்து. இத்தால் - "பதிம்விச்வஸ்ய" (164) என்கிறதிற்காட்டிலும் ஸ்ரீநந்தகோபர் ஸம்பத்துக்கு இட்டுப்பிறந்த வேற்றம். பரமபதம் போலேயும் நாராயணத்வம்போலேயும் தான்றோன்றியன்றேயிது. (அறிவுறாய்) ஸர்வஜ்ஞனானவனை உணர்த்த வேண்டியிறே உள்ளுச்செல்லுகிறது. கைப்பட்ட பெண்களைச் சரக்கிலேவாங்கிக் கைப்படாதவர்களைக் கைப்படுத்து

---

றோன்றியாயிருக்கும், இவர் பிறந்து படைத்ததாகையாலே அடியுடைய ஐச்வர்யம். "பதிம்விச்வஸ்ய" என்கிற ஐச்வர்யத்திற் காட்டிலும் ஸ்ரீநந்தகோபருடைய ஐச்வர்யத்துக்கு இட்டுப்பிறந்தவனே. பரமபதம்போலேயும் நாராயணத்வம் போலேயும் ஸ்வதஸ்ஸித்தமன்றே கோபகுலமும் கோபாலத்வமும். நந்தன்பெற்ற ஆனையனுக்கல்லது ஸித்தியாதே.

(மகனே அறிவுறாய்) உன்னைச்வர்யமிருந்தபடியாலே எங்களை நினைக்கைக்கு விரகில்லை, ஐச்வர்யச்செருக்காலே ஆர்த்தத்வநிசெவிப்பட்டதில்லையே யாகிலும் உன்பிறவியை புத்திபண்ணி எங்களுக்காக உணராய்.உனக்கும் எங்களுக்கு முண்டான ஸம்பந்தத்தாலே பெறில்பெறுமத்தனையென்று "உன்றன்னைப் பிறவிபெறுந்தனை"என்றருளிச்செய்தாளிறே. (மகனே அறிவுறாய்) பரமபதத்திலேவந்தோமோ, வஸிஷ்டாதிகள் நியமிக்கும் வாசலிலே வந்தோமோ. (அறிவுறாய்)இவனுக்கு உணர்த்திபுண்டானாலும் பலத்தில் விளம்பமில்லை, வ்யபிசாரமுமில்லையென்றிருக்கிறார்கள்.அறிவியாதபோதிறே இத்தலைக்கு இழவும் வ்யஸநமும், அறிவித்தால் கார்யஞ்செய்யாதபோது இழவும் அவத்யமும் அவனதாமித்தனையிறே. அறிவுடையார் கார்யம் ஒருபரமசேதநன்கையதிறே. (அறிவுறாய்) ஸர்வஜ்ஞனையும் உணர்த்தவேண்டும்படியிறே உள்ளுச்செல்லுகிறபடி. கைப்பட்டபெண்களைச் சரக்கிலே வாங்கிக் கைப்படாதவர்களைக் கைப்படுத்துகைக்காக உண்டான உபாயாந்ய பரதையாலே எழுப்புகிறார்கள்.

வாங்கக் குடம்நிறைக்கும் வள்ளல் பெரும்பசுக்கள். ஊர்க்காகவில்லையோ, நாம்பிறந்து படைத்தோமாகச் சொன்

கைக்காக வுண்டான உபாயாந்யபரதையாலே யெழுப்பு கிறார்க ளாகவுமாம். (ஊற்றமுடையாய்) த்ருடப்ரமாண ஸித்தனுகை.

165. (பெரியாய்) "அப்ராப்யமநஸாஸஹ" (98) என்றும்,"யஸ்யாமதம்தஸ்யமதம்"(165)என்றும்-அந்தப்ரமாணங்களுக்கும்தன்னுடைய அவதிகாணவொண்ணுதிருக்கை.

---

ஞர்கள், இதொரு ஏற்றமோ வென்று பேசாதே கிடந்தான்; இனி யவ்வருகில்லையென்னும்படியான உத்கர்ஷங்களைச் சொல்லி எழுப்புகிறார்கள் (ஊற்றமுடையாய்)ப்ரமாணதார்ட்யத்தால்வந்த ப்ரமேயத்தினுடைய ஸ்தைர்யத்தைச் சொல்லுகிறது. புருஷபுத்திப்ரபாவங்க ளானவற்றாலன்றிக்கே, அபௌருஷேயமாய் நித்யநிர்த்தோஷமான வேதத்தாலே ப்ரதிபாதிக்கப்படுகையாலே த்ருடப்ரமாணஸித்தனுயிருக்கை. அப்ரமாணமென்னுதல்,அநுமாநப்ரமாணமென்னுதல்செய்யவொண்ணுது, வசநாபாஸங்களாலும் உக்த்யாபாஸங்களாலும் அழிக்கவொண்ணுதிருக்கை. "ஸர்வேவேதாயத்பதமாமநந்தி, ஸர்வேவேதாயத்ரைகம் பவந்தி" "நதாஸ்மவசஸாம் ப்ரதிஷ்டா" "வசஸாம்வாச்யமுத்தமம்" "நாராயணபரோ வேத:" "உளன்சுடர்மிகுசுருதியுள்" "வேதமுதல்வன்" "நான்மறைகள்தேடியோடுஞ்செல்வன்;" "நம்முடைநாயகனே" என்று யசோதைப்பிராட்டி சீராட்டுகிற க்ருஷ்ணனிறே. (பெரியாய்) அந்த ப்ரமாணங்க ளெல்லாம் சொன்னுலும் தன்னுடைய அவதிகாணவொண்ணுதபடி அவ்வருகு பட்டியிருக்கிறவனே."யதோவாசோநிவர்த்தந்தே அப்ராப்யமநஸாஸஹ" என்றும், "யஸ்யாமதம் தஸ்யமதம்" என்றும் "அவிஜ்ஞாதம்விஜாநதாம்" என்றும் ப்ராமணங்களுக்கு இவ்வளவென்ன வொண்ணுதபடி யிருக்கை.

(உலகினில் தோற்றமாய்நின்ற) மேன்மைக்கு எல்லை காணவொண்ணுதபடி யிருக்குமென்று ஒலைப்புறத்திலே

---

பி. 165-தன்பேருயிருக்கை - ஆ யத்தில் செய்தன வெல்லாம் தனது பேருக எண்ணியிருக்கை.

(உலகினில் தோற்றமாய்நின்ற) என்று - ஓலைப்புறத்திலே கேட்டுப்போகையன்றிக்கே எல்லாரும் காணலாம்படி ஹஜாத்ஸ்வபாவனாய்க் கொண்டவதரித்து ஸகலமநுஜநயநவிஷயதாங்கதனானவனே. (சுடரே) ஸம்ஸாரிகளைப்போலே பிறக்கப் பிறக்கக் கறைபேறுகையன்றிக்கே, சாணையிலிட்ட மாணிக்கம்போலே ஒளிவிடாநிற்கை. "ஸஉச்ரேயாந்பவதி ஜாயமாந:" (166) என்றும், "மாநுஷீம்தநுமாச்ரிதம்பரம் பாவமஜாநந்த:" (167) என்றும், "நிலைவரம்பில பலபிறப்பாயொளிவருமுழுநலம்" என்றும் சொல்லக்கடவதிறே. (ஊற்றமுடையாய்) ஆச்ரிதவிஷயத்தில் பண்ணின ப்ரதிஜ்ஞையை மஹாராஜருள்ளிட்டாரும் விடவேணுமென்னிலும் விடாதே முடிய நின்று தலைக்கட்டுகை. (பெரியாய்) அந்த ப்ரதிஜ்ஞா

---

கேட்டுப்போகையன்றிக்கே எத்தனையேனும் தண்ணியஸம்ஸாரிகளுக்கும் உபேக்ஷா விஷயமானலோகத்திலே அஜஹத்ஸ்வபாவனாய்க்கொண்டு ஸாதுபரித்ராணத்துக்காக "ஸம்பவாமி" என்று சொன்னபடியே அவதரித்து எல்லாரும் காணலாம்படி ஸகலமநுஜநயநவிஷதாங்கதனானவனே. (தோற்றமாய்) "ஆவிர்பூதம்" என்கிறபடியே. (சுடரே) அல்லாதார் கர்மாநுகுணமாகப் பிறக்கையாலே பிறக்கப் பிறக்க மழுங்குவர்கள் ஸம்ஸாரிகள்; அவனுக்கு அநுக்ரஹகார்யமாகையாலே பிறக்கப்பிறக்க ஒளிமிகாநிற்கும், ஜந்மஸம்பந்தத்தாலே கறையேறுகை யன்றிக்கே சாணையிலிட்ட மாணிக்கம்போலே அத்யுஜ்வலமாகை. "ஸஉச்ரேயாந்பவதி ஜாயமாந:" "மாநுஷீம்தநு மாச்ரிதம்" "பரம்பாவமஜாநந்த:" என்னும்படியான மநுஷ்யத்வே பரத்வஞ் சொல்லுகிறது. "பாவுதொல்சீர்க்கண்ணா என்பரஞ்சுடரே" என்னக்கடவதிறே.

அன்றிக்கே, (ஊற்றமுடையாய்) மஹாராஜர் "வத்யதாம்" என்றால், "நத்யஜேயம்கதஞ்சந" என்றும் தாமரையாள் சிதகுரைத்தாலும் "என்னடியாரதுசெய்யார்" என்றும்-ஆச்ரிதவிஷயத்தில் பண்ணின ப்ரதிஜ்ஞையை, "அப்யஹம் ஜீவிதம்ஜஹ்யாம்" என்கிறபடியே-தன்னையும் தன்விபூதியை

ஸம்ரக்ஷணத்தளவன்றியே யிருக்கும் பலமென்றுமாம். (பெரி யாய்) ஆச்ரித விஷயத்தில் எல்லாஞ் செய்தாலும் ஒன்றுஞ் செய்யப் பெற்றிலோம் என்றிருக்கை யென்றுமாம்; தன் பேறு யிருக்கை யென்றுமாம்; தன் பெருமைக்கீடாக ரக்ஷிக்குமவ னென்றுமாம்; (உலகினில் தோற்றமாய்நின்ற) கீழ்ச்சொன்ன ஆச்ரித பக்ஷபாதம் லோகத்திலே ப்ரஸித்த மாம்படி யிருக்கை. அதாவது-சிசுபால துர்யோதநாதிகளுக் கும் பாண்டவர்கள்பக்கல் பக்ஷபாதந்தோற்ற விருக்கை. (சுடரே) லோகத்திலே தோற்றினபின்பு நிறம் பெற்றபடி. (துயிலெழாய்) இப்போ துணராமையாலே அந்தகுணமும் மழுங்கவ்றே புகுகிறது.

யும் அழியமாறியும் விடாதே நின்று தலைக்கட்டுகைக்கீடான ஆதரத்தோடே நிற்குமூற்றத்தைச்சொல்லுகிறது.(பெரியாய்) ஆச்ரிதவிஷயத்தில்எல்லாஞ்செய்தாலும் ஒன்றுஞ்செய்யப் பெற்றிலோமென்றிருக்கையும், அதுதான்தன்பேறுயிருக்கை யும்,செய்யுமன்றுதன்பெருமைக்கீடாயிருக்கையும்விரோதித்த மஹாராஜர்தாமுங்கூட "கிமத்ரசித்ரம்" என்று கொண்டா டும்படியான பெருமை விலக்குமளவன்றிக்கே யொழிந்தால் பின்னைக்கொண்டாடு மித்தனையிறே. (உலகினில் தோற்ற மாய்நின்ற) கீழ்ச்சொன்ன ஆச்ரிதபக்ஷபாதம் உலகிலே ப்ரஸித்தமாம்படி நிற்கை. துர்யோதநன், சிசுபாலன், உதங் கன், இவர்களுட்படச்சொல்லும்படி லோகத்திலே ப்ரஸித்த மாம்படி யிருக்கை. களவு கண்டாய் கட்டுண்டாய் என்பது, வ்ருஷளபோஜநம் பண்ணினாயென்று இகழ்வது, துர்யோத நாதிகளைப் பொடிபடுத்தினாய், அர்ஜுநாதிகளை வாழ்வித்தா யென்னும்படி ப்ரஸித்தமிறே. (சுடரே) ஆச்ரித பாரதந்த்ரி யத்தால் வந்த ஔஜ்வல்யம். "இன்னார் தூதனெனநின்றான்" (நின்றசுடரே) "ஐவர்க்கருள் செய்துநின்று பார்மல்கு சேனை யவித்த பரஞ்சுடர்" என்னக்கடவதிறே.

(துயிலெழாய்) நீ யிப்போது எழுந்திராமையாலே நீ பிறந்து படைத்த ஸம்பத்தும் நீ ஆர்ஜித்த குணங்களும் மழுங்கக்கிடாய் புகுகிறது, நீ அவ்வ ஸம்பாதிக்கப்பட்ட

166. (மாற்றரித்யாதி) சத்ருக்களானவர்கள் உன் மிடுக்குக்குத் தோற்றுப் போக்கடியில்லாமே உன் திருவடிகளிலே வந்து விழுமாபோலே. மாற்றார் தங்கள் வலிமாண்டு வந்து விழுமாபோலே என்றுமாம். "மாற்றார்" என்று - சத்ருக்கள். நாராயணனுகையாலே ஸம்பந்த மெல்லாரோடு மொத்திருக்க இவனுக்கு சத்ருக்களுண்டோ வென்னில்; ஆச்ரித விரோதிகள் இவனுக்கு சத்ருக்கள். இத்தால் - அம்புக்குத் தோற்று எதிரிகள் வருமாபோலே உன் குணங்களுக்குத் தோற்றுவந்தோ மென்கை. அவர்களுக்கு முடிந்து பிழைக்கலாம், குணஜிதர்க்கு அதுக்கும் விரகில்லையிறே.

---

அருளையுடையறிவுதியே, அவை நிறம்பெறும்படி திருப்பள்ளி புணர்ந்தருளாய்.

ஆகிறது, நாமெழுந்திருக்கிறோம், நீங்கள் வந்தபடி சொல்லுங்கோளென்ன; தாங்கள் வந்த செயலறுதியிருந்த படிக்கு த்ருஷ்டாந்தபூர்வகமாகச் சொல்லுகிறார்கள் (மாற்றுரனக்கு) உனக்கு சத்ருக்களானவர்கள் உன்மிடுக்குக்குத் தோற்று, போக்கடியில்லாமையாலே வந்துவிழுமாபோலே. (மாற்றுருனக்கு) சத்ருக்களை த்ருஷ்டாந்தமாகச் சொல்லுகிற தென்னென்னில்; ஸர்வஜ்ஞனுலுங்கூட நோக்கவொண்ணாத படி அநாதிகாலம் கைகழிந்தபடி சொல்லுகிறது. "நாஸ்திக: புரா" "யானேயென்றனதே யென்றிருந்தேன்." (மாற்றுருனக்கு) நாராயணனுகையாலே ஸம்பந்த மெல்லாரோடும் ஒத்திருக்க சேஷமாயிருக்கிற ஆத்மாக்களிலே சில சத்ருக்களுண்டோ வென்னில்; ப்ராதிகூல்ய பரம்பரைகள் பண்ணி இடக்கைப்புரி முருக்கி விரோதித்துப் போருமவர்களை, "தாநஹம் த்விஷத:" என்பது, என்னுடைய ஆஜ்ஞாபரிபாலநம் பண்ணுதார் எனக்கு த்ரோஹிகள் என்பது, பாகவத த்வேஷம் பண்ணுவாரை த்விஷத்துக்களென்பது, அவர்களை

பி. 166. அம்புபட்டவர்களுக்கு முடிந்து பிழைக்கலாம், குணஜிதர்க்கு அதுக்கும் விரகில்லையிறே என்பதன் தாத்பர்யம் - ஆசை முடியவொட்டமையாலே வாராதிருக்கவொண்ணாது என்றபடி.

ப்ரஹ்மாஸ்த்ரம் விடவேண்டும்படி பிராட்டிபக்கலிலே அப ராதத்தைப்பண்ணி, "த்ரீந்லோகாந்ஸம்பரிக்ரம்ய - ஸபித்ராச பரித்யக்த:" (168) என்று - ஒரிடத்திலும் புகலற்று, "தமேவ சரணம்கத:" (168) என்று பெருமாள் திருவடிகளிலே விழுந்த காகம்போலே யிருக்கை. "ஸத்யேநலோகாந்ஜயதி" (169) என்று-அம்பு பட்டாரோபாதி குணஜித ரென்றதிறே. (போற்றி) போற்றுகையாவது-திருப்பல்லாண்டு பாடுகை; பெரியாழ்வாரைப்போலே வந்தோம். (யாம் வந்தோம்) அவர்தம்மைப்பேணுதே உன்னைப்பேணினுற்போலே, நாங்

---

நிந்தைபண்ணுவாரைப் பொறேனென்பதாசா நின்றனிறே. (மாற்றார்) எங்களையறியாயோ, நாங்கள் வருமவர்களோ, ஹிரண்யராவணுதிகளாகவும் வந்தோம் நாங்களன்றே. (வலி தொலைந்து) வலிதொலைகையாவது - "நநமேயம்" என்கிற ப்ரதிஜ்ஞைதவிர்கை. (உன்வாசல்கண்) மிடுக்கு அழிந்து எளிமைபட்டு "கச்ச" என்றவிடத்திலும் அங்குப் புகுராதே தன்கொட்டிலேறப் போனுனிறே ராவணன். அப்படியன் றிக்கே, (உன்வாசல்கண் ஆற்றுதுவந்து) ப்ரஹ்மாஸ்த்ரம விடவேண்டும்படி பிராட்டி பக்கலிலே அபராதத்தைப் பண்ணி, "த்ரீந்லோகாந்ஸம்பரிக்ரம்ய"என்னும்படி அலமந்து "ஸபித்ராசபரித்யக்த:" என்னும்படி ஒரிடத்தில் புகலற்று, "தமேவசரணம்கத:" என்று - பெருமாள் திருவடிகளிலே விழுந்த காகம்போலே, உன்வாசலிலேவந்து உன்காற்கீழே விழுந்தோம். அம்புக்குத்தோற்றுரோபாதி நாங்களும் குணங்களுக்குத் தோற்றுவந்தோம். (ஆற்றுதுவந்து) அம்பு பிடரி தள்ளத்தள்ள வருவாரைப்போலே ஸௌந்தர்ய குண பலாத்க்ருதைகளாய் வந்தோம். அம்பு நற்கொலையாகக் கொல்லும்; குணம் உயிர்க்கொலையாகக் கொல்லும்; "வல்வினையேனை ஈர்கின்றகுணங்கள்."

(யாம்வந்தோம்) சத்ருக்கள் தரபிமாநத்தாலே "நநமேயம்" என்றிருக்குமாபோலே, "தத்தஸ்யஸத்ருசம்" என்றிருக்கும் நாங்கள் எங்கள் செல்லாமையாலே வந்தோமித் தனை. ஸ்வரூபஜ்ஞாநம் வரவொட்டாதது, ஆர்த்தம இருந்த

களும் எங்கள் ஸ்வரூபத்தைப். பாராதே ஆற்றாமை யிருந்த விடத்தில் இருக்கவொட்டாமையாலே வந்தோம். நசை முடியவொட்டாது, ஆற்றாமை இருக்கவொட்டாதிறே. (யாம் வந்தோம்) சத்ருக்கள் தரபிமாநத்தாலே "நநமேயம்" (170) என்றிருக்குமாபோலே, ஸ்வரூபஜ்ஞாநத்தாலே, "தத் தஸ்யஸத்ருசம்" (97) என்றிருக்கும் நாங்கள், ஆற்றாமை இருக்கவொட்டாமையாலே வந்தோம். (புகழ்ந்து) எங்களைத் தோற்பித்த குணங்களைச்சொல்லி. ... .... உக

167. ஸ்வாபதேச வ்யாக்யாநம். இருபத்தோராம் பாட்டு. (ஏற்ற இத்யாதி) இப்பாட்டில் - நப்பின்னைப் பிராட்டி, பேற்றில்வந்தால் நானுமுங்களிலொருத்தியன்றோ, நாமெல்லாருங்கூடி க்ருஷ்ணனை எழுப்புவோம் வாருங்கோளென்ன; அவன் குணத்துக்குத்தோற்றார் தோற்றபடி சொல்லி எழுப்புகிறார்கள். வ்யா.—(ஏற்றகலங்கள்) உபதேசபாத்ரபூதரான சிஷ்யர்கள். (எதிர்பொங்கிமீதளிப்ப) ஆசார்யோபதேசத்தாலே பரிபூர்ணஜ்ஞாநரான சிஷ்யர்களுக்கு, ஆசார்யனுக்கும் யுக்த்யுபதேசம் பண்ணும்படி

---

விடத்திலிருக்கவொட்டாது. (போற்றி) தோற்றார்"போற்றி" என்னுமித்தனையிறே.போற்றுகையாவது-"செவ்வடிசெவ்வி திருக்காப்பு" என்று திருப்பல்லாண்டு பாடுகை. அல்லாதார் பாடுவது தந்தாம் ப்ரயோஜநத்துக்காகவிறே. நாங்கள் உன் ஸம்ருத்தியையாசாஸிக்கும்படி யன்றோவந்தது. (புகழ்ந்து) "சத்ரோ:ப்ரக்யாதவீர்யஸ்ய" என்று மாற்றாரும் தங்களைத் தோற்பித்த வீர்யத்தைச் சொல்லிப் புகழ்வர்கள்; இவர்களும் தங்களை நலிந்தநலிவைச்சொல்லிப் புகழுமித்தனையிறே. எங்களைத் தோற்பித்த குணங்களைச் சொல்லிப் புகழ்ந்து; "அழித்தாயுன்திருவடியால்" "நின்றன்னால் நலிவேபடுவோம்" என்று வருகையிறே யுள்ளது. (போற்றி-புகழ்ந்து-வந்தோம்) பெரியாழ்வாரைப்போலேயும் வந்தோம், அல்லாதாரைப்போலேயும் வந்தோம்; நாங்கள் செய்வதெல்லாஞ் செய்தோம்; நீ பெறிலும் பெறு, இழக்கிலுமிழ. .... உக

ஜ்ஞானமானது பொங்கி வழியும்படியாக. (மாற்றாதே) மாறு மல். (பால்சொரியும்) பால்போலே போக்யமான ஜ்ஞானத்தை உபதேசியாநிற்குமவர்களாய். (வள்ளல்) சிஷ்யவிதேயர்களுமாய். (பெரும்பசுக்கள்) பகவத்குணாநுபவத்தாலே பரிபுஷ்டரான சிஷ்யர்களை. (ஆற்றப்படைத்தான் மகனே) அஸங்க்யாதமாக ஆர்ஜித்துப்படைத்த ஆசார்யனுக்கு புத்ரவத்விதேயனானவனே. (அறிவுறாய்) நீப்ரபோதத்தையடையவேணும். (ஊற்றமுடையாய்) த்ருடப்ரமாணஸித்தனே. ஆச்ரிதபக்ஷபாதமுடையவனே. (பெரியாய்) அபரிச்சிந்நஸ்வரூபரூபகுண விபூதிகளையுடையவனே. (உலகினில் தோற்றமாய்நின்றசுடரே) இந்தலோகத்தில் சக்ஷுர்விஷயமாம்படி அவதரித்தவனாய், சிரகாலமிருந்து தேஜிஷ்டனானவனே. "ஸூச்ரேயாந்பவதிஜாயமாந:" என்னக்கடவதிறே. ஆச்ரிதபக்ஷபாதம் லோகத்திலே ப்ரஸித்தமாம்படி நின்று தேஜிஷ்டனானவனேயென்றுமாம். (துயிலெழாய்) நீ படுக்கையில் நின்று மெழுந்திருக்கவேணும். ரக்ஷணம்ப்ரஸக்தமாயிருக்க, ரக்ஷணசிந்தைபண்ணக்கடவதோ என்று தாத்பர்யம். நீங்கள் ரக்ஷ்யபூதராய் வந்திகோளே நானெழுந்திருக்கைக்கென்ன (மாற்றாரித்யாதி) லௌகிகசத்ருக்களடைய உன்னுடையமிடுக்குக்குத் தங்கள் வலிமாண்டு உன்திருவாசலிலே பழைய ராஜ்யத்தைக் கொடுத்து, நீ போவென்றாலும் முன்புத்தையெளிவரவை நினைத்துப் பொறுக்கமாட்டாதே உன்திருவடிகளை ஆச்ரயிக்குமாபோலே, நாங்களும் உன்னுடைய நிருபாதிகசேஷித்வத்துக்குத் தோற்று தேஹாத்மாபிமாநத்தையும் ஸ்வஸ்வாதந்த்ரியத்தையும் அந்யசேஷத்வத்தையும் ஸ்வாதீநகர்த்ருத்வ போக்த்ருத்வங்களையும் பந்துக்கள் பக்கல் ஸ்நேஹத்தையும் உபாயாந்தரோபேயாந்தரங்களையும் விட்டு இவற்றை நீ கொடுத்தாலும் பழைய து:கத்தை நினைத்து வேண்டோம் என்று உன் திருவாசலிலே வந்து நீயே ஸமஸ்தவித ப்ராப்யங்களும் ப்ராபகங்களுமென்று உன் திருவடிகளை ஸ்துதித்து மங்களாசாஸநம் பண்ணி வந்தாச்ரயித்தோம். .... .... .... .... உக

## இருபத்திரண்டாம் பாட்டின் அவதாரிகை

168. **மூவாயிரப்படி**:—இருபத்திரண்டாம்பாட்டு. கீழ்ப் பாட்டில் தங்களுடைய அபிமாந சூந்யதையைச் சொல் விற்று; இப்பாட்டில் அநந்யார்ஹ சேஷத்வஞ்சொல்லுகிறது.

*அங்கண்மாஞாலத்தரசரபிமான*
*பங்கமாய்வந்துநின்பள்ளிக்கட்டிற்கீழே*
*சங்கமிருப்பார்போல்வந்துதலைப்பெய்தோம்*
*கிங்கிணிவாய்ச்செய்ததாமரைப்பூப்போலே*
*செங்கண்சிறிச்சிறிதேயெம்மேல்விழியாவோ*
*திங்களுமாதித்தியனுமெழுந்தாற்போல்*
*அங்கணிரண்டுங்கொண்டெங்கண்மேல்நோக்குதியேல்*
*எங்கள்மேற்சாபமிழிந்தேலோரெம்பாவாய்.*

**ஆறுயிரப்படி**:— இருபத்திரண்டாம்பாட்டு. (அங்கண்) "மாற்றருனக்கு வலிதொலைந்து" என்று-போக்கற்றுவந்தபடி பிறே சொன்னார்கள்; இன்னமும் இவர்களகவாயறியக்கட வோம் என்று கிடந்தான் க்ருஷ்ணன்; இப்படியோ எங்களை நீநினைத்திருக்கிறபடி, இங்குப் புகலன்றியே யொழிந்தாலும் வேறு போக்கில்லாதபடி அநந்யார்ஹைசளுமாய் எங்களுக் கும் பிறர்க்குமாகாதபடியுமாய்வந்தோம், இனி கடாக்ஷித் தருளவேணுமென்கிறார்கள். "பரித்யக்தா" "புத்ராம்ச்ச தாராம்ச்ச" என்று-அநுகூலராயிருக்கச் செய்தேயும் இவர் களிலுமண்ணியராகவெண்ணியிருந்தபடியிதுவன்றோஎன்று, இவர்களு மப்படியேயாகக் கூடுமென்று, ராவணஸம்பந்த முள்ள தடங்களும் விட்டு,"பகவத்கதம்"என்று ஓரிடத்திலே பாரதந்த்ரியம் கிடவாதபோது எல்லாம்பெற்றால் பலவாய்த் தண்ணியவற்றைத் தின்றுதேடவேணுமோவென்று போகட் டுப்போந்தேன், தேவரீரங்கீகாரம்பெற்றிலேனாகிலும்விட்டுப் போந்தவிடத்துக்கு ஆகாதபடி வந்தேனென்று விபீஷணன் விண்ணப்பஞ்செய்தாற்போலே,பிறந்தகத்துக்கு மாகாதபடி வந்தோமென்று தங்களநந்யார்ஹத்வந்தோற்ற விண்ணப் பஞ் செய்கிறார்கள்.

பதவுரை:—அம் - அழகிதாய், கண் - இடமுடைத்தாய், மா - பெரியதாயிருந்துள்ள. ஞாலம் - பூமியையாண்ட, அரசர் - ராஜாக்களானவர்கள், அபிமாநபங்கமாய்வந்து - "நமக்கு மேற்பட்டாரில்லை" என்கிற அபிமாநத்தை விட்டு வந்து நின் - தேவரீருடைய, பள்ளிக்கட்டிற்கீழே ஸிம்ஹாஸநத்தின் கீழே, சங்கம் - திரள்திரளாக வந்து, இருப்பார்போல் - ஓலக்கமாகவிருக்கு மவர்களைப்போலே, வந்து - கீழ்ப்பட்டவருத்தமெல்லாம் தீரும்படி வந்து, தலைப்பெய்தோம் - கிட்டப்பெற்றோம்; கிங்கிணிவாய்ச் செய்த - கிண்கிணியைப் போலே அர்த்தவிகஸிதமான, தாமரைப்பூப்போலே—, செம் - வாத்ஸல்யத்தாலே சிவந்திருக்கிற, கண் - திருக்கண்கள், சிறிச் சிறிது - கொஞ்சம்கொஞ்சமாக, எம்மேல் - ஆச்ரிதரான எங்கள் பக்கல், விழியாவோ - விழிக்கலாகாதோ; திங்களும் - சந்த்ரனும், ஆதித்தியனும் - சூர்யனும், எழுந்தாற்போல் - உதித்தாற்போலே, அம் - அழகிதான, கண் இரண்டும் கொண்டு - இரண்டுகண்களாலே, எங்கள்மேல் - எங்கள் விஷயத்தில், நோக்குதியேல் - கடாக்ஷிப்பாயாகில், எங்கள்மேல் - எங்களுடைய, சாபம் — அநுபவித்தே கழிய வேண்டும் வ்யஸநம், இழிந்து - கழிந்துவிடு மென்கிறார்கள்.

169. வ்யா.—(அங்கண்) அழகிய இடம். ப்ரஹ்மாவுக்கும் தன் போகோபகரணங்களோடு அநுபவிக்கலாயிருக்கை. பிபீலிகைக்கும் தன்போகோபகரணங்களோடே

---

வ்யா.—(அங்கண்மாஞாலத்தரசர்) இங்குவந்தார்உன்னில்குறைந்தாருண்டோ. "ஈச்வரஸ்ஸர்வபூதாநாம்" என்று நீயிருக்குமாபோலே, நாங்களும் "ஈச்வரோஹம்" என்று

---

பி. 169—அணுகோலக்கம் - அந்தரங்க ஓலக்கம். அங்கண்மா ஞாலத்தரசர் வருகையின் காரணம் போக்கற்ற நிலை. இவர்கள் வருகை கைங்கர்யம் செய்தற்கும், க்ருஷ்ணகுணாநுபவம் பெறுதற்கும். 173-ம் பிரமாணத்தின் இறுதியில் "ஸமாகம:" என்றபிறகு "என்று பிராட்டி கேட்க" என்பதை சேர்க்கவும். 174-ம் பிரமாணத்தின் முடிவில் "ஏவம் ஸமஜாயத" என்பதற்கு "அந்த:புர கார்யத்திற்கு அநர்ஹனான நானும் இப்படி இங்கு வரும்படி அங்கு ஐக்யம் உண்டாயிற்றென்று" திருவடி சொன்னதாகச் சேர்த்துக் கொள்ளவும். செங்கண்வாத்ஸல்யத்தால் ஏற்பட்ட செம்மை. ஒரு நீர்ச்சாவியிலே - ஒருமுறை நீர்ப்பாய்ச்சல் இல்லாமையாலே மிகவும் நொந்துபோன பயிர்.

அநுபவிக்கலாயிருக்கை. (மாஞாலத்தரசர்) மஹாப்ருதிவி யில் ராஜாக்கள். "இப்பரப்பெல்லாம் என்னது" என்று அபிமாநம்பண்ணுகை. "யாவையும் யாவருந்தானமைவுடைநாரணன்" என்கிறதை பௌண்ட்ரகவாஸுதேவனைப் போலே அநுகரிக்கிறபடி. (அபிமாநபங்கமாய்வந்து) அபி

---

தனித்தனியே யிருக்குமவர்களன்றே, உன்னில் ஒருகூற்றுக் குறையநின்ற விடமுண்டோ,எங்களீரரசுதவிர்ந்து வந்தபடி பார்த்திலேயோ, ஸ்வத்வஸ்வாமித்வங்கள் இரண்டு தலைக்கும் வ்யவஸ்திதமானால், ஸ்வாமித்வமுள்ளவிடத்திலே ஸ்வாதந்த்ரியமும், ஸ்வத்வமுள்ளவிடத்திலே பாரதந்த்ரியமும் கிடவாத போது, ஸ்த்ரீக்கு மோவாய் எழுந்தாற்போலேயும், புருஷனுக்கு முலையெழுந்தாற் போலேயுமிறே யிருப்பது. இப்படி ஸ்வரூபவிருத்தமான அபிமாநத்தைக் கழித்தன்றே நாங்கள் வந்தது. (அங்கண்மாஞாலத்தரசர்) "அம்" என்று-அழகு; "கண்" என்று-இடம். அழகிய ஸ்தாநவிசேஷங்களையுடைத்தாயிருந்துள்ள மஹாப்ருதிவியைத் தங்களதென்று அபிமாநம் பண்ணியிருக்கிற ராஜாக்கள். அங்கண் என்றவிடத்தால்- போக்ய போகோபகரண போகஸ்தாநங்களை ப்ரஹ்மாதி பிபீலிகாந்தமாகத் தந்தாமளவுகளிலே அபிமாநம்பண்ணியிருப்பது. இனி "ப்ரஹ்மாஹம்" என்றால் அவனளவிலே நிற்குமாபோலே, சிற்றெறும்பு "அஹம்" என்றால் அது தன்னளவிலேநிற்கும் ; அவன் "நான்" என்றத்தோடு, இது "நான்" என்றத்தோடு வாசியில்லை ; தத்வத்ரிக்தரிலடையநானெல்லாம் ஆக்கனுமாய் அத்தனையும் து:கஹேதுவுமாயிருக்கும். "யாவத:குருதேஜந்து: ஸம்பந்தாந்மநஸ:ப்ரியாந்| தாவந்தோஸ்யநிகந்யந்தே ஹ்ருதயேசோகசங்கவ:" என்று சொல்லிற்றிறே. "வேதாந்தங்களிலே-ப்ரஹ்மாதிகளுங்கூட, எழுஜந்மம் ஜநித்து அரியஸாதநாநுஷ்டாநங்களைப் பண்ணி, பின்பு பகவத்ப்ராப்திரூப புருஷார்த்தம் பெற்றார்களாகச் சொல்லாநின்றது; இவ்வருகே யெத்தனையேனுங்கீழாயிருப்பார் சிலர் சரீராவஸாநகாலத்திலே மோக்ஷம் கிடைக்குமென்று பொதிசோறு கட்டிக்கொண்டிராநின்றார்கள், இவை யிரண்டும் சேரவிழுந்தபடி எங்ஙனே ?" என்று

மாந சூந்யராய்வந்து. ராஜ்யங்களை யிழந்து எளிவரவுபட்டு வந்து. (நின்பள்ளிக்கட்டிற்கீழே) அந்த ராஜ்யங்களைக் கொடுத்துப் போங்கோளென்றாலும், பழைய எளிவரவை நினைத்து, அவைவேண்டா என்று, உன்ஸிம்ஹாஸநத்தின் கீழே. (சங்கமிருப்பார்போல்)திரளவிருந்து அணுகோலங்க மாக விருக்குமவர்களைப்போலே, அவர்கள் போக்கற்றுப் புகுந்தார்கள், இவர்கள் கைங்கர்யத்துக்குப் புகுந்தார்கள்.

---

பட்டரைக்கேட்க; "ஒருகுறையில்லை" என்றருளிச்செய்தார். அவன் தன் விபூதியளவுஞ்செல்லப் பச்சையிட்டுப் பெறக் கடவனென்று கோலக்கடவன், யதோபாஸநம் பலமாகை யாலே தத்க்ரதுந்யாயத்தாலே அப்படியேயாயிருக்கும் அவ னுக்கு; இவன், தன் பக்கலொன்றுமில்லாமையை அநுஸந் தித்து ப்ரதமபரிஸ்பந்தமே பிடித்து நீயே யெனக்குக் கட வையாகவேணுமென்று காலிலே விழும்; அவனும் அப்ப டியே தன்தலையிலே ஏறிட்டுக்கொண்டு இவனைப் பார்த் திருக்கவேண்டாதபடி தலைக்கட்டிக்கொடுக்கும். அவனுக் குத் தான்கோலின பரப்படங்கலும் விடவேணும்; இவ னுக்கு இவ்வளவேயிறே விடவேண்டுவது. அவன் அநுஷ் டிக்கக் கடவவையெல்லா மநுஷ்டித்து பின்பு பலம்தரப் பார்த்திருக்கும்; ஈச்வரனையிறே இவன் முதலிலே பற்றிற்று.

(மாஞாலத்தரச ரபிமாநம்) மஹாப்ருதிவியில் பரப்பெல் லாம் என்னதுஎன்று அபிமாநம்பண்ணுகை. "பதிம்விச் வஸ்ய" என்று ஓதப்படுகிற ஈச்வரனை அநுகரிக்கிறார்களிறே இவர்கள்; "யாவையும் யாவருந்தானமமைவுடை நாரணன்" என்கிறபதத்தை யநுகரித்த பௌண்ட்ரகவாஸுதேவனைப் போலே. (அபிமாநபங்கமாய்) ராஜ்யங்களை யிழந்து எளிவரவு பட்டு அபிமாந சூந்யராய். "ராஜ்யந்நாம மஹாவ்யாதி: அசிகித்ஸோ விநாசந:" "தசவேச்யாஸமோந்ருப:" "ஒரு நாயகமாயோடவுலகுடனாண்டவர்" என்று-ராஜ்யத்தில் அபி மாநம் அநர்த்தாவஹமென்றிறே ஜ்ஞாநாதிகருடைய ப்ரதி பத்தி. (வந்து) "கானகம்போய்" என்று-காடுபாய்ந்து திரி யாதே உஜ்ஜீவநஹேதுவானவிடத்திலே வந்து.

"குணைர்தாஸ்யமுபாகத: " (171) என்று-இளையபெருமாளைப் போலே இவர்களையும் க்ருஷ்ணகுணம் தோற்பித்து அடிமையிலே மூட்டிற்று. (வந்துதலைப்பெய்தோம்)கீழ் எல்லாரையு மெழுப்பிப்பட்ட வ்யஸநமெல்லாம் ஸபலமாம்படி வந்துகிட்டப் பெற்றோம். அநாதிகாலம் இந்தஸம்பந்தத்தை யிழந்து போந்த நாங்கள், இன்று நிர்ஹேதுகமாகக்கிட்டப்பெற்றோம்."ஸங்கேயப்ராப்தாஸ்மதம்தேசம்பரத்வாஜாயமப்ரவித்" (172) என்னுமாபோலே ஒருபடி வந்து கிட்டப்பெறுவதே

---

(சின்பள்ளிக் கட்டிற்கீழே) அந்தராஜாக்கள் தோற்றுத் தங்கள் சத்ருக்கள்கட்டிற்கீழே என்னவேண்டாவோ, "சின்பள்ளிக்கட்டில் கீழே" என்பானென்னென்னில்; உபமேயவஸ்து இவனல்லதில்லை யென்னும் ப்ரஸித்தியாலும், "பத்யத்விபூதிமத்ஸத்வம்" என்று சொல்லப்படுகிற விபூதிபூதர்க்கு விபூதிமான்வாசல் புகலாகையாலும், பக்நாபிமாநர் புகும் வாசலாகையாலும், ஸர்வலோகசரண்யன்வாசலே புகல் என்னும் தங்கள் வாஸநையாலே சொல்லுகிறார்கள். (சின்) எங்கேனும் வழிபறிபுண்டாலும் ராஜாவின் வாசலிலே கூப்பிடுமாபோலே, "ராஜாதிராஜஸ்ஸர்வேஷாம் " என்று ப்ரமாணஞ் சொல்லப்படுகிற உடையவனிருந்தவிடத்திலே வரவேணுமிறே. [கோவாகிமாநிலம்காத்து] இவனோடு ஸம்பந்தி ஸம்பந்தமுடையாரைப் பற்றினவர்களிறே ராஜாக்களாகிறார். (சங்கமிருப்பார்போல்)அந்த ராஜ்யங்களைக்கொடுத்துப் போங்களென்றாலும் பழைய எளிவரவை நினைத்து அவை வேண்டாவென்று உன்ஸிம்ஹாஸநத்தின்கீழே திரள் திரளாகவந்து ஓலக்கமாக விருக்குமவர்களைப்போலே.

(பள்ளிக்கட்டிற்கீழே) வெளியிலே வேளாளராய்த் திரியில் தலையிலே முடியைவைப்பார்களென்று,ராஜ்யம் பண்ணுகைக்கு முசித்து அந்தரங்கமான வோலக்கத்திலே ஸேவிக்கிறபடி. பக்நாபிமாநரானாலும் "அரதிர்ஜநஸம்ஸதி" என்கிறபடியே ஆளற்றவிடத்திலே விவிக்தஸேவை பண்ணினான், ஸ்ரீபராதாழ்வான் தனியிருக்கையிலே " ராஜந் " என்பார், "வஞ்சிதாச்சாபிதேவயம்" என்பார், " கச்சிந்ந துஷ்டோ

யென்கை. "வாநராணாம்நராணாஞ்சகதமாஸீத்ஸமாகம:" (173) "ராமஸுக்ரீவயோரைக்யம்தேவ்யேவம்ஸமஜாயத" (174) என்று விஸத்ருசமானவிது ஸங்கதமாகப்பெறுவதே! ஆக, இந்த ராஜாக்கள்தந்தாமுடைய அபிமாநங்களைவிட்டு க்ரம ப்ராப்தமான ராஜ்யாதிகளைவிட்டும், அம்புக்குத் தோற்று

---

வ்ரஜஸி" என்பாராய்க்கொண்டு கண்டாரலைக்க, அவர்களுக்குச்சூழ்த்துக்கொடுத்து தன்பக்கல் அபிமாநதோஷமில்லாமையை வெளியிடவேண்டிற்றிறே; இளையபெருமாள் படுக்கைத்தலை பிரியாமையாலே அவையொன்றுங் கேட்கவேண்டிற்றில்லையிறே. (போல்வந்து தலைப்பெய்தோம்) இந்த ராஜாக்கள் க்ரமப்ராப்தமான ராஜ்யாதிகளையும் தங்களுடைய அபிமாநங்களையும்விட்டு உன்பள்ளிக்கட்டில்கீழே படுகாடு கிடக்குமாபோலே, நாங்களும் ஒருப்ரஹ்மாபிமாநத்தோபாதியும் போந்திருக்கிறஸ்த்ரீத்வாபிமாநத்தையும் பந்துக்களுடைய நிரோதத்தாலே க்ருஹங்களைவிட்டுப் புறப்படவொண்ணாத அருமையையும் வேறுண்டானபோகங்களையும்விட்டு, அம்புக்குத்தோற்றுரோபாதி உன்னழகுக்குத் தோற்றுவந்து புகுந்தோம்.

(வந்துதலைப்பெய்தோம்) அந்த ராஜாக்களைப்போலே நாங்களும் அநாதிகாலம் பண்ணிப்போந்த தேஹாத்மாபிமாநத்தாலே இந்த ஸம்பந்தத்தை யிழந்துபோந்த நாங்கள் நிர்ஹேதுகமாகக் கிட்டப்பெற்றோமென்று-யாத்ருச்சிக ஸங்கதியைச் சொல்லிற்றாகவுமாம். நாங்கள் அகன்ற தூரம் வந்த அருமையையும் பாராய், த்ரவ்யமாயிருக்கச் செய்தே குணஜாதிகள்போலே பகவத்ப்ரகார பூதனாய் ப்ருதக்ஸ்திதியாதல், ப்ருதகுபலம்பமாதல்உடையனன்றிக்கே கௌஸ்துபத்தோபாதி அத்தலைக்கு அதிசயத்தை விளைத்து ஸ்வரூப லாபமாகக் கடவ சேதநன், அநாதிகர்மமடியாக அத்தையிழந்து அசித்ஸம்ஸ்ருஷ்டனாய்த் தனக்கு ப்ரகாரமான சரீரத்தை, "தேவோஹம்,மநுஷ்யோஹம்" என்று தானாகபுத்தி பண்ணி, சரீரஸம்பந்தநிபந்தநமான ஸுகது:கங்களுக்கு போக்தாவாய், ஸ்தாவரங்களோடொக்க அசித்ஸமனாய்,

உன்கட்டிற்காலிலே படுகாடுகிடக்குமாபோலே, நாங்களும் எங்களுடைய ஸ்த்ரீத்வாபிமாநத்தை விட்டு, வேறுண்டான போகங்களேயும்விட்டு, உன்னுடைய குணஜிதராய்க்கொண்டு வந்தோம். அதவா, அந்தராஜாக்களைப்போலே நாங்களும் அநாதிகாலம் பண்ணிப்போந்த தேஹாத்மாபிமாநத்தை விட்டு, தேஹாத்பரனை ஆத்மாவின்பக்கல் ஸ்வாதந்த்ரியத்தையும் விட்டு, அநந்யப்ரயோஜநராய்வந்தோமென்றுமாம்.

---

"—பாமி" என்று-ஈச்வரனும் வெறுக்கும்படி, கைகழிய அதன்றவிவன், யாத்ருச்சிகமாகப் பிறப்பதொரு ஸுக்ருத மடியாக பகவத்கடாக்ஷத்துக்கு யோக்யனாய், அநந்தரம் தேஹாத்மாக்களுடைய ஸ்வரூபத்தை விவேகித்து, தேஹாத்மாபிமாநத்தை விட்டு, ஆத்மாவின்பக்கல் ஸ்வாதந்த்ரியத்தையும் விட்டு, "ஈச்வரனுக்குசேஷம்" என்றும், "புருஷார்த்தம் அவன்" என்றும் ருசிவிளைந்து, அதுபெறுகைக்கடியான உபாயமாகவும் அவன்றன்னைப்பற்ற விளம்பம்பொறுதபடி த்வரைவிளைந்து, திருவடிகளிலேவந்து கிடக்குமளவாய்விட்டதிறே. ப்ராஹ்மணப்ரஜை வேடருடையக்ருஹத்திலே பால்யத்திலே யகப்பட்டு புத்திவ்ருத்திகள் அவர்கள்படியாய் நடந்து செல்லாநிற்க, ஸுக்ருதவிசேஷத்தாலே ஸ்வக்ருஹத்திலே மாதாபிதாக்கள் முன்னேவந்து நிற்குமாபோலே.

(வந்துதலைப்பெய்தோம்) மாறி மாறி அந்தாதியாக பல பிறப்பும் பிறந்து, அதுவே திருவடிகளை அடைகைக்குஹேது வாய் "சிராயமேகூலமிவாஸிலப்த:" "மங்யேப்ராப்தாஸ்மதம் தேசம்பரத்வாஜேரயமப் ரவீத்" "வாநராணும்நராணும்ச" "தேவ்யேவம்ஸ மஜாயத" "நணுவினம்நாமே". விஸத்ருசமானவிதுஸங்கதமாகப் பெறுவதே! (வந்துதலைப்பெய்தோம்) "வந்தெங்குத் தலைப்பெய்வன்" என்கிற இழவுகள்தீர்ந்து எல்லாரையு மெழுப்பிப் பட்ட வ்யஸநமெல்லாந்தீர ஒருபடி வந்து கிட்டப்பெறுவதே!

பெண்காள்! எல்லாம் ஸபலமாயிற்றே! இனியொரு குறைகளுமில்லையேயென்ன; ப்ராப்திபலம் பெறவேண்டாவோ வென்கிறார்கள் (கிங்கிணிவாய்ச்செய்த) அலரவும்

(கிங்கிணிவாய்ச்செய்த தாமரைப்பூப்போலே) ஆதித்யனைக் கண்டால் அலரக்கடவதாமரைப் பூப்போலே எங்களாற்றாமைக்கு அலருமவையிறேயிவை. அர்த்திகளைக்கண்டால் அலருமவையிறேயிந்தத்தாமரைப்பூ. (செங்கண்) வாத்ஸல்யத்தாலே சிவந்திருக்கை. உபமாநம் நேர்நில்லாமையாலே உபமேயந்தன்னையே சொல்லுகிறதாகவுமாம். (சிறிச்சிறிதே) ஒரு நீர்ச்சாவியிலே வெள்ளமாகாமே ஸாத்மிக்க ஸாத்மிக்க என்கை. ப்ரதமபரிஸ்பந்தமேபிடித்துக் காணவேணுமென்றுமாம்.(எம்மேல்விழியாவோ)கோடையோடினபயிரிலே ஒருபாட்டம்என்னுமாபோலே,சாதகம் வர்ஷதாரையை யாசைப்படுமாபோலே, "விழியாவோ" என்று தங்கள் மநோரதம்.

---

மாட்டாதே மொட்டிக்கவும்மாட்டாதே திருக்கண்களிருந்தபடிக்கு த்ருஷ்டாந்தம் சொல்லுகிறார்கள். (கிங்கிணிவாய்ச்செய்த தாமரைப்பூப்போலே) ஸ்வாதந்த்ரியம் செம்பிளிப்பியாநின்றது; நப்பின்னைப்பிராட்டியோட்டை ஸ்பர்சம் அலரப்பண்ணாநின்றது; இத்தலையிலபராதம் மொட்டிக்கப்பண்ணும்; அவனுடைய அபராதஸஹத்வம் அலரப்பண்ணும்: கர்மபாரதந்த்ரியம் மொட்டிக்கப்பண்ணும்; ஆச்ரிதபாரதந்த்ரியம் அலரப்பண்ணும்: காலத்தினிளமைமொட்டிக்கப்பண்ணாநின்றது; ஆர்த்தத்வநி விகஸிக்கப்பண்ணாநின்றது: ஆதித்யனைக் கண்டால் அலரக்கடவ தாமரைப் பூப்போலே இவர்களாற்றாமைகண்டால் அலருமவையாயிற்று. (செங்கண்) உபமாநம் நேர்நில்லாமையாலே உபமேயந் தன்னைவிசேஷிக்கிறது. [பட்டுரையாய்புற்கென்றே காட்டுமால்] உபமாநத்தோடே சொல்லநினைக்கையாகிறது அழுக்காக்குகையிறே. தாமரைக்கு இவன் கொடுத்தநிறம் சிவப்புக் கொப்பாமித்தனையல்லது வாத்ஸல்யத்தாலேவந்தகுதறுதலில்லையே அதுக்கு. (சிறிச்சிறித்தே)குளப்படியிலேகடலைமடுக்கவொண்ணாதிறே, பொறுக்கப் பொறுக்கக் கடாக்ஷிக்க வேணும். (சிறிச்சிறிதே) ப்ரதமபரிஸ்பந்தமேபிடித்து அலரும்போதை அளவுகளெல்லாங்காண ஆசைப்படுகிறார்க ளாகவுமாம். (எம்மேல் விழியாவோ) கோடையோடின பயிரிலே ஒருபாட்டம் மழை வர்ஷியாதோ என்னுமாபோலே. (எம்மேல்) சாதகம், மேக

170. (திங்களுமித்யாதி) ப்ரதிகூலர்க்கு அணுக வொண்ணாமையும் அநுகூலர்க்குத் தண்ணளியிக்கிருக்கையும். அஜ்ஞாநாந்தகாரம் போகைக்கும் உன்னைப்பெறுதவிடாய் ஆறுகைக்கும் என்றுமாம். "ப்ரஸந்நாதித்யவர்ச்சஸம் (30) தண்ணளியும் ப்ரதாபமும் கூடியிறேயிருப்பது. (அங்கணி ரண்டுங்கொண்டு) சந்த்ரஸூர்யர்கள் கோபப்ரஸாதங் களுக்கு ஒப்பல்ல ரென்கை. "சந்த்ரகாந்தாநநம் ராமமதீவ ப்ரியதர்சநம்"(13)என்னக்கடவதிறே.(இரண்டுங்கொண்டு) முழுநோக்குப் பொறுக்குமளவானவாறே "இரண்டும்" என்று சொல்லுகிறார்கள். (எங்கள்மேல்) உன்னோக்குப்

---

ஜலம் பார்த்திருக்குமாபோலே, கடாக்ஷமேதாரகமானவெங் கள்மேலே. "இளவாய்ச்சியர்கண்ணினுள்" என்று விழிப் பது அங்கேயன்றோ.

அதுக்குவந்ததென்னென்ன; (திங்களுமாதித்யனுமெழுந் தாற்போல்)"கதிர்மதியம்போல்முகத்தான்" என்று ஆசைப் பட்டபடி பேறுகவேணுமென்கிறார்கள். (திங்களும்) சந்த்ரஸூரியர்களுடைய தண்ணளியையும் ப்ரதாபத்தையு முடைய திருக்கண்கள். ப்ரதிகூலர்க்கு அணுகவொண்ணா திருக்கையும், அநுகூலர்க்கு அணுகி அநுபவிக்கலாயிருக்கை யும். "ப்ரஸந்நாதித்யவர்ச்சஸம்" (திங்களுமாதித்தியனும் விரஹதாபம் போக்குகைக்கும், கிடையாதொழிகிறதோ! என்னும் பயத்தாலேவந்த அஜ்ஞாநாந்தகாரம் போகைக்கும். (அங்கண்) திருக்கண்களுக்கு அவர்களுபமாநமாகப்போரா திருந்தபடி. "சந்த்ரமாமநஸோஜாத:" என்று-சந்த்ரஸூர்யர் களுக்குப்ரஸாதோஷணங்கள் இவனுடைய ஸம்பந்தத்தாலே யிறே. பலகாலும் ராஹுகேதுக்களாலே அபிபூதராய் க்ஷய வ்ருத்திகளையும் களங்கத்தையுமுடையரான வ்யய சந்த்ரனும்

---

பி. 170. தங்கள்தலையாய் - தங்களாலே, நோக்குதியேல் - கிட்டுவதற்கரியதாகும் துர்லபத்தன்மை. அனுபவித்தேவிடவேண் டுகையாலே-அனுபவித்தேவிடவேண்டும் என்ற நினைவாலே. விஷ ஹாரியின் பார்வையால் விஷம்தீருவதுபோல, க்ருஷ்ணன்நோக் காலே ஸம்ஸாரமாகிற விஷம் தீரும், எங்கள்மேல் சாபம் இழியும்.

பெருதேயுருவின எங்கள்பக்கல். (நோக்குதியேல்) தங்கள் தலையாய் கிட்டுவதொன்றன்றே. (எங்கள்மேல்சாபமிழிந்து) யாதநாசரீரம்போலேயும் சாபோபஹதரைப்போலேயும், விச்லேஷவ்யஸநமே படுகிறவெங்கள் து:கம் அநுபவித்தே விட வேண்டுகையாலே "சாபம்" என்கிறது. அன்றியே, விஷ

கார்கால ஆதித்யனுமன்றே "அதீவப்ரியதர்சநம்" என்கிறவனுடைய பார்வைக்கொப்பு. (இரண்டுங்கொண்டு) முழு நோக்குப் பொறுக்குமளவானவாறே "இரண்டும்" என்று சொல்லுகிறார்கள். (எங்கண்மேல் நோக்குதியேல்) உன் நோக்குப்பெருதே ஒருநீர்ச்சாவியாய் உருவின வெங்கள் பக்கலிலே. (எங்கள்மேல்) அவை இரண்டுகண்ணுக்கும் தங்கள்பக்கலிலேவிஷயமுண்டு.சேரவொட்டாதார்பக்கலிலே ப்ரதாபமும்,தங்கள்பக்கலிலே தண்ணளியும். [சீற்றத்தோடருள் பெற்றவன்] ஹிரண்யன்பக்கல் சீற்றஞ் செல்லாநிற்க ப்ரஹ்லாதனுக்கு அநுகூலமாயிருந்ததிறே கண்ணில் வாத்ஸல்யமிருந்தபடி. "ஸிம்ஹம் ஆனையோடே பொராநின்றாலும் குட்டிக்கு முலைகொடுக்குமாபோலே" என்று பட்டர். "குழவியிடைக் காலிட்டெதிர்ந்து பொரும்." "விழியாவோ" என்று தங்கள்மநோரதம்; "நோக்குதியேல்"என்றவிடம் முன்னிலை. (நோக்குதியேல்) தங்கள்தலையால் கிட்டுமதன்றே நோக்குத்தான் (எங்கள்மேல் சாபமிழிந்து) யாதநாசரீரம்போலேயும் சாபோபஹதரைப்போலேயும் உன்னைப்பெருதே வ்யஸநப்படுகிற து:கம்.

(எங்கள்மேல் சாபம்) பிறருடைய சாபம் உன்கடாக்ஷத்தாலே தீரும்;எங்களுடையசாபம் நீபோக்குதல் அநுபவித்து விடுதல் செய்யுமத்தனை. விச்லேஷவ்யஸநம் அநுபவித்தே விடவேண்டுகையாலே "சாபம்" என்கிறது. ப்ரஹ்ம சாபம் மார்பில்வேர்ப்பாலே போக்கலாம்; துர்வாஸாவினுடைய சாபம் மார்பிலிருக்கிறவளுடைய கடாக்ஷத்தாலே போக்கலாம்; கௌதமசாபம் காலில்பொடியாலே போக்கலாம்; தக்ஷசாபம் ஒருதடாகத்திலே முழுக்கிட்டுப்போக்கலாம்; எங்கள்சாபம் போக்குகைக்கு இத்தனையும்வேணும்;

ஹாரியானவன் பார்க்க விஷந் தீருமாபோலே, அவன்நோக் காலேஸம்ஸாரமாகிற விஷந்தீரும்; ஆகையால் அங்கணிரண்டுங் கொண்டெங்கள்மேல்நோக்குதியேலெங்கள்மேல்சாபம் இழியும் என்றந்வயம். ... ... உஉ

171. ஸ்வாபதேச வ்யாக்யாநம். இருபத்திரண்டாம் பாட்டு. (அங்கணித்யாதி) கீழ்ப்பாட்டில்-தங்களபிமாநசூந்யதையைச் சொல்லி, இப்பாட்டில்-தங்கள் அநந்யார்ஹ சேஷத்வத்தைச் சொல்லுகிறார்கள். வ்யா.— (அங்கணித்யாதி) அழகியதான இடங்களையுடைய மஹாப்ருதிவியை "தன்னது" என்றபிமானித்திருக்கிற ராஜாக்கள், அந்த அபிமாநமும்போய்வந்து, உன்னுடைய திருப்பள்ளிக் கட்டில் கீழே ஸங்கம் ஸங்கமாக விருப்பாரைப்போலே, நாங்களும் பக்நாபிமாநிகளாய்க்கொண்டு ஒருபடிப்படவந்து கிட்டப் பெற்றோம். (கிங்கிணியித்யாதி) அரைவடத்தில் கிண்கிணி போலே அர்த்த விகஸிதமான தாமரைப் புஷ்பம்போலேயிருக்கிற சிவந்த திருக்கண்மலர்களைப் பொறுக்கப்பொறுக்க உன்கடாக்ஷம் பெறாதே உறாவிக்கிடக்கிற நம்மேல் விழியாவோ. அதாவது - தேஹாத்மாபிமாநத்தை நீக்கி, அதுக்கு இசைந்தவாறே ஸ்வஸ்வாதந்த்ரியாபிமாநத்தை நீக்கி, அதுக்கு இசைந்தவாறே சேஷத்வத்தை யறிவித்து, அதுக்கு இசைந்தவாறே அந்யசேஷத்வ நிவ்ருத்தியை யுண்டாம்படி பண்ணி, அதுக்கு இசைந்தவாறே ஜ்ஞாத்ருத்வப்ரயுக்தமான ஸ்வஸ்வாமிநஸ்வ சேஷத்வ நிவ்ருத்தியை யுண்டாக்கி, அதுக்கு இசைந்தவாறே ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயத்தை நிவர்த்திப்பித்து, அதுக்கு இசைந்தவாறே உபாயாந்தரங்களை விடுவித்து, அதுக்கு இசைந்தவாறே ததேகோபாயனும்படி பண்ணி, அதுக்கு இசைந்தவாறே ஸ்வவ்யாபாரத்தில் ஸ்வா

---

வேர்த்து நின்றுவிளை யாடக்காணவேணும்; எங்கள்மேல் நோக்கவேணும்; பொடித்தான் கொணர்ந்து பூசவேணும்; இப்போதேஎம்மை நீராட்ட வேணும்.

சாபமிழிந்து-நோக்குதியேல்-வந்துதலைப் பெய்தோம்; எம்மேல் விழியாவோ. ... ... உஉ

கிகர்த்ருத்வ நிவ்ருத்தியைப்பண்ணுவித்து, அதுக்கு இசைந்த வாறே பாரதந்த்ரியப்ரதிபத்தியைப்பிறப்பித்து, அதுக்கு இசைந்தவாறே ஸமஸ்தகல்யாணகுணபரிபூர்ணனான தன்னை யநுபவிப்பித்து, அநுபவஜநிதப்ரீதிகாரிதகைங்கர்யத்தையுண் டாக்கி, அக்கைங்கர்யத்தில் ஸ்வபோக்த்ருத்வ புத்தியைத் தவிர்ப்பிக்கை. முழுநோக்குப் பெருமளவானவாறேயென் றது - இவ்வளவான பாகம் பிறந்தவாறே யென்றபடி. இப் படியல்லது தேஹாத்மாபிமாநிக்கு பரமபக்தியையுண்டாக்கி லும் உண்டாகாதிறே. (அங்கணித்யாதி) சந்த்ர ஸூர்யர்க ளிருவரும் உச்சிப்பட்டாற்போலே யிருக்கிற அழகிய திருக் கண்களிரண்டுங்கொண்டு, இவ்வளவான பாகம்பிறந்த வெங் களைக் கடாக்ஷித்தாயாகில். அதாவது-பரமபக்தியை யுண் டாக்குகை. அத்தால் (எங்கள்மேல் சாபமிழுந்து) மேல் அவச்யாநுபாவ்யமா யிருக்கிற விச்லேஷவ்யஸநம் தீரும்; ஆகையால் உக்தரீத்யா கடாக்ஷிக்கவேணுமென்று கருத்து. "திங்களுமாதித்தியனுமெழுந்தாற்போல்" என்றது, அவன் கடாக்ஷம் ஸுகரூபமாயும அஜ்ஞாந நிவர்த்தகமாயு மிருக் கையாலே. ... .... .... ... .... உஉ

## இருபத்துமூன்றும் பாட்டின் அவதாரிகை

**மூவாயிரப்படி**:—172. இருபத்துமூன்றும்பாட்டு. "வச ஸாஸாந்த்வயித்வைநம்" (175) என்று-ஸாபராதரைப்போலே

---

**ஆறுயிரப்படி**:— இருபத்துமூன்றும்பாட்டு. "சங்கமிருப் பார்போல்" என்று - பெண்கள் சொன்ன வார்த்தையைக்

பி. 172. "வசஸாஸாந்த்வயித்வைநம்" என்கிற 175-ம் பிர மாணம், சக்கரவர்த்தித்திருமகன் விபீஷணாழ்வானை, மதுரவாக் யம் சொல்லி சந்தோஷிப்பித்ததைப்பற்றியது. ஸாந்த்வநம் - நல்ல வார்த்தை. பனியும் குளிரும பாராமல், வீடுதோறும் சென்று எழுப்புகை, திருவாசல்காக்கும்முதலிகளை எழுப்புகை, நந்தகோபர் முதலானாரையும், தன்னையும் நப்பின்னையையும் எழுப்புகை முத லிய எளிவரவெல்லாம் தான் முற்பாடனாயிருந்து செய்யாமையா லன்றோ நல்லவார்த்தை சொல்லுகை.

ஸாந்த்வநம் பண்ணுபவனாகையாலே, பெண்களை ஸாந்த்வநம் பண்ணியருளினான்; அவ்வளவிலே நாங்கள் வந்தகாரியத்தைக் கேட்டருளவேணுமென்கிறார்கள்.

---

கேட்டு, "அநந்யகதிகளாய் வந்தோம் என்று சொல்லுவதே! நப்பின்னைப்பிராட்டி பரிகரமாயிருந்துவைத்து" என்று திருவுள்ளத்திலே போரப்புண்பட்டு, "பின்னை நெடும்பணைத் தோள் மகிழ்பீடுடை" என்று - அவளுடைய ஸம்பந்தமே நமக்கு எற்றமாக நமக்கு நல்லார்கள் சொல்லாநிற்கச் செய்தே, அவளோடே யொருகோவையாயிருந்துவைத்து நம்முன்னே யிப்படிசொல்லுவதே! நாமாரானோம்! என்று தன்னை நொந்துகொண்டு, பரமரிஷிகள் ஆர்த்தராய்வர, தன் காவற்சோர்வை நினைத்து ஸாபராதர் செய்தவற்றை நிரபேக்ஷரான பூர்ணர்பொறுக்குமத்தனையன்றோ, சர்ப்பபூதரென்று நினைத்திருக்கிறவுங்களால் வந்ததன்றே, உங்கள் வ்யஸநத்தைக் காண்கையாலும் அதுக்கடி நங்குற்றமாகையாலும் உங்களளவல்ல நமக்கு லஜ்ஜை, முதலிலே ரக்ஷகனானவனுக்குச் சென்று ரக்ஷிக்கவேணும; அதிலே ஆர்த்தரை "ஐயோ!" என்று வினவவேணும்; இப்படியிருக்க, நோவுபடுவிகோளும் அதுவந்து அறிவிப்பிகோளும் நீங்களாம்படி பிற்பாடரானோமே! அத்தை நீங்கள் பொறுக்கவேணும் என்று க்ஷமிப்பித்துக் கொண்டாப்போலேயும்; ஸ்ரீவிபீஷணாழ்வான், ராவணன்பின்னே பிறந்தவென்னை ஆராயாதே அருள்பாடிடுவதே! என்று தறையைப்பார்த்துக் கவிழ்ந்துநிற்க, அவன் லங்கையிற்பட்ட நெருக்கும் முதலிகளால்வந்த சிளுகுமெல்லாம் நம்மாலே வந்ததன்றோ, நீரிருந்தவிடத்திலே வந்து கொண்டுபோராதது நங்குறையன்றோ வென்று ஸாபராதரைப்போலே ஸாந்த்வநம் பண்ணினாற்போலேயும்; ஆண்கள் விஷயத்திலகப்பட இப்படி யிருக்கக்கடவ நாம், பெண்கள் வந்தெழுப்பப்பார்த்திருப்போமே! என்று பெண்களுக்கு இனிதாகச்சொல்லி, உங்கள் கார்யம் அழகிதாகச் செய்து தரக்கடவோம், செய்யவேண்டுவதென் சொல்லுங்கோள் என்ன; இங்ஙன் குன்றுங்குருச்சியாகக் கேட்டருளவொண்ணாது, பேரோலக்கமாக விருந்து கேட்டருளவேணுமென்று

மாரிமலைமுழைஞ்சில்மன்னிக்கிடந்துறங்கும்
  சீரியசிங்கமறிவுற்றுத்தீவிழித்து
வேரிமயிர்பொங்கவெப்பாடும்பேர்ந்துதறி
  மூரிநிமிர்ந்துமுழங்கிப்புறப்பட்டுப்
போதருமாபோலேநீபூவைப்பூவண்ணாவுன்
  கோயினின்றிங்ஙனேபோந்தருளிக்கோப்புடைய
சீரியசிங்காசனத்திருந்துயாம்வந்த
  காரியமாராய்ந்தருளேலோரெம்பாவாய்.

**பதவுரை** :—மாரி-மழைக்காலத்தில், மலைமுழைஞ்சில்-பர்வத குஹையிலே, பேடையும்தானும் ஒன்று என்னலாம்படி, மன்னி - ஒட்டிக்கொண்டு, கிடந்து படுக்கையிற்கிடந்து, உறங்கும் - தூங்காநின்றுள்ளதாய், சீரிய-வீரத்தன்மையாகிற சீர்மையையுடைத்தான, சிங்கம்-ஸிம்ஹமானது, அறிவுற்று-உணர்ந்துகொண்டும், எதிரிகள் பக்கல் சீற்றத்தாலே, தீ-அக்நிப்பொறிகள் சிதறும்படி, விழித்து - கண்களை விழித்துக்கொண்டும், வேரிமயிர் - உளைமயிரானது, பொங்க - சிலம்பும்படிக் கீடாக, எப்பாடும் - நாலுபக்கத்திலும், பேர்ந்து - புடைபெயர்ந்தும், உதறி-சரீரத்தை உதறிக்கொண்டும், மூரி-நன்றாகப் பெருமை தோன்ற, நிமிர்ந்து - நிமிர்ந்துகொண்டும், முழங்கி-சப்தித்துக்கொண்டு, புறப்பட்டு - குஹையினின்றும் புறப்பட்டு, போதருமாபோலே-வருமாபோலே, பூவைப்பூ - காயம்பூப் போன்ற, வண்ணா - திருநிறத்தை யுடையனே, நீ—, உன் - உன்னுடைய, கோயில்நின்று-கோயில்நின்றும், இங்ஙனே-இந்த மணி மண்டபத்துக்கு, போந்தருளி-எழுந்தருளி, கோப்புடைய - வெற்றியையுடைத்தாய்ப் பலவேலைப்பாடுகள் பொருந்திய, சீரிய-நினைத்த கார்யம் தலைக்கட்டிக் கொடுக்கையாகிற சீர்மையை யுடைத்தான, சிங்காசனத்து-ஸிம்ஹாஸநத்திலே, இருந்து - எழுந்தருளியிருந்து, யாம்-அநந்யப்ரயோஜநைகளான நாங்கள், வந்தகாரியம் - வந்தகார்யத்தை, ஆராய்ந்து-விசாரித்து, அருள் - க்ருபைசெய்தருளவேணுமென்று இரக்கிறார்கள்.

---

ஆஸ்தாநத்தில் புறப்பாடிருக்கும் க்ரமத்தை பாசுரப்பரப்பறக் கையோலைசெய்து கொடுக்கிறார்கள். ஆச்சான் "அகதிம் சரணாகதம்" என்று விண்ணப்பம் செய்ய; "நம்மிராமானுசனை யுடையையா யிருந்துவைத்து நம்முன்னே யிப்படி சொல்லப்பெறாய்" என்றார் அழகர்.

173. வ்யா.— (மாரிமலைமுழைஞ்சில்) வர்ஷாகாலம் ராஜாக்கள் படைவீடுவிட்டுப் புறப்படாதாற்போலே, ஸிம்ஹமும் வர்ஷாகாலம் மலைமுழைஞ்சு விட்டுப் புறப்படாது ; பெருமாள் வர்ஷாகால்ம் மால்யவானிலே எழுந்தருளி யிருந்

---

வயா.—(மாரி) வைரங்கொள்ளும் மார்க்கங்களும், "ஸலிலேநஸமீக்ருதா:" என்னும்படி தேசமடைய ஒரு நீர்க்கோப்பாக வர்ஷம்பெய்து, வழிகளெல்லாம் தூறெழுந்து ஸஞ்சார யோக்யதையின்றியிலே யொழிகையாலே, ராஜாக்களும் தந்தாம் சத்ருக்கள்பக்கல் த்வேஷங்களையும் மறந்து எடுத்துவிடுகையையுந் தவிர்ந்து, கைகழியப்போனவர்களும் வர்ஷாவாகப்புகாநின்றது என்று தந்தாம் வீடுகளைக்குறித்து வந்துநின்று, நாலுமாஸமும் உகந்தவிஷயங்களோடே கூடியிருக்கும்படியாயிறேயிருப்பது. மஹாராஜரும் தாரையுடைய ஸ்தநோஷ்மாவைப் பற்றிக்கிடந்து பெருமாளோடே பண்ணின ஸமயத்தையும் மறந்தபடியாலே பெருமாளும் சீறி, " ஸபாந்தவமாக அறுக்கக்கடவோம் " என்று இளையபெருமாளுக்கு அருளிச்செய்துவிட ; அவரும், கிஷ்கிந்தை வாசலிலே சிறுநாணெறிய; நின்ற திருவடியைப்பார்த்து, போக்கடிசொல் என்ன ; அவனும், " தீரக்கழிய அபராதம் பண்ணின வுனக்கு ஓரஞ்சலி நேராமல்போகாது" என்ன; தான் ஸாபராதனாகையாலே நேர்கொடு நேர்புறப்படமாட்டாமையாலே தாரையைப் புறப்படவிட; அவளும் உமக்குக்கோபகாரணமென், உமக்கு கோபத்துக்குப் போருவாரும் உண்டோவென்று பொறுப்பித்துக் கொள்ளும்படி பண்ணுங் காலமிறே வர்ஷாவாகிறது. பெருமாள்தானும், மால்யவானிலே யெழுந்தருளியிருந்து ஸலிலாதி பாரத்தை வஹித்துக்கொண்டு ரத்நைத்யுக்தங்களான ஆனைகள்போலே

---

பி. 173. மாரி - மழைக்காலம்போலே, மார்கழித்திங்களும் விச்லேஷித்தார் சம்ச்லேஷிக்கவும், சம்ச்லேஷித்தார் ரசிக்கவும் தக்ககாலம் என்பது உட்கருத்து. ஐச்வரமானதேஜஸ்ஸாவது விரோதிநிரஸனம் பண்ணும்போது, நியமனத்தால்வந்த நிக்ரஹஸாமர்த்யம்.

தாற்போலே. விச்லேஷித்தார் கூடுங்காலமுமாய் கூடியிருந்தார் போகரஸமநுபவிக்கும் காலமுமாயிருக்க, நாங்கள் உன் வாசலிலே நின்று துவளக்கடவோமே என்கை. (மன்னிக்கிடந்து) மிடுக்காலே யொருவர்க்கு மஞ்சவேண்டாமை யாலே மலைக்குவடுபோலேபொருந்தி விசுவில்லிட்டு எழுப்பி

---

கிளம்பி நீர்க்கனத்தாலே மலைக்கொடு முடிகளிலேபடிந்து லோபாநபங்க்திகள் படுத்தாற்போலே கிடக்கிற கிடையைக் கண்டு, அர்ச்சிராதிகதியாலே பரமபதத்துக்கு ஏறுவாரைப் போலே, இவற்றிலே யடியிட்டு ஆகாசத்திலே யேறி, பற்றுக்கொள்ள வேண்டாதபடி, நினைத்தபடி அள்ளிப்பரிமாறலாம்படி யிருக்கிற இக்காலத்துக்கு அடைத்த பூக்களைக் கொண்டு ஆதித்யாந்தர்வ்ருத்தியான பெரியபெருமாளை ஸமாராதநம் பண்ணலா யிருந்தது, எடுத்துக் கைநீட்டுவா ரில்லையாயிற்றே! என்கிற இழவோடே வர்ஷாகாலத்திலிருக்கும்படிகளெல்லாமருளிச் செய்தாரிறே. (மாரி) பிரிந்தார் கூடுங்காலம், கூடினார் போகரஸமநுபவிக்குங்காலம், புஜிக்கிறவர்கள் கைநெகிழில் உடம்புவெளுத்து அணையுங்காலம். (மாரி) பெண்டுகளோடே மேகம் அறையிடும்காலம், பிரிந்தார் கொடுமை குழறுங்காலம், கலந்தார் வரவெதிர்கொள்ளுங்காலம், பெண்ணீர்மையீடழிக்குங்காலம். (மாரி) ஸிம்ஹங்களும் எதிரிகளான ஆனைகளின் வாசலிலே நின்று பிளிறவும், அது செவிப்படாதே தனக்கு ஒரு விரோதி யில்லையென்று பர்வதகுஹைகளைப் பற்றிக்கிடந்துறங்குங்காலம். இனியிவர்களுக்கு ஊராருமிசைந்து அவர்கள் ஒரோவிடங்களிலே யடங்கவும் பெற்று இவர்களுக்கு பலம்கொடுக்கிற க்ருஷ்ணனும் நப்பின்னைப் பிராட்டி கட்டிலிலே புறங்கி, இவர்கள் சென்றெழுப்பவேண்டும்படியான காலமிறே. (மலைமுழைஞ்சில்) ஸிம்ஹந்தான் மலைக்கு ஆபரணமாயிறே யிருப்பது; இவனும், நப்பின்னையினுடைய துங்கஸ்தநகிரிதடியிலே ஸ்தநாபரணம்போலே தங்குகிறானிறே.

(மன்னிக்கிடந்து) மிடுக்காலே ஒருவர்க்கு அஞ்சவேண்டாமையாலே மலைக்குவடுபோலே பொருந்தி விசுவில்லிட்

னாலு மெழுப்பப் போகாதிருக்கை. (பன்னிக்கிடந்துறங்கும்) தன்பேடையோடே ஏகவஸ்து என்னலாம்படி பொருந்திக் கிடக்கிற என்றுமாம். இங்கு " நப்பின்னை கொங்கைமேல் வைத்துக்கிடந்த மலர்மார்பா " என்று நப்பின்னைப் பிராட்டிக்கு ஓராபரண மென்னலாம்படியிறே முலையோடே பொருந்திக்கிடக்கிறபடி. (உறங்கும்) ஸம்ஸாரிகளுறக்கம் போலே தமோபிபூதியாலன்றே யிவனுறக்கம்; வ்யதிரேகத்தி லாற்றுதார் வருமளவும்; ஆகையால் அவ்வுறக்கத்துக்கு ஸ்மாரகமா யிருக்கை. (சீரியசிங்கம்) உறக்கத்திலும் க்ஷுத்ர

---

டெழுப்பினாலும் கிளப்பப் போகாதபடி ஒட்டிக்கொண்டு கிடக்கை. அன்றிக்கே, தன் பேடையோடே ஏகவஸ்து என்னலாம்படி பொருந்திக்கிடக்குமென்றுமாம். "வைத்துக் கிடந்த மலர்மார்பா" என்னும்படியிறேகிடக்கிறது; "அடங்க வஞ்சிறைகோலி " என்னுமாபோலே. (கிடந்துறங்கும்) ஸ்பர்சஸாகம் மயக்கினபடியொழிய தமோகுணபிபூதமாய் உறங்குகிறதன்றே இவனுறக்கம், தன்னாலல்லது செல்லாதே வ்யதிரேகத்தில் ஆற்றுதார்வருமளவும் குறுவிழிகொள்ளுகையிறே. (உறங்கும்சீரியசிங்கம்) உறங்காநிற்கச்செய்தே கிட்டமாட்டாதே க்ஷுத்ரம்ருகங்கள், கண்டகாட்சியிலே மண்ணுண்ணும்படி வீரஸ்ரீயையுடைத்தான லிப்ஹம். ஸாகஸாப்தி பண்ணாநிற்கச்செய்தே எதிரிகள் தபிக்கும்படி கிடக்கையாலே உணர்த்திகொள்ளுங் கார்யத்திலும் உறக்கமே நன்றாயிருக்க, என்றியவுணர்த்தினோம் என்னும்படி மடிகொடுத்சார் துடிக்கும்படியிறே யிவனுடைய உறக்கமிருப்பது. (சீரியசிங்கம்) "ம்ருகேந்த்ரன்" என்றும், "ம்ருகராஜன்" என்றும் ஒருத்தர் முடிசூட்டவேண்டாதே,பிறப்பேநிரங்குசமான வைபவமுண்டாகை. (சீரியசிங்கம்) நரஸிம்ஹம்போலே கலந்து கட்டியாய்ச் சீர்மை கெட்டிராதே சிற்றாயர் சிங்கத்துக்கு.

(அறிவுற்று) மேலிடவல்ல தொன்றில்லை, கிட்டி எழுப்ப வல்லாரில்லை, காலமுணர்த்த வுணருமத்தனையிறே. (அறி

ம்ருகங்கள் மண்ணுண்ணும்படி வீரஸ்ரீயை யுடைத்தாயிருக்கை. "ஸமயாபோதிதஸ்ரீமாந்" (137) என்னும்படிக்கு ஸமாரசமா யிருக்கை. (அறிவுற்று) பூவலர்ந்தாற்போலே காலமுணர்த்த வுணருகை. ஸம்ஸாரிகள் காலமுணர்த்த வுணருவர்கள்; இவன் ஆச்ரிதரார்த்தியுணர்த்த உணரும். (தீவிழித்து) ப்ரதமகடாக்ஷஸந்நிபாதத்திலே பேடைக்கும் அருகு நிற்க வொண்ணாதிருக்கை. ஐச்வரமான தேஜஸ்ஸு முன் ஒருவர்க்கும் நிற்கவொண்ணா திருக்கை.

---

வுற்று) அறிவில்லாததொரு பதார்த்தத்துக்கு அறிவு புகுந்து நடையாடினாற்போலேயிருக்கை. ஆச்ரிதார்த்தமாகவுணர்ந்த போதிறே இவன் அறிவுடையனானவது. பூவலர்ந்தாற் போலேகால முணர்த்தவுணர்ந்தபடி. (தீவிழித்து) "நம்மெல் லைக்குள் புகுந்தாரார்"என்னுமாபோலே, பார்க்கும் பார்வை யிலுள்ள வெம்மை. ப்ரதமகடாக்ஷ ஸந்நிபாதத்தில், ஸர்வ காலமும் அணையும்பேடைக்கும்குட்டிகளுக்கும் அணைய வொண்ணாதிருக்கை. "பூங்கோதையாள்வெருவ" "வானோர் கலங்கியோட" என்னும்படியிறேகோபித்து விழித்தால் எரிவட்டக் கண்களாலே ஐச்வரமான தேஜஸ்ஸு ப்ரவஹிக் கும்படி. ஐந்தலைப் பாம்போடே விளையாடுகிறவனோ, பாண்டவ ஸாரதி க்ருத்தனால் பிழைக்கிறவனோ என்று, சிவக்கப்பார்த்தால் ப்ரஹ்மருத்ராதிகளாலும் நோக்கவொண் ணாதபடியிறே யிருப்பது. (தீவிழித்து) இவனைக்கொண்டு வேறொரு ப்ரயோஜநங் கொள்ளுமவர்க ளன்றிக்கே, இவ னிருந்தபடியே உத்தேச்யம் என்றிருக்கு மவர்களாகையா லும், "கொண்டசீற்றம்" என்று - ஆச்ரிதார்த்தமானசீற் றத்தை "நீயுண்டு"என்று நினைத்திருக்குமவர்களாகையாலும் ஏதேனுமாகஇவன்செய்கை இவர்களைநைவிக்கையாலும், "சீரியசிங்கம்" என்றதோடு, "அறிவுற்று" என்றதோடு, "தீவிழித்து" என்றதோடு வாசியற இவையெல்லாம் போக் யமா யிருக்கிறபடி. "இவையா, இவையா" என்று தனித் தனியே ஆகர்ஷகமிறே.

174. (வேரிமயிர்பொங்க) வேரி - பரிமளம். ஜாத்யுசித மான கந்தம். உளைமயிர், பொங்க - சிலும்ப. "ஸர்வகந்த:" (145) என்னும்படிக்கு ஸ்மாரகமா யிருக்கை. (எப்பாடும் பேர்ந்துதறி) ஒருகாரியப்பாடு இல்லாமையாலே நாலுபா டும் பேருகிறபடி. (உதறி) அவயவங்களைத் தனித்தனியே உதறினபடி. (மூரிநிமிர்ந்து) உடலொன்றாகநிமிர்ந்தபடி. (முழங்கி) ஸ்வவ்யதிரிக்த ம்ருகங்கள் முழுக்காயாக அவிந்து

---

(வேரிமயிர்பொங்க) பரிமளத்தை யுடைத்தான உளை மயிர்களானவை சிலும்ப. (வேரிமயிர்) ஸிம்ஹத்துக்கு ஜாத் யுசிதமான கந்தம். "ஸர்வகந்த :" என்கிறவிஷயமாகை யாலே உபமேயத்திலுள்ளதெல்லாம் உபமானத்திலே யிட்டுச் சொல்லக்கடவதிறே. தண்டுழாய் விரைநாறக்கடவதிறே. (எப்பாடும் பேர்ந்து) அறிவுகலந்து நடையாடச் செய்தேயும் நித்ர பாரவச்யத்தாலே வந்த கலக்கத்தாலே ஒருகார்யப் பாடற நாலுபாடும் பேருகிறபடி. (உதறி) உறங்கும்போது அவயவங்களைச்சேர இட்டுக்கிடக்கையாலே வந்த திமிர்ப்புப் போம்படி அவயவங்களைத் தனித்தனியேஉதறி.

(மூரிநிமிர்ந்து) உலாவுகைக்கு சரீரம் விதேயமாகைக் காக அவயவியான வுடலை யொன்றாக நிமிர்த்து. (முழங்கி) இதர க்ஷுத்ரம்ருகங்கள் கிடந்தவிடத்திலே முழுக்காயாக அவிந்துகிடக்கும்படி. (முழங்கி) மேகம்போன்ற க்ருஷ்ண னுடைய முழக்கம் எதிரிகளை மண்ணுண்ணும்படி பண்ணி பெண்கள்வந்து எதிர்கொள்ளக்கடவதாயிருக்கும். (புறப் பட்டுப் போதருமாபோலே) கிரிகுஹரத்தில்நின்றும் இப்ப டிப்பட்டதொரு ஸிம்ஹம் புறப்பட்டு ஸ்வைரஸஞ்சாரம் பண்ணுமாபோலே இங்ஙனே போரவேணுமென்கிறார்கள். பெண்காள்! நம்மை ஸிம்ஹம் புறப்படுமாபோலே புறப் படவோ சொல்லுகிறது, ராகவஸிம்ஹமாய்ப்புறப்படவோ? நரஸிம்ஹமாய்ப்புறப்படவோ? என்ன; உன்னுடைய

---

பி 174-உளைமயிர் - பிடரிமயிர், நாலுபாடும்-நான்குபக்கமும், முழுக்காயாக-முழுமையுமாக. நம்பெருமாள் நடையழகிலே ஸிம்ஹ கதி ப்ரஸித்தம்.

கிடக்கும்படி. பெண்கான் வந்திகோளோ வென்கை. ஶ்ரீ நிமிர்ந்து முழங்கிப்புறப்பட்டுப் போதருமாபோலே நீ போர வேணும். ஸிம்ஹமோ நமக்கு த்ருஷ்டாந்தமென்ன ; (நீ பூவைப்பூ வண்ணா) காம்பீர்யத்துக்கு த்ருஷ்டாந்தமாக ஒன் றைச் சொன்னோமித்தனை, வடிவழகையும் நிறத்தையும் உன் னைப்போலே பண்ணப்போமோ. பூவைப்பூவின் நிறம் உனக்கு த்ருஷ்டாந்தமான வன்றிறே

பேன்மை அந்யாயத்தமன்றென்கைக்காகவும், ஸ்வாபாவிக மான சௌர்யத்துக்கும் காம்பீர்யத்துக்கும் ஸிம்ஹத்தை த்ருஷ்டாந்தமாகச் சொன்னோ மித்தனையல்லது ஸிம்ஹம் போலே யென்றோமோ வென்ன, ஹிரண்ய ராவணாதிகள் முன்னே நிற்குமாபோலே நிற்கவோ தேடுகிறது பிரானே.

(நீபூவைப்பூவண்ணா) உன்னை நீயறியவேண்டாவோ. எதிரிகளான சிசுபாலாதிகள் முன்னே நிற்கிலும் இவ்வழகு குலையாமே நிற்குமவனல்லையோ நீ. ஸிம்ஹத்தால் உன்னு டைய வடிவழகையும் குளிர்த்தியையும் ஸௌகுமார்யத்தை யும் ஏறிட்டுக் கொள்ளப்போமோ. உன்வடிவுக்குப்பூவைப் பூவை ஓராகாரத்துக்கு த்ருஷ்டாந்தமிடுகிறமாத்ரம் சௌர் யாதிகளுக்கு ஒருபோலி சொன்னோமித்தனையன்றோ, பிரிந் தார்க்குப்பிழைக்கவொண்ணாதபடி வடிவுபடைத்ததோ அது. (பூவைப்பூவண்ணா) வண்டருப்பூவைதான் கண்ணனார் வடி வுக்கு ஸ்மாரகமாயிறே யிருப்பது. வடிவைக்கொண்டாடா நின்றிகோள், உங்களுக்கு அநுபவிக்கவாசையாகில்உள்ளே புகுருங்கோளென்றான் ; (உன்கோயில் நின்றிங்ஙனே) எங் களை உள்ளே யழையாதே நீதான் உள்ளில்நின்றும்புறப்பட் டாலோ. படுக்கைத் தலையிலே எடுத்துக்கைநீட்டுவித்துக் கொள்ளுமளவன்று, எங்களை அழகோலக்கத்தே அடிமை கொண்டருளவேணும். (பூவைப்பூவண்ணா உன் கோயில் நின்று) இவ்வடிவழகையெல்லாம் இட்டளத்தில் வெள்ள மாக்குகிற தென்.

(உன்கோயில்) " நந்தகோபனுடைய கோயில் " என் றார்கள்-கீழே; இங்கே-"உன்கோயில்" என்கிறார்கள். வாஸ

த்ருஷ்டாந்த மாவதென்னவுபாம். (உன்கோயில் நின்று இங்ஙனே போந்தருளி) "பர்வதாநிவ நிஷ்க்ரம்ய ஸிம்ஹோ கிரிகுஹாசய:" (176) என்று - பிராட்டி மங்களாசாஸநம் பண்ண ஸுமந்த்ரனோடே புறப்பட்டாற்போலே காணவேணும். (போந்தருளி) சதுர்க்கதியிறே;—நடையிலே, ரிஷபத்தினுடைய செருக்கும், மத்தகஜத்தினுடைய மதிப்பும், புலியினுடைய சிலிட்கும, ஸிம்ஹத்தினுடைய பராபிபவந ஸாமர்த்யமும் தோற்றியிருக்கை. நமக்கு இவையெல்லாம் நம்பெரு

பூமி யொன்றாய், அது இருவர்க்கும பொதுவாயாய்த்திருப்பது. இவன் வர்த்திக்கும கோயிலுக்கு சேஷசேஷிகளுடைய ப்ரதாநயங் கொள்ளக்கடவதிறே ப்ரணவம்போலவும்-ஹ்ருதயகமலம்போலவும்; "திருவரங்கம் நம்மூர்," "எம்பெருமான்கோயிலென்றேற்கு இதுவன்றே எழிலாலி" என்னக்கடவதிறே. (இங்ஙனேபோந்தருளி) பெருமாள், திருமாளிகையில்நின்றும்ஸுமந்த்ரனைக்கையைப்பிடித்துக்கொண்டு, பிராட்டி பின்தொடரப் புறப்பட்டாற்போலே. ஞாலத்தாடே நடக்கவொண்ணாது. (இங்ஙனே) எங்கள்முன்னே நடக்கவேணும். எங்களுக்குத் தனியே சில நிர்ப்பந்தமுண்டு காண், கண்வளர்ந் தருளினபடி கண்டு வாழ்ந்தோம், இனி நடையழகுகண்டு வாழவேணும். நடைச்சக்ரவத்துப்பிடிக்க வாம்படியிறே இந்நாலடியுமிருப்பது. க்ருஷ்ணனுடையலளிதகதியை அநுகரித்துதரிக்கத்தேடுகிறவர்கள் தாங்களுட்பட, கண்ணுடையாரடங்கலுங் கண்டுவாழுங்கோ ளென்னும் படியிறேயிருப்பது, "கானகம்படியுலாவியுலாவி" என்று- க்ருஷ்ணன் நடக்கும்போது ஆடல்பாடல் மறக்கக்கடவதிறே அப்ஸரஸ்ஸுக்களுள்பட ஆடுமதுகண்டு. [கைதொழுவிதிவருவான்] காலும் நடையும்கண்டு கையெடுப்பார் மடலெடுப்பாரவர்களிறேபெண்கள். (போந்தருளி) சதுர்க்கதியிறே ;— ரிஷபத்தினுடைய செருக்கும், மத்தகஜத்தினுடைய திமிர்ப்பால் வந்த பிசுகுதலும், புலியினுடைய சிலிட்குடைமையால்வந்த உறட்டுதலும், ஸிம்ஹத்தினுடைய பேணிப்பால்வந்த பராபிபவநமும். "ஆயர்பாடி கவர்ந்துண்ணும் காரேறு," "வாரணம் பையநின்றூர்வதுபோல்,"

மாள் நடையழகிலே காணலாம். (இங்ஙனேபோந்தருளி) படுக்கையில் வார்த்தையாய்ப் போகாமே, மணிமண்டபத்தின் வார்த்தை யாகவேணும்.

175. (கோப்புடைய) சராசரங்களையடையத் தொழிலாக வகுப்புண்டிருக்கை. உபய விபூதியும் தொழிலாக வகுப்புண்டிருக்கை என்னவுமாம். தர்மஜ்ஞாநாதிகளாலும், அதர்மாஜ்ஞாநாதிகளாலும் கோப்புடைய ஸிம்ஹாஸநமென்றுமாம். (சீரியசிங்காசனம்) இந்தஸிம்ஹாஸநத்திலேயிருந்து நினைப்பிட்டது என்றால் அறுதியாயிருக்கை.

---

"சிற்றுயர்சிங்கம்" என்கிற க்ருஷ்ணனுக்குச் சொல்லவேணுமோ "புருஷர்ஷப:" "ராமசார்த்தூலம்" "மத்தமாதங்ககாமிநம்" "ஸிம்ஹவிக்ராந்தகாமிநம்" என்று சக்ரவர்த்திப் பிள்ளையுள்பட விருதுபிடியாநிற்க. இவையெல்லாம் நமக்கு நம்பெருமாள் நடையழகிலே காணலாம்.

போந்துகேட்குமித்தனையன்றோ கார்யம் வேண்டுவது என்றான்; (கோப்புடையசீரியசிங்காசனத்திருந்து) படுக்கையில்வார்த்தையாகவொண்ணாது. (கோப்புடைய) உபய விபூதியிலுண்டான சராசரபதார்த்தங்களையடங்கலும்தொழிலாக வகுப்புண்டிருக்கை. (சீரியசிங்காசனம்) சீரியசிங்கத்துக்கு ஸத்ருசமான ஆஸநம். (சீரிய) பெண்களுக்கு பொய் குறிக்கும் க்ருஷ்ணனேயாகிலும் இவ்வாஸநத்திலே யிருந்தால் பொய்சொல்லவொண்ணாதே. சொன்னது அமோகமாயிருக்கை. ஆஸநத்துக்குச் சீர்மையாவது-கடற்கரை வெளியிலே வாநரஸகாசத்தில்வார்த்தை போலேயும், பூசல்களரியில் தேர்த்தட்டில் வார்த்தைபோலேயும், பெண்கள் திரளிலே திவ்யஸிம்ஹாஸநத்திலே யிருந்துபொய்நம்பியான க்ருஷ்ணன் சொன்னதேயாகிலும் ஆஸநவிசேஷத்தாலே பழுதுபோகாதபடியாயிருக்கும். தர்மாஸநத்திலே யிருந்தால் தோற்றிற்றுச் சொல்லவொண்ணாதிறே. இதுதான்

---

பி. 175-அறுதியாயிருக்கை - பழுதுபோகாமலிருக்கை, இங்ஙனே சொல்லவொண்ணாது-ஏகாந்தமாகச்சொல்லவொண்ணாது.

கடற்கரையில்வார்த்தை யென்னுமாபோலேயும், தேர்த்தட்டில்வார்த்தை யென்னுமாபோலேயும், பெண்களும் க்ருஷ்ணனுமேயாயிருந்து சொல்லிலும் அமோகமாயிருக்கை. ஓரணுவாகிலும் க்ருஷ்ணனோடொத்த வரிசையைக் கொடுக்கவற்றான ஸிம்ஹாஸநமென்றுமாம். (இருந்து) நடையழகு போலே இருப்பில் வேண்டற்பாட்டையும் காணவேணுமென்கை. "கண்ணிணை குளிரப்புதுமலராகத்தைப்பருக-இருந்திடாய்" என்னுமாபோலே உன்னைக்காணவிடாய்த்த கண்களின்விடாய்கெட்டு அநுபவிக்கலாம்படி இருந்து(யாம் வந்தகாரியம் மாராய்ந்தருள்) அநந்யப்ரயோஜநைகளானநாங்கள் வந்தகாரியமாராய்ந்தருளவேணும். "உபஸ்தேயை ருபஸ்தித:" (75) என்று ஸ்ரீதண்டகாரண்யத்தில் ரிஷிகளுடைய து:க நிவ்ருத்திக்கு நாம் முற்பாடராகப் பெற்றிலோமென்று

---

தர்மாதிபீடமிறே. ராஜாக்கள் மெய்க்காட்டுக்கு, இன்ன மண்டபத்திலே இன்னஆஸநத்திலே யிருந்து நினைப்பிட்டது என்றால் தப்பாதாற்போலே.

(உன்கோயில் நின்று இத்யாதி) நம்பெருமாள், கோயிலாழ்வாரில் நின்றும் புறப்பட்டருளி, பெரியதிருமண்டபத்திலே சேரபாண்டியனிலே நாய்ச்சிமாரோடே கூடவிருந்து நினைப்பிட்டது என்றால் தப்பாதாற்போலே. (சீரியசிங்காசனம்) ஓரணுசென்று அடியிடிலும் க்ருஷ்ணனோடு ஸாம்யாபத்தியைக் கொடுக்கும் ஆஸநம். "இருந்தால் சிங்காசனமாம்" என்கிற ஆஸநத்திலேஏறலிறே தங்களுக்குக் கணிசம். கண்வளருகிறபோதையழகும் உலாவுகிறபோதை யழகும் கண்டால், இருக்கும்போதையழகும் காணவேணுமிறே; "இருந்தமை காட்டினீர்" என்றிறே உத்தேச்யம். "தடங்கொள் தாமரைக்கண் விழித்து-உன் தாமரைமங்கையும் நீயும் இடங்கொள்மூவுலகுந்தொழவிருந்தருளாய் திருப்புளிங்குடிக் கிடந்தானே!" கிடந்தமைகண்டாலும் நடந்தமைகண்டாலும் கண்களின் விடாய் கெட்டுக்குளிராது, கண்ணிணை குளிரப் புதுமலராகத்தைப் பருகவிருந்திடாய். சீரியசிங்காசனத்திருந்து) நாங்கள் சுற்றும் ஓலக்கமிருக்க

வெறுத்தாற்போலே, பெண்கள் நோவுபடப் பார்த்திருந்தோ மாகாதே! என்று வெறுத்து, அவர்களை யழைத்து உங்களுக் குச் செய்ய வேண்டுவதென்னென்ன; இங்ஙனே சொல்ல வொண்ணாது, பேரோலக்கமாகவிருந்து கேட்டருள வேணு மென்கிறார்கள். நப்பின்னைப்பிராட்டி பரிக்ரஹமா யிருக்க "சங்கமிருப்பார்போல்வந்து தலைப்பெய்தோம்" என்று - அநந்ய கதிகளாகச் சொல்லுவதே! என்று பொறுத்திலன்; அழகர் கிடாம்பியாச்சானையருள்பாடிட்டு "ஒன்றுசொல் லிக்காண்" என்ன; "அபராதஸஹஸ்ரபாஜநம்" (177) என்று தொடங்கி, - "அகதிம்" (177) என்ன; நம்பிராமாநுசனை உடையையாயிருந்துவைத்து, "அகதிம்" என்னப்பெறுப் என்று அருளிச்செய்தார். ஆகையாலே இருப்பில் வேண் டற்பாட்டையுங்காணவேணும் என்று வந்த காரியத்தை "சிற்றஞ் சிறுகாலைக்கு" வைக்கிறார்கள், இப்போது சொல்

---

நீஸிம்ஹாஸநத்திலே யிருந்தாலன்றோ, "பல்லாயிரம் பெருந் தேவிமாருடனே-எல்லாருஞ் சூழச் சிங்காசனத்தேயிருந்தா னைக் கண்டவர்களுண்டு" என்கிற ப்ரஸித்தி யுனக்குப் படைத்கலாவது. (இருந்து) காவலுங்கட்டுமாய் "நில்" என் பாரின்றிக்கே, நினைத்தபடி அநுபவிக்கலாம்படி யிருந்த விருப் பிறே.

(யாம்வந்த) எங்களை அறிவுதியிறே, நீவர விருக்குமவர்க ளன்றோ நாங்கள். (வந்த) விரஹதௌர்ப்பல்யத்தாலே கால் நடைதாராத நாங்களன்றோ வந்தோம். (காரியம்) கார்ய மின்னதென்னுவிடுகிறது, அவஸரத்திலே சொல்லவேணு மென்று நினைத்து. ஸ்ரீபரதாழ்வான் தம்மோடொக்க ஆர்த்த ராவ ரெல்லாரையுந் திரட்டிக்கொண்டுசென்று திருவடிக ளிலே விழ இரங்குவரென்றுவர, அவன் நினைத்துவந்ததுக்கு அவஸரமில்லாமையாலே அனுகவொண்ணாதபடியிருந்து திருவடிநிலைகளைக் கொடுத்துவிடும் ஸ்வதந்த்ரனாகையாலே இப்போது சொல்லுவோமல்லோம், இன்னம் இரண்டடி புகுநின்றவாறே "உற்றோமேயாவோம்" என்கிறோம் என்று கார்யமின்னதென்னுமிடத்தை "சிற்றஞ் சிறு

வாதே. அதுக்கடியென்னென்னில்; அவஸரத்திலே சொல்ல வேணுமென்று நினைத்து. அதாவது-"ஏபிச்சஸசிவைஸ்ஸார்த்தம் ஸிரஸாயாசிதோமயா" (178) என்று-அவர்களுடைய ஆர்த்தியையுங் காட்டித் திருவடிகளிலே சென்று விழ இரங்குவர்காணென்று நினைத்துவந்த ஸ்ரீபரதாழ்வானுக்கும்,"அபித:பாவகோபமம்"(179) என்று அவன் நினைத்து வந்ததுக்கு அந்த அவஸரமில்லாமையாலே அநபிபவநீயராளுராகையாலே அவஸரத்திலே சொல்லக்கடவோமென்றிருந்தார்கள். (ஆராய்ந்தருள்) நீங்கள் என்பட்டிகோள்! என் செய்திகோள்! என்கை. அதாவது-பெண்களை எழுப்புவது, வாசல் காப்பானை யெழுப்புவது, ஸ்ரீநந்தகோபருள்ளிட்டாரை யெழுப்புவது, நம்மை யெழுப்புவதாய், போரவ்யஸநப்பட்டிகோளாகாதே! என்கை. எதிர்சூழல்புக்குத்திரியுமவனுக்கு இவையெல்லாம் தன்குறையாகத் தோற்றுமிறே உங

176. ஸ்வாபதேச வ்யாக்யாநம். இருபத்து மூன்றும் பாட்டு. (மாரி இத்யாதி) இப்பாட்டில், "வசஸாஸாந்த்வயித்வைநம்" என்கிறபடியே-பெண்காள்! என்செய்திகோள்! என்பட்டிகோள்! என்று பெண்களை எழுப்புவது, கோயில் காப்பான் முதலானரை எழுப்புவது,நப்பின்னைப்பிராட்டியை

---

காலைக்கு" வைக்கிறார்கள். (காரியம்) ஸ்வஸ்ரூபாபத்தியளவு மிறே விதிக்குவிஷயமுள்ளது, அவ்வருகுபரிமாற்றத்தால் வருமவையெல்லாம் ப்ரமாணவிஷயமாய்ப்பேச்சுக்கு நிலமாயிராதே, அதுதானும் காரியவறுதிபிறந்தாலிறே சொல்லுவது. (ஆராய்ந்தருள்) நாம் போமிடந் தேடிக் காலம்பார்த்து எதிர்சூழல்புக்கு புருஷகாரமாகப்பற்றி, நாம்படுவதெல்லாம் நீங்கள் படுவதே! நீங்களென்செய்திகோள்! என்பட்டிகோள்! என்று ஆராயவேணும். பெண்காள்! ஒருவரை ஒருவரெழுப்பி எல்லாருந் திரண்டு நம்வாசற் காக்குமவனை யெழுப்பி, ஐயரை எழுப்பி, ஆய்ச்சியை எழுப்பி, நம்மை எழுப்பி, அண்ணரை எழுப்பி, மீளவும் நம்மையெழுப்பி, போர வ்யஸநப்பட்டிகோளே! என்று திருவுள்ளம்பற்றி க்ருபைபண்ணி யருளவேணும். ... ... உக

எழுப்புவது, நம்மை எழுப்புவதாக பஹூச்ரமப்பட்டி கோளே, உங்களுக்கு நான்செய்ய வேண்டுவதென் என்ன; பேரோலக்கமாய் ஸிம்ஹாஸநத்திலேயிருந்து கேட்டருள வேணுமென்கிறுர்கள். வ்யா. (மாரியித்யாதி) வர்ஷாகாலத்தில் பர்வதகுஹையிலே பர்வதசிகரமென்னலாம்படி, தன் பேடையோடே ஏகத்ரவ்யமென்னலாம்படி கிடந்துறங்கு மத்தசைதன்னிலும் க்ஷூத்ரம்ருகங்கள் முழுக்காயாயவிய லாம்படி பராபிபவந ஸாமர்த்யத்தையுடைய ஸிம்ஹமானது காலமுணர்த்த வுணர்ந்து, ப்ரதமகடாக்ஷத்திலே பேடைக்கும் அணுகவொண்ணுதபடி க்ரூரமாகவிழித்து, ஜாத்யுசித கந்தம் மயிர்க்கால்தோறும் அபிவ்ருத்தமாக நாலு பார்ச்வத்திலும் துல்யமாக வெழுந்திருந்து, அவயவங்களைத் தனித்தனியே உதிர்த்து, முன்னும் பின்னும் ஏகரீதியாய் நீண்ட முதுகு உயரும்படி நிமிர்ந்து, கர்ஜித்து குஹையில் நின்றும் வெளிப்பட்டு வருமாபோலே, நீயும் தம:ப்ரசுரமானகாலத்திலே வேதாந்தங்களில் அதில்ஏகதேசமென்னலாம்படி கிடந்து. பிராட்டியோடே ஏகவஸ்து என்னலாம்படிகிடந்து என்னவுமாம். யோகநித்ரைபண்ணுநிற்கிறவளவிலும் தமோவித்வம்ஸந சக்தியையுடையநீ, "காலேசம்ஸதி" என்கிற படியேகால முணர்ந்தபிராட்டிக்கும்அணுக வொண்ணுதபடி தீயதாகக் கடாக்ஷித்து. "ஸர்வகந்த" என்கிற தன்னுடைய கந்தம் திருமேனியில் மயிர்க்கால்வழியே யெங்கும் பரிமளிக்கும்படி ஜகத்ஸ்ருஷ்டியிலே உத்யோகித்து, தன்னேடு அவிபக்தநாமரூபங்களாய் ஸ்வாவயங்களான சேதநாசேதநங்களை விபக்தநாமரூபங்களாம்படி பண்ணி, இப்படி ஸ்வாவயவவிசிஷ்டனை தான் தண்டாகாரமாய் நீண்டு, பிண்டாகாரமாய்நிமிர்ந்து,மஹாஸம்ப்ரமத்துடனே மஹதாதிரூபேண ப்ரக்ருதியில் நின்றும் வேறுபட்டு வருமாபோலே, பூவைப் பூவண்ணுநீ. (உன்கோயில் நின்றித்யாதி) உன்னுடைய திவ்யாந்த: புரத்தினின்றும் திவ்யாஸ்தாந மண்டபத்துக்கு எழுந்தருளி. (கோப்புடைய வித்தியாதி) ஏழுலகுந் தொழிலாக வகுப்புண்டதாய், நினைப்பிட்ட கார்யம் தலைக்கட்டும்படியான சீர்மையை யுடைய ஸிம்ஹாஸநத்திலே யெழுந்தருளி

யிருந்து, உனக்கு அநந்யார்ஹசேஷபூதரான நாங்கள் வந்த கார்யத்தை விசாரித்து அருளவேணும். ஸஞ்சரணயோக்ய மல்லாத ராத்ரிகாலத்தில் அரண்மனையில் திவ்யாந்த:புரத்தில் நப்பின்னைப்பிராட்டியோடே ஏகதத்வமென்னலாம்படி படுக்கையிலே சாய்ந்து உறங்குமவ்விருப்பிலேதானே சத்ருக்கள் மண்ணுண்ணும்படி வீரஸ்ரீயையுடையனாய், காலமுணர்த்த உணர்ந்திருந்து அருகிருந்த நப்பின்னைப் பிராட்டிக்கும் அணுகவொண்ணாதபடி க்ரூரமாகத் திருக்கண்களை விழித்துத் திருமேனிகந்தம் மயிர்க்கால்வழியே பரிமளிக்க, நாலு பாடும் ஒக்கவெழுந்திருந்து அவயவங்களைத்தனித்தனியே புதறி, நீண்டு நிமிர்ந்து ஸிம்ஹநாதத்தைப்பண்ணி, பூவைப் பூவண்ணா! நீயித்யாதியாகவுமாம். ... ... உ௩

## இருபத்துநாலாம் பாட்டின் அவதாரிகை

**மூவாயிரப்படி** :—177. இருபத்து நாலாம்பாட்டு. தாங்கள் அபேக்ஷித்தபடியே செய்தருளக்கண்டு, வந்தகாரியத்தை

---

**ஆறுயிரப்படி** :—இருபத்து நாலாம்பாட்டு. (அன்றிவ் வுலகம்) ஒரு நாள் அர்ஜுநன் "உபயஸேனைக்குமநடுவே தேரை நிறுத்து" என்றுசொல்ல, அப்படியே செய்தவன், இத்தனை பெண்கள் திரண்டு "இங்ஙனே போந்தருளி" என்றால் அது செய்யாதிருக்கமாட்டானிறே, தாங்கள் அபேக்ஷித்தபடியே திருப்பள்ளியறையில் நின்றும் திவ்ய ஸிம்ஹாஸநத்தளவும் நடந்து போரத்தொடங்கினான்; பிராட்டி கட்டுவாசலளவுந் தொடர்ந்து மங்களாசாஸநம் பண்ணினாற்போலே, நப்பின்னைப் பிராட்டியுந் தொடர்ந்து ஏத்துமிறே. அவனைக் காணுமளவுமிறே இங்ஙனே போரவேணும், எழுந்தருளி யிருக்கவேணும், வந்த கார்யமாராய்ந்தருளவேணும், அது வேணும், இது வேணும் என்று பல தேவைகளைச் சொல்லி அலைக்கலாவது. தண்டகாரண்யத்தில் ரிஷிகள், கண்டவாறே ராக்ஷஸபரிபவங்களை மறந்து மங்களாசாஸநத்திலே மண்டினார்களிறே;

மறந்து அத்திருப்பள்ளி யறையில் நின்றும் திவ்ய ஸிம்ஹாஸநத்தளவும் நடக்கிறபோதை நடையழகுக்குத் திருப்பல்லாண்டுபாடுகிறார்கள். காணுமளவுமிறே அதுவேணும் இதுவேணும்என்பது, கண்டால் அவனுக்குப் பரியுமித்தனையிறே.

அன்றிவ்வுலகமளந்தாயடிபோற்றி
 சென்றங்குத்தென்னிலங்கைசெற்றாய்திறல்போற்றி
பொன்றச்சகடமுதைத்தாய்புகழ்போற்றி
 கன்றுகுணிலாவெறிந்தாய்கழல்போற்றி

---

அப்படியே யிவர்களும் பெரியாழ்வார் படியாயாய்த்து. இங்ஙனே போந்தருளுகிறபோது பின்னே நின்று நடந்த நடையழகு கண்டு மாறியிட்டவிட்டவடிதோறும் மங்களாசாஸநம் பண்ணிக்கொண்டு வந்து, திவ்ய ஸிம்ஹாஸநத்திலே யிருந்தவநந்தரம் "பறை" என்று ஒரு வ்யாஜத்தையிட்டு இங்குத்தை மங்களங்களை ஆசாஸித்து மங்களாசாஸநமே பரமப்ரயோஜநமாக வந்தவர்களன்றோ நாங்கள் என்கிறார்கள். "இங்ஙனே போந்தருளி" என்று தாங்கள் சொல்லத் தங்களுக்காக நப்பின்னைப் பிராட்டியோடேகூட சீரிய சிங்காசனத்திலே யிருந்தவளவிலே ஆலவட்டக் காற்றிலே அத்தவாளந்தலைமேலே பறக்க, பாதபீடத்திலே நீட்டியருளின திருவடிகளையும் மடித்திட்டதிருவடிகளையுங்கண்டு, திருமுலைத்தடங்களிலும் திருக்கண்களிலும் ஒற்றிக்கொண்டு, தங்கள் கரஸ்பர்சம் பொறுதே கன்றும்படியான மார்த்தவத்தைக் கண்டு, இப்படி ஸுகுமாரமான திருவடிகளைக்கொண்டு இங்ஙனே நடக்கச் சொல்லுவோமே! திருவடிகளை வாங்கியிடுகிறபோது திருவுலகளந்தருளினபடிக்கு ஸ்மாரகமாயிருந்தது, அன்று அளக்கப்பண்ணினவர்களோ டொத்தோமிறே இன்று நடக்கப்பண்ணின நாங்களும். "நடந்தகால்கள் நொந்தவோ" என்று பிடித்து நாங்கள்சொல்லுமளவில் புறப்பட்டு உலாவியருளினபடி, திருவுலகளந்தருளின ஆயாஸத்தோபாதிபோருமே! என்று-"அன்றிவ்வுலகமளந்தாயடி போற்றி" என்கிறார்கள்.

குன்றுகுடையாவெடுத்தாய்குணம்போற்றி
வென்றுபகைகெடுக்கும்நின்கையில்வேல்போற்றி
என்றென்றுன்சேவகமேயேத்திப்பறைகொள்வான்
இன்றியாம்வந்தோமிரங்கேலோரெம்பாவாய்.

பதவுரை:—அன்று - தன் விபூதியை மஹாபலி அபஹரிக்க தேவர்கள் நோவுபட்டவன்று, இவ்வுலகம்-இந்த லோகத்தை,மஹாபலி பக்கல் இரந்து நீரேற்று, அளந்தாய் - இரண்டடியாலே அளந்துகொண்டவுன்னுடைய, அடி - திருவடிகளுக்கு, போற்றி - மங்களமுண்டாகக்கடவது; அங்கு - பிராட்டியைப்பிரித்த பையலான ராவணனிருக்குமிடத்திலே, சென்று—, தென் - அழகிதான, இலங்கை - கோட்டையையும் அரணையுமுடைத்தான லங்கா நகரத்திலுள்ள பொல்லாவரக்கரை, செற்றாய் - நிரஸித்த தேவரீருடைய, திறல் - திருத்தோளின் வலிமைக்கு, போற்றி - மங்களமுண்டாகக்கடவது; சகடம் - சகடாஸுரனை, பொன்ற - கட்டுக்குலைந்து உருமாய்ந்து போம்படியாக, உதைத்தாய் - உதைத்து முடித்தவுன்னுடைய, புகழ் - புகழுக்கு, போற்றி - மங்களமுண்டாகக்கடவது; கன்று - கன்றின் வடிவாய்வந்த வத்ஸாஸுரனை, குணிலா - எறிதடியாகக்கொண்டு, விளங்கனி வடிவாய்நின்ற கபித்தாஸுரன் மேலே, எறிந்தாய் - எறிந்து இருவரையும் முடித்துபோகட்டவுன்னுடைய, கழல் - குஞ்சித்த திருவடிகளுக்கு, போற்றி - மங்களமுண்டாகக்கடவது; இந்த்ரன் பசிக்கோபத்தாலே கல்வர்ஷம் வர்ஷிக்க இடையர்க்கும் பசுக்களுக்கும் ஒருநோவு வாராமே, குன்று-கோவர்த்தநமலையை, குடையா-குடையாக, எடுத்தாய்-எடுத்து ரக்ஷித்தவுன்னுடைய,குணம்-தண்ணளிக்கு, போற்றி-மங்களமுண்டாகக்கடவது; பகை - சத்ருக்களை, வென்று கெடுக்கும் - மூலத்தோடே அழிக்குமதான, நின் - தேவரீருடைய கையில் - திருக்கையிலுள்ள, வேல் - வேலுக்கு, போற்றி-மங்களமுண்டாகக்கடவது; என்றென்று - இந்த ப்ரகாரமாக, உன் - தேவரீருடைய, சேவகமே - வீரசரிதத்தையே,ஏத்தி - ஸ்துதித்து, பறைகொள்வான் - உன்னை அநுபவிக்கைக்காக, யாம் - பந்துக்களாலே நெடுங்காலம் நலிவுபட்ட நாங்கள், இன்று - பந்துக்களுடையவும் ஊராருடையவும் இசைவுபிறந்தவின்று, வந்தோம் - எங்களாற்றாமையாலே வந்தோம்; இரங்கு - க்ருபை செய்தருளவேணுமென்கிறார்கள்.

னு ாரபோலவும் ப்ரஸித்தமா யிருந்ததோவென்ன (பேஜயார் செய்வனகள்) அவைபோலும் மல்லகாண் இது ; ப்ரஸித்த த ங்காண் இது. ச்ருதிஸ்ம்ருதிகளிலும், "தர்மஜ்ஞஸமய ப்ரமாணம் வேதாச்ச" (126) என்றும், " யத்பதாசரதிச் ரேஷ்ட:" என்றும்-சிஷ்டாசாரமேயிறே ப்ரஸித்தப்ரமாணம்.

என்ன உயிர்நிற்கையும், உடையவன்காலிலே ஸர்வரும் விழும்படி யிருக்கையம், இழந்தார் பிழையாதொழிகையும், கைப்பட்டார்க்குப் பூணலாயிருக்கையும் பூணாதார்க்கு அழித்து உண்ணலாயிருக்கையும், கிழிச்சீரையிலே யடக்கலா யிருக்கையும், பிறர்க்கேயாயிருக்கையும், அளவுபடாமலுமிக்கையும், "கொடுத்தோம்" என்று நினைத்திராதொழிகையும், வேறொன்றில் கண்வைக்கவொட்டாதொழிகையும் தொடக்கமான ஸ்வபாவங்கள். "என்றுமெனக்கினியானை யென்மணி வண்ணனை" என்று - நம்மை ஆச்சி பலகாலுஞ் சொல்லும் தாய்க்கு மணிவண்ணா னித்தனையன்றோ, " மணிமாமை " குறைவில்லாதே "அழகியா ரிவ்வுலகமூன்றுக்கும்" என்கிற வுங்களுக்கேற வுடம்பு படைக்கப்போமோ.

இத்தனை மிகை நம்மைச் சொல்லுகிறதென், போந்த கார்யத்தைச் சொல்லுங்கோளென்ன (மார்கழிநீராடுவான்) "மகிழ்ந்து-மார்கழிநீராட" என்று ஊராக ஸங்கல்பித்த காரியம் தலைக்கட்டுகைக்காக. ஸாத்யம் கைப்பட்டிருக்கச் செய்தே, ஆந்ருசம்ஸ்யத்தாலும், ஆஸ்திக்யாதிசயத்தாலும் க்ருத்யாம்சம்விடார்களிறே ; மார்கழிநீராடுகைக்கு உபகரணங்கள் வேண்டிவந்தோம்.

இவர்கள் சொல்லுமது கேட்கைக்காக, இத்தை க்ஷேபித்து இது எங்கேயுள்ள தொன்றுதான் ? என்றான் ; இது இங்ஙனே அப்ரஸித்தமாயிருந்ததோ என்றார்கள்; காமாதிகாரிகளுடைய ஜ்யோதிஷ்டோமாதி விதிபோலே ப்ர ஸித்தமோவென்ன ; அநந்யப்ரயோஜநைகளான வெங்கள் முன்னே ப்ரயோஜநாந்தர பரருடைய விரோதியைக் காட்டுறையே என்று இவர்கள் சொல்ல ; முமுக்ஷுக்களுடைய த்யாக விரோதிபோலே ப்ரஸித்தமா யிருந்ததோ என்று

190. ஆகில் வேண்டுவது சொல்லுங்கோளென்ன; (வேண்டுவனகேட்டியேல்) கேட்புதியாகில் என்கிறது அந்ய பரதையாலே. அந்யபரதை யென்னென்னில்; பஞ்சலக்ஷங் குடியிற் பெண்களும் முன்னே நிற்கையாலே இவர்கள் முலையிலும் இடையிலும கண்ணிலும் முகத்திலும் துவண்டு ஆனைக்

அவன் சொல்ல; நாஸ்திகரைப்போலே நீசொல்லுகிறதென், ஆளறிந்து வார்த்தை சொல்லாய், "நாராயணனே நமக்கே பறைதருவா" னென்பாருடைய அநுஷ்டாநம் ச்ருதிஸ்ம்ருதிகளில் சொல்லுகிறவைபோலல்லகாண், ப்ரபலப்ரமாண ஸித்தங்காணென்கிருர்கள் (மேலையார் செய்வனகள்) விதிப்ரவ்ருத்தமானல் பல வ்யாப்தமாந்தனையும் ஸம்சயத்துக்கு விஷயமுண்டு, அநுஷ்டித்து பலஸித்தி யுண்டானதுக்கு ஸம்சயமில்லையே, விச்வாமித்ரன் சொன்னன் கண்டு சொன்னன் என்றுப்போலேயோ, கபோதமநுஷ்டித்தது என்றுர்கள். (மேலையார் செய்வனகள்) நிர்த்தோஷப்ரமாண சாஸ்த்ரந்தானும், வ்யாஸன் சொன்னன், மநு சொன்னன், ப்ரஹ்மவாதிகள் சொல்லுவர்கள், யாதொருபடி அவர்கள் அவ்விடத்திலே வர்த்தித்தார்கள் அப்படி வர்த்தியென்று, ஜ்ஞாநவாக்களுடைய வசநத்தையு மநுஷ்டாநத்தையுமன்றே ப்ரமாணமாகச் சொல்லுகிறது, வேதங்களுக்கு முன்னேயன்றே தர்மஜ்ஞருடைய ப்ராமாண்யம் சொல்லப்படுகிறது. (மேலையார் செய்வனகள்) "யாதொன்றை யாதொன்றை ச்ரேஷ்டர்கள் ஆசரித்தார்கள், யாதொரு அளவு செய்தார்கள் அவ்வளவு லோகமநுவர்த்திக்கும் என்று சிஷ்டாசாரமே ஸ்திரப்ரமாணம்" என்று தேர்த்தட்டிலே நின்று சொன்ன நீ, எங்களைக் கண்டவாறே மறந்தாயோ; சாஸ்த்ரம் விதித்ததே யாகிலும்

பி. 190. ஆனைக்குப்பு-சதுரங்கம் என்கிற ஆட்டம் (Chess) இவர்கள் முலையிலும் இடையிலும் கண்ணிலும் துவண்டு - ஸ்வாபதேசத்தில் :—முலைபோகோபகரணம் = பக்தி ; இடைகார்ச்யத்தாலே விஷயாந்தரஸ்பர்சராஹித்யத்தாலே = வைராக்யம் ; கண் - காண்கைக்கு ஹேதுவாகையாலே ஜ்ஞாநம். ஆக ஞானபக்தி வைராக்யங்களையும் கண்டு துவண்டு என்றபடி. இவைகளே பகவத்விஷய அதிகாரிக்கு அழகு.

குப்பு ஆடுவாரைப்போலே யிருக்கையாலேதட்டியெழுப்புகிறார்கள். இத்தால்-ஸ்வாபதேசத்தில், ஜ்ஞாநபக்தி வைராக்யத்தைச் சொல்லுகிறது. இவையிறே அதிகாரிக்கு அழகாகிறது. காண்கைக்கு ஹேதுவாகையாலே "கண்" என்று-ஜ்ஞாநத்தைச் சொல்லுகிறது; போகோபகரணமாகையாலே "முலை" என்று - பக்தியைச் சொல்லுகிறது; கார்ச்யத்தாலே "இடை" என்று - வைராக்யத்தைச் சொல்லு

---

ச்ரேஷ்டர் அநுஷ்டாநமில்லாதவிடத்தில் தவிரக் கண்டறிடாயோ; அஷ்டகையில் "பசுவிசஸநம் கர்த்தவ்யம்" என்னுமிடம் பசுமேய்ப்பார்க்குத் தெரியாதே; உன்னைப் பரதேவதையென்றும், உனக்கு வாசகசப்தம் நாராயணன் என்றும் நாங்கள் ஆதரிக்கிறது - வேதசாஸ்த்ரஸித்தமென்றன்றே; "விட்டு சித்தர் தங்கள் தேவரை" என்றும், "விட்டு சித்தன் விரும்பிய சொல்" என்றுமன்றோ. வைதிகவிதிகளும் எல்லாம், உன்னுடையாருடைய கம்பீரமானமநஸ்ஸை அநுவர்த்தித்திறே ப்ரமாணமாகிறது. ஒக்க ஓதாநிற்கச் செய்தே ஒருமந்த்ரத்தை ஸ்வீகரித்து, இதரமந்த்ரங்களைக் கைவிட்டது சிஷ்டாசிஷ்ட பரிக்ரஹங்களாகையாலேயிறே; அப்படி பரிக்ரஹித்த மந்த்ரந்தன்னில் மந்த்ர ரத்நத்துக்கு உத்கர்ஷம் ஆசார்யருசி பரிக்ருஹீதமென்றிறே. "திருமால் திருநாமம் நானுஞ்சொன்னேன் நமருமுரைமின்" என்னக் கடவதிறே.

(வேண்டுவன) லோகஸங்க்ரஹதயா அநபேக்ஷிதங்களும் செய்யாநிற்பர்கள். அவர்கள் செய்யுமாபோலே அவையெல்லாஞ் செய்யப்போகாதே யென்ன (வேண்டுவன) அவர்கள் செய்து போருமவற்றில் இப்போது அதிகரித்த காரியத்துக்கு அபேக்ஷிதமுமாய் ஸ்வரூபவிரோதமும் பிறவாதேயிருக்குமவை. இவர்கள் "மணிவண்ணா" என்று அவன் வடிவிலே கண்வைத்துக்கொண்டிருக்கிற மாத்ரம்; அஞ்சுலக்ஷம் குடியிற் பெண்களும் முன்னே நிற்கையாலே அவர்கள் கண்ணிலும்முலையிலும் இடையிலும் துவக்குண்டு அந்யபரனாயிருந்தான். தட்டியுணர்த்தி (கேட்டி) என்கிறார்கள்.

கிறது. கார்ச்யத்தாலே வைராக்யம் தோற்றுமோ வென்னில்; கார்ச்யத்தாலே - விரக்தியைச் சொல்லிற்றுய். அத்தால் - விஷயாந்தர ஸ்பர்சராஹித்யத்தைச் சொல்லுகிறது. உங்கள் வடிவு கண்ணுக்கு போக்யமான வோபாதி, "மதுராமதுராலாபா" (103) என்கிறபடியே உங்கள்வார்த்தை செவிக்கு போக்யமன்றோ, சொல்லுங்கோளென்ன; சொல்லுகிறுர்கள் (ஞாலத்தை இத்யாதி) "ஸகோஷோதார்த்தராஷ்ட்ராணாம்ஹ்ருதயாநிவ்யதாரயத்" (63) என்னுமள வன்

---

இவர்களாலும், புறம்புள்ள அந்யபரதையிறே தவிர்க்கலாவது, தங்கள் பக்கல் அந்யபரதை தவிர்க்கப்போகாதிறே. ஊரார் இசையாதபோதிறே "ஒடியகம்புகவேண்டுவது," இப்போது வைத்த கண்வாங்காதே யநுபவிக்கலாமே, ஆகையாலே பார்த்துக்கொண்டிருந்தான். சிலர் பட்டினி கிடக்கச் சிலருண்டுஸுகிக்குமாபோலே, கெடுவாய்! நீ என் செய்கிறுய், கேட்கிறுயீ! என்கிறுர்கள்.

உங்களுடைய ஜ்ஞாநபக்தி வைராக்யங்களினுடைய நிழலீடாகையாலே கண்ணும் முலையும் இடையும் போக்யமாகையாலே உங்கள் வடிவைப் பார்த்துக்கொண் டிருந்தோம், உங்களுடைய "மழறு தேன் மொழிகள்" செவிக்கு போக்யமாம்படி கேட்கிறேம், திருவுள்ள மாகலாகாதோ வேண்டுவதெல்லாம் என்றுன்; (ஞாலத்தை யெல்லாம் - போய்ப்பாடுடையனவே) என்கிறுர்கள். ஜகத்தெல்லாம் அதிரும்படியான த்வநியையுடைத்துமாய், இடைமுடைத்துமாய், பாலைத்திரட்டினாற்போலே அழகிய நிறத்தையுடைத்தாய், பல சொல்லுகிறதென், உன்கையில் ஸ்ரீபாஞ்ச ஜந்யம் போலேயிருக்கும் அநேக சங்கங்கள் வேணும். (ஞாலத்தை யெல்லாம் நடுங்க) பாரத ஸமரத்திலே முழக்கம் துர்யோதநாதிகளை நடுங்கப்பண்ணின வளவிலே; இச்சேர்த்திக்கு ப்ரதிகூலராயிருப்பார் யாவர் சிலர், அவர்களெல்லாம் நடுங்க வேணும். "பற்றுர் நடுங்க" "பூங்கொள் திருமுகத்து"— சிலரை வாழ்விக்கும்; சிலரைக்கெடுக்கும். வர்ஷார்த்தமாகப் பெண்கள் புறப்படும்போதை சங்கத்வநி கேட்டு, "வலம்புரி

றியே. ஜகத்தெல்லாம் வாழும்படி த்வநிக்கைக்கு இடமுடைத்தானவை. " பூங்கொள் திருமுகத்துமடுத்தூதிய " சங்கொலியிறே தாரகம். அப்படியே நாடெல்லாம் இந்தத்வநிகேட்டு வாழவேணும், இவர்கள் தாங்களும் "வலம்புரிபோல் நின்று" அதிரவேணுமென்றிறே சொல்லிற்று. (பாலன்ன) பாலைத் திரட்டினாற்போலே யிருக்கை. இப்படி யிருப்பன பலசங்கு வேணும். (போய்ப்பாடு) பேரிடமாயிருக்கை. இடமுண்டாகில்றே த்வநிமுழங்கி யிருப்பது. புகழ் என்றுமாம்; ருக்மிணிப் பிராட்டிபோல்வாருக்கு உதவினானென்கிறபுகழ்.

---

போல் நின்றதிர்ந்து" என்னும்படி மேகங்களுட்பட முழங்கும்படி சப்திக்கவேணும். (பாலன்னவண்ணம்) " மணிவண்ணா " என்று - இவன் நிறம் உத்தேச்யமானால் இவனோடு ஸ்பர்சமுடையார் நிறமும் உத்தேச்யமாகச் சொல்லவேணுமோ.

(உன்பாஞ்ச சந்நியம்) "தாமோதரன் கையில்" என்கிறபடியே. (போய்ப்பாடுடையன) பேரிடமாயிருக்கை. இடமுண்டாகில்றே த்வநிமுழங்கியிருப்பது. " போய்ப்பாடு " என்று - புகழுடைமையாகவுமாம். அதாவது - ருக்மிணிப் பிராட்டி போல்வார்க்கு உதவினதன்றிக்கே, "சங்கரையாவுன் செல்வம்" என்றும், "பொதுவாகவுண்பதனை" என்றும்-நாய்ச்சிமாருங்கூட ஊடும்படியான வேண்டற்பாட்டையுடையனாகையாலே வந்தபுகழ். அல்லாதவை வேண்டுவதுக்கு முன்னே ப்ரதாநம் மங்களசப்தமாகையாலேவேண்டுகிறார்கள். (உன்பாஞ்சசந்நியம்) என்கிறார்கள் இயலறிவாளொருவனாகையாலே தானே யறியுமென்று. தன்னுடைய பாஞ்சஜந்யம்போலே யிருக்குஞ்சங்கில்லை. [உன்னோடுடனே] அதுக்கீடாகத்தானுமக்குமாகையாலே அது கூடாமைக்காகத் தானே கூட வருமென்று நினைத்து. ஒன்று கண்டோம், பின்னையோ வென்றான்; (சாலப்பெரும்பறையே) எழுச்சிக்குச் சங்குஊதினால் புறப்பாட்டுக்குக் கொட்ட வேண்டாவோ; பாஞ்சஜந்ய த்வநியோடின திக்கெல்லாம் முழங்கவல்ல மிகவும் பெருத்ததொரு பறைவேணும்.

பின்னையோவென்ன; (சாலப்பெரும்பறையே) ஒருரான்றிலே த்வநிக்கையன்றியே எங்குமொக்கத்வநிப்பதொரு பறைவேணும். "யயௌ தூர்யப்ரணாதேந பேரீணாஞ்ச மஹாஸ்வநை" (191) என்னுமாபோலே. பின்னையோவென்ன; (பல்லாண்டிசைப்பாரே) திருப்பல்லாண்டுபாடிக்கொண்டு போருவார் வேணும். பின்னையோ வென்ன? (கோலவிளக்கே) அழகிய விளக்கு. அதாகிறது - மங்கள தீபம்.

191. (கொடி) திருக்கொடி யாடவேணும். (விதானம்) மேல் கட்டிவேணும் என்று இவற்றை அபேக்ஷிக்க;

---

பின்னையோவென்றான்; (பல்லாண்டிசைப்பாரே) கொட்டிக்கொண்டு புறப்படும்போதே எதிரே நின்று காப்பிடுவார் வேணும். (கோலவிளக்கே) பாடுவார் எங்கள் முகத்திலே விழித்து நாங்கள் அவர்கள் முகத்திலே விழித்துக்கொண்டு போம்படி தர்சநீயமாயிருப்பதொரு மங்கள தீபம் வேணும்.

(கொடியே) கிட்டினார்க்கிறே விளக்கு ப்ரகாஸிப்பது, எங்களைக்கண்டு தூரத்திலே வாழும்படி முன்னே பிடித்துக்கொண்டுபோம்படி ஒரு கொடி வேணும். (விதாநமே) புறப்படும்போதே பனி தலையில் விழாதபடி ஒரு மேற்கட்டி வேணும் குளிக்கப்போம்போதைக்கு வேண்டுமளவு இது வென்கிறார்கள். பெண்காள்! இப்படியிருப்பன தேடப்போமோ, துர்க்கடங்களைச் சொன்னிகோளே யென்ன; உனக்கு அரியதுண்டோ என்றார்கள்; எனக்கு எளிதாயிருந்ததோ வென்றான்; (ஆலினிலையாய்) உன்னுடைய சிறியவயிற்றிலே பெரியலோகங்ளெல்லாவற்றையும் வைத்து

---

பி. 191. திருவநந்தாழ்வான் ஓரடியிடமாட்டாதவன்-பிரிந்து போதற்கு ஓரடிகூட எடுத்துவைக்கமாட்டாதவன் - அவதாரத்திலும் உடன் வருபவன் - ராமாவதாரத்தில் இளையபெருமாளாகவும், க்ருஷ்ணாவதாரத்தில் நம்பிமூத்தபிரானாகவும் வருபவன் - ஸர்வதேசஸர்வகாலஸர்வாவஸ்தைகளிலும் தன்னைப்பிரியமாட்டாதவன்.

சங்கும் பல கிடையாது, ஸ்ரீபாஞ்சஜந்யத்தைகொள்ளுங்கோ ளென்றான் ; தன்னைப்போலேயிருப்பார்சிலருண்டாகிலிறே புறம்பு ஸ்ரீபாஞ்சஜந்யம்போலேயிருக்கும் சங்கு உண்டாவது. பறைக்கு பாரோர்களெல்லாம் மகிழப்பறைகறங்கக் குடக்கூத்தாடினபோது திருவரையிற் கட்டின பறையையும், திருப்பல்லாண்டு பாடுகைக்குப் பெரியாழ்வாரையும், விளக்குக்கு நப்பின்னைப் பிராட்டியையும், கொடிக்குப் பெரியதிருவடியையும், மேல்கட்டிக்கு அத்தவாளத்தையுங் கொள்ளுங்கோளென்றான். விதானத்துக்கு திருவவதரித்தவன்று பணத்தையிட்டுக் கவித்துக்கொண்டுபோந்த திருவநந்தாழ்வானைக்கொடாதொழிவானென்னென்னில் ; எல்லாரையும் போகச்சொன்னாலும் தன்னையொழிய ஓரடியிடமாட்டாதவனாகையாலே அத்தவாளத்தைக்கொடுத்தான் ; "பெருமானரையில் பீதக வண்ணவாடை" கொண்டிறே வாட்டந்தணியச் சொல்லிற்று. ஒரொன்று போராது இப்படியிருப்பன பலவேணு மென்ன ; இல்லாதத்தைத்தேடப் போமோ வென்ன ; உனக்கு அரியதுண்டோ வென்ன ;

---

ஆ.ந பவனான ஆலிலையிலே கிடந்து அகடிதங்களைச் செய்ய வல்ல வுனக்கு அரியதுண்டோ. லோகத்தில் இல்லாததெல்லாம் எங்களுக்காக வுண்டாக்க வல்லவனன்றோ. (ஆலினிலையாய்) [பாலன் தனதுருவாய்] வடதளசாயியுடைய வ்ருத்தாந்தம க்ருஷ்ணன்பக்கலிலேயிறே காண்பது. "பண்டொருநாளாலினிலை வளர்ந்த சிறுக்கனவனிவன்" "வையமேழுங் கண்டாள்" "அன்புற்று நோக்கி யடித்தும்பிடித்தும் அனைவர்க்குங்காட்டிற்றிலையே."

"மாலே மணிவண்ணா" என்கிற விடத்தில்-ஸௌலப்யஞ்சொல்லுகிறது; "ஆலினிலையாய்" என்கிறவிடத்தில் ஸர்வசக்தியோகஞ்சொல்லுகிறது. அது - "மாம்" என்கிறதின் அர்த்தம்; இது "அஹம்" என்கிறதின் அர்த்தம். "மாலாயாலிலையில் வளர்ந்து" என்னக்கடவதிறே.

(அருள்) சக்தியிராமையில்லை; வேண்டியிராதொழியில் செய்யலாவதில்லை ; தரில் அரியதில்லை ; தாராதொழியில்

எனக்கெளியதா யிருந்ததோ வென்ன; (ஆலினிலைபாய்) சிறியதொரு வடிவைக்கொண்டு ஸர்வலோகத்தையும் சிறு வயிற்றிலே வைத்து பவனாயிருப்பதொரு ஆலந்தளிரிலே கண்வளர்ந்த உனக்கு முடியாததுண்டோ, லோகத்தில் இல்லாததும் எங்களுக்காக உண்டாக்கவல்லையென்று கருத்து. (அருள்) வேண்டாதொழியில் செய்யலாவதில்லை; சக்தியில்லாமையில்லை; இத்தலையிற் பேற்றுக்கெல்லாம்ஹேது அவன் ப்ரஸாதமென்கை. "மாலேமணிவண்ணா" என்கிறவித்தால் - "மாம்" (157) என்கிறவிடத்தில் ஸௌலப்யத்தைச் சொல்லிற்று; "ஆலினிலையாய்" என்கிற விசேஷணத்தாலே - "அஹம்" (156) என்கிற விடத்தில் ஸஹாயாந்தரநிரபேக்ஷமான உபாயநைரபேக்ஷ்யம் சொல்லிற்று; இப்பாட்டில் சொல்லுகிறது - "நிரஞ்ஜந:பரமம் ஸாம்யமுபைதி" (184) என்கிற ச்ருத்யர்த்தம் ... .... உகூ

**192.** ஸ்வாபதேச வ்யாக்யாநம். இருபத்தாறும் பாட்டு. (மாலேயித்யாதி) இப்பாட்டில், பகவத் ஸம்ச்லேஷத்துக்கு வேண்டுமுபகரணங்களை வேண்டிக்கொள்கிறார்கள். வ்யா—(மாலே மணிவண்ணா) ஸர்வாதிகனாய் ஸர்வஸுலபனானவனே யென்னுதல்; ஆச்ரித வ்யாமோஹமே ஸ்வரூபமாய் அதிமநோஹரமான விக்ரஹத்தையுடையவனே யென்னுதல். இப்படி ஸம்போதித்தவாறே, நீங்கள் வந்த கார்யமென்னென்ன (மார்கழிநீராடுவான்) மார்கழிமாஸத்தில் நோன்புக்கு அங்கமாகக்குளிக்கை. இந்நோன்புதானே காம்யார்த்திகளுக்கு ஸாதநமாயும், நிஷ்காமருக்கு நித்யமாயும், ப்ரபந்நாதிகாரிகளுக்கு பகவத் கைங்கர்யமாயுமிருக்கும். ஆகையாலே

---

வளைப்பிட வொண்ணாது. (ஆலினிலையாய் அருள்) "என்றுமுன்றனக் கெங்கள்மேலிரக்கமெழாதது" என்னக்கடவதிறே. இப்போது அகடிதமிறே என்று கண்ணழியாதே க்ருபை பண்ணவேணும் (ஆலினிலையாயருள்) "அருளாதொழியுமே யாலிலைமேலன்று தெருளாத பிள்ளையாய்ச் சேர்ந்தான்" என்று - வடதளசாயி யருளிறே ப்ரஸித்தமாயிருப்பது.

ப்ரபந்நாதிகாரிகளுக்குச் சொல்லுகிற கர்த்யாகம் சாஸ்த்ரோக்தமான ஆகாரத்தாலே அநுஷ்டேயா தொழிகைபோயிய கேவலமநுஷ்டாந ரூபத்யாகமன்றென்றதாய்த்து. அதில் ப்ரமாணமென்னென்ன (மேலையார் செய்வனகள்) ப்ரமாணங்களில் தலையான சிஷ்டாசார மென்ன; அதுக்குவேண்டுவதென்னென்ன; பாக்கில்லாமல் கேட்டாயாகில் சொல்லுகிறோமென்ன; ஆகில் இதுவும் உங்கள் பேச்சன்றோ கேட்கிறேன் சொல்லுங்கோ ளென்ன; சொல்லுகிறார்கள் (ஞாலமித்யாதி) பூரிப்பரப்பிலுள்ள அஹங்காரிசேதநரடைய நடுங்கும்படி த்வநிக்குமதாய், அதுக்குத்தக்க குடைசையை யுடைத்தாய் அதிபோக்யமாய் அதிபரிசுத்தமாய் உன்திருக்கையில் ஸ்ரீபாஞ்சஜந்யமபோலே யிருக்கிற பலசங்கங்கள் வேணும். இத்தால் - அநந்யார்ஹசேஷத்வஜ்ஞாநம் வேணுமென்கிறது. சங்கத்வநி ஓங்கார மென்று ஜகத்திலே ப்ரஸித்தமா யிருக்கையாலே ஓங்காரார்த்தம் அநந்யார்ஹசேஷத்வ மாகையாலே லக்ஷணயா சேஷத்வஜ்ஞானத்தைச் சொல்லுகிறது. (சாலப்பெரும் பறையே) மிகவும் த்வநிக்கிற மத்யத்திலேயிருக்கிற பறை யென்கையாலே - பகவதநந்யார்ஹ சேஷத்வ விரோதியான ஸ்வாதந்த்ரியத்தையும், சேஷத்வசிஹ்நமான கைங்கர்யத்தில் ஸ்வாதீந கர்த்ருத்தவ போக்த்ருத்வங்களையும் நிவர்த்திப்பிக்குமதாய், மத்யேயிருக்கிற நமச்சப்தார்த்தமான பாரதந்த்ரிய ஜ்ஞாநமும்வேணுமென்னு மிடஞ்சொல்லுகிறது. (பல்லாண்டிசைப்பாரே) ஸத்ஸஹவாஸம் வேணும். (கோலவிளக்கே) பகவதநந்யார்ஹசேஷத்வத்தை யவனுக்கு அத்யந்தமநோஹரமாக்குகிற பாகவதசேஷத்வஜ்ஞாநமும் வேணும். (கொடியே) கீழ்ச் சொன்ன சேஷத்வலக்ஷணமான கைங்கர்யமும் வேணும். (விதாநமே) அக்கைங்கர்யத்தில் போக்த்ருத்வ நிவ்ருத்தியும் வேணுமென்ன; இல்லாததை யுண்டாக்கலாமோ வென்ன (ஆலினிலையாய்) முன்பு இல்லாததை யுண்டாக்கினவனல்லையோ. (அருள்) க்ருபை யுண்டாகில் செய்யத்தட்டில்லை... ... .... ... .... உசு

## இருபத்தேழாம் பாட்டின் அவதாரிகை

**மூவாயிரப்படி** :—193. இருபத்தேழாம்பாட்டு. நோற்றால் அவன் பக்கல் பெறக்கடவபேறு சொல்லுகிறார்கள்.

---

**ஆறாயிரப்படி** :—இருபத்தேழாம்பாட்டு. பெண்காள்! நம்மோடொத்தானொரு ஈச்வரனுண்டாகில்லிறே நம்பாஞ்சஜந்யத்தோடொத்த சங்கு உண்டாவது, இனித்தான், "சங்கங்கள்" என்று-பலவேணுமென்றிகோள், ஒன்றைத் தேடினோமாகிலும் அத்தோடொத்த பலசங்குகள் கிடையாதே; நம்பாஞ்சசந்யத்தையும், "புள்ளரையன்கோயில் வெள்ளைவிளிசங்கையும்," ஆனிரையினம் மீளப் பசுமேய்க்கும்போது குறிக்குஞ் சங்கையுங் கொள்ளுங்கோள்; பறைஎன்றிகோளாகில், நாம் உலகளந்தபோது ஜாம்பவாந் நம்ஜயஞ்சாற்றின பறையைத் தரலாய்த்து; "பெரும்பறை" என்றிகோளாகில், நாம் லங்கையை யழித்தபோது நம்ஜயம் சாற்றிற்றொரு பறையுண்டு, அத்தைத் தரலாய்த்து; "சாலப்பெரும்பறை" என்றிகோளாகில், அறவிஞ்சின பறையாவது, "பாரோர்களெல்லாம் மகிழப் பறைசறங்கக் குடமாடுகிறபோது," நம்மரையிலே கட்டி யாடிற்றொருபறையுண்டு, அத்தைக் கொள்ளுங்கோள்; பல்லாண்டு பாடுகைக்குஉங்களுக்குப்பெரியாழ்வாருண்டு; அவரைப்போல உங்களுக்கும் நமக்கும் சேரக் காப்பிடுகையன்றிக்கே உங்களுக்கே காப்பிடும் நம்மாழ்வாரையுங் கொண்டுபோங்கோள், கோலவிளக்குக்கு உபயப்ரகாசகையான நப்பின்னை நில்லாநின்றாளிறே; கொடிக்கு "கருளக்கொடி யொன்றுடையீர்" என்று நீங்கள் சொல்லும் பெரிய திருவடியைக் கொண்டுபோரிகோள்; விதானத்துக்கன்றோ நாம் மதுரையில் நின்றும் இவ்வூருக்கு வருகிறபோது நம்மேல் மழைத்துளிபடாதபடி தொடுத்து மேல்விதானமாய்வந்த நம்மநந்தனைக் கொண்டுபோங்கோள்; உங்களுக்குச் செய்யவேண்டுவது இத்தனையே யென்றான்;

மார்கழி நீராடப் போம்போதைக்கு வேண்டுமவையிவை, நோற்றவநந்தரம் நாங்கள் உன்பக்கலில் பெறக்கடவ

கூடாரைவெல்லுஞ்சீர்க்கோவிந்தாவுன் றன்னைப்
பாடிப்பறைகொண்டுயாம்பெறுசம்மானம்
நாடுபுகழும்பரிசினால்நன்றாக
சூடகமேதோள்வளையேதோடேசெவிப்பூவே
பாடகமேயென்றனையபல்கலனும்யாமணிவோம்
ஆடையுடுப்போமதன்பின்னேபாற்சோறு
மூடநெய்பெய்துமுழங்கைவழிவாரக்
கூடியிருந்துகுளிர்ந்தேலோரெம்பாவாய்.

பதவுரை :— கூடாரை - தன்னை ஆச்ரயியாதவர்களை, வெல்லும் - ஜயிக்கும், சீர் - குணத்தை யுடையனாய், பசுநிரையை ரக்ஷிக்கையால் வந்த, கோவிந்தா - கோவிந்தனென்னும் திருநாமத்தை யுடையவனே, உன்றன்னை - கோபீஜந வல்லபனான உன்னை, பாடி - ப்ரீதிக்குப் போக்குவிட்டுப்பாடி, பறைகொண்டு - ப்ராப்யத்தைப் பெற்று, யாம் - நாங்கள், பெறு - பெறும்படியான, சம்மானம் - ஸம்மானமாவது—; நாடு - நாட்டார், புகழும் பரிசினால் - புகழும்படிக் கீடாக, சூடகம் - கையிலணியும் ஆபரணமான சூடகமும், தோள்வளை - தோளுக்கிடும் ஆபரணமான பாஹுவலயமும், தோடு - காதுக்கிடும் ஆபரணமான தோடும், செவிப்பூ - கர்ணப்பூவும், பாடகம் - காலுக்கிடும் ஆபரணமான பாடகமும், என்றனைய - என்று சொல்லப்பட்ட, பல் - பலவகையான, கலனும் - ஆபரணங்களும், நீயும் நப்பின்னையுமாகவிருந்து பூட்ட, யாம் - நாங்கள், நன்றாக—, அணிவோம் - தரிக்கவேணும்; ஆடை - சேலைகளை அவன் உடுத்த, உடுப்போம் - உடுக்கவேணும்; அதன்பின்னே - அதற்குப்பின்பு, பாற்சோறு - பாற்சோறானது, மூட - மூடும்படிக்கீடாக, நெய்பெய்து - நெய்பரிமாறி, முழங்கை - முழங்கையால், வழிவார - வழியும்படியாக, பிரிந்துபட்ட வ்யஸநமெல்லாம் தீரும்படி, கூடியிருந்து - நீயும் நாங்களுமாகக் கூடியிருந்து, குளிர்ந்து - ஸுகிக்கவேணு மென்கிறார்கள்.

---

இன்னஞ் சில ஸத்காரவிசேஷங்களுண்டு, இவற்றிலும் அவை அந்தரங்கமாயிருப்பன சில, அவையும் நாங்கள் பெறுவோமாகவேணுமென்று வேண்டிக்கொள்ளுகிறார்கள்.

194. வ்யா.—(கூடாரைவெல்லும்) ஆந்தனையும் பார்த்தால் "நநமேயம்" (170) என்பாரை வெல்லுமித்தனை. அவர்களை வெல்லுமாபோலே கூடினார்க்குத் தான் தோற்குமித்தனை. (சீர்) எல்லாரையும் வெல்லுவது குணத்தாலே. "சசாலசாபஞ்சமுமோசவீர:" (192) என்று-விற்பிடித்தபடி

வ்யா.—பெண்காள்! நம்மை "எளிவருமியல்வினன்" என்று அழகிதாக வறிந்துகொண்டிகோ ளெங்ஙனே, அபேக்ஷித்தது தருகிறோம் என்கிற வளவைக்கொண்டு, நம்மையும் நம்முடைய ஸர்வஸ்வத்தையும் உங்களதாக்கிக்கொண்டு, உங்களை வெல்லவிருந்த நம்மைத் தோற்பித்துக்கொண்டிகோ ளெங்ஙனே, ஜயாபஜயங்கள் நாம் நினைத்தபடி யன்றிக்கேயிருந்ததீ! என்ன; (கூடாரை வெல்லுஞ்சீர்) கூடோமென்பாரை வெல்லுமத்தனை போக்கி கூடுவோமென்பாரை வெல்லலாமோ வுன்னுல். (கூடாரை வெல்லும்) பரசுராமன், "இருபத்தொரு படிகால் க்ஷத்ரியரை வென்ற வெனக்கு ஒருக்ஷத்ரியபுத்ர னெதிரோ" என்று பெருமாளை வெல்ல நினைத்து வந்து, தன்கையில் வில்லை அவர்கையிலேகொடுத்து, நான் ப்ராஹ்மணன் என்று நமஸ்கரித்துப்போனுன்; வில்லோடே நமஸ்கரித்தானுகில் இவராய்த்துத் தோற்பது. ராவணன், இந்த்ராதிகளை வென்ற வெனக்கு ஒருமநுஷ்யன் எதிரோ என்றிருக்க, திருவடியையிட்டும் அங்கதனையிட்டும் பின்பு வில்போகட்டவளவில் "இன்றுபோய் நாளைவா" என்னும் இத்தனையுஞ்சொன்னவிடத்தில் "வணங்கவிலரக்கனை" பின்பு ஆந்தனையும் பார்த்தோம், என்செய்வோம் என்றாய்த்துக்கொன்றது; பின்னை வில்லெடுத்திலனுகில் பெருமாளை

பி. 194. எல்லாரையும் வெல்லுவது குணத்தாலே-கூடினாரை சீலாதிகளாலும், கூடாதாரை ஸௌர்யாதிகளாலும் வெல்வது. கூடினார்க்குத்தான் தோற்பது-அவர்களை வென்று, ஸௌலப்யாதிகளால் அவர்களுக்குத் தோற்பது. அம்புவாய் மருந்தூட்டத்தீரும்-அம்புபட்ட இடத்தில் ஏற்படும் புண் மருந்தூட்டுவதால்தீரும். நீர் கொன்றாற்போலே-தாஹம் எடுப்பவன் நிதானமாக நீரைப்பானம் செய்யாமல், வேகமாக நிறையப்பானம் செய்வதால்வரும் துன்பம்.

பைக்காட்டி விரோதிகளைத் தோற்பிக்கும்; அநுகூலரை அழகாலும் நீர்மையாலும் தோற்பிக்கும்; ஸர்வஜ்ஞரை "எத்திறம்!" என்னப் பண்ணும் குணமிறே. அம்புவாய் மருந்தூட்டித் தீர்க்கலாம்; நீர் கொன்றாற்போலே இதுக்கு பரி

---

வென்றானாய்விடும், லோகம் பண்ணின பாக்யத்தாலே பின்பு வில்லெடுத்தான், பெருமாள் அவனுக்குத் தோற்கைக்கு பாக்யம் பண்ணிற்றிலர். (கூடாரைவெல்லும்) "சேராக் குலைகொண்ட வீரைந்தலையான்" என்று ஒருபடியாலும் கூடேன் என்றவனையிறே வென்றது; கூடுவேன் என்ற விபீஷணனுக்கு வில்வெட்டியிறே செய்தது. "ஸுக்ரீவவசநம், ஹநூமாந்வசநம்" என்று கூடினாருடைய குற்றேவல் கொண்டு அபிஷேக ப்ரதாநமும் ப்ராணஹரணமும் பண்ணும்படியிறே தோற்றபடி. அர்ஜுநனோடு உறவுபண்ணுவோம், "க்ருஷ்ணன் காலிலே வணங்கோம்" என்ற துர்யோதநனை வெல்லவல்லனானான்; "நீசொல்லிற்றுச்செய்வேன்" என்ற பாண்டவர்களுக்கு, "எல்லிப்பகலென்னாது" எப்போதும் - ஸர்வகாலமும் தூத்யஸாரத்யாதிகளைப் பண்ணித் திரிந்தான்.

(வெல்லுஞ்சீர்) எல்லாரையும் வெல்லுவது குணத்தாலே. கூடுவாரை சீலத்தாலே வெல்லும்; கூடாதாரை சௌர்யத்தாலே வெல்லும். (சீர்) சௌர்யம் அம்புக்கு இலக்காக்கும்; சீலம் அழகுக்கிலக்காக்கும். அம்புக்கிலக்கானார்க்கு மருந்திட்டு ஆற்றலாம்; சீலமும் அழகும் நின்று ஈரா நிற்கும். "ஈர்கின்ற குணங்கள்" "தாமரைக்கண்கள் கொண்டீர்தியாலோ." அம்புதோல்புரையேபோம், அழகு உயிர்க்கொலையாக்கும். (வெல்லும்சீர்) ஸ்வரூபாநுஸந்தாநம்பண்ணி "வாரோம்" என்றிருப்பார் ப்ரதிஜ்ஞையை அழித்துவரப் பண்ணிக்கொள்ளவற்றாய், ஸ்த்ரீத்வாபிமாநத்தாலே "வாசல்விட்டுப் புறப்படோம்" என்றிருப்பாருடைய அபிமாநத்தை முறித்துத் தன் வாசலிலே வரப்பண்ணின குணம், தேஹாத்மாபிமாநிகளைத் தலைசாய்ப்பிக்கச் சொல்லவேணுமோ. "நலமுடையவன்" என்றும் "தொழுதெழு" என்றாரிறே குணங்களினுடைய எடுப்புக்கண்டு.

ஹாரமில்லை. (கோவிந்தா) கூடுவோமல்லோமென்னும் அபி ஸந்தியில்லாத மாத்ரத்திலே ரக்ஷித்தபடி. (உன்றன்னைப்பாடி) "ஹிரண்யாயநம:" என்கை தவிர்ந்து, வகுத்த உன்னுடைய பேரை ஸ்வயம்ப்ரயோஜநமாகச் சொல்லப் பெறுவதே!

---

(வெல்லுஞ்சீர்) அஜ்ஞரை ஸர்வஜ்ஞராக்கும்; ஸர்வஜ்ஞரை "எத்திறம்!" என்னப்பண்ணும்.

(கோவிந்தா) "கூடுவோமல்லோம்" என்கிற அபிஸந்தியில்லாத மாத்ரத்திலே, கூடுவோமென்ன வறியாதாரையும் ரக்ஷிக்குமவனன்றோ. (கோவிந்தா) "பொருந்தோம்" என்னும் அபிமாநமுமின்றிக்கே, ரக்ஷித்தாலும் உபகார ஸ்ம்ருதியின்றிக்கேயிருக்கும் பசுக்களோடுபொருந்துமவனே. "இட்டமானபசுக்கள்." நாலிரண்டுநாள் தீப்பிலே வளர்ந்துநடந்து பெண்களோடே கலந்துவந்தால், மாதாபிதாக்கள் தாழ்த்து வந்ததென்? என்றால், பசு மேய்க்கப்போனேன் என்று கண்ணழிவு சொல்லலாம்படி ஒதுங்க நிழலாயிறே யிருப்பது. காமுகராயிருப்பார் உகந்தவிஷயங்களிலுங்காட்டில் கடகரையிறே உகப்பது. "திவத்திலும் பசுநிரைமேய்ப்புவத்தி" "கன்றுமேய்த்தினிதுகந்த" "காலிமேய்க்கவல்லாய்" "கன்று மேய்த்து விளையாடவல்லானை." ஸாமாந்யரக்ஷணமும், விசேஷரக்ஷணமும். தன்வாயாலேபறித்து மேய்வாருடைய ரக்ஷணமும், தான்பறித்துக் கொடுப்பாருடைய ரக்ஷணமும். (கோவிந்தா) "சேரோம்" என்னும் அத்யவஸாயமில்லாத திர்யக்குக்களோடும் பொருந்தும்படியான நீர்மையையுடையவனே.

(உன்றன்னைப்பாடி) ஹிரண்யபுரம்போலே இவன்பேர் சொல்ல வொட்டுவா ரில்லைபோலே காணும் பண்டு; அநந்தரத்திலே இவர்கள் கோபிப்பர்களென்று தவிர்ந்த இழவெல்லாம் ஸந்நிதியிலே பாடப்பெறுகையாலே தீரப்பெற்றது. (உன்றன்னைப்பாடி) வகுத்த வுன்னுடைய பேரை ஸ்வயம்ப்ரயோஜநமாகப் பாடப்பெறுகையாலே, "வாயினால் பாடி" என்று உபக்ரமித்தபடியே நாப்படைத்த ப்ரயோஜநம் கொள்ளப்பெற்றோம். "உன்னைப்பாடி" என்னாதே,

என்கை. கோபீஜந வல்லபனுன வுன்னைப் பாடுகையே எங்களுக்கு ப்ரயோஜநம்போருமென்னவுமாம். (பறைகொண்டு) ப்ராப்யத்திலே ப்ராபகவ்யவஹாரம். ஊருக்கு "பறை" என்கிறது; தங்களுக்கு ப்ராப்யம். (யாம்பெறுசம்மானம்)

---

"உன்றன்னைப்பாடி" என்கிறது அத்தலை இத்தலையாவதே! உன்பணியை நாங்களேறிட்டுக்கொள்வதே! (கோவிந்தா வுன்றன்னைப்பாடி) "கோவிந்தன் குழல்கொடூதினபோது" என்று-நீபாடும்போது "கேயத்நிங்குழலூதிற்றும்" என்னும்படி பெண்கள் புணர்ப்பைக்குழலிலே யிட்டுப்பாடி. எங்களைத் தோற்பிக்கையன்றிக்கே எங்கள் வாசல்களிலே பாடி, ஆவிகாத்திராதே உன்வாசலிலே வந்து "கோவிந்தா" என்று பாடும்படியாவதே! (பறைகொண்டு) "பாடிப்பறைகொண்டு" என்று அடியிற்சொன்னபடியே ஊரார்சைந்த பறையைக் கொண்டு. ப்ராப்யத்திலே ப்ராபக வ்யவஹாரம் பண்ணுகிறர்கள் ஆற்றாமையாலே. ஊருக்கிறே பறை; தங்களுக்கு ப்ராப்யமிறே.

(யாம்) தேவகீபுத்ர ரத்நமான வுன்வாசி யறிந்துபற்றி, "உன்னை யாச்ரயித்தார்க்குப் பேறுதப்பாது" என்கிற வ்யவஸாயமுடையோமான நாங்கள். (பெறுசம்மானம்) வெறும் ஊரார்கார்யமேயாக வொண்ணாது, எங்களுடைய அபிமதமும் பெறவேணும். (யாம் பெறுசம்மானம்) பெருமாள் பிராட்டிக்குப் பண்ணின ஸம்மானம்போலே. ஆத்வாரம் தொடர்ந்தேத்தின பிராட்டிக்குத் தன்தோளில் மாலையை வாங்கி இட்டு, காலைப்பிடித்து, "நில்" என்றுபோன ஸத்காரமிறே யிவர்களுக்கு பண்ணப் புகுகிறது. அவள் இவர் திருவடிகளைப் பிடிப்பது - கைப்பிடித்த முறையாலே; இவர் அவள் காலைப்பிடிப்பது ப்ரணயித்வத்தாலே. அவனுக்குச் சொல்லு மேற்றமெல்லாம் ஸ்வரூப நிபந்தநம்; இவளுக்குச் சொல்லு மேற்றமெல்லாம் ப்ரணயித்வ நிபந்தநம்; அவனுடைய வ்யாபாரம் வைதம்; இது ராகப்ராப்தம். ஸ்வயம்ப்ரவ்ருத்தனுமிடத்தில் விதிவிஷயமாகமாட்டாதே; அவ்விடத்தில் விதி நுழையுமாகில் போகமாட்டாதே. "வெளித்திருமுற்

தோளில்மாலையை வாங்கி யிடுகை இவர்களுக்குப் பெரும்பேறென்கை. "பதிஸம்மாநிதாஸீதா" (193) என்று-"பெருமாள்தோளில் மாலையை வாங்கியிட்டார்" என்று ஆழ்வான் பணிக்கும்; பட்டரும் பணிக்கும். அநாதிகாலம் எல்லாராலும் பட்டபரிபவம் மறக்கும்படி கொண்டாடுகை.

195. (நாடு இத்யாதி) ஒருவன் கொடுக்கும்படியே! சிலர்பெறும்படியே! என்று நாட்டார்கொண்டாடவேணும்.

---

றத்திலே" ப்ரஸாதம் அவ்வளவிலே வர, "யாம் பெறுசம்மானம் வந்தது" என்றார் பட்டர்.

(நாடுபுகழும் பரிசினால்) அநாதிகாலம் எல்லாராலும் பட்ட அவமாநம் மறக்கும்படியாக, ஒருவன் கொடுத்தபடியே! சிலர் பெறும்படியே! என்று நாட்டார் கொண்டாடும்படியாகவேணும். "பாரோர்புகழ" என்னும்படியே தலைக்கட்டவேணும். க்ருஷ்ணனும் ஸ்ரீ ஸத்யபாமைப்பிராட்டியும் அர்ஜுநனும் த்ரௌபதியுமாகக் கால்மேல் காலேறிட்டுக்கொண்டிருக்க, ஸஞ்ஜயன் திருவாசலிலே வந்தானென்றறிவிக்க, க்ருஷ்ணனருளிச்செய்கிறான்;–"நம்முடைய இருப்புக்கண்டால் உகப்பானும், உகவாதார் மண்ணுண்ணும்படி இவ்விருப்பைச் சொல்ல வல்லானுமொருவன், புகுர விடுங்கோள்" என்ன; அவனும் புகுந்து கண்டு அப்படியே போய், துர்யோதநனுக்கு, கெடுவாய்! அவர்களிருப்புக் கண்டேனுக்கு உன் காரியங் கெட்டதுகிடாய்

---

பி. 195. நன்றாக-க்ருஷ்ணனும் நப்பின்னைப்பிராட்டியும்கூட இருந்து பூட்டுவிக்கிறதே ஆபரணத்துக்கு நன்மை (பெருமாளும் பிராட்டியும் திருவடிக்கு ஹாரம் பூட்டினாற்போலே) சூடகமே - முதலிலே தொடுவது கையாகையாலே, ப்ரணயத்தில் தன் தலைமேலே ஏற்றிவைத்துக்கொள்ளும் கையாகையாலே, கை ஆபரணமாகிற சூடகம் முதலிடம் பெறுகிறது. சூடகம் அணிவிக்கும்போது அணைக்கவேண்டுகிற தோள் ஆபரணம் ஆகிற தோள்வளை (பாஹுவளையம்) இரண்டாமிடம் பெறுகிறது. ஆடையுடுபோம்-க்ருஷ்ணன் உடுத்துக்களைந்த ஸ்வேதகந்தயுக்தமான ஆடை.

(நன்ருக) "ப்ரதேஹிஸுபசேஹாரம்யஸ்ய துஷ்டாஸிபாமிநி" (194) என்று - இந்த்ரன் வரக்காட்டின ஹாரத்தை பெருமாளும் பிராட்டியுங்கூடவிருந்து திருவடிக்குப் பூட்டினாற் போலே பூணவேணும் "தம்ப்ரஹ்மாலங்காரேணாலங்குர்

---

என்ருனிறே ; சுகஸாரணர்கள் சென்று, ராவணனுக்கு, "அவருடைய வோலக்கத்தில் மதிப்பும் அவருடைய வீரப் பாடும் கண்டோமுக்கு உனக்கு ஒருருடியிருப்புத் தேடிக் கொள்ளவேண்டி யிருந்தது, ஊற்றுமாருதே நித்யமாய் நடக்கிற ஐச்வர்யத்தை யுடையராய் உனக்கு வரம் தந்து உன்கையாலே தகர்ப்புண்ணு மவர்களைப்போ லன்றிக்கே, உனக்கு முடிதந்தார்க்கும் முடிகொடுத்தராஜா உன்தம்பிக்கு லங்கையைக்கொடுத்தான், வாநரங்களும் ஆர்த்துக்கொண் டது" என்று சொன்னார்களிறே. இப்படி தன்னை ஆச்ரயித் தாரை நாடு புகழும்படியிறே வாழ்விப்பது; "வாழ்வர் வாழ் வெய்தி ஞாலம்புகழ" என்கிறபடியே. நாடுபுகழவென்று யச:பரராய்ச் சொல்லுகிருர்க ளன்று, புகழ்ந்து நாட்டார் உஜ்ஜீவிக்கை ஸ்வபாவமாக நினைக்கையாலே. க்ஷுத்ரனை யொளித்துவேண்டிப் பெறுமதிறே லோகமிகழ்வது, ஸர்வ ஸமாச்ரய ணீயன்ருனேமேல் விழுந்து ஸத்காரபூர்வகமாகக் கொடுக்கிறதாகையாலே புகழுமிறே.

(நன்ருக) இவனையொழிந்தாரைப் பாடவேண்டிப் பெறுமது பரிமித பலமாகையாலே, படிவைக்க வுண்பார் பாடே பிச்சை புக்குண்ணும் மாத்ரம் ; காலன்கொண்ட பொன்னிட்டு ஆபரணம் பண்ணிப் பூண்பார் மாத்ரம் ; நாடு புகழுமளவன்றிக்கே அவன்ருனும் ஸத்தை பெற்று நாமும் ஸத்தை பெறவேணும். இவர்களை ஒப்பிக்கை - அவ னுக்கு ஸ்வரூபம்; அவன் ஒப்பிக்க இசைகை-இவர்களுக்கு ஸ்வரூபம். (நன்ருக) இந்த்ரன் வரக்காட்டின ஹாரத் தைப் பெருமாள் பிராட்டிக்குக் கொடுத்தருள, திருக்கை யில் பிடித்துக்கொண்டிருந்து, பெருமாளை யொருகண்ணா லும் திருவடியை யொருகண்ணாலும் பார்க்க, பெருமாள் பிராட்டி திருவுள்ளத்திலோடுகிறத்தை யறிந்து, அடியார்

வந்தி " (195) என்று சிலரையிட்டு ஒப்பிக்கை யன்றிக்கே, தானும் பிராட்டியுங்கூட விருந்து ஒப்பித்த தன்னேற்றம். ஆபரணத்தைப்பூண்டு அவன் வரவு பார்த்திராதொழிகை என்றுமாம். (சூடகமே) ப்ரதமத்திலே ஸ்பர்சிக்கும்

---

தரமறிந்துகொண்டாடும் வீறுடைமைக்கு பர்யவஸாநபூமி யான நீ கொடு என்ன, திருவடியை ஒப்பித்தாற்போலே, க்ருஷ்ணன் நப்பின்னைப் பிராட்டியையிடுவித்து ஒப்பிக்கை யாய்த்து நன்ருக வொப்பிக்கையாவது.

இவர்கள் "நோக்குதியேல்" என்னப்பண்ணிற் றொரு பூர்ணகடாக்ஷமுண்டிறே, அப்பார்வைபட்ட விடமிருக்கும் படியை மேலே சொல்லுகிருர்கள் (சூடகமே) " அணிமிகு தாமரைக்கையை" என்று தன்கையை இவர்களாசைப்படுமா போலே, இவர்களாபரணம் பூண்ட கையை அவன் மார்வி லும் தோளிலும் தலையிலும் வைத்துக்கொள்ளவிறே அவனு மாசைப்படுவது. அக் கைக்கு இடக்கடவ ஆபரணம்—சூட கம். "வெள்ளி வளைக்கைபற்ற" என்கிறபடியே-அநந்யார் ஹைகளாகப் பிடித்த கைகளையிறே முதல் ஆபரணம் பூட்டு வது. (தோள்வளையே) கையைப்பிடித்த வநந்தரம் அணைக்கும் தோள்களிலே கிடந்து அவன் கழுத்திலே யுறுத்துமாபர ணம். அவன் நாண்தழும்பின் சரசரப்பு முலைகளுக்கு உத் தேச்யமானவோபாதி, இவர்களுடைய வளைத்தழும்பும் அவன்தோளுக்கு ஆசையாயிருக்குமிறே. " வேயிருந்தடந் தோளினர்" என்று-"சுந்தரத்தோளுடையான்" தோற்கும் படி தோள்படைத்த தோளுக்கிடுமாபரணம். " வேய்மரு தோளிணை" மெலியுங் காலத்திலிறே வளைபொருதொழிவது; இப்போது அணைக்கிற காலமிறே.

(தோடே) தங்கள் கைக்கும் தங்கள் தோளுக்கு மாபர ணம் போலன்றே ; அவன்தோளுக்குப் பூணுமாபரணமும் பூணவேணும். இவர்களுடைய காதுப்பணியும் செவிப்பூவும் பட்ட விமர்த்தத்தாலே வந்த சோபையைக் கோட்சொல்லு மிறே அவன் தோள்கள். " கண்டேன் கனமகரக் குழை

கைக்கிடும் ஆபரணம். பரம ப்ரணயியானையாலே தன் தலையிலே வைத்துக்கொள்ளும் கை. "அடிச்சியோந்தலை மிசை நீயணியாய்" என்று, அவர்களுக்கு இவன் சொல்லுமாபோலே சொல்லி மார்பிலும் தலையிலும் வைத்துக் கொள்ளும் கைக்கு இடும் சூடகம். (தோள்வளை) அந்த

யிரண்டும் நான்குதோளும்" என்று-அவனுடைய கர்ணபூஷணம் அவன்தோள்களுக்கு அலங்காரமானாப்போலே, இவர்களுடைய காதுப்பணியும் செவிப்பூவும் தோள்களுக்கு அலங்காரமாயிறேயிருப்பது. (தோடே! "பொற்றோடு பெய்து" என்று-பண்டே தோடிட்டாலும் இவன் இட்டாப் போலே யிராதே. (செவிப்பூவே) அணைத்த வந்தாம் ஆக்ராணத்துக்கு விஷயமானவிடம். (பாடகம்) அணைத்துத் தோற்றவர்கள் விழுந்து பிடிக்கும் காலுக்கு ஆபரணம். (சூடகமே இத்யாதி) பிடித்த கைக்கும் அணைத்த தோளுக்கும் அணைத்த விடத்தே புறத்துமதுக்கும் ஸ்பர்சத்துக்கும் தோற்றுவிழும் துறைக்கும். (சூடகமே-பாடகமே) "கைத் தலம்பற்ற" "திருக்கையால் தாள்பற்றி". கையைக் காலைப் பிடித்திறே நடுவுள்ளதெல்லாம் நடத்துவது.

(என்றனையபல்கலனும்) இவ்வளவிலிருந்தெண்ணுமதன்றே. பருப்பருத்தன சிலவற்றைச் சொன்னோம்,நீயறியுமவை யெல்லாம் என்கிறார்கள். "பலபலவே யாபரணம்" என்னக்கடவதிறே அவன்றனக்குட்பட. (யாமணிவோம்) ஆபரணங்களுக்கு அழகு கொடுக்கவல்ல அவயவங்களிலே கிடந்தாலும் நிறம்பெற்று, பூட்டினதாலும் நிறம்பெற்றுப் போம்படி வடிவுபடைத்த நாங்கள். இவ்வெல்லைவருபளவிறே "மலரிட்டு நாம்முடியோம்" என்றது. "நாம்முடியோம்" என்றால் பூட்டமாட்டான்; "அணிவோம்" என்றால் பூட்டாதிருக்கமாட்டான்; அவன் அலங்கரிக்கைக்கு இவர்களநுமதியேயமையும். (யாமணிவோம்) ஒருவரை யொருவர் மாறி மாறி யொப்பிக்கக் கணிசிக்கிறார்கள். (நாடுபுகழும் பரிசினால்-யாமணிவோம்) "நிறைபுகழாய்ச்சியர்" "அணியிழையாய்ச்சியர்" என்கிறவிரண்டும் பெறவேணும்.

ஸ்பர்சத்தாலே அணைக்கவேண்டும் தோளுக்கிடும் ஆபரணம். (தோடே) "பொற்றோடுபெய்து" என்று - பண்டே தோடிட்டாலும் அவனிட்டாற்போலேயிராநிறே. (செவிப்பூவே) "ப்ரியாவதம்ஸ" (196) இத்தியாதியிற் சொல்லுகிறபடியே அணைத்த திருக்கையிலே யுறுத்தும் ஆபரணங்கள்போலன்றிக்கே, அணைத்தவநந்தரம் ஆக்ராணத்துக்கு விஷயமான இடம். (பாடகம்) அணைத்தால் தோற்றுப்பிடிக்கும் காலுக்கிடும் ஆபரணம். (என்றனைய பல்கலன்) பருப்பருத்தன சில சொன்னோமித்தனை, நீ யறியுமவையெல்லா மென்கை. பல பலவே யாபரணமிறே. (யாம் அணிவோம்) வ்யதிரேகத்தில்

---

(ஆடையுடுப்போம்) " புனையிழைகளணிவும் " என்றால் "ஆடையுடையும்" என்று அடைவு. "காறைபூணும்கண்ணாடி காணும்தன்கையில்வளைகுலுக்கும்" என்றால், பின்னை கூறை யுடுக்கையிறே அடைவு.

(நாடுபுகழும் பரிசினால் – ஆடையுடுப்போம்) " கூறை யுடுக்குமயர்க்கும்" என்று வசைசொல்லாதபடி அரையிலே தொங்கும்படி யுடுக்கை. (கோவிந்தா வுன்றன்னைப்பாடி - ஆடையுடுப்போம்) இவன் தூரவர்த்தியானபோது "கோவிந்தன் " என்று புடவை பெறுகிறவள், இவன் ஸந்நிதியிலே சொன்னால் புடவை பெறக் கேட்கவேணுமோ. (ஆடையுடுப்போம்) முன்பு உடாதேயிருந்து இப்போது உடுப்போமென்கிறார்களன்று, அவனுடுத்த வுடுக்குமதிறே – உடையாவது. இவர்களுடுக்கவுபக்ரமிக்க, உடுத்தபடிபொல்லாது என்று அவன் அழிக்கையிறே நன்றாக வுடுக்கையாவது. (நன்றாக - ஆடையுடுப்போம்)"அரையில்பீதகவண்ணவாடைகொண்டு" என்கிறபடியே அவனைப்போலே வெளுப்போடேவாங்கி உடுத்தன்றிக்கே, உடுத்து முசித்து வேர்ப்புமணத்தோடே கூடின கூறைமாறுடப்பட்ட வுடையாயிருக்கை. (அணிவோம்-உடுப்போம்) பிரிந்திருக்கிலிறே "வரிவளையால் குறைவிலமே" " மேகலையால் குறைவிலமே " என்னவேண்டுவது. (பல்கலனும் யாமணிவோம் ஆடையுடுப்போம்) " எண்ணில் பல்கலன்களும் ஏலுமாடையும் " என்னக்கடவதிறே.

"மலரிட்டு நாமுடியோம்" என்றவர்கள் "பூண்போம்" என்கிறார்கள். அவனுக்கு இவர்களநுமதியே யமையுமென்கை. (ஆடையுடுப்போம்)பண்டு உடார்களோவென்னில்; அவனுடுத்துவிடாதது உடையன்றென்றிறேயிருப்பது. அவன் திருப்பரியட்டம் இவர்களரையிலே யாம்படி கூறை மாறவேணுமென்றுமாம். நோன்பை முடிக்கையாலே நல்ல பரியட்டம் உடுக்கவென்றுமாம். "உடுத்துக்களைந்த" என்னுமவர்களிறே யிவர்கள். ஸ்வேதகந்தயுக்தமாய் அவனுடுத்து முசிந்த ஆடையென்னவுமாம். (அதன் பின்னே யித்யாதி)

---

(அதன்பின்னே)"பீதகவாடையுடுத்தால்" கலத்ததுண்ணுமத்தனையிறே. (அதன்பின்னே) புறம்பேயொன்றைப்பற்றினால் அவையுமில்லை, அவனையுங்கிடையாது; அவனைப்பற்றினார்க்கு ஸர்வலாபமுமுண்டு. (பாற்சோறுமூட நெய்பெய்து) "நெய்யுண்ணோம் பாலுண்ணோம்" என்கிற வ்ரதங்கள் ஸமாபித்து; இவர்கள் வ்ரதத்துக்காகத் தவிர்ந்து இவர்கள் தவிருகையாலே அவன்தவிர்ந்தவூரில் நெய்க்கும் பாலுக்கும போக்கில்லையே. நெய்ப்பெருமையாலும் பால்பெருமையாலும நீரிலாக்காதே பாலிலேயாக்கி நெய்யைநிரம்பவிட்டு, நெய்யிடையிலே சோறுண்டோ என்றுதடவி எடுக்கவேண்டும்படியிருக்கை. (முழங்கைவழிவார) க்ருஷ்ணன் ஸந்நிதியிலே த்ருப்தைகளாயிருக்கிறவர்களுக்கு உள்ளேத்தொங்குகிறதன்றே; கைவழியேவழிய.

(கூடியிருந்து) பசிகெடவுண்கிறார்களன்றே ; எல்லாருங்கூடத் தொட்டுக்கொண்டிருக்கையிறே உத்தேச்யம். (கூடி) பிரிந்துபட்ட வ்யஸநமெல்லாந் தீரக்கூடி. "எனைநாள் வந்து கூடுவன்" என்ற இழவும் தீர்ந்தபடி. (இருந்து) வாசல்கள்தோறு மலமந்து எழுப்பிக்கொண்டு திரிந்த க்லேசமெல்லாந்தீர இருந்து. (குளிர்ந்து) பிரிந்து கமர்பிளந்த நெஞ்சுகள் வவ்வலிடும்படி குளிர்ந்து.

(கோவிந்தா வுன்றன்னைப்பாடி—கூடியிருந்துகுளிர்ந்து) "கோவிந்தன் குணம்பாடி ஆவிகாத்து" "காமத்தீயுள்புகுந்து

அதுக்கு மேலே பால்சோறு மூடும்படியாக நெய்பெய்து. இத்தால்-பகவத் ஸம்பந்த முள்ள திருவாய்ப்பாடியில் ஸம்ருத்தியெல்லாம் ப்ரியமாயிருக்கிறபடி. (முழங்கைவழிவார) நம்பி திருவழுதிவளநாடுதாஸர் "நெய்வாயிலே தொங்காதோ" என்ன; "க்ருஷ்ண ஸந்நிதியாலே த்ருப்தைகளா யிருக்கிறவர்களுக்கு சோறு வாயில் தொங்கிலன்றோ நெய்வாயில் தொங்குவது" என்று பட்டரருளிச்செய்தார். வ்யதிரேகத்

---

கதுவாநிற்க" விரோதே, "குளிர்ந்துறைகின்ற கோவிந்தனோடு" ஸாம்யாபந்நைகளாயிருக்கை. ஆக, இந்த இரண்டு பாட்டாலும்-ஸாம்யாபத்தியும் குணாநுபவமுமென்கிற இரண்டர்த்தமுஞ் சொல்லப்பட்டது. விரஜாஸ்நாநத்திலே உத்யுக்தனாய்ப் போருமவனுக்கு "காளங்கள் வலம்புரிகள், தூர்யகோஷ:," "ஆண்மின்கள் வானகம்" என்கிற மங்களாசாஸநம், நிறைகுடவிளக்கம், கொடியணிநெடுமதிள்" என்னும்படி கட்டின கொடியும் மேல்கட்டியுமாய் ஆதிவாஹிகர் தொடக்கமானவர்கள் ஸத்கரிக்கப்போய், விரஜாஸ்நாநம் பண்ணினவநந்தரம் ஸ்ரீவைகுண்டநாதனை யொப்பிக்கக் கடவராயிருக்கும திவ்யாப்ஸரஸ்ஸுக்கள் பல ஹஸ்தைகளுமாய் வாஸோஹஸ்தைகளுமாய் வந்து ப்ரஹ்மாலங்காரம்பண்ணி ஸ்ரீவைகுண்ட நாதனோடே கூடி ஸூரிகளோடே சேர்ந்திருந்து ஸம்ஸாரதாப ஸ்பர்சமின்றிக்கே நிரதிசய போக்யமாய், "உண்ணுஞ்சோறு" என்று சொல்லப்பட்ட போக்ய விஷயத்தை "பாலேபோல்சீர்" என்கிற குணங்களோடேகைகழியப் போருகிற ஸ்நேஹத்தோடே புஜித்துக் களிக்கக்கடவ பரிமாற்றத்தை ஒருமுகத்தாலே ஸூசிப்பிக்கிறார்கள். முக்தரானவர்களுக்கு இஸ்ஸத்காரமும் இவ்வநுபவமும் ஸித்திக்கிறது - "கோவிந்தன்றனக்குக் குடியடியார்" ரென்றிறே. (கோவிந்தா வுன்றன்னைப்பாடி) தேஹாந்தரே தேசாந்தரே பெறக்கடவபேற்றை எங்களுக்கு நீ ஸம்மானமாகப் பண்ணித்தர வேணுமென்று ஸாம்யாபத்தியையும் குணாநுபவத்தையும் அபேக்ஷித்தார்களா யிருக்கிறது. திருவடி, திருவநந்தாழ்வான், திவ்யாயுதாழ்வார்கள் தொடக்கமான ஸூரிவர்க்

தில் "நெய்யுண்ணேம்பாலுண்ணேம்" என்று சொன்னவர்கள் இன்று ஆசைப்படுகிறார்கள். (கூடியிருந்து) பிரிந்து பட்ட க்லேசம் தீரக் கூடித் தொட்டுக்கொண்டிருக்கையே ப்ரயோஜநம்; புஜிக்கை ப்ரயோஜந மன்று. (குளிர்ந்து) பிரிந்துகமர்பிளந்தநெஞ்சுகள் குளிரும்படி. "நம்பெருமாள் திருநாள்" என்று ஒரு பேரையிட்டு ஸ்ரீவைஷ்ணவர்களைத் திரட்டிக்காணுமாபோலே, "அஹமந்நமஹமந்நம் - அஹமந்நாத:" (197) என்று ஒருவர்க்கொருவர் போக்யமாமிறே. "ஸோச்நுதே ஸர்வாந்காமாந்ஸஹ ப்ரஹ்மணா விபச்சிதா" (198) என்கிற ச்ருத்யர்த்தம் இப்பாட்டிற் சொல்லுகிறது. ... .... உள

---

கம், திவ்யமஹிஷிகள், முமுக்ஷுக்கள், அஸாதாரணமான நாடு, ஈச்வரன்தானே எல்லாரும் ஸம்மானம் பண்ணும்படியான விஷயம், முமுக்ஷுவாய் முக்தனும் என்கிற ச்ருத்யர்த்தம் ஸூசிதமாகிறது.

(கூடியிருந்து குளிர்ந்து - பல்கலனும் யாமணிவோம்) பிரிந்தபோது பரியட்டங்களையும் ஆபரங்களையும் கட்டி எங்கேனும் போகட்டு ராக்ஷஸிகள் நடுவிருக்கிற வெனக்கு என்செய்ய என்றிருந்த பிராட்டியைப்போலே யிருந்தார்களிவர்கள்; ஸ்நாநமும்வஸ்த்ரங்களும் ஆபரணங்களும் பரதனை யொழிய நமக்கென்றிய என்றிருந்த பெருமாளைப் போலேயிருந்தான் க்ருஷ்ணன். நீராட்டமைத்துக் குளிக்க வழைத்தாலும் வாராதே "நப்பின்னை காணிற்சிரிக்கும்" என்றாலுமிசையாதே, குளியாதிருக்கிறமை அவர்களும் அறிகையாலேயிறே "உன்மணாளனை எம்மை நீராட்டு" என்றது இவர்கள். இவர்களோடே கூடினபின்பு,விசோதிதஜடராய் ஸ்நாநம் பண்ணி சித்ரமால்யாநுலேபநராய் மஹார்ஹ வஸநமு முடுத்து விளங்கி நின்றாற்போலே, இவனும் இவர்களோடே கூடிக்குளித்து ஒப்பித்து விளங்க வேண்டுகையாலே, கூடியிருந்து இப்படி செய்யக்கடவோமென்கிறார்கள். (நன்றாக - கூடியிருந்து குளிர்ந்து) இனி விச்லேஷவ்யஸநம் பிறவாத கூட்டரவாக வேணும். நன்

196. ஸ்வாபதேச வ்யாக்யாநம். இருபத்தேழாம் பாட்டு. (கூடாரித்யாதி) இப்பாட்டில், நோற்றால் அவன் பக்கல் பெறுமவற்றைச்சொல்லுகிறார்கள். வ்யா.–(கூடாரை வெல்லுஞ்சீர்) கரணகளேபரப்ரதாநம் முதலாக ஸாங்க சாஸ்த்ர ப்ரதாநம்பண்ணின விடத்திலும் "நநமேயம்" என்றிருப்பாரைத் தன்னுடைய சௌர்யாதி குணங்களா லும் சீலாதிகுணங்களாலும் வெல்லுமித்தனை. விற்பிடியைக் காட்டி ராவணனை ஜயித்தான்; இது ப்ரதமயுத்தத்திலே, "கச்சாநுஜாநாமி" என்று இவனும் அதுக்கெதிர் பார்த்துப் போனவன், தோலாமை யில்லையிறே. ஆனால் மறுபடி யுத்த முண்டானபடி யெங்ஙனே யென்னில்; பெருமாளுடைய நிரதிசய சௌர்யத்தைப் ப்ரகாசிப்பிக்கைக்காக மறுபடியும் யுத்தம் பண்ணினானித்தனை. "சத்ரோ:ப்ரக்யாதவீர்யஸ்ய ரஞ்ஜநீயஸ்யவிக்ரமை:" "ஸ்வவிக்ரமை: ரஞ்ஜநீயஸ்ய" என்னக்கடவதிறே என்று நம்முடைய ஆசார்யர் அருளிச்செய்வர். தன்னுடைய வடிவழகைக் காட்டி கோபிமார்களைஜயித்தான்; ஸ்வரூபரூபகுண விபூதிகளாலே ஸர்வஸ்மாத்பரனான தன்னுடைய வைலக்ஷண்யத்தைக் காட்டி ஆழ்வார்களை ஜயித்தான்; இவையொன்றிலு மீடுபடாத நம்போல்வாரை ஆழ்வார் ஸம்பந்தத்தை வ்யாஜீகரித்து ஜயிக்குமித்தனை. (கோவிந்தா) ஸர்வஸுலபனானவனே. (உன்றன்னைப் பாடி) ஸர்வஸ்மாத்பரனாய் ஸர்வஸுலபனான வுன்னை த்வதநுபவ ஜநிதப்ரீதிக்குப் போக்குவீடாகப்பாடி.(பறைகொண்டு) புருஷார்த்தத்தை லபித்து. (யாம்பெறுசம்மானம் நாடுபுகழும் பரிசினால் நன்றாக) நாடு ஸ்வாபிப்ராயமாகக் கொண்டாடும் ப்ரகாரத்தாலே உன்பக்கல் கைபார்த்திருக்கும் நாங்கள் லபிக்கிற பஹுமாநம். உன்பக்கல் நன்றாக யாம் பெறு சம்

---

ளிறே வருகிற கூட்டரவாகையாலே நன்றாகக் கூட வேணுமிறே. (உன்றன்னைப்பாடி - கூடி - குளிர்ந்து) வாய் பாட, உடம்புகூட, நெஞ்சுகுளிர. (கூடி - குளிர்ந்து) குள்ளக்குளிர நீரிலே தோயாதே நீர் வண்ணன் மார்வத்திலே தோயவேணும். .... ... ... உள

மான மென்றுமாம். (சூடகமே) காப்பே. (தோள்வளையே) திருவிலச்சினையே. (தோடே) திருமந்த்ரமே. (செவிப்பூவே) த்வயமே. (பாடகமே) சரமச்லோகமே. இவை ஸ்வரூபஜ்ஞராய் முமுக்ஷுவான அதிகாரிக்கு அவச்யாபேக்ஷிதங்களாய் பகவத்ஸம்பந்தத்யோதகங்களா யிருப்பன. இதில் தோடு, மண்டலாகாரமாய், மந்த்ரசேஷ விவரணியான ப்ரணவாகாரத்துக்கு த்யோதகமா யிருக்கையாலே - திருமந்த்ரத்தைச் சொல்லுகிறது. (செவிப்பூ) ஸ்வயம் போகரூபமாகையாலே - போகப்ரதாநமான த்வயத்தைச் சொல்லுகிறது. (பாடகம்) பாடகம் பத்தரூபமாகையாலே - உபாயாந்தர நிவ்ருத்திபரமான சரமச்லோகத்தைச் சொல்லுகிறது. இம் மூன்று ரஹஸ்யத்தாலும் - ஜ்ஞாநபக்தி வைராக்யங்களைச் சொல்லுகிறது. அதெங்ஙனேயென்னில்; திருமந்த்ரம் ஆத்ம ஸ்வரூப யாதாத்ம்யஜ்ஞாந பரமாகையாலும், த்வயம் உத்தர கண்டத்தில் சொல்லுகிற கைங்கர்யத்துக்கு பூர்வபாவியான பக்தி ப்ரதாநமாகையாலும், சரமச்லோகம் த்யாஜ்யாம்சத்தில் வைராக்யப்ரதாந மாகையாலும்,ஜ்ஞாநபக்திவைராக்யங்களைச் சொல்லுகிறது. (என்றனைய) என்று சொல்லப் படுகிற. (பல்கலனும்) ஜ்ஞாநபக்தி வைராக்யங்கள் மூன்றும். ஒரொன்றே விஷயபேதத்தாலே அநேகமா யிருப்பனவிறே; ஆகையாலே (பல்கலனும்) என்கிறார்கள். (யாமணிவோம்) உன்னோடே கூடாதவன்று இவையொன்றும வேண்டாத நாம், இன்று அணியக்கடவோம். பகவத்ஸம்பந்தமின்றியிலே ஜ்ஞாநபக்தி வைராக்யங்களுண்டானாலும் அபாயமேயிறே பலிப்பது. பௌத்தனுக்கும் ஜ்ஞாநபக்தி வைராக்யங்களுண்டிறே. (ஆடையுடுப்போம்) சேஷத்வஜ்ஞாநமாகிற வஸ்த்ரத்தையுடுப்போம். (அதன்பின்னே) அதுக்குமேலே. (பாற்சோறு) கைங்கர்யமானது. (மூடநெய்பெய்து) மறையும்படி பாரதந்த்ரியத்தைவெளியிட்டு.(கூடியிருந்து குளிர்ந்து)போக்தாவான வுன்னோடுபோக்யரானநாம் ஸம்பந்தித்திருந்து விச்லேஷவ்யஸநமெல்லாந்தீரப் பெற்றோம். இதுவன்றோ நாம் உன்பக்கல் பெறும் ஸம்மாநம்.

## இருபத்தெட்டாம் பாட்டின் அவதாரிகை

**மூவாயிரப்படி** :—197. இருபத்தெட்டாம்பாட்டு. முதற் பாட்டில் "நாராயணனே நமக்கே பறை தருவான்" என்று ஸங்க்ரஹேணசொன்னப்ராப்யப்ராபகங்களை, இந்தஇரண்டு பாட்டாலே விவரிக்கிறது. அதில், இப்பாட்டிலே, நாட்டார்

---

**ஆறாயிரப்படி**:—இருபத்தெட்டாம்பாட்டு. "மார்கழி நீராடுவான்" என்று நோன்பை ப்ரஸங்கித்து அதுக்கு உபகரணங்களாயிருப்பன சங்கங்கள் முதலானவற்றையும், "கூடாரை வெல்லுஞ்சீர்" ... "கூடகமே ரீதரள்வளேயே" என்று வ்ரதம் தலைக்கட்டினால் அலங்கரிக்கைக்கும் உடுக்கைக்கும் உண்கைக்கும் வேண்டுவனவாயிருப்பன சில உபகரணங்களையும், அவனுக்கும் தங்களுக்கும் அகவாயிலே சில நிழலெழாநிற்க நாட்டுக்கு மேலெழுந்தன சில அபேக்ஷித்தார்களாய் நின்றார்கள் - கீழிரண்டு பாட்டிலும்; "அணியாய்ச்சியர் சிந்தையுள்குழகனார்" என்று இவர்கள் நெஞ்சிலே கலக்குமவனுகையாலே, அவன், உங்கள் அபிஸந்தி இவ்வளவென்று தோற்றியிருந்ததில்லை, நீங்கள் சொன்னவையும் இன்னம் மேல் சொல்லுமவையுமுண்டாகிலும் நாம் தருமிடத்தில் நீங்கள் நின்ற நிலைதன்னை அறிந்துகொள்ளவேணும், பேறு உங்களதானபின்பு நீங்களும் சிறிது யத்னித்துவைக்கவேணும், அதுக்குடலாக நீங்களநுஷ்டித்த உபாயமேதேனுமுண்டோ வென்ன; எங்களளவு கண்டாய்க்கு சில ஸாதநங்களுண்டோ வென்று சொல்லும்படியிருந்ததோ என்று தங்கள் ஸ்வரூப மிருந்த

---

பி. 197. முதற்பாட்டில் "நாராயணனே நமக்கேபறைதருவான்" என்று ஸங்க்ரஹமாகச் சொன்ன ப்ராப்ய ப்ராபகங்களை இந்த 28, 29-ம் பாட்டுக்களில் விவரிக்கிறார்கள். "பறை என்பது, கோகுலவாஸிகளை இசைதற்காக நோன்புக்கு உபகரணம், எங்களுக்கு உன் திருவடிகளில் அந்தரங்க கைங்கர்யமே உத்தேச்யம், அதைப் பெறுதற்கு நீயே உபாயம், உன்னைச் சிறுபேரால் அழைத்த குற்றத்தைப் பொறுத்து, எங்கள் வேண்டுகோளை நிறை வேற்று" என்கிறார்கள்.

இசைகைக்காக "நோன்பு" என்று ஒரு வ்யாஜத்தையிட்டுப் புகுந்தோமித்தனை, எங்களுக்கு உத்தேச்யம் அதுவன்று உன்திருவடிகளில் கைங்கர்யமே யென்று தங்களுக்கு உத்

---

படியை யறிவித்து, கேவலம் தயாவிஷய மென்னுமிடத்தைத் திருவுள்ளம்பற்றி, நீ எங்கள் காரியஞ்செய்யவேணுமென்று தங்கள் உபாய சூந்யதையை விண்ணப்பஞ் செய்கிறார்கள்-இப்பாட்டில். "போற்றியாம்வந்தோம்" "எம்மேல்விழியாவோ" "உன்னையருத்தித்து வந்தோம்" என்று தொடங்கி ப்ராப்யருசியை ஆவிஷ்கரித்தார்கள் - கீழ்; அந்த ப்ராப்யத்தைப் பெறுகைக்குடலாக தங்களுடைய ஆகிஞ்சந்யத்தையும் அவனுடைய உபாயபாவத்தையுஞ் சொல்லுகிறார்கள் - இதில். "யாம் வந்தகாரிய மாராய்ந்தருள்" என்றவாறே, வந்த வருத்தங்களை யாராயாதே, அகவாயில் ஏதேனும் ஸாதநாம்சங்களாய்க் கிடப்பன சிலவுண்டோ என்று ஆராயப் புகுந்தான்; நின்னருளே புரிந்திருக்கிற வெங்களுக்கு எடுத்துக் கழிக்கலாமபடியும் சிலவுண்டென்றிருந்தாயோ; "இரங்கு" என்றும், "அருள்" என்றும் நாங்கள் அபேக்ஷித்த அருளுக்கு ப்ரதிபந்தகமாய்க் கிடப்பன வொன்றுமில்லையே என்று ஸர்வஜ்ஞனறிய வொன்றில்லாமையை யாதார்த்யேந அறிவிக்கிறார்கள்.

ஸித்தோபாயஸ்வீகாரம் பண்ணுமதிகாரிகளுக்குப்பேற்றுக்குக்கைம்முதலிலாயிருப்பதொரு ஸத்கர்மமில்லையென்கையும், மேலும் யோக்யதை யில்லை யென்கைக்காகத் தங்களுடைய நிகர்ஷாநுஸந்தாநமும், மூலஸூக்ருதமான ஈச்வரனுடைய குணபூர்த்தியை யநுஸந்திக்கையும், ஸம்பந்த ஜ்ஞாநமும், பூர்வாபராதங்களுக்கு க்ஷாமணம் பண்ணுகையும், உபாயபூதனனவீச்வரன்பக்கலிலே ப்ராப்யத்தை அபேக்ஷிக்கையும், இவை ஆறும் அதிகாராங்கங்களாகையாலே, "நோற்றநோன்பிலேன்" "குறிகொளந்தணமை தன்னை யொளித்திட்டேன்" "குலங்களாய வீரிரண்டிலொன்றிலும் பிறந்திலேன்" "நலந்தானொன்றுமிலேன் நல்லதோரறஞ் செய்துமிலேன்." தர்மநிஷ்டையில்லை யென்று ஸத்கர்ம

தேச்யமான புருஷார்த்த ஸித்திக்கு, தங்கள் ஆகிஞ்சந்யத்தையும் ப்ராப்தியையும் முன்னிட்டு, நீயே உபாயமாகவேணும்

ராஹித்யத்தைச் சொல்லுவார்; "ராவணோநாம" ஜகத்திலே பேர்படைக்கும்படி பரஹிம்ஸையிலே அதிரநடத்துவதொரு பேர்மாத்ரமாய்ப் போகாமே, ஸர்வவிஷயமாக வழிகெட நடந்து பரஹிம்ஸையே யாத்ரையா யிருப்பதொரு ஜந்மமாய், மேலும்திருத்தவொண்ணாதபடி நியாம்யனன்றிக்கே யிருப்பானொரு தண்ணியனுக்கு சேஷபூதனாய், அவனாலே தூஷித மான வுதரத்திலே சிரகாலம்வாஸனை பண்ணிப்பிறந்து முறுகல்தனத்தில் அவன் என்னைக்கொண்டு நடத்த அநீதிகளில் நடந்து, அதில் அவனிலுங் காட்டில் ப்ரகாசமுடையனா யிருப்பானொருவனென்று நிகர்ஷஞ்சொல்லுவார்; "பொறாத் தேன் புன்சொல் நெஞ்சில்" என்றும், "எப்பாவம் பலவு மிவையேசெய்து" என்றும் "மனத்திலோர் தூய்மையில்லை" என்றும்-நிந்தித கர்மபூயஸ்தைசொல்லி, மேலும் யோக்யதை இல்லையென்பார்; "அரவினணையம்மானே" "நம்பி கடல் வண்ணா" "மாயனே யெங்கள் மாதவனே" என்றும் - "சரண்ய !" என்பாராய்க்கொண்டு ஈச்வரகுணபூர்த்தியை யநுஸந்திப்பார் ; "உன்னடியனேனும் வந்து" என்றும், "புகலொன்றில்லா வடியேன்" என்றும் - ஸம்பந்தாநுஸந்தா நம் பண்ணுவார்; "நாயினேன் செய்த குற்றம்நற்றமாகவே கொள்" என்றும், "மத்வ்ருத்தமசிந்தயித்வா - ப்ரஸீத" "ஸர்வாநசேஷத:க்ஷமஸ்வ" என்றும் - பூர்வாபராதத்துக்கு க்ஷாமணம் பண்ணுவார் ; "சன்மம் களையாய்" "உன்னடிசேர் வண்ணமருளாய்" என்று - ப்ராப்யத்தை உபாயபூதனை நீயேதரவேணுமென்று அபேக்ஷிப்பாராயிறே அதிகாரிக ளிருப்பது. ஆகையாலே, இவர்களும் தங்களுடைய ஆகிஞ்சந்யத்தையும் அயோக்யதையையும் ஆவிஷ்கரித்து, உபாய பூர்த்தியையும் தங்கள் ப்ராப்தியையும் முன்னிட்டு, கீழ்ச் சொன்னவற்றுக்கெல்லாம், அநுதபித்து க்ஷமைகொண்டு, எங்கள் ப்ராப்யஸித்திக்கு நீயே உபாயமாகவேணும் என்று அபேக்ஷிக்கிறார்கள். கார்ய நிர்ணயவேளையாகையாலும்

என்று அபேக்ஷித்து, இதுக்கு க்ஷாமணம் பண்ணிக்கொண்டு ப்ராப்யப்ரார்த்தநம் பண்ணித் தலைக்கட்டுகிறது. யேஷிற்

ஸர்வஜ்ஞன் ஸந்நிதியாகையாலும் உள்ளபடி சொல்லி தீர விட்டுக்கொள்ளாதபோது புரையறுதிறே.

நிதாநஜ்ஞனை பிஷக்கின் முன்பு வ்யாதிக்ரஸ்தன் தான் பண்ணின அபத்யங்களைச் சொல்லி அந்தவ்யாதியைத் தீர்த்துக்கொள்ளுமாபோலே, ஸ்வதோஷத்தை யாவிஷ்கரித்து க்ஷாமணம் பண்ணவேண்டியிறே ப்ரபந்நர்க் கிருப்பது. புறம்பு, அந்தவ்யாதிக்கு நிமித்தமும், பரிஹாரமும், பரிஹாரம பண்ணும் பிஷக்கும், பேஷஜமும், பத்யமும், வ்யாதி சமித்தால் புஜிக்கும் போகமும், பேதித்திருக்கும்; இங்குவந்தால் அப்படியன்று;—"வேவாரா வேட்கைநோய்" என்று—ப்ரேம வ்யாதிக்கு நிமித்தமும் தானாய், "மாலே மணிவண்ணா" என்கிற க்ருஷ்ணன்றான் பரிஹாரம் பண்ணும் மருத்துவனுமாய், "ஆயர்கொழுந்து மருந்தாம்" என்று பேஷஜமும் தானாய், கொழுந்தில் கிழங்கு பத்யமுமாய், நோய்விட்டால் புஜிக்கு மதுவும் "எங்களமுது" என்கிறபடியே க்ருஷ்ணன் தானே யிறே யிருப்பது. "மருந்தும் - அமுதமும்தானே" என்று - அம்ருதம் ஔஷதமாம்படி யிருக்கிறதிறே. வ்யாதிக்ரஸ்தர் "மருந்து" என்றிருப்பர்கள்; வ்யாதிரஹிதர் "அமுதம்" என்றிருப்பர்கள். இங்குள்ளார் "நோய்களறுக்கும்மருந்து" என்றிருப்பர்கள்; அங்குள்ளார் "போக மகிழ்ச்சிக்கு மருந்து" என்றிருப்பர்கள். நோயில்லாதானொருவனுமே தன்னை மருந்து என்று அறியான்; "தேனிலினிய பிரானே - அருமருந்தாவ தறியாய்" என்னக்கடவதிறே. இப்படி ப்ரபலமா யிருப்பதொரு ஔஷதம் பெற்றால் கடுக பரிக்ரஹித்துக்கொள்ள வேண்டுகையாலே, சுத்தபாவராய் உன்னையல்லது செல்லாதாரைப்போலே எங்களை நிரூபியாதே திருமுன்பே நின்று சொன்ன வார்த்தையைப் பொறுத்தருளவேணுமென்று க்ஷாமணங் கொள்ளுகிறார்கள். உபசார புத்யா பண்ணும் அபசாரங்களையும் க்ஷமிப்பானொருவனைகை

பாட்டிலே ப்ராப்யப்ரார்த்தநம்பண்ணுகின்றதாகில் இங்குப் பண்ணுகிற தென்னென்னில்; ப்ராபகம் ப்ராப்யஸாபேக்ஷமாயிருக்கையாலே சொல்லுகிறார்கள்.

---

யாலேயிறே அபத்யஸெளஹெளஷத மென்றது. நச்சுமா மருந்துமிறே.

"இப்போதே யெம்மை நீராட்டு" என்று-ஆசுகாரியான ஒளஷதமாகையாலே அப்போதே குளித்து உண்ணப்பண்ணுமிறே; ஆகையாலே கண்ணழிவற்ற ப்ராபகஸ்வீகாரம் பண்ணுகிறார்கள். ப்ராபகஸ்வீகாரந்தான் ததிதர ஸர்வோபாயத்யாக பூர்வகமாயாய்த்திருப்பது; அவைநின்றநின்றவளவுகளுக் கீடாயிருக்கும். அவற்றில் அதிகரிக்கைக்கு அசக்தனானவன் "மாட்டேன்" என்றும், அதிகரித்தே அப்ராப்தியை யுணர்ந்தவன் "விட்டேன்" என்றும், அறிந்து அதிகரியாதவன் "அவை யெனக்கில்லை" என்றும், அவை யறியாதவன் ருசிவாஸனைகளு மில்லாதவனாகையாலேதான் பூர்ணாதிகாரி யென்னுமிடத்தைக் காட்டினானாகிறான். "நசஸாமர்த்யவாந்" என்பாருமுண்டு; "ஸந்த்யஜ்ய" என்பாருமுண்டு; "நோற்ற நோன்பிலேன்" என்பாருமுண்டு; "மற்றோ லொன்றறியேன்" என்பாருமுண்டு; ஆகையாலிறே உபாயம் ஸர்வாதிகாரமாகிறது. உபாயாந்தரமுடையவனுக்கு அவற்றை விட வேண்டுவானென்னென்னில்; பகவத்வ்யதிரிக்தமாயிருப்ப தொன்று உபாயமாக மாட்டாமையாலே. அவையுண்டானாலும் இவன்கைபார்த் திருக்கவேணுமிறே; அவை அசக்ய க்ரியையென்று மீளுதல், ஸ்வரூபத்தை யுணர்ந்து மீளுதலித்தனை; அவை உடையவர்கள் விடுவது, இல்லாதவர்கள் இல்லையென்று அறிவிக்கையு மாயிறே யிருப்பது. அதில் இவர்கள்தான் எங்களுக்கு த்யாஜ்யாந்தரமில்லை என்கிறார்கள். மஞ்சனக்கொட்டும், மேல் சங்கும், போற்றவும், புகழவும், பகல்விளக்குப்பிடிக்கையும், கொடியெடுக்கையும், மேற்கட்டிகட்டுகையும், ஆபரணங்கள் பூண்கையும், உடுக்கை உடுக்கையும், அடுகுவளமெடுக்கையும, இவையெல்லாம் அதிசயித புண்யருடைய வரிசையிறே; க்ஷாத்ரமான ராஜபோக

கறவைகள்பின்சென்றுகானஞ்சேர்ந்துண்போம்
அறிவொன்றுமில்லாதவாய்க்குலத்துன்றன்னைப்
பிறவிபெறுந்தனைப்புண்ணியம்நாமுடையோம்
குறைவொன்றுமில்லாதகோவிந்தாவுன்றன்னோ
டுறவேல்நமக்கிங்கொழிக்கவொழியா
தறியாதபிள்ளைகளோம்அன்பினாலுன்றன்னைச்
சிறுபேரழைத்தனவும்சீறியருளாதே
இறைவாநீதாராய்பறையேலோரெம்பாவாய்.

பதவுரை :—புல்லுள்ளவிடம் தேடி மேய்க்கைக்காக, கறவைகள் - பசுக்களின், பின்சென்று - பின்னேபோய், கானம் - காட்டிலே, சேர்ந்து - பொருந்தி வர்த்தித்து, உண்போம் - சரீரபோஷணமே பண்ணித் திரிந்தவர்களாய், ஒன்றும் அறிவில்லாத - சற்றேனும் அறிவில்லாத, ஆய்க்குலத்து - கோபகுலத்திலே பிறந்த, நாம் - நாங்கள், உன் றன்னை - உன்னை, பிறவிபெறுந்தனை - ஸஜாதீயனாகப் பெறத்தக்க, புண்ணியம் - புண்யத்தை, உடையோம் - உடைத்தானவர்களாயிராநின்றோம்; குறைவொன்றும் - ஒருவகைக் குறைகளும், இல்லாத - இல்லாதவனாய், கோவிந்தா - கோவிந்தனென்னும் பேரையுடையனாய், இறைவா - ஸர்வஸ்வாமியானவனே, உன்றன்னோடு - உன்னோடு எங்களுக்குண்டான, உறவு - ஸம்பந்தம், இங்கு—, நமக்கு,—ஒழிக்கஒழியாது - உன்னால் ஒழிக்கக் கூடாது; அறியாத - லோகமரியாதை யொன்றும் அறியாத, பிள்ளைகளோம் - பாலகளான நாங்கள், உன்றன்னை - உன்னை, அன்பினால் - அன்பாலே, சிறுபேரழைத்தன - சிறிய பேராலே அழைத்தவற்றைக்குறித்து, சீறியருளாது - கோபித்தருளாமல், பறை - எங்கள் அபேக்ஷிதத்தை, தாராய் - தந்தருளவேணும் என்கிறார்கள்.

---

மன்றே நீங்கள் நினைக்கிறது, "வானிளவரசு" நம்மோடே கூடியிருந்து குளிர்ந்து உபயவிபூத்யைச்வர்யத்தையும் புஜிக்கும்போது ஜந்மாந்தரஸஹஸ்ரங்களிலே தபோஜ்ஞாநஸமாதிகளாலே விளைந்த புண்யபலமாய் வரவேணும், அப்படிக்கு நீங்கள் ஏதேனும் செய்ததுண்டோ வென்ன; சொல்லுகிறார்கள்.

198. வ்யா.—(கறவைகள்) "ஜ்ஞாநேநஹீந:பசுபிஸ் ஸமாந:" (199) என்று-அறிவுகேட்டுக்கு நிதர்சநமான பசுக்கள். (பின்சென்று) நாங்கள்தேவரைப் பெறுகைக்கு குரு

---

வ்யா.—(கறவைகள் பின்சென்று) ஸாங்காத்யயநம் பண்ணி, அர்த்தஜ்ஞாநம் பிறந்து, விஹிதகர்மங்களை யனுஷ்டித்து, விரோதிபாபக்ஷயம் பிறந்து, சுத்தபாவனாய், ஜிதேந்த்ரியனாய், விஷயங்களினின்றும் ப்ரத்யாஹ்ருதமான மநஸ்ஸை ஆத்மப்ரவணமாக்கி, ஆத்மயோகம் கைவந்து, அந்தர்யாமியளவும் சென்று, அவனுடைய ஸ்வரூபாதிகளை ச்ரவணமநநங்கள் பண்ணி, அர்ச்சநப்ரணாமாதி பூர்வகமான நிரந்தரத்யாநத்தைப்பண்ணி, இப்படி திரண்ட ஸாக்ஷாத்க்ருதத்தாலே உன்னைப் பெறும் அந்தயோகத்தில்அந்வயிப்பதாகவிறே வேதாந்தங்களில் சொல்லுகிறது; இந்ததர்சநஸமாநாகாரமான நிரந்தர ஸ்ம்ருதிக்கு விஷயமான, பகவத்ஸ்வரூபஜ்ஞாநத்துக்குக் காரணமான, ஆத்மாவலோகநஹேதுவான, ஜிதேந்த்ரியத்வத்துக்குமூலமான, பாபக்ஷயஹேதுவான, விஹிதகர்மாநுஷ்டாநத்துக்கு நிமித்தமான, அர்த்தஜ்ஞாநத்துக்கு ஸாதநமான ஸாங்காத்யயநம், குருகுலவாஸ ஸாபேக்ஷமாயிறே யிருப்பது. அதுக்கடியாக நாங்கள் குருகுலவாஸம் பண்ணின படியைக் கேட்டருளலாகாதோ வென்கிறார்கள் (கறவைகள் பின்சென்று) இவர்கள் ஸேவித்த ஆசார்யர்களிருக்கிறபடி. அபிஜநவித்யா வ்ருத்தங்கள் மூன்றும் அவதாதமாயிருப்பாரையிறே ஸேவ்யராகச் சொல்லுகிறது; திர்யக்ஜந்மமானபடியாலே பிறவியும் விபரீதமாய் ஜ்ஞாநஹீநரை பசுப்ராய ரென்னும்படி ஜ்ஞாநமுமின்றிக்கே, துராசாரரை ந்ருபசுக்க ளென்னும்படியாகவும் பசுஸம ரென்னும்படியாகவும் வ்ருத்தஹீநங்களுமானவற்றையிறே நாங்கள் ஆசார்ய

பி. 198. வஸிஷ்டாதிகளுக்கு ஸத்ருசம்-வஸிஷ்டர் முதலிய ரிஷிகளுக்கு சாதாரணமக்களைவிட எவ்வளவு உயர்ந்தஞானம் உண்டோ அவ்வளவு உயர்ந்தஞானம் எங்களைவிட (இடையர் சிறுமிகளைவிட) பசுக்களுக்குண்டு. அநுக்+ாட்டுகை-அநுசரிக்கை, காபுக்காட்டுகை. ஆர்ஜவம்-இடையருடைய வ்யாபாரம்.

குலவாஸம் பண்ணினபடி. இவற்றை அநுவர்த்தித்தோமித்தனை; எங்களைப்பார்த்தால் பசுக்கள், வஸிஷ்டாதிகளுக்கு ஸத்ருசமாகப் போரும். "க்ருதாநுகாராநிவகோபிரார்ஜவே" (20J) என்று-பசுக்கள் அசுக்காட்டும் ஆர்ஜவம். (கானம் சேர்ந்து) தந்தாமுடைய வ்ருத்திகளாலே ஒரு நன்மைக்குடகளாக ப்ரதிபத்தி பண்ணுவது. பஹுச்ருதராகையாலே ஜ்ஞாநவ்ருத்தருமாய், ஜ்ஞாநவ்ருத்தர் பலர் நெடுங்காலம் ஸேவிக்கைக்கும் வீதராக ராகைக்கும் வயோவ்ருத்த ரூபமாய், ஜ்ஞாநாநுரூபமான சீலத்தாலும் பழுத்துப்ரஹ்மவாதிகளாம்படி தத்வதர்சிகளுமாய், விபரீதஞ்சொல்லும் பாஹ்ய குத்ருஷ்டிகளாகிற பரரை ப்ரமாணசதங்களாலே வென்று பகவந்மநநபரராய், கர்த்தவ்யங்கள் சோராமல் அநுஷ்டித்து ஒரு ப்ரஹ்ம நிஷ்டரா யிருப்பாரை ஆசார்யாநுவர்த்தநத்தைச் சொல்லுகிற சாஸ்த்ரங்களில் சொன்ன ப்ரணிபாதாபிவாதந பரிப்ரச்ந ஸேவைகளில் ஒன்றுங் குறையாதபடி அநுஷ்டித்துக் கொண்டிறே அறிவுடையார் போருவது ; நாங்கள் கறவைகளை அநுவர்த்தித்தோம்; அதுக்குறுப்பாக;உண்ணும் நாளுமின்றிக்கே உறக்கமுமின்றிக்கே பயாநாமபஹாரிணையண்டைகொண்டு அபயங்கதராய் இளையவர் கல்வியின் திறத்தை நாணினவர்களையிறே அநுவர்த்தநீயராக சாஸ்த்ரம் சொல்லுவது; ஆஹார நித்ராபய மைதுநங்களில் அநியதங்களா யிருக்கும் பதார்த்தங்களை ஆசார்யர்களாகவரித்தோம்; இது எங்களுடைய வ்ருத்த ஸேவை யிருந்தபடி. (கறவைகள்பின் சென்று) அறிவுகேட்டுக்குத் தலையான கன்றுகாலிகள் முன்னேபோக அவற்றின் பின்னே சென்றுய்த்து இத்தனைகாலமும் திரிந்தது. எங்களைப்பார்த்தால் பசுக்களும் வஸிஷ்ட பராசராதிகள் கோடியிலேயாய், எங்கள் இளிம்பு கண்டுசிரித்து, எங்களார்ஜவத்தை அநுகரித்து அவைவழிகாட்ட அவற்றின்பின்னே திரிந்தோம் சிலர். "காலிகள்பின் சென்று" என்னுதே " கறவைகள்பின்சென்று " என்றது - தர்மபுத்யா ரக்ஷித்ததன்று, ப்ரயோஜநபுத்யாசெய்ததென்கைக்காக. எருதுகள் வதடுகளீற்று மறுத்தவை ரக்ஷித்தறியோம். (பின்சென்று)ப்ராப்ய ருசியுடையார் அதுகைபுகுரு

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யரான
வாநமாமலை ஜீயர் அருளிச்செய்த

# திருப்பாவை ஸ்வாபதேசம்



திருப்பாவை முதலிட்டு அஞ்சு பாட்டாலும் ப்ரபந்ந நிஷ்டாக்ரமங்களையும், ப்ரபத்திவாசகமான திருநாமவைபவத்தையும் பேசுகிறது. மேல் பத்துப்பாட்டாலும் ப்ரபத்தவ்யனுடைய திருநாமஸங்கீர்த்தநமே ப்ரபந்நனுக்குக் காலக்ஷேபமாகையாலே, அந்தஸங்கீர்த்தனத்துக்கு அதிகாரிகளானவர்களை எழுப்பிக் கூட்டிக்கொள்ளும்படி சொல்லுகிறது.

அது எங்ஙனே யென்னில் ;—இதில் முதற்பாட்டாலே, பரிசுத்தராய் வ்ருத்யாபாஸத்தை யுடையவர்களுடைய சப்த ப்ரமாணத்தை முன்னிட்டு, ஸத்வகுணநிஷ்டரை ஸாத்விக ஸமாசார நிதர்சநபூர்வக பகவந்நாமஸங்கீர்த்தனத்திலே ஸமாஹிதராக்கும்படி சொல்லுகிறது. இரண்டாம் பாட்டில் ;—பகவதபிமதக்ரியாகலாபங்களாலே பகவத்போக்யமான வஸ்துவை விவேகித்து தரிப்பார்படியைக்காட்டி, ஸத்வப்ரதானரை விரோதிநிரஸநஸமர்த்தனுடைய திருநாமஸங்கீர்த்தனத்திலே ஸமாஹிதராக்கும்படி சொல்லுகிறது. மூன்றும் பாட்டில்;—ஸங்கீர்த்தனத்துக்கடுத்த ஸத்வோத்தரகாலத்தை முன்னிட்டு ஸத்துக்களாலே குதூஹலிக்கப்படும் விஷயரானவர்களை, ஸகலவிரோதி நிவாரகனுடைய ஸங்கீர்த்தனத்திலே ஸங்கதராக்கி ஸமாஹிதராக்கும்படி சொல்லுகிறது. நாலாம் பாட்டில் ;—ஜ்ஞாநதீபப்ரகாசராய் அத்தாலே உத்துங்கமான பதத்திலே இருக்கும்படியான ஸம்பந்தமுடையவர்களையும் அவனுடைய ஸர்வநாமஸங்கீர்த்தனத்திலே ஸங்கதரானபடி ஸம்விதாநம் பண்ணும்படி சொல்லுகிறது. அஞ்சாம் பாட்டில் ; பகவத்குணவித்தர் பாசுரம் கேட்கையிலே அபேக்ஷிக்கும்படி சொல்லுகிறது.

ஆறும் பாட்டில் ;—அபிஜாதமும் ஆஹ்லாதகரமுமான திருநாமஸங்கீர்த்தனத்திலே அந்வயிப்பிக்கும்படி சொல்லுகிறது. ஏழாம் பாட்டில்;—பகவத்ப்ரத்யாஸந்நரோடு ஆஸத்தி

யுடையாரையும் மநோபிராமமான நாமஸங்கீர்த்தனத்திலே ஸமர்த்தராய் தத்பரராக்கும்படி சொல்லுகிறது. எட்டாம் பாட்டில்;—பகவத்குண ஜ்ஞாநநிஷ்டரையும் இதிஹாஸோக்த மான குணநாமஸங்கீர்த்தனத்திலே ப்ரவணராக்கும்படி சொல்லுகிறது. ஒன்பதாம் பாட்டில்;-ஸௌகந்த்யஸாரஸ்ய யுக்தர்விகாஸத்தையும், ஸத்வோத்ரிக்தர் ஸமாராதன ஸம்ஹி தான தத்பரராகிறபடியையும் காட்டி, பரிபூர்ணஜ்ஞானனை யும் புண்டரீகாக்ஷநாமஸங்கீர்த்தன தத்பரராக்கிச் சேர்த்துக் கொள்ளும்படி சொல்லுகிறது. பத்தாம் பாட்டில் ;-வாக் பணிதியுடையாரையும், ஸமஸ்தப்ரதிபந்தக நிவர்த்தகமான ஸர்வேச்வரநாம ஸங்கீர்த்தனத்திலே ஸஹகாரிகளாக்கிக் கொண்டபடியைச் சொல்லுகிறது.

ஏவம்வித ஸங்கீர்த்தனத்தாலே அவனுக்கு அறுதியாகை யும், அவனையும் எழுப்பி ஸ்வாபேக்ஷிதங்களை விண்ணப்பம் செய்து அடிமைசெய்யும்படியையும், அவன் அடிமைகொள் ளும் படியையும், அவனுக்கறிவித்துத் தலைக்கட்டுகிறது மற் றெல்லாம்.

திருப்பாவை அடியிட்டஞ்சு பாட்டாலும் - ப்ரபந்த நிஷ்டாக்ரமமும், ப்ரபத்தவ்யன் அதிஸுலபனும்படிக்கடி யான அவனுடைய அவதாரத்தின் அடிப்பாடும் சொல்லு கிறது. மேலிட்டுப்பத்துப்பாட்டும் ப்ரபத்திக்குப் பூர்வபாவி யான வாக்யகுருபரம்பரையினுடைய க்ரமம் சொல்லி, பக வத்விஷயத்தில் உத்யுக்தரானவர்களோடு போர அவகாஹித் தாரோடுவாசியற, உத்தேச்யரென்னுமிடம் சொல்லுகிறது.

அது எங்ஙனே என்னில்; - "பிள்ளாய் எழுந்திராய்" என்கையாலே பகவத்விஷயத்திலே அபிநவமாக மூட்டும் "அஸ்மத்குருப்யோநம:" என்னும்படி சொல்லுகிறது. அநந் தரம் "நாயகப்பெண்பிள்ளாய்" என்கையாலே ஸ்வாசார்ய னுக்கும் கௌரவ்யனாகையாலே, "அஸ்மத்பரமகுருப்யோ நம:" என்கிறபடியைச்சொல்லுகிறது. "கோதுகலமுடைய பாவாய்" என்று ஸர்வராலும் கொண்டாடும்படி யிருக்கை யாலே "அஸ்மத்ஸர்வகுருப்யோநம:"என்கிற அர்த்தத்தைச்

சொல்லுகிறது. "மாமான்மகளே" என்கையாலே ஒளி புதுவை நகர்வாழும் பேர்கள் தாயான ஆண்டாளுக்கு அண்ணரான "ஸ்ரீமதேராமானுஜாயநம:" என்னும் அர்த்தம் சொல்லுகிறது. இதுவும் ஆழ்வான் அளவும் அநுஸந்தேயம். "நோற்றுச் சுவர்க்கம்புகுகின்ற அம்மனாய்" என்கையாலே, ஸித்தோபாயத்தாலே ப்ராப்ய வைலக்ஷண்யஜ்ஞானத்தை யுடையராய், அத்தாலே உடையவர்க்கும் கௌரவ்யரா யிருக்கும் "ஸ்ரீபராங்குசதாஸாயநம:" என்னுமர்த்தம் சொல்லுகிறது.

"கோவலர்தம்பொற்கொடி" என்கையாலே, க்ருஷ்ண பக்தியுக்தரான நாதவம்சயுக்தராயிருக்கிற "ஸ்ரீமத்யாமுந முநயேநம:"என்னும் அர்த்தம்சொல்லுகிறது."நற்செல்வன் தங்காய்" என்கையாலே, திருக்குமாரத்தியார் பருவம் நிரம் பினபின்பு சேற்றில் படியாய்க்கிடந்து அநுசரணம் பண்ணி யும், "மனத்துக்கினியானைப்பாடவும்" என்கையாலும்"ஸ்ரீராம மிச்ராய நம:" என்னும் அர்த்தம் சொல்லுகிறது. "போதரிக் கண்ணினாய்", "பங்கயக்கண்ணானைப்பாட" என்கையாலே, "ஸ்ரீபுண்டரீகாக்ஷாயநம:"என்னும் அர்த்தம் சொல்லுகிறது. "நாவுடையாய்" என்கையாலே தமிழ்மறையை இயலிசை யாக்கின நாவீறுடைமையாலே "ஸ்ரீமந்நாதமுநயேநம:" என்னுமர்த்தம்சொல்லுகிறது. "எல்லே இளங்கிளியே" என்கையாலே, "சுகமுகாதம்ருதத்ரவஸம்யுதம்" என்னும்படி திருவருட்கமுகு ஒண் பழத்ததான ஆழ்வார் திருப்பவளத் தில்,"தின்கீர்த்திக்கனியென்னும் கவிகள்-மொழிபட்டோடும் கவியமுதமாய்"த் திருவாய்மொழி ப்ரவஹிக்க, அத்தாலே 'அணிமழலைக்கிளி மொழியாளை' அநுகரிக்கையாலே, "ஸ்ரீமதேசடகோபாயநம:" என்னும் அர்த்தம் சொல்லு கிறது.

"நாயகனாய்" என்று தொடங்கி மேலஞ்சுபாட்டாலே, "ஸ்ரீமத்விஷ்வக்ஸேனாயநம:", "ஸ்ரீயைநம:". "ஸ்ரீதராயநம:" என்னும் அர்த்தங்களையும் அச்சேர்த்தியிலே இவரும் புருஷ காரபூர்வகமாக ஆச்ரயிக்கச்செய்தேபெருமை ஏற்றங்களைச் சொல்லுகிறது.

"எட்டெழுத்தின் இணைப்பொருளும் இரண்டுதனில் பொருளும் இயல்வலித்தேர் அருச்சுனர்க்கு இறைவர் தம்மைத் தொட்டுரைத்த முறையறிப் பொருளையெல்லாம் தோன்றும்வகை" இத்யாதிப்படியே, இப்ரபந்தம் ரஹஸ்யார்த்தத்தை ப்ரதிபாதிக்கக்கடவதாயிருக்கும் ; அதில் த்வய யோஜனையும் மேலே யோஜிக்கப்பட்டது.

அநந்தரம் பாட்டுக்கள் எல்லாவற்றாலும் ப்ரதிபாதிக்கிற படியே விசேஷகடாக்ஷலக்ஷ்யமாம்படியை அபேக்ஷிக்கிற படியையும், 'வீற்றிருந்தேழுலகத்திற்படியே திவ்யஸிம்ஹாஸனத்திலே பேரோலக்கமாக இருக்கும்படியையும், "போற்றி' என்று சேர்த்திக்கு மங்களாசாஸனம் பண்ணும் படியையும், தங்களார்த்தித்வத்தையும்,கைங்கர்யோபகரணங்களை அர்த்திக்கும்படியையும், எல்லாரும் ஒருவரோடேகூடியிருந்து குளிரும்படியையும், பலத்துக்கநுகுணமாக ஸாதனங்கள் தங்கள் கையதன்றிக்கே அவன் கையதாயிருக்கும் படியையும், கைங்கர்யவேஷத்தையும், மாதர்களை ஏழூப்பும் படியையும், கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியான ஸ்ரீய:பதிகடாக்ஷத்தாலே அந்தக் கைங்கர்யத்தைப் பெற்றுவாழும்படியையும், சொல்லித்தலைக்கட்டுகிறது.

ஆகையாலே, குருபரம்பரா விவரணபூர்வகமாக த்வய விவரணமான இப்ரபந்தமே ப்ரபந்நனுக்கு அநுவரதாநுஸந்தேயமென்றதாயிற்று. "ஜ்ஞாதவ்யம் குருபரம்பரையும் த்வயமும்" என்னக்கடவதிறே. இதிகுருபரம்பராவிவரணம்.

த்வயத்துக்குஸங்க்ரஹமான திருமந்த்ரயோஜனை காட்டப்படுகிறது - இப்ரபந்தத்தாலே. "நமோநாராயணவென்பாரே" என்றிறே இவர்தாம் அருளிச்செய்தது. இப்ரபந்தத்தில் "ஊழிமுதல்வன்" "பற்பநாபன்" என்று சேஷத்வ ப்ரதிஸம்பந்தியான சேஷித்வத்தையும், "உனக்கே" என்கையாலே, உகாரத்தில் அநந்யார்ஹசேஷத்வத்தையும் "நாம்" என்றும் "யாம்" என்றும்-மகாரவாச்யனாய் ப்ரக்ருதே: பரனாய் பகவச்சேஷபூதனாயிருக்கிற ஆத்மாவின் ஸ்வரூபத்தையும் சொல்லுகையாலே, ப்ரணவார்த்தம் ஸங்க்ரஹீதமாயிற்று-"தூயோமாய்வந்துநாம்", "தூயோமாய்வந்தோம்",

"அபிமானபங்கமாய்", "மற்றைநங்காமங்கள் மாற்று", என்கையாலே நமஸ்ஸிலர்த்தமும், "கதிர்மதியம்போல்முகத்தான் நாராயணன்", என்றும், "நாராயணன்மூர்த்தி" என்றும் "ஓங்கியுலகளந்த உத்தன்பேர்" என்றும் சொல்லுகையாலே நாராயண சப்தார்த்தமும், "உலகை ஈரடியால்நடந்த நம்பி நாமம் சொல்லில் நமோநாராயணமே" என்னக்கடவதிறே. "உறவேல் நமக்கிங்கு ஒழிக்கஒழியாது" என்கையாலே அதில் ஸர்வவித பந்தத்வமும், "எற்றைக்கும் ஏழேழுபிறவிக்கும் உன்தன்னோடு உற்றோமேயாவோம் உனக்கேநாமாட் செய்வோம்" என்கையாலே சதுர்த்யர்த்தமும் ஸங்க்ரஹீதமாயிற்று. இதி திருமந்த்ரவிவரணம்.

"கறவைகள்பின்சென்று" இத்யாதிகளாலும், "செய்யாதனசெய்யோம்", "உன்னை அருத்தித்துவந்தோம்", "சிற்றம் சிறுகாலேவந்துன்னைச்சேவித்து" என்றும், "நாராயணன்" என்றும், "புண்ணியம் நாமுடையோம்" என்றும், "மாயனை மன்னுவடமதுரைமைந்தனை" என்று தொடங்கி "தீயினில் தூசாகும்" என்றும், "எங்கள்மேல் சாபமிழிந்து" என்றும், "வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்து" என்றும் சொல்லுகையாலே சரமச்லோகார்த்தம்ஸங்க்ரஹீதமாயிற்று. "ஐந்து தீயோடு நின்று தவப்செய்யவேண்டா திருமார்பனைச்சிந்தையுள்வைத்துமென்றீர்", "ஐந்துநெருப்பிடையேநிற்கவும் நீர்வேண்டா" "நகரமருள்புரிந்தித்யாதி-பெயரினையேபுந்தியால் சிந்தியாது ஓதி உருவெண்ணும் அந்தியால் ஆம்பயன் அங்கு என்" என்றும் சொல்லக்கடவதிறே.

திருப்பாவையால் "நாராயணன்" என்றும், "பாற்கடலுள் பையத்துயின்றபரமன்" என்றும், "ஓங்கியுலகளந்த உத்தமன்" என்றும, "ஏஷநாராயண ஸ்ரீமான் க்ஷீரார்ணவநிகேதந:| நாகபர்யங்கமுத் ஸ்ருஜ்யஹ்யாகதோமதுராம்புரீம்", என்கிறபடியே ஸ்ரீக்ருஷ்ணவதாரத்துக்கு அடியான அடிப்பாட்டை அடைவேசொல்லி, ஏவம்விதனானவன் "மாயனை மன்னு" இத்யாதிப்படியே க்ருஷ்ணனாய்வந்தவதரித்து, ஒருத்திமகனாய்ப் பிறந்து ஓரிரவில் ஒருத்திமகனாய் ஒளித்து வளருகிறவிடத்தே, "பேய்முலைநஞ்சுண்டு","கள்ளச்சகடம்

சலக்கழியக்காலோச்சி'', என்று பூதனை சகடநிராகரணம் சொல்லி, அதுக்குமேலே " தாமோதரன் " என்று வெண்ணெய் களவு காண்கையாலே கட்டவும்படிக்கவும் எளியனாயிருந்தபடிசொல்லி, மதுரையிலே மல்லரை மாட்டி, வல்லானை கொன்றபடியைச் சொல்லி, அநந்தரம், தான்தீங்கு நினைந்த கருத்தைப் பிழைப்பித்துக்கஞ்சன்வயிற்றில் நெருப்பாய், அவனைப் போக்கினவளவும் அருளிச்செய்தாரிறே. இதிசர மச்லோக விவரணம்.

(மார்கழித்திங்களித்யாதி) இதில் அத்யந்தபக்தியுக்தரானவர்கள் பகவத்விரகபரிதாபஹரமாக ஸஹகாரிகளுடன் பகவத்விஷய அவகாஹனம்பண்ண ஒருப்பட்டு, ஸ்வாபேக்ஷிதங்களை அத்தலையாலேபெற்று வாழும்படியையும் சொல்லுகிறது. தந்தாம்ப்ரீதிவிஷயங்களைப் பிரிந்தார்களுக்கெல்லாம் இப்படியிறேப்ரேமஸ்வபாவமிருப்பது.

ஸ்ரீய:பதியாய் ஸ்ரீவைகுண்ட நிகேதநனாய், ஸர்வஸ்மாத்பரனாய் இருந்துள்ள ஸர்வேச்வரன், ஆச்ரிதரக்ஷணார்த்தமாக ஸ்வவிபூதியிலே, சக்ரவர்த்தித்திருமகனாய் வந்தவதரித்துப் போந்து, பிராட்டியைப் பிரிந்து, மெல்லியல்தோள்தோய்ந்து அநந்தரம் இப்படி அதிவிலக்ஷணையாய் அத்யந்தா பிமதையான தத்விஷயத்தை லோகரக்ஷணார்த்தமாக விச்லேஷித்து, "உண்ணாது உறங்காது ஒலிகடலை ஊடறுத்து" என்னும்படி பரிதப்தனாய், " அந்தவிரஹதாபம் மாற்றலாமோ " என்கிற அலமாப்பாலே அர்ணவத்திலே அவகாஹிக்க நினைப்பதானைப் போலேயும், அவனைப் பின்தொடர்ந்துபோந்த பரிவரான தம்பி பரதனும் தயரதன் பெற்ற மரகதமணித்தடத்தைப் பிரிந்து, "கூடோக் நிரிவபாதயம்" என்னும்படி பரிதபித்து ஸரயு ஆற்றிலே அவகாஹித்து, ஸரஸ்ஸு முதலானவற்றிலே அவகாஹிக்கவும் ஒருப்பட்டிருந்தாப்போலவும், பின்னையும் மாமாயன் மாதவன்வைகுந்தன், வானிளவரசு வைகுந்தக்குட்டன் வாஸுதேவன்,-மதுரைமன்னன், நந்தகோபனிளவரசு, கோவலர்குட்டன், சூட்டுநன்மாலை தொடக்கமான அங்குத்தை போகத்தை அநாதரித்து, அடலாயர்தம் கொம்பினுக்காக இங்கே போந்தாப்போலே.

ஆண்டாளும் அந்த வைகுந்தவான்போகம் தன்னை இகழ்ந்து இங்கேற வேயர் தங்கள்குலத்திலே விஷ்ணுசித்தன் வியன்கோதையாய் வந்தவதரித்து, ஆயர்சிறுமியர் படியை அடைந்து, ஆயர்குலத்தினில் தோற்றினவனை மனதுக்கு இனியதாகப்பாடிக் கூடியிருந்தபடியைச் செய்யவெண்ணப் போந்தவளாய், அப்பால் முதலாய் நின்ற அளப்பரிய ஆரமுது தொடக்கமான விஷயங்களைப் பிரிந்த தளர்த்தியாலே இனவேல் நெடுங்கண்கள் இமைபொருந்தாதே, அவனில் எண்மடங்கான காமத்தீயுள் புகுந்து கதுவ, அந்தவிரஹதாபமாகிற பெரு நெருப்பை ஆற்றுகைக்கு ஆசரம் பெருத்து, பெரும்புறக்கடல் இப்புறத்திலே திருப்பாற்கடலாய்ப் பொங்கி எங்கும் பரந்து, வெள்ளக்கால்களாய் பரந்து சுழித்துப் பெருநீராக மதுர ஆறுய்ப்பெருகுகிற அம்ருதத்திலே குள்ளக்குளிரக்குடைந்து நீராட ஒருப்பட்டு பெருக்காற்றிலே இழிவார்துறை தப்பாமே துறைஅறிந்தநிலவரோடேகூட இறங்க நினைக்குமாபோலே, இறங்க நினைக்கிறதாயிருக்கிறது இங்கும்.

அது எங்ஙனே என்னில்?-ஸ்ரீய:பதியாய், ஸ்ரீவைகுண்டநிகேதநனாய், நித்யமுக்தாநுபாவ்யனாய், ஸர்வஸ்மாத்பரனாயிருந்துள்ள ஸர்வேச்வரன், "நாராயணனே" என்று அவன் பெரும்புறக்கடலா யிருக்கிறபடியும், அநந்தரம் "பாற்கடலுள் பையத்துயின்றபரமன்" என்று பாற்கடல்போலேயான வ்யூஹத்தையும், "ஓங்கி உலகு அளந்த உத்தமன்" என்று அதுகால்களாய்ப் புறப்பட்டுப்பரந்து "பற்பநாபன்" என்று சுழித்து, "தூயபெருநீர்யமுனைத்துறைவன்" என்று பெருக்காறுபோலேயான விபவத்தையும், "நாற்றத்துழாய் முடிநாராயணன்" என்று உள்ளே ஊற்றுஜலம்போலே அந்தர்யாமியா யிருக்கும்படியையும், "புள்ளரையன் கோயில்" என்று நித்யமானநீர்மையாலே "அதிலேதேங்கிய மடுக்கள்" என்னலாம்படி ருசிஜநகவிபவலாவண்யத்தோடே எப்போதும் ஆச்ரயிக்கலாம்படி யிருக்கிற அர்ச்சாவதாரத்தையும், அத்யபிநிவேசத்துடன் இங்கே காண இப்பிறப்பே அநுபவிக்கக்கோலி.

அவை அப்போதே அநுபவிக்கப் பெறுமையாலே, "வைகுந்தனென்பதோர் தோணிபெறாது உழல்கின்றே னே"ன்றும், "பொங்கியபாற்கடல் பள்ளிகொள்வானைப் புணர்வதோராசையினால் என் கொங்கை கிளர்ந்து குமைத் துக் குதுகலித்து ஆவியை ஆகுலம்செய்யும்" என்றும், "விண்ணுறநீண்டு அடிதாவியமைந்தனை வேற்கண்மடந்தை விரும்பி" என்றும், "பாஞ்சசன்னியத்தைப் பற்பநாபனோடு வாய்ந்த பெருஞ்சுற்றமாக்கிய" என்றும், "கொம்மைமுலை கள் இடர்தீரக்கோவிந்தற்கோர் குற்றேவல் இம்மைப்பிறவி செய்யாதே இனிப்போய்ச் செய்யும் தவந்தானென்?" என் றும், "ஆவலன்புடையார் தம்மனத்தன்றிமேவலன்" என் றும, "உலங்குண்ட விளங்கனிபோல் உள்மெலியப்புகுந்து என்னைநலங்கொண்டநாரணன்" என்றும், "பெண்கொடியை வதைசெய்தான்" என்றும், "காமத்தீயுள்புகுந்துகதுவ" என்றும், "தீமுகத்து நாகணைமேல் சேரும திருவரங்கர் ஆமுகத்தை நோக்காரால்" என்றும் சொல்லுகிறபடியே, பரத்வாதிபஞ்சாவஸ்தாவஸ்திதனாய் பஹுகுணனாய் தேச கால விப்ரகர்ஷாத்யுபாதியாலே ஆச்ரயிப்பார்க்கு அஸந்நி ஹிதத்வாதிகளாலும் ஆலோகாலாபாத்யநாநுபாவிகத்வத்தா லும் எம்பெருமான் அரியனாகிறபடியை தர்சித்து.

முற்காலத்திலே ஸ்ரீகோபிமார் "கோபீபரிவ்ருதோராத் ரிம்" என்று பூர்வபக்ஷத்தில் பூர்வராத்ரியிலே, அவையாய்ச்சி யர் சிந்தையுள் குழகனான க்ருஷ்ணனோடே கழகமாகக்கூடி யிருந்து, ஒருகார்யப்பாட்டிலே, பிரிந்துபோந்து அவனை விட்டு அகன்று உயிராற்றகில்லாதாப்போலே, பழனையாற் றிலே "மார்கழிநீராட" என்று ஒரு வ்யாஜத்தாலே க்ருஷ் ணாநுபவ குதூஹலத்தையுடையராய், அபரராத்திரியிலே உணர்ந்து, முற்பட்டார் பிற்பட்டாரை எழுப்பி, எல்லாரும் திரண்டு நப்பின்னைப்பிராட்டி புருஷகாரமாகக் க்ருஷ்ணனை எழுப்பி, ஸ்வலாபங்களை அர்த்தித்துப்பெற்று அநுபவித்தாப் போலவும்.

சீர்மல்குமாய்ப்பாடிக்கு ஸத்ருசமான ஸ்ரீவில்லிபுத்தூரி லும், ஸ்ரீவைஷ்ணவஸந்தான ப்ரஸூதையான ஆழ்வார் திரு

மகளாரான ஆண்டாள் க்ருஷ்ணநுகாரிகளான அவர்களை அநுகரித்து, "வேதம் வல்லார்களைக்கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து" என்கிறபடியே, "வேதப் பயன்கொள்ளவல்ல விஷ்ணுசித்தன் ஸம்பந்தத்தாலே வேத மனைத்துக்கும் வித்தான அர்த்தத்தைக்கொண்டு, பகவத் ருசி யுடையாரைக்கொண்டு, பத்துப் பெண்களைப் எழுப்புகிற முகேந, ப்ரபந்நஜனகூடஸ்தரான பதின்மரை முன்னிட்டு, வேதப்பொருளாய் "யமுனைத்துறைவன்" என்று பேர் பெற்ற எம்பெருமான் திருவடிகளைப்பற்றுமளவும் சொல்லு கிறார்கள். "'புள்ளும்' தொடங்கி 'எல்லே' அளவும் தச மாந்தமாயே" என்றாரிறே தேசிகரும். இவர்கள் க்ருஷ்ணநு பவத்துக்கு தேசிகராகையாலும், பத்துப் பெண்களை எழுப்பு கிறது, நாய்ச்சியாருக்குத் தேசிகராகையாலும், பிராட்டிமா ரோடே ஸாம்யகுணஷட்கத்தை யுடையராகையாலும், இவ் வநுபவத்துக்கு இவர்களைக் கூட்டிக்கொள்ளுகிறது.

இன்னமும், பகவத்விஷயத்தில் முற்பட்டார் பிற்பட் டாரையும் கூட்டிக்கொண்டு போகவேண்டும் பரஸம் ருத்தியாலும் இவர்களை எழுப்புகிறார்கள். "புஷ்பராத்ரிஸ்து தத்ரைவகங்காகூலேஸராகவ: பரத:கால்யமுத்தாய சத்ருக்ந மிதமப்ரவீத்|சத்ருக்நோத்திஷ்டகிம்சேஷே நிஷாதாதிபதிமகு ஹம்சீக்ரமாநயபத்ரந்தேதாரயிஷ்யதிவாஹிநீம்|ஜாகர்மிநாஹம் ஸ்வபிமிதமேவார்யம்விசிந்தயந்" என்னக்கடவதிறே. இங் கும் அப்படியேயாயிற்று ப்ரத்யக்ஷாநுபவத்தாலல்லது தரி யாதார், குணாநுபவத்தாலே தரித்திருப்பாரைத்வரித்தெழுப்பு கிறபடி.

இதில் முதற்பாட்டில் "பிள்ளாய் எழுந்திராய்" என்று "பிள்ளைப்பெண்" என்கிறது-பொய்கையாழ்வாரை. அதெங் ஙனே என்னில்; - "அரவம் அடல்வேழம்" இத்யாதியாலே க்ருஷ்ணநுபவத்துக்குத் தேசிகராகையாலும், இவள் சூடிக் கொடுத்தவடிவுக்கு, "வையந்தகளி" இத்யாதி - "சூடராழி யானடிக்கே சூட்டினேன் சொன்மாலை" என்றும், "மாலுங்கருங்கடலே என்நோற்றாய்" இத்யாதியாலே அவனுடைய அங்கஸங்கத்தை ஆதரித்துப் பேசியும்,

" மணமருவமால் விடையேழ்செற்று " என்று, நப்பின்னைப் பிராட்டியைப் பெறுகைக்கு எருதுகளின் மேலே வ்யாபரித்த படியைப் பேசுகையாலும், இதிலே " பேய் முலை நஞ்சுண்டு " என்றதை - " பேய்முலை நஞ்சூணாக உண்டான் " என்றும், " கள்ளச்சகடம் கலக்கழியக் காலோச்சி " என்று கன்னிப்போரான சிறுச் சேவகத்தை " ஓரடியும் சாடுதைத்த " என்றும், " வெள்ளத்தரவில் துயிலமர்ந்தவித்தினை " என்றத்தை - " வெள்ளத்தினுள்ளானும் " இத்யாதியாலே பேசியும், " ஒன்றுமதனை யுணரேன்நான் " என்றும், முந்துறமுன்னம் பகவத் விஷயத்திலே இழிந்தவராகையாலும், " பிள்ளைப்பெண் " என்கிறது-பொய்கையாழ் வாரை என்கை. பிள்ளை-மௌக்த்யம்.

இரண்டாம்பாட்டில் " பேய்ப்பெண் " என்கிறது - பேயாழ்வாரை. அதெங்ஙனே யென்னில் ; " திருக்கண்டேன் " இத்யாதியாலே நாயகனுடைய வைபவத்தை தர்சிப்பிக்கையாலும், மற்றும் ஸ்த்ரீத்வாபத்தியாலே " வெற்பென்று வேங்கடம் " என்று தொடங்கி - " நீண்டதோள் மால் கடந்த நீள்கடல் நீராடுவான் பூண்டநாள் எல்லாம் புகும் " என்கையாலும், " கோவலனாய் ஆநிரைகள் மேய்த்துக்குழலூதி " என்று க்ருஷ்ண சேஷ்டிதங்களைப் பேசுகையாலும், " பின்னைக்காய் ஏற்றுயிரை அட்டான் " என்று நப்பின்னைப் பிராட்டிக்காக அவன் எருதுகளின்மேலே வ்யாபரித்தபடியைப் பேசுகையாலும், "பேய்ப்பெண்ணே" என்கிறது - பேயாழ்வாரை என்றபடி.

மூன்றும்பாட்டில், " கோதுகலமுடையபாவாய் " என்கிறது - பூதத்தாழ்வாரை. அதெங்ஙனே என்னில் ; - ஸ்த்ரீத்வாபத்திக்கு உடலாக அன்பேதகளி இத்யாதியாலே பக்தியைப் பேசி, " பெருந்தமிழனல்லேன் பெரிது " என்ற அநந்தரம், " பெருகுமதவேழம் " என்று அவனுடைய அதிமாநுஷ சேஷ்டிதத்தையும், ஜாத்யுசிததர்மத்தையும் பேசியும் " ஏறின்பெருத்தெருத்தம் கோடொசியப் பெண்ணசையின் பின்போய் எருத்திறுத்த நல்லாயர் ஏறு " என்று நப்பின்னைப் பிராட்டியைப் பெறுகைக்கு எருதுகளின் மேலே

அவன் வ்யாபரித்த வ்யாபாரத்தைப் பேசியும், இதில் "தேவாதி தேவனெனப் படுவான் முன்னொருநாள் மாவாய் பிளந்தமகன்" என்றும், "மாலேநெடியோனே கண்ணனே விண்ணவர்க்கு மேலாவியன்துழாய்க் கண்ணியனே மேலா விளவின்காய் கன்றினால் வீழ்த்தவனே என்தன் அளவன்று யானுடைய அன்பு," என்று அருளிச் செய்கையாலும், "கோதுகலமுடையபாவாய்" என்றது பூதத்தாழ்வாரை என்றபடி. "மாதவன் பூதம்" என்கிறது, கோதுகலமிறே; ஆகையாலும், "மாதவன்பேர் சொல்லுவதே ஓத்தின் சுருக்கு" என்றவரிறே. ஆக மூவரும் ஜ்ஞாநதர்சநப்ராப்த்ய வஸ்தைகளோடேகூடி யாயிற்றிருப்பது.

நாலாம்பாட்டில், இவர்களுக்கு அநந்தரத்திலவரான திருமழிசை யாழ்வாரை - "மாமான் மகள்" என்கிறது. அதெங்ஙனே என்னில்; - "தாத்ராதுலிதாலகுர்மஹீ" என்றும், "உலகுதன்னை வைத்தெடுத்த பக்கத்தும் மாநீர் மழிசையே வைத்தெடுத்த பக்கம்வலிது." என்னும்படி மஹீஸாரக்ஷேத்ரமான திருமழிசையிலே, "பார்க்கவோதீர்க்க ஸத்ரேண வாஸுதேவம் ஸநாதநம் அபிபூஜ்ய யதாந்யாயம்" என்கிறபடியே ஸ்ரீஜகந்நாதனை உத்தேசித்துயஜித்துக்கொண்டிருக்கிற காலத்திலே, பார்க்கவனுடைய பத்நி கர்ப்பிணீயாய்த், திருமழிசைப்பிரானைத் திருவயிறு வாய்த்ததாலே, "பார்க்கவீலோகஜநநீ" என்னும்படியான பிராட்டியோடே உடன்பிறந்த பார்க்கவபுத்ரர் ஆகையாலும், "காட்டில் வேங்கடம்" இத்யாதி "கூடுமாகில் நீ கூடிடுகூடல்" என்கிறபடியே, "அழைப்பன் திருவேங்கடத்தானைக்காண இழைப்பன் திருக்கூடல்கூட" என்று ஸ்த்ரீத்வபாவனையாய்ப் பேசுகையாலும், "தூமணிமாடத்துச் சுற்றும் விளக்கெரிய" என்கிற ஜ்ஞாநதீபப்ரகாசத்தை - "என் மதிக்கு விண்ணெல்லாம் உண்டோவிலை," "ஜ்ஞாநமாகி நாயிறாகி" என்று பேசுகையாலும், "ஆய்ன்துவரைக் கோனாய் நின்றமாயன்" என்றும், "அடிச்சகடம்சாடி யித்யாதி - வடிப்ப வளவாய்ப் பின்னை தோளிக்காய் வல்லேற்றெருத்திறுத்து" என்றும், "ஆயனாகியாயர் மங்கைவேயர்

தோள்விரும்பினாய் " என்றும், " பின்னைகேள்வ ! நின்னெடும் பூட்டிவைத்த வென்னை நின்னுள் நீக்கல் " என்றும், க்ருஷ்ணசேஷ்டிதங்களையும் நப்பின்னைப்பிராட்டி புருஷகார வைபவத்தையும் சொல்லி, இதிலே " மாமாயன் மாதவன் வைகுந்தன் " என்றதை " மாதவனை " என்றும், " வைகுந்தச் செல்வனார்" என்றும் பேசுகையாலும், "மாமான்மகள" என்கிறது - திருமழிசைப்பிரானை என்றபடி.

பார்க்கவனும் பார்க்கவியும், ப்ருகுவுக்குக் க்யாதியினிடத்திலே ஸஹோதரராக ஸம்பவிக்கையாலும், லோகமாதாவுடன் பிறந்தவன் லோகத்துக்கெல்லாம் மாமனாகத்தட்டில்லையிறே. அந்த பார்க்கவ புத்ரனாகையாலே இவரை " மாமான் மகள் " என்னக்குறையில்லை. அன்றிக்கே, யசோதைப் பிராட்டிக்குப் பின்பிறந்த ஸ்ரீகும்பர் குமாரத்தியான நப்பின்னைப் பிராட்டிகரத்தையுடையார் ஒருவராகையாலே " மாமான் மகள் " என்று சொல்லுகிறதாகவுமாம்.

அஞ்சாம்பாட்டில், " அம்மனாய் " என்கிறது - குலசேகரப்பெருமாளை. அது எங்ஙனே என்னில் ? - குலசேகரனாகையாலும், எல்லையிலடிமைத் திறத்தினில் என்று மேவு மனத்தனாகையாலும், அல்லிமலர் திருமங்கை கேள்வன் தன்னை நயந்து இளஆய்ச்சிமார்கள் எல்லிப்பொழுதினில் ஏமத்தூடி. எள்கியுரைத்த வுரையதனை ஸ்த்ரீத்வபாவநயா பேசுகையாலும், " ஏறு அடர்த்ததும," " ஆனேறேழ்வென்றான் அடிமைத் திறமல்லால் " என்று நப்பின்னைப் பிராட்டி விஷயமாக வ்யாபரித்த வ்யாபாரத்தில் தோற்று " அடிமையல்லது " என்கையாலும், " ஆலைநீள் கருமபன்னவன் " என்று தொடங்கி, " மல்லைமாநகர்க்கிறையவன் தன்னைவான் செலுத்தி " என்னுமளவும் க்ருஷ்ண சேஷ்டிதங்களைப் பேசி அநுபவிக்கையாலும், இதிலே " நாற்றத்துழாய்முடி நாராயணன் " என்றதை - " வண்டுகிண்டு நறுந்துழாய் மாலையுற்றவரைப் பெருந்திருமார்வனை " என்றும், அந் நாரணனை - " நலந்திகழ் நாரணன் " என்றும் பேசுகையாலும், இவர்க்கு அசலுணர்த்தி அநுபவம்போலே ரங்கயாத்ரையில் அநுபவம் நடந்து செல்லுகையாலே ப்ரபந்த

குலசேகரரான குலசேகரப்பெருமாளை "நோற்றுச்சுவர்க்கம் புகுகின்றவம்மனாய்" என்கிறதென்கை.

ஆறும்பாட்டில், "கோவலர்தம் பொற்கொடியே" என்கிறது - பெரியாழ்வாரை. எங்ஙனேஎன்னில்? - சூடிக்கொடுத்த சுடர்க்கொடியான இவளைப்போலே கோவலப்பட்டம் கவிக்கும்படி கோப ஜந்மத்தை ஆஸ்தானம் பண்ணினவராகையாலும், "கன்னியரோடெங்கள் நம்பிக்கரிய பிரான்விளையாட்டை" என்னும்படி "கண்ணன் கேசவன் நம்பி பிறந்தினில்" என்று தொடங்கி, "பண்டு அவன்செய்த கிரீடையெல்லாம்" என்னும்படி க்ருஷ்ணகுண சேஷ்டிதம், பேசியநுபவிக்கையாலும், "நப்பின்னை தன்திறமா நல்விடையேழவியநல்லதிறலுடைய நாதனுமானவனே" என்றும், "ஐயபுழுதி," "நல்லதோர் தாமரை" இவைகளில் திருத்தாயார் பேச்சாகப் பேசுகையாலும், "தழைகளும்" இத்யாதியளவாய் கன்னிமார்கள் காமுற்றமாற்றத்தைப் பேசுகையாலும், இதிலே "முகில்வண்ணன்" என்றத்தை - "விட்டுசித்தன்மனத்தே கோயில் கொண்ட கோவலனைக் கொழுங்குளிர்முகில் வண்ணனை" என்கையாலும், "கோவலர்தம் பொற்கொடியே" என்கிறது பெரியாழ்வாரை என்கை.

ஏழாம்பாட்டில், "நற்செல்வன் தங்காய்" என்கிறது தொண்டரடிப் பொடியாழ்வாரை. அது எங்ஙனே என்னில்? - ஸ்த்ரீத்வத்துக்கநுகுணமாக, "தம்பால் ஆதரம் பெருக வைத்த அழகன்" என்றும், "உடலெனக்கு உருகுமாலோ" என்றும், "கண்ணனைக் கண்ட கண்கள் பனியரும்புதிருமாலோ" என்றும் தம்முடைய பக்தியைப் பேசுகையாலும், கற்றினம்மேய்த்தகழலிணைக்கீழ் உற்றதிருமாலை பாடுகையாலும் "மழைக்கன்றுவரை முன்னேந்தும் மைந்தனே" என்று குன்றுகுடையாக எடுத்தபடியைப் பேசுகையாலும், "கவளமால்யானைகொன்றகண்ணனை" என்கையாலும், ஸ்ரீமாலாகாரரைப்போலே செண்பகமல்லிகையோடு. செங்கழுநீர் இருவாட்சி எண்பகர் பூவுங்கொணர்ந்துசாற்ற, அத்தால் வந்த கைங்கர்ய ஸ்ரீயையுடைய பெரியாழ்வார்க்குப் பிற்பாடராய், அவர் கைங்கர்ய ஸ்ரீயை அநுவிதாநம் பண்ணுகை

யாலே, "அவர்க்கு அநுஜர்" என்னும்படியாய், திருப்பள்ளி யுணர்த்துகிறவதிலும் வந்தால் "விஷ்ணுசித்ததுளஸீப்ருத்யர்" என்று ஸஹபடிதராகையாலும், "நற்செல்வன் தங்காய்" என்கிறது ஸ்ரீதொண்டரடிப் பொடியாழ்வாரை என்கை. இவரும், இதிலே "சினத்தினால் தென்னிலங்கைக் கோமானைச்செற்ற மனத்துக்கினியானை" என்றத்தை - "இலங்கையர்குலத்தை வாட்டிய வரிசிலைவானவர் ஏறே" என்றும், "செருவிலே அரக்கர்கோனைச்செற்ற நம்சேவகனார்" என்று மருளிச் செய்தாரிறே.

எட்டாம்பாட்டிலே, "போதரிக்கண்ணினாய்" என்கிறது - திருப்பாணாழ்வாரை. அது எங்ஙனே என்னில்? - தொண்டரடிப்பொடியாரோபாதி, "அடியார்க்கு என்னை ஆட்படுத்தவிமலன்" என்றும், "என் கண்ணினுள்ளன" என்றும், "கொண்டல் வண்ணனைக்கோவலனாய்" என்று தொடங்கி, "என் அமுதனைக்கண்ட கண்கள்" என்கையாலே - "போதரிக்கண்ணினாய்" என்கிறது - திருப்பாணாழ்வாரை. "மெய்ம்மையை மிகவுணர்ந்து" என்றுததீய சேஷத்வபர்யந்தமான ஜ்ஞாநமிறேஜ்ஞாநமாவது. ததீயர்க்கு உகப்பாகப்பண்ணும் பகவதநுபவமிறே இவரது. ஸ்த்ரீத்வ பாவனையாலுண்டானபக்தி, பத்தும் பத்தாக அடிதொடங்கி முடியளவுமாய் மேலாயிருக்கும். இப்பாட்டிலே "பொல்லா அரக்கனைக்கிள்ளிக் களைந்தானை" என்றத்தை, இவரும், "சதிரமா:மதிள்சூழ் இலங்கைக்கிறைவன் தலைபத்து உதிர ஓட்டியோர் வெங்கணையுய்த்தவன்" என்றாரிறே.

ஒன்பதாம்பாட்டில்; "எங்களை முன்னம் எழுப்புவான் வாய் பேசும் நங்காய்" என்கிறது - நம்மாழ்வாரை. அது எங்ஙனே என்னில்; - "திருமாலுக்குரிய தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன்" என்னும்படியான சேஷத்வ பூர்த்தியையுடையராய், "அவனடியார் நனிமாக்கலவி இன்பமே நாளும் வாய்க்க நங்கட்கே" என்னும்படி பாகவத ஸம்ருத்தியைக் காண்கையிலே அபிவ்ருத்த மனோரதத்தை யுடையராய், அந்யாபதேசத்திலும், "அடிச்சியோம்" என்கையாலும், "பின்னைகொல்" என்கிற ஒப்பனையாலும்,

" சூட்டுநன்மாலைகள் " என்று தொடங்கி, " அடலாயர்தம் கொம்பினுக்கே " என்று நப்பின்னைப்பிராட்டிக்காக அவன் விடையடர்த்த வ்யாபாரத்தைப் பேசியும், " பின்னைநெடும் பணைத்தோள் மகிழ்பீடுடைமுன்னையமரர் முழுமுதலானே"- " என்னைநெகிழ்க்கிலும் என்னுடை நன்னெஞ்சந்தன்னை அகல்விக்கத்தானும் கில்லான் " என்றும், " வேயின்மலி புரைதோளிபின்னைக்குமணாளனே" இத்யாதியாலும், "வாள் கெண்டைஒண்கண் மடப்பின்னைதன் கேள்வன் தாள்கண்டு கொண்டென் தலைமேல் புனைந்தேன் ஆள்கின்றான் ஆழி யான் ஆரால் குறைவுடையம் " என்றும், "எருது ஏழ்தழீ" " சடையினார் " இத்யாதியாலும் பலபடியாக அவள் புருஷ காரவைபவத்தை ஆதரித்து, மற்றும் " எத்திறம் " என்று பிறந்தவாற்றிலே க்ருஷ்ணசேஷ்டிதங்களிலே ஈடுபட்டு, குரவை ஆய்ச்சியரிலே நண்ணிவணங்கி அநுபவித்தும், "எல் லாம் கண்ணன் " என்றும், " நீராடப்போதுவீர் " என் றத்தை " கண்ணன் கழலிணை நண்ணும் மனமுடையீர் " என்கையாலும், மந்தாதிகாரிகளை, " என் நெஞ்சால் நோக் கிக்காணீர் " என்று உணர்த்தியும், ஸ்ரோத்ரிகளை உயிராகத் தேடி " இசைமின் " என்று போதிக்கையாலும், " நீராட " என்றத்தை " காலைநன்ஞானத்துறைபடிந்தாடி " "அப்பன் திருவருள் மூழ்கினள் " என்கையாலும், இதில் " நாரா தாய் " என்றத்தை " நாணும் நிறைவும் எனக்கிங்கில்லை " என்றும், " நாவுடையாய் " என்றத்தை "என்நா" என்றும், " வலக்கையாழி இடக்கைச் சங்கம் இவையுடைமால் வண் ணனை மலக்குநாவுடையேன் " என்றும், " நாவியலால் இசைமாலைகள் " என்றும் செபல்லுகையாலே, " எங்களை முன்னம் எழுப்புவான் வாய்பேசும் நங்காய் " என்கிறது - நம்மாழ்வாரை. இப்பாட்டில் " சங்கொடுசக்கரம் ஏந்தும் தடக்கையன் பங்கயக்கண்ணனைப்பாட " என்றதை, " பங் கயக்கண்ணனையே " " பங்கயக் கண்ணனென்கோ " என் றும் " வீவில்சீரன் மலர்க்கண்ணன் விண்ணோர் பெருமான் தன்னை வீவில்காலம் இசைமாலைகளேத்தி " என்றும்பேசி னரிறே

பத்தாம்பாட்டில் "எல்லே இளங்கிளியே" என்கிறது - திருமங்கையாழ்வாரை. அது எங்ஙனே என்னில்? "அடிக ளடியே நினையும் அடியவர்கள் தம்மடியான்" என்று சேஷத்வத்தின் எல்லைநிலத்திலே நிற்கையாலும், ஸ்த்ரீத்வத்துக்கநுகுணமாக "பேராளன் பேரோதும்பெண்ணை" என்றும், "கடிமாமலர்ப்பாவையொப்பாள்" என்றும் லக்ஷ்மீ ஸாம்யத்தையுடையராயிருக்கும் இருப்பைப் பேசுகையாலும், "பேராளன் பேரோதும் பெரியோரை ஒருகாலும் பிரிகிலேனே" என்றும், "வண்சேறை யெம்பெருமான் அடியார்தம்மைக் கண்டேனுக்கு இதுகாணீர் என்னெஞ்சும் கண்ணிணையும் களிக்குமாறே" என்றும் ததீயாநுபவதத்பரராய் தத்ப்ரீதிஹேதுவாக "ஆயர்பூங்கொடிக்கு இனவிடை பொருதவன்" என்றும், "பின்னைபெறும் தன்கோலம் பெற்றார்" என்றும், "பின்னை மணாளர்தம்திறத்தும்" என்றும், "அன்றாயர்குலமகளுக்கரையன்தன்னை" என்றும், நப்பின்னைப் பிராட்டிபுருஷகாரத்தை அடியே தொடங்கி முடிய நடத்திப், "நீராடப்போதுவீர்" என்றத்தை "பொற்றாமரைக்கயம் நீராடப்போனாள்" என்றும், "சந்தமலர்க்குழல்," "பூங்கோதை," "எங்கானும்," "மானமுடைத்து" இத்யாதிகளிலே க்ருஷ்ணகுணசேஷ்டிதங்களை மண்டியநுபவித்து, "பண்டிவன் ஆயன்நங்காய்" என்று தொடங்கி "அவன்பின்கெண்டைஒண்கண் மிளிரக்கிளிபோல் மிழற்றி நடந்து" என்றும், "மென்கிளிபோல் மிகமிழற்றும்" என்கையாலும், "இளங்கிளியே" என்கிறது - திருமங்கையாழ்வாரை. "வல்லையுன்கட்டுரைகள் பண்டே உன்வாய் அறிதும்" என்னுமதுண்டு இவருக்கும். இப்பாட்டிலே "வல்லானை கொன்றானை" என்கிறவித்தை "ஆவரிவை செய்தறிவார்" இத்யாதியாலும், "கரிமுனிந்தகைத்தலமும்" என்றும் அருளிச்செய்தார்.

இப்படியாயிற்று இப்பத்துப்பாட்டுக்கும் குணஸாம்யத்தாலும், கௌரவ்யதையாலும் பத்துப்பெண்களை எழுப்புகிற முகத்தாலே, ஆழ்வார்கள் பதின்மரையும் கூட்டிக்கொண்டு

ஆழ்வார் திருமகளார் அநுஸந்திக்கிறதாக அருளிச்செய்தார்கள். இப்படி பக்தராய் முக்தராயிருப்பார் ஆழ்வார்கள்.

அநந்தரம் நித்யகைங்கர்ய நிரதரான நித்யரையும், நித்யாநபாயிநியான பிராட்டியையும் உணர்த்தி இவர்களை முன்னிட்டு நித்யமுக்தாநுபாவ்யனான எம்பெருமானைப் பற்றும்படி சொல்கிறது - 'நாயகன்' தொடங்கி அஞ்சுபாட்டாலே. "ஜநபதஸரிதந்தரீப புஷ்யத்புரபரிபாலன நித்யஜாகரூகாந் ப்ரஹரண பரவார வாஹநாட்யாந் குமுதமுகாந் கணநாயகாந்நமாமி." "ஸ்மேராநநாக்ஷிகமலோந்நமத: புநாநாந்தம்ஷ்ட்ராக்ரதா ப்ருகுடிபிர்த்விஷதோ நநாநாந் சண்ட ப்ரசண்ட முகத: ப்ரணமாமி ரங்கத்வாராவளீஷு சதந்ருஷ்வதிகாரபாஜ:," "ஸேநாந்யமந்யவிமுகாஸ்தமசிச்ரயாம," "சைந்யதுரீணப்ராண ஸஹாயாம் ஸூத்ரவதீ மாசிச்ரயமம்பாம்," "நம: ஸ்ரீரங்கநாயக்யையத் ப்ருவிப்ரமபேதத: ஈசேசித வ்யவைஷம்ய நிம்நோந்நதமிதம்ஜகத்," "ஸ்ரீஸ்தநாபரணம் தேஜச் ஸ்ரீரங்கேசயமாச்ரயே சிந்தாமணி மிவோத்பாந்தமுத்ஸங்கேநந்த போகிந:" என்னும்படி வைகுந்தத்தமரரான கோயில்கொள் தெய்வங்களையும், வானவர்களையும் தேவியர்களையும் அயர்வறு மமரர்களதிபதியை ஆயிரமுகத்தினாலே காப்பாருடைதயாவதாரமானவரையும் அவர்களுக்கு அதிசங்கைபண்ணி நெருங்க அணைத்துக்கொண்டு கிடக்குமவர்களையுமெழுப்பி, அவர்களுடனே எம்பெருமான் திருவடிகளிலே சென்றுகிட்டி அபேக்ஷிதங்களை அர்த்திக்கும்படி சொல்கிறது. "ஸ்ரீயைநம:," ஸ்ரீதராயநம:" என்றிறே க்ரமமிருப்பது.

"உள்ளத்துக்கொண்டு முனிவர்களும் யோகிகளும்" என்றதிலே முமுக்ஷூக்களாய் முக்தரோடு ஸாம்யம்பெற்ற நாதமுநிகள் யாமுநயோகி யதிவராதிகளும் ஸூசிதர், இது குருபரம்பரையினடைவு.

இவ்விடத்துத் திருப்பாவை ஆறாயிரப்படியிலே, அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் நிர்வஹித்தபடி ; "பெறுகைக்குப்புறப்படுகிறதிரளைப் பெற்றநுபவிக்கிற ஸ்ரீநந்தகோபர் தொடக்கமானாரை எழுப்புகிறார்கள்; அவர்கள் முன்

ஞுகக் க்ருஷ்ணனைப் பெறவேண்டுகையாலே ; அதாவது, வேதம்வல்லார்களைக்கொண்டு விண்ணோர் பெருமான் திருப் பாதம் பணிகையிறே. 'நன்ஞானத்துறைபடிந்தாடி' என் னுமாபோலே ; நன்ஞானமாகிறது, ப்ராப்யப்ராபகங்களி ரண்டும் அவனே என்றிருக்கை. 'விஜ்ஞானம் யதிதம்ப்ராப் தம்' என்னுமாபோலே ; துறையாவது, முறை தப்பாதே குருபரம்பரைவழியே பற்றுகை ; த்வயநிஷ்டர்க்கு குரு பரம்பரையே ப்ரதானமாகக் கடவது. துறைதப்பாதார் ஸ்ரீவிபீஷணாழ்வானைப்போலே. 'வேதம் வல்லார்கள்' என்றவிடத்து, குருபரம்பரையை நினைத்துக் கீழ்ப்பத்துப் பாட்டாலும் அநுஷ்டித்தார்கள். விண்ணோர் பெருமானில், 'விண்ணோர்' என்கிறது, த்வாரபாலர்கள் தொடக்கமான திவ்யமஹிஷிகளாயுள்ளவர்கள் என்றபடி."

இந்த யோஜனைகளெல்லாம், "விட்டுசித்தர் தங்கள் தேவரை வல்லபரிசுவருவிப்பரேல் அது காண்டுமே" என்று சொல்லுகிற ஆசார்யாபிமாநநிஷ்டையான ஆழ்வார் திருமக ளார் படிக்குச் சேருமிறே. "பாலேய் தமிழர் இசைகாரர் பத்தர்" என்கிறவிடத்து குணஸாம்யத்தாலே யோஜித்தபடி யாகக்கடவது இங்கு.

இனி, த்வய யோஜனையில் அர்த்த விஷயமாக மெய்ப் பொருளையிறே விசதமாக்கிற்று. (இரண்டு அர்த்தத்தையும் "புலன் ஐந்துமேயும்" என்று உபதேசிக்கக்கேட்டவர்கள் அநுஷ்டானமாக, திருப்பாவையிலும், 'தாயே தந்தை'யிலும், ஸ்தோத்ரகத்யங்களிலும்) த்வயத்தின் அடைவுகாணும்படி எங்ஙனே என்னில் ? முதல்பாட்டில் "நாராயணனே நமக்கே பறைதருவான்" என்ற ப்ராப்யப்ராபகங்களிரண் டையும், கறவைகள் பின்சென்றிலும், சிற்றஞ்சிறு காலை யிலும் க்ரமத்திலே வெளியிடுகிறது. நடுவடையவுண்டா னவை இரண்டர்த்தத்துக்கும் உபபாதகங்களா யிருக்கு மாகையாலே த்வயத்தின் அடைவுக்ரமமாகக் காணலா மென்றபடி.

"நாராயணனே நமக்கே பறைதருவான்" என்று திருமந்த்ரத்தில் பதத்ரயத்திலும் ப்ரதிபாதிக்கிற ஸ்வரூப,

உபாய, புருஷார்த்தங்கள் மூன்றும், ஒவ்வொன்றே பத்துப் பாட்டாய்ப் பரவும்படியே, திருப்பாவை முப்பது பாட்டாகப் பாடியருளிற்று. திருமந்த்ரத்தில் ஸ்வரூபாநுரூபமாக நிஷ்கர்ஷித்த ப்ராப்யப்ராபகங்களையிறே த்வயத்திலே விசதமாக அநுஸந்திக்கிறது. அந்தக்ரமத்திலே யாயிற்று இங்கும் அநுஸந்திக்கிறது.

இனிமேல் குருபரம்பராபூர்வகமாக த்வயத்தின் அடைவு சொல்லுகிறது. "நப்பின்னை நங்காய், திருவே" என்கையாலே, ஸ்ரீ சப்தார்த்தமும், "உன்மணாளனை" என்கையாலே, "ச்ரிங் - ஸேவாயாம்" என்கிறதாத்வர்த்தமும், "நப்பின்னை கொங்கைமேல் வைத்துக்கிடந்தமலர்மார்பா" என்றும், "நீ உன்மணாளனை எத்தனைபோதும் துயிலெழவொட்டாய்காண், எத்தனையேலும் பிரிவாற்றகில்லாயால்" என்கையாலே வாத்ஸல்யாதி குணப்ரகாசகமான நாராயணபதத்தில் அர்த்தமும், "பாற்கடலுள் பையத்துயின்ற பரமனடி" என்றும், "ஓங்கி உலகளந்த," "அம்பரம் ஊடறுத்து ஓங்கி உலகளந்த," "அன்றிவ்வுலகம் அளந்தாய்" என்றும், லோகவிக்ராந்தசரணங்களாய், நாராயணன் த்ரிவிக்கிரமன் அடியான உலகளந்த மெல்லடியை "உன்பொற்றாமரையடி" என்று, சரணசப்தார்த்தத்தையும், "கார்மேனிச்செங்கண் கதிர்மதியம்போல் முகத்தான்," "ஊழிமுதல்வன் உருவம்போல்," "முகில்வண்ணன்," "சங்கொடுசக்கரம் ஏந்தும் தடக்கையன் பங்கயக்கண்ணன்" என்று, அதில் விக்ரஹயோகத்தையும், "முத்துதிரைக்கடல்சேர்ப்பன்" என்னும்படி ஸம்ஸாரிநிரிந்தவிடத்திலே வந்துகிடக்கிற "பாற்கடலுள்பையத்துயின்றபரமன்" என்கையாலே ஸ்வாமித்வமும், "ஓங்கியுலகளந்த உத்தமன்" என்கையாலே எல்லார் தலையிலும் திருவடிகளைவைத்த ஸௌலப்யமும், "மாயனை" என்று தொடங்கி - தாமோதரனளவும், கட்டவு மடிக்கவுமாம்படியான ஸௌசீல்யமும, "குறைவொன்றுமில்லாதகோவிந்தா" என்று கல்யாணகுணவிசிஷ்டவஸ்துவின் உபாயபூர்த்தியையும், "அறிவொன்றுமில்லாத ஆய்க்குலம்" "அறியாதபிள்ளை

களோம்" என்கையாலே அதிகாரிஸ்வரூபமான ஆகிஞ்சந்ய மும், "தூயோமாய்வந்து நாம்தூய்மலர்கள் தூவித்தொழுது வாயினால்பாடி மனத்தினால் சிந்திக்கப்போயபிழையும் புகுதரு வான் நின்றனவும் தீயினில் தூசாகும்" என்றும், "வந்து தலைப்பெய்தோம்" என்றும், "உன்னை அருத்தித்துவந்தோம்" என்றும், அநிஷ்டநிவ்ருத்திக்கும் இஷ்டப்ராப்திக்கும் தப் பாத உபாயமாகஸ்வீகரிக்கும் உபாயவரணத்தையும், "ஆவா வென்று ஆராய்ந்தருள்" "அங்கணிரண்டுங்கொண்டெங்கள் மேல் நோக்குதியேல்" "இறைவா! நீ தாராய் பறை"என்று அவனுடைய பரகதஸ்வீகாரத்தின் ஏற்றத்தையும்.

"குத்துவிளக்கு எரியக் கோட்டுக்கால் கட்டில்மேல்" இத்யாதியிலே பர்யங்கவித்யையிற்படியே இருவருமாய் எழுந்தருளியிருக்கிற சேர்த்தியான வேஷத்தை "நாற்றத் துழாய்முடி நாராயணன்" என்கையாலும், "தேவாதி தேவனை" என்கையாலும், "உம்பர்கோமானே" என்கையா லும், "இறைவாநீ" என்கையாலும், உத்தரவாக்ய நாராயண பதத்தில் ப்ரதிபாதிக்கிற சேஷித்வமும், "தட்டொளியும் தந்து உன்மணாளனை" என்கையாலும், "இப்போதே எம்மை நீராட்டு" என்கையாலும் பூவளரும் திருமகளாலருள் பெற்று வரும்படியும், "போற்றி யாமவந்தோம் புகழ்ந்து" என்றும், "பள்ளிக்கட்டிற்கீழே" என்றும், "சீரியசிங்காச னத்திருந்து" என்றும், "அன்று இவ்வுலகம் அளந்தாய் அடி போற்றி" என்றும், "வருத்தமும் தீர்ந்து மகிழ்ந்து" என் றும், "மாலே! ஆலினிலையாய் அருள்" என்றும், "கூடி யிருந்து குளிர்ந்து" என்றும், "நீதாராய் பறை" என்றும், "சிற்றம் சிறுகாலே வந்துன்னைச்சேவித்து" என்றுதொடங்கி "உனக்கே நாம் ஆட்செய்வோம், மற்றை நம் காமங்கள் மாற்று" என்கையாலே உத்தரசதுர்த்தியில் கைங்கர்ய உப கரண ஸஹிதமான பலாநுபவ கைங்கர்ய பரம்பரைகளையும், கைங்கர்ய ப்ரார்த்தனையும், அவற்றில் களையறுப்பையும், "செல்வத்திருமாலால் எங்கும் திருவருள்பெற்று" என்கை யாலே "த்வயத்திலே பெரியபிராட்டியாராலேபேறு" என்னு மதுசொல்லித் தலைக்கட்டிற்று.

"மாதவன்" என்று த்வயமாக்கினுப்போலே, "மாதவனே" என்றும், "மாதவனை" என்றுமிறே இங்கு இரட்டித்திருப்பது. "செல்வத்திருமாலால்" என்றும், "பட்டர்பிரான் கோதைசொன்ன" என்கையாலே 'இவ்வர்த்தம் ஆசார்ய ருசிபரிக்ருஹீதம்' என்னும் இடம் சொல்லிற்று.

இப்படி குருபரம்பராபூர்வகமான த்வயத்தில் பேருக ப்ரதிபாதிக்கிறதாயிறே திருப்பாவைதா னிருப்பது. ஆகவிறே இதுக்குவர்த்தகரான உடையவரும் இத்தை நாள் தோறும் ஆதரித்துக்கொண்டுபோந்தருளிற்று. ஆகையால் இது ஆண்டாளடியாரான அனைவர்க்கும் நித்யாநுஸந்தேயமாக நடந்துபோருகிறது.

"கோபஸ்த்ரீகுலமதிகோதயோபதிஷ்டம் க்ருஷ்ணைக்யம் ப்ரணவமிவாதிகாரிஜப்யம் தத்ரிம்சத்பரிமிதபத்யமார்க்கசீர்ஷ ப்ராப்தோத்ஸவஸமயோசிதம் ப்ரஸித்தம்."

"எட்டெழுத்தின் இணைப்பொருளும் இரண்டதனிற் பொருளும் இயல்வலித்தோர் அர்ச்சுனனுக் கிறைவர்தம்மைத், தொட்டுரைத்த மறையறுதிப் பொருளை எல்லாம் தோன்றும்வகைப் புகழ்வரை துடர்வளைந்துபாட, மட்டவிழும் பொழில் புடைசூழ்முடும்பை வேந்தன் மணாளன் தணவாதமாயன் மாதர், கட்டுரையே புதுவையர்கோன் கோதைசொன்ன கவிபாடல் பொருள் தெரியக்காட்டினனே."

திருப்பாவை முப்பது பாட்டுக்கும் முதற்பாட்டு ஸங்க்ரஹமா யிருக்கும்; எங்ஙனே என்னில்;—ஸ்ரீபாஷ்யம் ஒன்பதினுயிர க்ரந்தத்துக்கும் முதல் ச்லோகம் ஸங்க்ரஹமானுப்போலேயும், ஸ்ரீராமாயணம் இருபத்து நாலாயிரம் க்ரந்தத்துக்கும் முதல் ஸர்க்கம் ஸங்க்ரஹமானுப் போலேயும், ஸ்ரீமஹாபாரதம் நூருபிரத்து இருபத்தையாயிரம் க்ரந்தத்துக்கு முதலத்யாயம் ஸங்க்ரஹமானுப்போலேயும், திருவாய்மொழிக்கு முதல்திருவாய்மொழி ஸங்க்ரஹமானுப்போலேயும், முதல்திருவாய்மொழிக்கு முதல்பாட்டு ஸங்க்ரஹமானுப்போலேயும், மந்த்ரசேஷத்துக்கு ப்ரணவம்

ஸங்க்ரஹமானுப்போலேயும், முப்பதுபாட்டுக்கும் முதற் பாட்டு ஸங்க்ரஹமாயிருக்கும்.

ஸங்க்ரஹமானபடி எங்ஙனேயென்னில்; "மார்கழித்திங்கள் மதிநிறைந்தநன்னாளால்" என்கிறவிடத்தாலே முதலிட்டு அஞ்சுபாட்டுக்கும் ஸங்க்ரஹம் சொல்லிற்று. "நீராடப் போதுவீர் போதுமினோ நேரிழையீர் சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச்சிறுமீர்காள்" என்கிறவிடத்தாலே பத்துப் பெண்பிள்ளைகளை எழுப்புகிறவிடத்துக்கு ஸங்க்ரஹம் சொல்லிற்று. "கூர்வேல்கொடுந்தொழிலன்" என்கிறவிடத்தாலே "கோயில்காப்பானே" என்கிறவிடத்துக்கு ஸங்க்ரஹமாகச் சொல்லுகிறது. "நந்தகோபன்" என்கிறவிடத்தாலே "நாயகனாய்நின்றநந்தகோபன்" என்றும், "ஓடாததோள் வலியன் நந்தகோபாலன்" என்றும் சொல்லுகிறவிடங்களுக்கு ஸங்க்ரஹம். "குமரன்" என்றத்தாலே "மாற்றாதே பால்சொரியும் வள்ளல் பெரும்பசுக்கள் ஆற்றப்படைத்தான் மகனே" என்கிறவிடத்துக்கு ஸங்க்ரஹம். "கார்மேனி" என்கிறவிடத்தாலே "முகில்வண்ணன்" என்றும், "பூவைப் பூவண்ணா" என்றும், "மாயன் மணிவண்ணன்" என்றும், "மாலே மணிவண்ணா" என்கிறவிடங்களுக்கு ஸங்க்ரஹம். "செங்கண்" என்கிறவிடத்தாலே "கிங்கிணிவாய்ச் செய்ததாமரைப் பூப்போலே செங்கண் சிறிச்சிறிதே எம்மேல்விழியாவோ - அங்கண் இரண்டும் கொண்டு" என்றும், "பங்கயக்கண்ணன்" என்றும், "செங்கண் திருமுகம்" என்றும் சொல்லுகிறவிடங்களுக்கு ஸங்க்ரஹம்.

"கதிர்மதியம்போல் முகத்தான்" என்கிறவிடத்தாலே "திங்களும் ஆதித்தியனும் சேர்ந்தாப்போல்" என்றும், "உலகினில் தோற்றமாய் நின்றசுடரே" என்றும், இத்யாதிகளுக்கு ஸங்க்ரஹம். "நாராயணன்" என்கிறவிடத்தாலே "நாராயணன்மூர்த்திகேசவன்" என்றும், "நாற்றத்துழாய் முடிநாராயணன்" என்றும், "ஓங்கியுலகளந்த உத்தமன்" என்றும், "மாமாயன்மாதவன் வைகுந்தன்" என்றும், "முகில் வண்ணன்பேர்பாட" என்றும், "சிறுபேரழைத்தனவும் சீறி

யருளாதே" என்றும், "வங்கக்கடல்கடைந்தமாதவன்" என்றும் சொல்லுகிறவிடங்களுக்கு ஸங்க்ரஹம்.

"நமக்கேபறைதருவான்" என்கிறவிடத்தாலே-"பாடிப் பறைகொண்டு" என்றும், "நம்மால்போற்றப்பறைதரும்" என்றும், "இற்றைப்பறைகொள்வான்" என்றும், "அறை பறை" என்றும், "சாலப்பெரும்பறை" என்றும், "அருத்தித்து வந்தோம் பறைதருதியாகில்" என்றும், "இறைவா நீ தாராய் பறை" என்றும், "அங்கு அப்பறைகொண்டஆற்றை" என்றும் சொல்லுகிற இடங்களுக்கு ஸங்க்ரஹம். "பாரோர் புகழ"என்கிறவிடத்தாலே-"நாடுபுகழும" என்றும், "எங்கும் திருஅருள்பெற்று இன்புறுவர்"என்றும் சொல்லுகிற இடங்களுக்கு ஸங்க்ரஹம்.

"ஏலோரெம்பாவாய்" என்கிற இடத்தாலே முப்பதுபாட்டிலே ஏலோரெம்பாவாய்க்கு ஸங்க்ரஹம்.

இப்பாட்டில்,காலத்தைக்கொண்டாடாநின்றுகொண்டு ப்ரபந்ததாத்பர்யமான ப்ராப்யப்ராபகங்களைச் சொல்லுகிறது. அதிகாரி ஸ்வாபதேசம். இனி இந்த ஸ்வாபதேசத்தில் இப்ரபந்தத்துக்கு அடியில் அஞ்சுபாட்டாலும் - ப்ரபந்ந நிஷ்டாக்ரமங்களையும், ப்ரபத்தி வாசகமான திருநாமவைபவத்தையும் பேசுகிறது. அதில் முதல்பாட்டில், ப்ரபந்நாதிகாரிக்கு "ஸஏஷதேச:கால:" என்கிறபடியே தேசகாலம் எல்லாம் அவனுடைய கடாக்ஷத்தாலே ப்ராப்யம் என்னுமத்தையும, கர்மாந்தரபரித்யாகத்தையும், பகவத்விஷயத்தில் ருசிவிச்வாஸங்களுடைய ப்ராதாந்யத்தையும்,"ப்ராப்யப்ராபகங்கள் இரண்டும் ஸர்வஸ்வாமியான நாராயணனே"என்றத்தையும், ஏவகாரத்தால்தேவதாந்தரராஹித்யத்தையும், ப்ரயோஜநாந்தர ராஹித்யத்தையும், அநந்யப்ரயோஜனத்தையும், "த்ரிபாத் விபூதிநாயகனை ஸர்வேச்வரனே தங்களுக்கு அபேக்ஷிதஸம் விதானம் பண்ணுவன்" என்று நிர்ப்பரத்வாநுஸந்தானத்தையும், ஸர்வஜனஸுஹ்ருத்வத்தையும், இப்படி நிஷ்டாக்ரமங்களையும், ப்ரபத்திவாசகமான திருநாமத்தையும் சொல்லுகையால் அதிகாரிஸ்வரூபம் சொல்லிற்றாயிற்று.

"நாராயணனே நமக்கேபறைதருவான்" என்கையாலே திருமந்த்ரத்தில் பதத்ரயத்திலும் ப்ரதிபாதிக்கிற ஸ்வரூபோபாய புருஷார்த்தங்கள் மூன்றும் சொல்லுகிறது. ஆகையாலே இப்பாட்டு திருமந்த்ரத்துக்கு ஸங்க்ரஹம் என்று சொல்லிற்றாயிற்று. இப்பாட்டில் பரத்வம்ஸூசிப்பிக்கிறது.

இரண்டாம்பாட்டில், நோன்புக்குப் பெண்கள் தாங்கள்செய்யக்கடவக்ருத்யத்தை நியமிக்கிற முகத்தாலே, இவ்விஷயத்தில் இழிவாருடைய விரக்தியையும் ஸம்பாவிதஸ்வபாவத்தையும் சொல்லுகிறது என்றொரு ஸ்வாபதேசம்.

இப்பாட்டில், இக்தப்ரபந்நாதிகாரிக்கு ஸம்பாவிதமான நிஷ்டாக்ரமங்களையும், ப்ரபத்திவாசகமான திருநாமவைபத்தையும் சொல்லுகிறது. எங்ஙனே என்னில்;-ஸ்ரீவைகுண்டநிகேதனனாயிருக்கிற ஸர்வேச்வரன், "தேயேசதம்இத்யநுக்ரமாத்" என்று "யதோவாசோ நிவர்த்தந்தே அப்ராப்யமநஸாஸஹ" என்கிறபடியே, ஆச்ரிதர்கள்வந்து ஒருவிண்ணப்பம் செய்வதற்கு அங்கு அவஸரமில்லாமையாலே, ஒருபயணமெடுத்து, க்ஷீரஸாகரத்தில் திருவனந்தாழ்வான் மேலே ஜகத்ரக்ஷணசிந்தையாலே சாய்ந்தருளி,"ஆச்ரிதர்க்கு ஆராலே யாருக்கு என்ன தீங்குவருகிறதோ" என்று அந்தவுரைக்குச் செவிகொடுத்துக் கண்வளருகிறதாக நினைத்திருக்கையும், ஸகலசேதநோஜ்ஜீவனமான த்வயத்தைப் பெரியபிராட்டியாருக்கு உபதேசம்பண்ணுகிற க்ஷீராப்தி நாதனுடைய திருவடிகளை வாயாலே ஸங்கீர்த்தனம் ஸதாபண்ணுகையும், ஆகையால் ப்ரபந்நனுக்கு த்வயாநுஸந்தானம் ஸதா பண்ணவேணுமென்று தாத்பர்யம். அந்த ரஸாநுபவம் பண்ணுகிறவரைக்கும், இதரவிஷயங்களில் "தவாம்ருதஸ்யந்திநிபாதபங்கஜே நிவேசிதாத்மாக தமந்யதிச்சதி" என்கிறபடியே போக்யமான மது சர்க்கரக்ஷீரததிக்ருதாதிகளிலும் நைரபேக்ஷ்யத்தையும், "த்ரிவிக்ரமத்வச்சரணாம்புஜத்வயம் மதியமூர்த்தாநமலங்கரிஷ்யதி" என்கிறபடியே அவன் திருவடிகளை ஸர்வாலங்காரமாகப்பற்றுகையும், அதொழிய ஸ்ரக்சந்தன வஸ்த்ராத்யாபரணங்களை நிஷேதித்தமையும், அவனுக்குச் சேஷமாயிருக்கிற ஸகலவஸ்துவிஷயங்களில் ஜாதிபேதத்

தாலே அபோக்யமாயிருக்கச்செய்தேயும், பரமபோக்யத்வத்தாலே ஸ்வீகரிக்கையும், யதாசக்தி பாகவதர்க்கு நித்யததீயாராதனம் பண்ணி பகவதநுபவம் பண்ணுவித்து “ஒன்றும் செய்யப்பெற்றிலோம்” என்றிருக்கையும், இப்படி அதிகாரி நிஷ்டாக்ரமம்சொல்லுகிறது. இரண்டாம்பாட்டில் வ்யூஹம் சொல்லுகிறது.

மூன்றும்பாட்டில்;-நோன்பிலே இழியவே தத்பலமான ஸம்ருத்திகளடைய உண்டாமென்கிறார்கள். இத்தால் பகவத்ஸமாச்ரயணபலமான கைங்கர்யமொழிய, வேறே “ஆயுராசாஸ்தே” என்கிறபடியே ஐஹிகபலங்களும் ஆநுஷங்கிக ஸித்தமாய்க்கொண்டு ஸித்திக்கும் என்கிறது.

நாலாம்பாட்டில்;-வர்ஷதேவதையைக்குறித்து வர்ஷிக்கும்படியை நியமிக்கிறார்கள். இத்தால் அநந்யப்ரயோஜனராய் பகவத் ஸமாச்ரயணம்பண்ணுமவர்க்கு, இந்த்ராதி தேவதைகளும் நியாம்யராவர்கள் என்று இவ்வதிகாரியினுடைய உத்கர்ஷம் சொல்லுகிறது. “ஸர்வேஸ்மைதேவா பலிமாவஹந்தி” என்னக்கடவதிறே.

அஞ்சாம்பாட்டில்;-“ச்ரேயாம்ஸிபஹுவிக்நாநி” என்கிறபடியே நோன்புக்கு விக்நங்கள் ஸம்பவியாதோவென்னில்; மனோவாக்காயங்களாலே க்ருஷ்ணனையே அநுஸந்திக்க அவைபோம் என்கிறார்கள். இத்தால், பகவத்குணாநுபவம் பண்ணுமவனுக்கு “உத்தரபூர்வாகயோரச்லேஷவிநாசௌ” என்கிறபடியே பகவதநுபவ மாஹாத்ம்யத்தாலே ஸகலதுரிதங்களும் போமென்கிறது.

ஆக, இவ்வைந்துபாட்டாலும், “நாராயணனே” என்றும், “பாற்கடலுள் பையத்துயின்ற பரமன்” என்றும் “ஓங்கி உலகளந்த உத்தமன்” என்றும், “மாயனை மன்னுவடமதுரைமைந்தனை” என்றும் சொல்லுகையாலே, க்ருஷ்ணனுடைய அடிப்பாடு சொல்லிற்றாயிற்று. இதுக்குமேல் பத்துப் பாட்டும் முற்பட்டவர்கள் பிற்பட்டவர்களை எழுப்பிச் செல்லுகிறது. இத்தால்,பகவத்விஷயம் அபரிச்சிந்நமாய் தனி

அநுபவிக்க ஒண்ணாமையாலே, பெருக்காற்றிலே இழிவார் துணைகொண்டு இழியுமாபோலேயும், "ஏகஸ்வாதுநபுஞ்ஜீத" என்று தனி அநுபவிக்கமாட்டாத சாபலத்தாலும், பகவதநுபவம் பண்ணுவார்க்கு "தொண்டர் எல்லீரும் வாரீர்" என்கிறபடியே துணைதேட்டமாயிருக்கும் என்னும் இவ்வர்த்தத்தைச் சொல்லுகிறது.

இதில் முதற்பாட்டில் ;-க்ருஷ்ணாநுபவத்தில் புதியளாயிருப்பாளொருத்தியை எழுப்புகிறார்கள். இத்தால், பகவதேகபோக்யரான ஸ்ரீவைஷ்ணவர்கள் அநந்யப்ரயோஜனராய் இவ்விஷயத்தில் தேசிகரன்றிக்கேயிருப்பாரை அவர்கள் பக்கல் பரிவாலே தேசிகராக்குகை தங்களுக்கு க்ருத்யம் என்றிருக்கை - ஸ்ரீவைஷ்ணவத்வம் என்கிற ஸ்வபாவத்தைச் சொல்லிற்று.

இரண்டாம் பாட்டில் ;-க்ருஷ்ணாநுபவத்தை தேசிகையாய், இவ்வநுபவத்தை ஸ்மரித்துக் கிடக்கிறாளொருத்தியை எழுப்புகிறார்கள். இத்தால், பகவத்விஷயத்தில் ஜ்ஞாதமான வர்த்தம் ஒருவனுக்கு விஸ்ம்ருதமானால், தங்கள் பரிவாலே "போதயந்த:பரஸ்பரம்" என்கிறபடியே அறிவிக்கை ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸ்வரூபம் என்கிறது.

மூன்றாம் பாட்டில் ; - க்ருஷ்ணனாலே கொண்டாடப்படும் ஏற்றமுடையவளை எழுப்புகிறார்கள். இத்தால், பகவதநுபவத்தில் ப்ரத்யாஸந்நராயிருப்பாரிடத்தில் ஸாபேக்ஷராயிருக்கையும், அவர்களை முன்னிட்டு ஈச்வரனைக்கிட்டுகையும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸ்வரூபமென்கிறது.

நாலாம்பாட்டில்;-"க்ருஷ்ணன்வந்தபோதுவருகிறான்" என்று நிர்ப்பரையாய்க்கொண்டு கிடக்குமவளை எழுப்புகிறார்கள். இத்தால், "தத்தஸ்யஸத்ருஸம்பவேத்" என்று பூர்வார்த்தநிஷ்டராயிருப்பாரை, பகவத்ப்ரேமாதிசயத்தாலே ததேகபோகராயிருக்குமவர்கள் போகார்த்தமாகப்ப்ரேரிக்கை ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸ்வரூபம என்கிறவர்த்தம் சொல்லுகிறது.

அஞ்சாம் பாட்டில்;-பெண்களெல்லாம் "க்ருஷ்ணன்" என்றால் படும்பாட்டை அவன் தான் "தண்ணீர், தண்ணீர்" என்னும்படியாய் இருப்பாளொருத்தியை எழுப்புகிறார்கள். இத்தால், "ஜ்ஞாநீத்வாத்மைவமேமதம்" "அஹம்ஸசமமப்ரிய:" என்றும், அவன்பக்ஷத்திலிருப்பார் திறத்திலே ஸ்ரீவைஷ்ணவர்கள் நித்யஸாபேக்ஷராயிருக்கைஸ்வரூபமென்னும் இவ்வர்த்தம் சொல்லுகிறது.

ஆறும் பாட்டில்;-அபிஜாதையாயிருப்பாளொருத்தியை எழுப்புகிறார்கள். இத்தால், பகவத்ஸம்பந்தம்விச்சேதியாதே போந்த ஆசார்யஸந்தானப்ரஸூதர் நமக்கு உத்தேச்யர் என்றும், அவர்களடியாக பகவத்ஸமாச்ரயணம் பண்ணுகையும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸ்வபாவம் என்கிறது.

ஏழாம்பாட்டில்;-இளையபெருமாளைப்போலே க்ருஷ்ணனைப் பிரியாதேயிருப்பானொருத்தன் தங்கையை எழுப்புகிறார்கள். இத்தால், பகவத்விச்லேஷம் அஸஹ்யமாம்படி அவகாஹித்தவர் தாங்கள் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு உத்தேச்யராமளவின்றிக்கே, தத்ஸம்பந்த ஸம்பந்திகளும் உத்தேச்யரென்றிருக்கை ஸ்வரூபமென்கிறது.

எட்டாம் பாட்டில் ;-" நம் கண்ணழகு உண்டாகில் தானே வருகிறான்" என்று அவயவசோபையை மதித்துக் கிடக்கிறாளொருத்தியை எழுப்புகிறார்கள். இத்தால், பகவதநுபவபரிகரமான ஜ்ஞாநவைராக்ய பக்திகளால் பூர்ணராயிருக்குமவர் திறத்திலும், ததர்த்தமாக ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸாபேக்ஷராயிருக்கை ஸ்வரூபமென்கிறது.

ஒன்பதாம் பாட்டில்;-"எல்லார்க்கும் தானே நிர்வாஹகையாய், எல்லாரையும் தானே எழுப்பக்கடவளாகச் சொல்லி விஸ்மரித்துக்கிடக்கிறாளொருத்தியை எழுப்புகிறார்கள். இத்தால், பகவத்விஷயத்தில் மூட்டுகையாலே அதிகரித்த நிர்வாஹகர் முன்னாக பகவதநுபவம் பண்ணுகை ஸ்வரூபமென்கிறது.

பத்தாம் பாட்டில் ;-எல்லாருடைய திரட்சியும் காண வேண்டியிருப்பாளொருத்தியை எழுப்புகிறார்கள். இத்தால்,

ஸ்ரீவைஷ்ண ஸமாஜ தர்சனம் அபிமதமாயிருக்குமவர்களைக் கண்டால், அந்தஸமூஹமாக அவர்களை உகக்கை ஸ்வரூபமென்கிறது.

ஆக, இப்பதினைந்து பாட்டாலும், எழுப்பப்பட்டவர்களெல்லாரும் கூடவந்து, மேல் பதினாறும் பாட்டில் ஸ்ரீநந்தகோபர் திருமாளிகையிலே சென்று கோயில் காப்பானையுந் திருவாசற்காப்பானையும் எழுப்புகிறார்கள்.

பதினேழாம் பாட்டில் ;-இவர்கள், திருக்காப்பு நீக்கி உள்ளேபுகவிட, ஸ்ரீநந்தகோபர் தொடக்கமான உள்ளுள்ளாரையடைய எழுப்புகிறார்கள். இவ்விரண்டு பாட்டிலும், பகவத்விஷயத்தைக் கிட்டுவார் தத்ப்ரத்யாஸந்நரைப் புருஷகாரமாகக்கொண்டு புகுருகைஸ்வரூபமென்கிறது.

பதினெட்டாம்பாட்டில்;-இப்படி எழுப்பின்விடத்திலும் எழுந்திராமையாலே, தங்களுக்குப் புருஷகாரமாக நப்பின்னையை எழுப்புகிறார்கள். இத்தால் பகவத்விஷயீகாரம் பிராட்டி புருஷகாரஸாபேக்ஷமென்கிறது.

பத்தொன்பதாம்பாட்டில்;-இவள் திறக்கப்புக, "நம்முடையார்க்கு இவள் முற்பட்டாளாகவொண்ணாது" என்று இவளைத் திறக்கவொட்டாதே கட்டிக்கொண்டுகிடக்கிற க்ருஷ்ணனை எழுப்பி, மறுமாற்றம் கொள்ளாமையாலே மீளவும் அவனையுணர்த்துகைக்காக அவளையெழுப்புகிறார்கள். இத்தால், பிராட்டியைப் புருஷகாரமாக வரித்தால் அவனும் இவளும் இசலி இசலிப்பரியும் பரிவைச் சொல்லுகிறது.

இருபதாம்பாட்டில்;-"அவனுக்கும் எங்களுக்கும் அடியானநீ எங்களைநீராட்டுவீ" என்று க்ருஷ்ணனையும் நப்பின்னைப் பிராட்டியையும்கூட எழுப்புகிறார்கள். இத்தால், அடிமைசெய்யுமிடத்தில் இருவரும் சேர்ந்த . சேர்த்தியிலே அடிமைசெய்வதே முறை என்கிறது.

இருபத்தோராம்பாட்டில், நப்பின்னைப்பிராட்டியும், "நானும உங்களிலே ஒருத்தியன்றோ ? நாமெல்லாருங்கூட க்ருஷ்ணனை அர்த்திக்கவாருங்கோள்" என்ன ; அவன் குணங்களிலே தோற்றார்தோற்றபடி சொல்லி எழுப்புகிறார்

கள். இத்தால், ப்ரபுத்தனுய் தங்கள் காரியம் செய்கைக்கு, "ஏத்தவேழுலகம்கொண்ட" என்கிறபடியே, ஆச்ரிதரான வர்களுக்கு நிர்மமராய்க்கொண்டு அவன் குணகீர்த்தனம் பண்ணுகை கர்த்தவ்யம் என்கிறது.

இருபத்திரண்டாம்பாட்டில்;-கீழ்ப்பாட்டிலே தங்கள் அபிமான சூந்யதையைச்சொல்லி, இப்பாட்டில் அநந்யார்ஹசேஷத்வம் சொல்லுகிறது. இத்தால், அவனுடைய விசேஷகடாக்ஷத்துக்குத் தங்கள் அநந்யார்ஹசேஷத்வம் அநுஸந்தேயமென்கிறது.

இருபத்துமூன்ரும்பாட்டில்;-"உபஸ்தேயைருபஸ்தித:" என்று "ஸ்ரீதண்டகாரண்யத்தில் ரிஷிகளுடைய துக்க நிவ்ருத்திக்கு நாம் முற்பாடராகப்பெற்றிலோம்" என்றுவெறுத் தாப்போலே; இவர்கள் "நோவுபடப்பார்த்திருந்தோமா காதே" என்று இன்னுதாய், அவர்களை அழைத்து "செய்ய வேண்டுவதென்?" என்ன; இங்ஙனே சொல்ல ஒண்ணுது ; பேரோலக்கமாக இருந்துகேட்டருளவேணும்" என்கிருர் கள். இத்தால், "கர்மபரதந்த்ரராயிருந்துள்ள ப்ரயோஜனந் தரபரரைக் காட்டிலும், அநந்யப்ரயோஜனராய் ஸாதனந்தர நிஷ்டராயிருக்குமவர்களிற்காட்டிலும், ஸித்தஸாதனம்பண் ணினுர்க்கு தந்தாம் கையில் கைம்முதல் இல்லாமையாலே ஈச்வரனேப்ரபுத்தனுய்க்கொண்டு அபேக்ஷிதஸம்விதானம் பண்ணவேணும்" என்று இவ்வதிகாரத்தில் வ்யாவ்ருத்தி சொல்லுகிறது.

இருபத்துநாலாம்பாட்டில்;-"அப்படியேசெய்கிருேம்" என்று ப்ரதிஜ்ஞைபண்ணினபடியைக்கண்டு, தாங்கள்வந்த காரியத்தை மறந்து, தற்காலீநமான அழகிலே ஈடுபட்டு மங்களாசாசனம்பண்ணுகிருர்கள். இத்தால், அர்த்திகளாய்ச் சென்ருல் தந்தாமுடையபுருஷார்த்தத்தை விஸ்மரித்து மங் களாசாசனம்பண்ணவேண்டும்படியான விஷயவைலக்ஷண் யம் சொல்லுகிறது.

இருபத்தஞ்சாம்பாட்டில்;-ஏதேனும் இப்ரவ்ருத்திக் கொருப்ரதிபந்தகமுண்டேயாகிலும், நீயேபோக்கி எங்கள்

துக்கமெல்லாம்கெட விஷயீகரிக்கவேணும் என்கிறார்கள். இத்தால், ஸ்வரூபலாபம் அத்தலைக்கே கூறுனவோபாதி, துக்கநிவ்ருத்தியும் அத்தலைக்கே பரம் என்னும் இவ்வர்த்தம் சொல்லுகிறது.

இருபத்தாறும்பாட்டில்;-"மற்றபேக்ஷிதமென்?" என்ன, நோன்புக்கு வேண்டும் உபகரணங்களைத்தர வேணுமென்கிறார்கள். இத்தால், துக்கநிவ்ருத்தியோபாதி, போகோபகரண ஸித்தியும் அவனாலே என்கிறது.

இருபத்தேழாம்பாட்டில்;-நோற்றால்பெறக்கடவபேறு சொல்லுகிறது. இத்தால், "ப்ரஹ்மாலங்காரேணாலங்குர்வந்தி" என்று அலங்காராதிகளும் பகவத்ப்ரஸாதாயத்த மென்கிறது.

இருபத்தெட்டாம்பாட்டில்;- "நாட்டாரிசைகைக்காக 'நோன்பு' என்று ஒரு வ்யாஜத்தையிட்டுப்புகுந்தோமித்தனை. எங்களுக்கு உத்தேச்யம் அதுவன்று, உன் திருவடிகளில் கைங்கர்யம்" என்று தங்களுக்கு உத்தேச்யமான புருஷார்த்த ஸித்திக்கு தங்களாகிஞ்சந்யத்தையும் ப்ராப்தியையும் முன்னிட்டு, " அவனே உபாயமாகவேணும்" என்று அபேக்ஷித்து க்ஷாமணம் பண்ணிக்கொண்டு ப்ராப்யப்ரார்த்தனம் பண்ணித்தலைக்கட்டுகிறது. இதுக்குக்கீழடங்க ஓரதிகாரிக்கு ஸம்பவிக்கும் ஸ்வபாவங்களைச் சொல்லிற்றாயிற்று. இப்பாட்டில் அதிகாரிஸ்வரூபமான உபாய ஸ்வீகாரத்தை ஸப்ரகாரமாகச் சொல்லுகிறது.

இருபத்தொன்பதாம்பாட்டில்;-"தங்களுக்கு உத்தேச்யமானது கைங்கர்யம்" என்று ப்ரபந்ததாத்பர்யம் சொல்லி முடிக்கிறார்கள். இத்தால், ஸ்வீக்ருதோபாயத்துக்கு பலமான புருஷார்த்தஸ்வரூபம் சொல்லுகிறது.

முப்பதாம்பாட்டில்;-இப்ரபந்தம் கற்றார், நாய்ச்சியாராலும் ஈச்வரனாலும் ஸர்வகாலமுண்டான விசேஷகடாக்ஷத்தைப் பெற்று நித்யஸூரிகளாகப்பெறுவர். இத்தால், "உக்தமான அநுஷ்டான மில்லாதார்க்கும் அவர்களுடைய பாசு

ரமே அவர்கள் பெற்ற பேற்றைத்தரும்" என்று இப்பாசுரத்தின் ஏற்றத்தைச் சொல்லித் தலைக்கட்டுகிறது.

ஆக திருப்பாவையால் சொல்லிற்றாயிற்றுவேதார்த்தம். அதாவது; அவதாரமே ஸர்வஸமாச்ரயணீயமென்றும், அவதீர்ணனானவனுடைய வடிவழகே ருசிஜநகமென்றும், ருசியுடையார் ப்ராப்யத்வரையாலே அவனை மேல்விழுந்த பேக்ஷிக்கை ப்ராப்தம் என்றும், இவ்விஷயத்தில் இழிவார்க்கு ருசியுடையாரடங்கஉத்தேச்யரென்றும், ப்ராப்யமாகிறது- அநுபவஜநிதப்ரீதிகாரிதமாய் யாவதாத்மபாவியானகைங்கர்யம் என்றும், தத்ஸதனமும் அவன் திருவருளே என்றும் சொல்லிற்றாயிற்று.

வானமாமலைஜீயர் அருளிச்செய்த திருப்பாவை ஸ்வாபதேசம் முற்றிற்று. ஜீயர் திருவடிகளே சரணம்*

*குறிப்பு :—இந்த ஸ்வாபதேச ஆசிரியர் வானமாமலைத் திருமடத்தை ஸ்தாபித்த முதல் ஜீயராவார். இவர் பெரிய ஜீயருடைய சிஷ்யர், பூர்வாச்ரமத்தில் அழகியவரதர், அவதார ஸ்தலம் வானமாமலை, திருநக்ஷத்ரம் புரட்டாசி புனர்பூசம், திருவாராதனம் பெரிய ஜீயர் ஸாதித்த் அரங்கநகரப்பன். இவருடைய திருநாமங்கள் ராமாநுஜஜீயர், வானமாமலை ஜீயர், தோதாத்ரியோகி முதலியன. இவர் பெரிய ஜீயர் நியமித்த அஷ்டதிக் கஜங்களில் ஒருவர். இவருடைய சிஷ்யர்கள் ஆத்தான் ராமாநுஜன் முதலானவர் - இவர்தனியன் :—

"ஸௌம்யஜாமாத்ருயோகீந்த்ரபாதரேகாமயம்ஸதா
ததாயத்தாத்மஸத்தாதிம்ராமாநுஜமுநிம்பஜே"



# நாலாயிரதிவ்யப்ரபந்த மேற்கோளகராதி

(மேலுள்ள இருவ்யாக்யானங்களிலும் மேற்கோள்களாக எடுத்தாளப்பெற்ற நாலாயிரதிவ்யப்ரபந்தப் பாசுரப் பகுதிகளின் அட்டவணை - எண்கள் எனது பதிப்பிலுள்ள பாசுர எண்கள்)

அகலகில்லேன் இறையும் 3335, அங்குவைத்திங்குப்பிறந்த 2945, அங்கேநின்று 3224, அங்கோர் ஆய்க்குலம் 1955, 3264, அங்கைத்தலத்திடை 620, அசுரர்களுந்தானுமாய் 2673,47, அசோதை முன் சொன்ன திருப்பாதகேசத்தை 43, அஞ்சவுரப்பாளசோதை 532, அஞ்சுடரவெய்யோன் 3158, அஞ்சுவன்வெஞ்சொல்நங்காய் 1210, அடங்கவஞ்சிறைகோலி 1695, அடிகள் அடியே நினையும் அடியவர்கள்தம்அடியான் 1107, அடிச்சியோம் தலைமிசை 3694, அடிமை செய்வாரையும் செறும 3342, அடியார்குழாங்களை உடன் கூடுவதென்றுகொலோ 2816, அடியார்கள்தம்ஈட்டம்கண்டிடக்கூடுமேல் 658, அடியார்க்கென்னையாட்படுத்தவிமலன் 927, அடியார் நிலாகின்றவைகுந்தமோ 2552, அடியேனுக்கின்பாவாய்பொன்பாவைகேள்வா 2440, அணி இழைஆய்ச்சியர் 3655, அணிகுருகூர்ச் சடகோபன் சொன்ன 3369, அணிமழலைக்கிளிமொழியாள் 3633, அணிமிகுதாமரைக்கை 3693, அண்ணல் செய்தலைக்கடல் 1449, அணியாய்ச்சியர்சிந்தையுள்குழகனார் 543, அதனில்பெரிய 3775, அதனுள்கண்ணுதல் 1449, அதுக்கிடந்துமுன்கிடந்த 779, அத்தத்தின்பத்தாநாள் 28, அந்தமில்பேரின்பத்தடியரோடு 3765, அபிமானதுங்கன் 11, அப்பன்அறிந்திலன் 104, அப்பன்திருவருள்மூழ்கின 3539, அப்பாஞ்சசன்னியமும்பல்லாண்டே 2, அமரர்க்கமுதீந்த ஆயர்கொழுந்தை 2749, அமுதம்கொண்டபெருமான்திருமார்வன் 1540, அமுதில்வரும் பெண்ணமுது 1449, அம்பன்னகண்ணாள சோதை 1523, அயர்வறுமமரர்களதிபதி 2675, அரக்கர்தங்கள் கோன்போலும் 1283, அரங்கத்தம்மாபள்ளியெழுந்தருளாயே 917, அரவணைமேற்பேராயற்காட்பட்டார்பேர் 2136, அரவத்தமளியினோடும் அழகியபாற்கடலோடும் அரவிந்தப்பாவையும் தானும்அகம்படிவந்துபுகுந்து 452, அரவின்அணை அம்மானே 3183, அரவூறு சுலாய்மலைதேய்க்குமொலி 3371, அருளாதொழியுமே 2300, அருளினன் 2675, அருளின் பெருநசையால் 2792, அருள்கண்டீர்இவ்

தாணிமங்கை 1139, சந்தமல்குழலாள் அலக்கண் நூற்றுவர்தம்பெண்டிரும்எய்திநூலிழப்ப 1073 சரணேசரண் 3226,சலங்கொண்டுமலர்சொரியும் 1228,சன்மம்களையாயே-3200, சாதுகோட்டியுள்கொள்ளப்படுவாரே 285, சாதுசனத்தைநலியும் 2945, சார்ங்கபாணிதளர்நடை 86, சார்ங்கமென்னும் வில்லாண்டான் 12, சிந்தையினால் இகழ்ந்த2845,சிலையொன்றிறுத்தாய்திரிவிக்கிரமாதிருவாயர்பாடிப்பிரானே 145, சிவந்ததன்கையனைத்துமார 2259, சிறுகாலேயூட்டி ஒருப்படுத்தேன் 245, சிறுமாமனிசர் 3548,சிறுவிரல்கள்தடவிப்பரிமாற 282. சிற்றியர்சிங்கமே 248, சீருற்றஅகிற்புகை 3651,சீர்கற்பன்வைகலே 2755, சீற்றத்தோடருள்பெற்றவன் 2957, சுடராழியும்பல்லாண்டு2, சுடர்வான்கலன்பெய்ததோர செப்பினைதிருமங்கைமன்னனை 1643, சுந்தரத்தோளுடையான் 587, சுரிகுழல்கனிவாய் 1414, சுரும்பார்குழல்கோதை 596, சுழலமலைதிரித்து 2674·106. சூட்டுநன்மாலைகள் 2498, சூழவேநின்று 3241, செங்கண்கோட 282, செந்நாள்தோன்றி 10, செப்பினைதிருமங்கைமன்னனை 1643, செம்பவளத்திரள்வாயன் 748, 2944, செய்குந்தாவரும்தீமை2840, செய்கொள்செந்நெலுயர் 3227, செய்தவேள்வியர் 3187, செய்தாரேல் நன்றுசெய்தார் 413, செய்த்தலைநீலநிறத்து 34, செய்யவாய் கொப்பளிப்ப 282, செல்வத்தினால்வளர்பிள்ளை 199, செல்வனைப்போல 11, செவ்வடிசெவ்விதிருக்காப்பு 1, சென்றநாள் 2298, சென்றால்குடையாம் 2134, சென்றுவணங்குமினோ 2423,சென்னிக்குன்சமலமன்னகுறைகழலே...கோலமாம்3034,சென்னிமேலேற2390, சோராக்குலைகொண்ட சேரைந்தலையான் 2389, சேர்மினீரே 1178, சேலேய்கண்ணியர் 3124, சேனைத்தொகையைச்சாடி 1490,சொல்லுகேன்வம்மின் 954, சோதிவாய்திறந்து 3568, ஞாலத்துபுத்திரனைப்பெற்றார்நங்கைமீர்நானேமற்றாருமில்லை 244, ஞாலத்தூடே நடந்து 3317, ஞானக்கைதா 2876, தக்கஐவர் 3498, தங்களதேவரைவல்லபரிசுவருவிப்பரேல் 606, தடங்கொள்தாமரைக்கண்3570, தடமணிவயல் 3667, தண்டுழாய்விரைநாற 3411, தண்ணந்துழாய் அழல்போல் 2480, தந்தைகாலிற்பெருவிலங்குதாள் அவிழ 1588, தமபாம்புபோல் 599, தம்மனை ஆனவனே 66,தம்மையேஒக்கஅருள்செய்வர் 1976,தயாதன்பெற்றமரதகமணித்தடம் 3674, தயிர்ப்பழம்சோற்றொடு 3608, தழும்பிருந்த 2104, தளவேழ்முறுவல் 2719, தனக்கேயாகஎனைக்கொள்ளுமீதே 2878, தன்கைமேல் என்கைவைத்து 564, தன்தாள்பாடி 2057, தன்விலங்கைவைத்தான் 2140, தன்னுக்கிஎன்னால்தன்னை 3425, தன்னைநயந்தாளை 2674·146,தாம

நந்தன்பெற்றஆனையன் 1390, நந்தன்பெற்றனன் ... வசுதேவன்பெற்றிலனே 710, நப்பின்னைகாணில்சிரிக்கும் 160, நமருமுரைமின் 1543, நமனும்தன்தூதுவரைக்கூவிச்செவிக்கு 2449, நமோநாராயணாயவென்று 4, நம்பீகடல்வண்ணா 896, நம்முடைநாயகனே 66, நலந்தான் ஒன்றுமிலேன் நல்லதோர் அறம்செய்துமிலேன் 1031, நலமந்தமில்லதோர்நாடு 2867, நலமுடையவன் 2675, நள்ளிருட்கண்என்னைஉய்த்திடுமின் 619, நன்மைதீமைகளொன்றுமறியேன் நாரணாவென்னுமித்தனையல்லால் 435, நாகணைமிசைநம்பிரான் 3226, நாமம்பலவுமுடைநாரணநம்பி 1925, நாமறிய ஆய்ப்பாடிவளர்ந்தநம்பி 1392, நாயகன் முழுவேழுலகுக்குமாய் 3270, நாயினேன் செய்தகுற்றம் நற்றமாகவேகொள் 862, நாரணன் போமிடமெல்லாம்சோதித்துழிதருகின்றாள் 290, நாராயணாஅழேல்தாலேலோ 51, நாளும்வாய்க்க 3552, நான்உன்னை யன்றியிலேன் கண்டாய் நாரணனே நீஎன்னையன்றியிலை 2388, நான்கண்டு கொண்டேன் நாராயணாஎன்னும்நாமம் 948, நான்மறைகள்தேடி என்றும் காணமாட்டாச் செல்வன் 1324, நிலவரம்பிலபலபிறப்பாய்ஒளிவருமுழுநலம் 2698, நிறைகுடவிளக்கம் 3764, நிறைபுகழாய்ச்சியர் 544, நினைந்திருந்தேசிரமம்தீர்ந்தேன் 470, நின்சிறுச்சேவகமும் 3218, நின்திருவருளும் பங்கயத்தாள்திருவருளும்கொண்டு நின்கோயில் சீயத்து 3568, நின்புகழில்வைகும்தம்சிந்தையிலும் 2637, நின்றகுன்றத்தினைநோக்கிநெடுமால் 3043, நின்றன்னால்நலிவேபடுவோம் என்று 3247, நின்னருளேபுரிந்திருந்தேன் 463, நீணகர்நீளெரிவைத்தருளாய் 2569, நீண்டமலைகளும் 1122, நீராட்டமைத்துவைத்தேன் 246, நீர[illegible]கிலனாய் 3315, நீரேற்றளந்தநெடியபிரான் அருளாவிடுமே 2546, நீர்நுமதென்றிவை 2688, நீள்குடக்கூத்தனுக்காட்செய்வதே 3115, நீள்வான்குறளுருவாய் 2013, நெஞ்சுதுக்கம் செய்யப்போந்தாய் 532, நெடுங்கண் இளமான் 3302, நெடுமாற்கடிமை 3546, நெய்த்தலைநேமியும் சங்கும் நிலாவிய 34, நெற்றிபெற்றகண்ணன் 838, நேரிழைநடந்தாள் 3301, நோய்களறுக்கும் மருந்து 3581, நோற்றநோன்பிலேன் 3183, பகல்கண்டேன்நாரணனைக்கண்டேன் 2262, படியாய்க்கிடந்துன்பவளவாய் காண்பேனே 685, படிறுபலசெய்திப்பாடியெங்கும் திரியாமே 239, படுதிரைவிசும்பிடைப்படர 1411, படுத்தபைந்நாகணை 9, பட்டுரையாய்ப்புற்கென்றே 2898, பண்கடந்ததேசம் 778, பண்டொருநாள் ஆலினிலைவளர்ந்தசிறுக்கன் 60, பரவிச்செல்மின்கள் 3107, பரற்பாயுமெல்லடி 734, பரன்சென்றுசேர் 2926, பலநீகாட்டிப்படுப்

வெஞ்சினவேழம் மருப்பொசித்த வேந்தர் கொல் ஏந்திழையார் மனத்தைதஞ்சுடையாளர் கொல் 1763, வெம்மாபிளந்தான் 3051, வெள்ளி வளைக்கைபற்ற 1208, வெள்ளை விளிசங்கிடங்கையிற் கொண்டவிமலன் 546, வெள்ளை வெள்ளத்தின் மேலொரு பாம்பை 439, வெற்புடைய நெடுங்கடலுள் 2058, வேங்கடத் தைப்பதியாகவாழ்வீர்காள் 585, வேண்டடிசில் உண்ணும்போது 622, வேண்டிற்றெல்லாம்தரும் 2989, வேதப்பயன்கொள்ளவல்ல 201, வேதமுதல்வன் 1679, வேதம்வல்லார்களைக்கொண்டு 3069, வேம்பேயாகவளர்த்தாளே 633, வேயிருந்தடந்தோளினர் 3240, வேய்மருதோளிணை 3689, வேர்த்துநின்றுவிளையாட 640, வேலைப் பிடித்தென்னைமார்கள் 528, வேவாரா வேட்கைநோய் 2794, வேழமும் ஏழ்விடையும் 66, வேறுகளத்தியிருப்பாரை 2399, வைகுந்தத் தமரும்முனிவரும் 3763, வைகுந்தன் என்பதோர்தோணிபெறாதுழல்கின்றேன் 548, வைத்தமாநிதி 3303, வையமேழுங்கண்டாள் 18, வையந்தாயமலரடிக்கீழ் 3497.

*3000, 6000 படி வியாக்யானங்களில் மேற்கோள்களாகக் காட்டப்பெறாமல் வானமாமலை ஜீயா ஸ்வாபதேசத்தில் மட்டும் காட்டப்பெற்ற ப்ரபந்தப்பாசுர எண்கள் இங்கு இடம் பெற்றில.



# ஸம்ஸ்க்ருதம் தமிழ்மொழிபெயர்ப்பகராதி

(இதில் வ்யாக்யானங்களில்வருகிற வடசொற்களுக்குத் தமிழ்ச் சொற்கள் உள்ளன)

அகிஞ்சநர்—கைம்முதல்அற்றவர், அக்ரூரயானம்—அக்ரூரர் கண்ணனை ஸேவிக்கச்சென்ற ப்ரயாணம், அங்கப்ரத்யங்கங்கள்—எல்லா அவயவங்களும், அசித்ஸமன்—அசேதனத்தோடு ஒத்தவன், அச்லேஷவிநாசம்—ஒட்டாமையும்நாசமும், அஜஹத்ஸ்வபாவன்—தன்னுடைய ஸ்வபாவங்களை விடாதவன், அதஏவ—ஆகையாலே, அதிசயிதமங்களாசாஸனபரர்—மங்களத்தைப் பிரார்த்திப்பதில் மிகவும் ஊற்றமுடையவர், அதிரஸம்—ரஸத்தின்மிகுதி, அத்யகாதமான—மிகவும் ஆழமான, அத்யவஸாயம்—நிச்சயபுத்தி, அத்யவஸித்து—நிச்சயித்தது, அத்யாத்மோபதேஷ்டா—ஆத்மோபதேசம் செய்பவன், அநசநம்—போஜனமின்மை, அநந்யார்ஹத்வத்யோதநார்த்தம்—பிறருக்குஉரித்தன்றானென்பதைவெளிப்படுத்த, அநந்யார்ஹை—அவனுக்கேஉரியவள், அநபிபவநீயன்—ஆக்ரமிக்கமுடியாதவன், அநவதாநம்—கவனக்குறைவு, மறதி, அநவரதம்—எப்போதும், அநக்ஷரரஸம்—அக்ஷரம் தெரியாவிட்டாலும் சப்தத்தின் இனிமை, அநாயாஸேன—சிரமமில்லாமல், அநாவ்ருஷ்டி—மழையின்மை, அநுகரித்து—ஒருவனைப்போல்செய்து, அநுகாரம்—ஒருவனைப்போலசெய்கை, அநுகூலர்—வேண்டியவர், பிரியர், அநுக்தஸௌந்தர்யசமுச்சயம்—சொல்லப்படாத அழகையும்கூட்டிக்கொள்ளுதல், அநுபபத்தி—கூடாமை, அநுபாவ்யங்கள்—அநுபவித்தே அறவேண்டியவை, அநுஸந்தித்து—நினைத்து, அந்தராயம்—தடங்கல், அந்தர்ப்பூதை—உள்ளடங்கியவள், அந்தவத்து—நாசமுடையது, அந்யசேஷத்வம்—பிறருக்குஉரியனாயிருக்கை, அபராத்ரி—இரவின்பிற்பகுதி, அபரிச்சிந்நமான—அளவிடமுடியாத, அபஹதபாப்மத்வம்—புண்யபாபபலம்தட்டாமை, அபஹதபாப்மத்வாதிகள்—அபஹதபாப்மத்வம்முதலிய எண்குணங்கள், அபாகவதன்—பாகவதன் அல்லாதவன், அபிகந்தாவான—எதிர்நோக்கிச்செல்பவரான, அபிநிவேசம்—ஆசையின்மிகுதி, அபிமதம்—இஷ்டம், அபிமதஸித்தி—இஷ்டத்தையடைதல், அபிமுகர்—எதிர்விழிசெலுத்துபவர், அபிஷேகமநோரதம்—பட்டாபிஷேகத்தில் ஆசை, அபுநராவர்த்தி—திரும்பிவாராமை, அபேக்ஷிதம்—ஆசைப்படுமது, அப்ராப்தம்—தனக்குவகுத்ததல்லாதது, அர்ச்சிராதிகதி—பரமபதத்திற்குச்செல்லும்வழி, அர்ஹமான—தகுந்த, அவகாஹித்து—படிந்து, அவதாரணம்—தீர்மானம், அவதீர்ணன்—அவதரித்தவன், அவத்

யம்—தோஷம், அவத்யாவஹம்—தோஷத்தை உண்டாக்கும்அது, அவலம்பம்—பிடிப்பு, அவஸந்நை—துக்கமுடையவள், அவாப்த ஸமஸ்தகாமன்—எல்லாப்பொருள்களையும் உடையவன், அவிச்சிந்நமான—இடைவிடாத, அவிஜ்ஞாதா—அறியாதவன், அவ்யவஹிதோபாயம—நேரே உபாயம், அஸங்குசிதர்—எண்ணிறந்தவர், அஸத்கல்பம்—அஸத்தைபபோல, அஸத்ஸமம்—அஸத்தைப்போல, அஸந்நிதியிலே—இல்லாதஇடத்திலே, அஸஹ்யம்—பொறுக்கமுடியாதது, அஸாதாரணம்—பொதுவல்லாதது, அஸ்தாநேபயசங்கை—பயப்படவேண்டாத இடத்தில்பயப்படுகை, அஸ்திரமுமாய்—நிலையற்றதுமாய், அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தர்—நித்யஸூரிகள் (ஸம்ஸார வாஸனையே அற்றவர்), அஹங்காரநிரஸநகன்—அஹங்காரத்தைப் போக்கடிக்குமவன்.

ஆகாசஸ்தன்—ஆகாசத்திலே நிற்பவன், ஆகாசாவகாசம்—ஆகாசபபரப்பு, ஆசாரப்ரதானர்—அநுஷ்டானத்தையே முக்கியமாகக்கொண்டவர், ஆசாஸிக்கை—ப்ரார்த்தனைசெய்கை, ஆச்ரிதர்—அடைந்தவர், ஆதித்யன்—சூரியன், ஆதித்யாந்தர்வர்த்தி—சூரியனிடத்தில் இருப்பவன், ஆதமஸ்வரூபம்—ஆத்மாவின் உண்மைநிலை, ஆத்மாபஹாரம்—ஆத்மாவைத்திருடுதல (ஸ்வதந்த்ரன் என்னும் எண்ணம்), ஆநந்தநிர்ப்பரை—ஆநந்தபூர்த்தியுடையவள், ஆநுஷங்கிகபலம்—நடுவே உண்டாகக்கூடிய பலன், ஆந்ருசம்ஸ்யம்—கருணை, ஆபிமுக்யம்—எதிர்விழி, ஆபிஜாத்யம்—உத்தமகுலம் உடைமை, ஆஹ்லாதகரம்—ஸந்தோஷத்தை உண்டாக்கும்அது, இரண்டாகாரம்—இரண்டு ஸ்வபாவங்கள், ஈச்வரோஹம்—நானே ஈச்வரன் (எனும் எண்ணம்.)

உக்தகுணவிசிஷ்டன்—கீழ்ச் சொல்லப்பட்ட குணங்களோடு கூடியவன், உக்தரீத்யா—கீழ்ச்சொன்னபடி, உக்த்யாபாஸம்—ஆபாஸவார்த்தை, உஞ்சவ்ருத்தி—பிக்ஷையெடுத்தல் (கதிர்பொறுக்கி ஜீவித்தல்), உண்மானமபுறமானம்—அந்தரங்கபஹிரங்கவிஷயங்கள், உத்கர்ஷம்—மேன்மை, உத்தரபூர்வாகங்கள்—இனிமேல் செய்யப்படப் போகிற பாபங்களும் இவ்வளவுகாலம் செய்யப்பட்ட பாபங்களும், உத்துங்கவிஷயம்—உயர்ந்தவிஷயம், உத்யோகத்தோடே—முயற்சியோடே, உந்மஸ்தகமான—தலைமண்டின (தலைக்குமேலே சென்ற), உந்மேஷம்—அபிவ்ருத்தி, உபக்நம்—கொள்கொம்பு, உபக்ரமத்தில்—ஆரம்பத்தில், உபபாதித்து—நன்றாகவிளக்கி, உபப்ருஹ்மணம்—விளக்கம், உபாயநைரபேக்ஷ்யம்—உபாயத்தில் (பகவானுக்கு) அபேக்ஷையில்லாதநிலை, ஒன்றையும் எதிர்பாராமையாகிற

பூர்த்தி, உபாயபாவம்—உபாயமாயிருக்கும்தன்மை, உபாயாந்தர ஸம்ஸர்க்கம்—வேறு உபாயத்தோடு சேர்க்கை, உபாஸ்யம்—த்யானம்செய்யத்தக்கது, உபேக்ஷித்தல்—வெறுத்தல்.

ஏகார்த்தாபிலாஷை—ஒரே விஷயத்தில் ஆசை, ஏகாவலீ—ஒற்றைவடமானமாலை, ஏவகாரத்தால்—ஏவ எனும் சப்தத்தால், ஓஷ்டஸ்புரணம்—உதடு துடிப்பு, ஔசித்யத்தால்—தகுதியால், ஔதார்யம்—கொடை.

கத்கதஸ்வரம்—தழுதழுத்த குரல், கரணகளேபரங்கள்—இந்திரியங்களும்சரீரமும், கர்மாநுகுணமாக — புண்யபாபகர்மத்திற்குச் சேர, காதாசித்கம்—ஏதோ ஒருகாலத்தில் ஏற்படும் அது, காமநாதிகாரிகள்—இச்சையே அதிகாரமாகக்கொண்டவர்கள், காமஸமாச்ரயணம்—மன்மதனைப்பற்றுதல், கார்ப்பண்யம்—உலோபம், காலக்ருத—காலத்தாலே உண்டாக்கப்பட்ட, காலாந்தரத்திலே—வேறொரு காலத்திலே, காலீநகர்மங்கள்—காலத்தில் செய்யப்படவேண்டியகர்மங்கள், காஷ்டாபூமி—எல்லை, கிரிகுஹரம்—பர்வத குஹை, குணசதுஷ்டயம்—நான்கு குணங்கள், குணவ்யஸநீ—தன் குணங்களுக்குக் குறைவருமோ எனக்கலங்குமவன், குணநிக்யம்—குணங்களால் பெருமை, கைங்கர்யஸ்ரீ—அடிமை செய்கையாகிற தனம், கைவல்யம்போலே—ஆத்மாநுபவமாகிற பலன்போலே, கோதநராய்—பசுக்களை ஐசுவரியமாகக்கொண்டவராய், கோபவ்ருத்தர்—கிழவர்களான இடையர்கள், கோலாஹலம்—ஆடம்பரம், கௌதுகம்—ஸந்தோஷம், கௌரவ்யர்—கௌரவிக்கத்தகுந்தவர், கௌரவ்யை—கௌரவிக்கத்தகுந்தவள், க்ரித்ரிமசகடம்—கள்ளச் சகடம் (வண்டி), க்ரித்ரிமம்—கள்ளம், க்ரீஷ்மகாலம்—வெயிற் காலம், க்ருபாநுகுணமாக—க்ருபைக்குச்சேர, க்ருபாக்ஷமாதிகல்யாணகுணங்கள்—க்ருபை பொறுமைமுதலிய கல்யாணகுணங்கள், க்ருஷி—யத்நம், க்ருஷ்ணவிரஹம்—க்ருஷ்ணனைவிட்டுப்பிரிதல், க்ருஹக்ஷேத்ராங்கள்—வீடு நிலம் முதலியன, சதாசார்யன்—உத்தம குரு, சதுர்த்தந்தி—நான்குதந்தங்களையுடையயானை, சந்தாநுவ்ருத்தி—திருவுள்ளத்தைஅநுஸரித்தது, சப்தவாச்யன்—சப்தத்தாலேசொல்லப்படுமவன், சமிக்கை—சைகை, சரமபர்வநிஷ்டர்—கடைநிலையில் (ஆசார்யாபிமானத்தில்) நிலைநின்றவர், சாபலத்தால்—ஆசையினால், சாபோபஹதர்—சாபத்தாலே அடிபட்டவர், சாவிதாவான—கட்டளையிடுகிற, சித்ரமால்யாநுலேபநராய்—அழகியமாலையும்சந்தனப்பூச்சும்உடையவராய், சிம்சுபாவ்ருக்ஷம்—அசோகமரம், சிஷ்டகர்ஹை—பெரியோர்செய்யும்நிந்தை, சிஷ்டாசாரஸித்தம்—

பெரியோர் அனுஷ்டானத்தால் தேர்ந்தது, சேதனம்—அறிவுடையது, சேஷபூதர்—அடியார், சேஷமாய்—அடிமைப்பட்டதாய், சேஷி—தலைவர், சேஷ்டிதங்கள்—காரியங்கள், சைதந்யகார்யம்—அறிவினால் ஏற்படுமது, ஸ்ரீமத்தாகிறது—ஸ்ரீயோடுகூடியதாகிறது, ஸ்ரீவராஹப்ராதுர்ப்பாவம்—ஸ்ரீவராஹாவதாரம், ஸ்ரீஸூக்திகள்—பெரியோர் வாய்ச்சொற்கள், ச்ரோதாக்கள்—கேட்பவர்கள், ஜந்தர்ம்மாக்கள்—பிறந்தவர்கள், ஜலசரசத்வங்கள்—நீரில்ஸஞ்சரிக்கும் பிராணிகள், ஜலாசயங்கள்—நீர்நிலைகள், ஜாகரூகராய்—எச்சரிக்கையுடையவராய், ஜாலகரந்த்ரம்—ஜன்னல்த்வாரம், ஜிதம்—ஜயம், ஜயிக்கப்பட்டது, ஜ்ஞாநப்ரஸரத்வாரா—அறிவின் பரப்பிற்கு வழி, ஜ்ஞாநலவதுர்விதக்தர்—அறிவில்லாதவர், ஜ்ஞாநவைசத்யத்தை—அறிவின் தெளிவை, ஜ்யாகிணகர்க்கசமான—நாண்தழும்புகளால் காடுமுரடான.

தததநுபவபரிகரமான—அவனை யநுபவிக்க உபகரணமான, ததர்த்தமாக—அதற்காக, ததீயர்—அடியார், ததேகோபாயன்—அவனையே உபாயமாகக்கொண்டவன், தத்க்ரதுந்யாயம்—எப்படி பகவத்உபாஸனையோ அப்படியேபலம் என்பதைக்காட்டும்நியாயம், தமோகுணப்ரபவம்—தமோகுணத்தின் ஆக்ரமிப்பு, தமோபிபூதை—தமோகுணத்தால் ஆக்ரமிக்கப்பட்டவள், தயநீயர்—இரக்கம் காட்டத்தகுந்தவர், தர்சநீயமான—அழகான, தர்மஹாநி—தர்மத்துக்கு விளையும்கேடு, தர்மி—தர்மத்தையுடையது, தர்ஜநபத்ஸநாதிகள்—பயமுறுத்தல்நிந்தித்தல்முதலியன, தக்ஷிணாவர்த்தசங்கதுல்யமான—வலம்புரிசங்கத்தோடொத்த, தாபம்—வருத்தம், தார்மிகர்—தர்மபுத்தியும் தர்மச்செய்கையும் உள்ளவர், திர்யக்கு—விலங்கு; குறுக்கான பொருள், தீக்ஷித்தவர்கள்—விரதத்தைமேற்கொண்டவர்கள், துராராதர்—மிகவும் வருந்தியும் பூஜிக்க இயலாதவர், துர்க்கடங்களை—சேராதவற்றை, துல்யபலம்—ஸமானமான பலன் உடையது, துஷ்டஸத்வபூயிஷ்டமான—துஷ்டபிராணிகள்நிறைந்த, தூர்த்தன—துஷ்டன், தேவதாந்தரபஜநம்—வேறு தேவதையை ஸேவிப்பது, தேஹயாத்ரை—சரீரத்தை நடத்தும்வழி, தேஹாத்மாபிமாநிகள்—தேஹத்தையே ஆத்மாவாக நினைத்துள்ளவர்கள், தேஹாந்தரபரிக்ரஹம்—வேறு தேஹத்தை எடுத்துக்கொள்ளல், தோஷதுஷ்டை—தோஷமுடையவள், தௌத்யஸாரத்யங்கள் — தூதனுமையும் தேரோட்டியானமையும், த்யாஜ்யம்—விடத்தகுந்தது, த்ரிபாத்விபூதி—பரமபதம், த்ருணம்—உலர்ந்தபுல், த்ருஷார்த்தர்—தீர்த்ததாஹத்தால் சிரமப்படுபவர், த்ருஷ்டாதிகள்—ஐஹிகபலன் முதலி

யவை, த்ரைவர்ணிகஜந்மம்—ப்ராஹ்மண,க்ஷத்ரிய, வைச்யர்களான மூன்று பிறவிகள், த்ரைவிக்ரமாபதாநம்—த்ரிவிக்ரமாவதாரகாலத்தில் நடத்திய செயல், த்வரை—வேகம், த்வாரவர்த்தி—வாயிலில் இருப்பவன், த்வாராத்யக்ஷர்—வாயில் காக்கும் அதிகாரிகள்.

நகரக்ஷோபாதிகள்—ஊரைக்கலக்குதல்முதலியன, நரகாவஹமான—நரகத்தை உண்டாக்கவல்ல, நவநீதசௌர்யம்—வெண்ணெய்களவு, நாமரூபவிபாகாநர்ஹன்—பெயர்வடிவங்களை இழந்தவன் நிகமத்தில்—முடிவில், நிதர்சனம்—எடுத்துக்காட்டு, நித்யவிபூதி—பரமபதம், நித்யாநபாயிநி—விட்டுப்பிரியாமல் எப்போதும் கூடியவள், நிந்திதகர்மபூயஸ்தவம்—சாஸ்த்ரங்களில்நிந்திக்கப்பட்ட கர்மங்களின்மிகுதி, நியந்தா—கட்டளையிடுமவன், நியமிக்கக்கடவேன்—கட்டளையிடக்கடவேன், நியாம்யகோடி—கட்டளைக்குட்பட்டவர், நியாம்யம்—கட்டளையிடத்தக்கது, நிரவதிகஸம்பத்து—எல்லையற்ற தனம், நிரவிக்க—முடிவாக்க, நிருக்திதவயம்—இரண்டு விவரணங்கள் நிருத்தராராம்படி—வாய்மாளும்படி, நிரோதிக்க—தடுக்க, நிர்த்தேசம்—குறிப்பிடல், நிஷித்தம்—தடுக்கப்பட்டது, நிஷ்காமர்—ஆசையற்றவர், நைர்க்ருண்யம்—தயையின்மை, ந்யஸ்தபார்—ரக்ஷாபாரத்தை (பகவானிடத்தில்) வைத்தவர்.

பகவதநுபவம்—பகவானைப்பற்றியநுகர்ச்சி, பகவதநுபவைகாந்தம்—பகவதநுபவத்திற்கே ஏற்பட்டது, பகவத்ப்ரத்யாஸத்தி—பகவத்ஸம்பந்தம், பகவத்ப்ரபந்நர்—பகவானிடத்தில்ப்ரபத்தி (சரணகதி) செய்தவர், பகவத்ப்ரவணர்—பகவத்விஷயத்தில் ப்ரீதிகொண்டவர், பகவத்விமுகன்—பகவானிடத்தில் எதிர்விழிகொடாதவன், பகவத்விஷயம்—பகவான், பகவத்ஸ்பர்சம்—பகவானைத்தொடுதல், பகவல்லாபம்—பகவானையடைதல், பக்திரூபாபந்நஜ்ஞாநம்—பக்தியாகிறஞானம், பக்நாபிமாநிகள்—அபிமானம் (இறுமாப்பு) குலைந்தவர்கள், பஞ்சோபநிஷந்மயமான—அப்ராக்ருதமான, பயாகாமபஹாரி—பயங்களைப்போக்குமவன், பரபாகசோபாவஹம்—எதிர்த்தட்டான அழகுதரக்கூடியது, பரபாகசோபை—அழகு, பரபாகமான—தட்டான, பரமோதாரமான—மிகவும் வள்ளலான, பரவசகாத்ரைகள்—பரவசமானசரீரத்தையுடையவர்கள், பரஸம்ருத்யைகப்ரயோஜனன்—பிறருடைய க்ஷேமத்தையேபலனாகக் கருதுமவன், பரஸ்பர—அந்யோந்யம், பராஹிம்ஸாதி—பிறரைத் துன்புறுத்தல் முதலியன, பராபிபவநசாமர்த்யம்—பிறரை ஆக்ரமிக்கும் சக்தி, பரிணமம்—விகாரம், பரிபுஷ்டர்—நன்றாக (எல்லாவிதத்தாலும்) நிறைந்தவர், பரிஸ்புரணங்கள்—துடிப்புகள், பர்த்ராந்தரஸம்ச்லே

ஷம்—வேறொருநாயகனுடன்சேர்தல், பர்யங்கவித்யை—பரமபதத்தில் பகவானை ஜீவன்கிட்டும்விதத்தைத்தெரிவிக்கும்வேதாந்தபாகம், பர்யவஸித்த—முடிந்த, பர்வதபரிஸரம்—மலையின் ஸமீபதேசம், பலப்ரதாதா—பலன்கொடுக்குமவன், பலாபிஸந்திரஹிதம்—பலத்தில் ஆசையற்றது, பவ்யன்—அடங்கியவன், பவ்யை—அடங்கியவள், பாதபூரணமான அவ்யயம்—அடியைநிரப்பும்சாரியை (பாடல்களிலுள்ளது), பாதஸம்வாஹிநிகள்—கால்பிடிக்கும் பெண்கள், பாதேயம்—கட்டுச்சோறு, பாலநவிதி—ரக்ஷிக்கும்விதம், பாவஜ்ஞன்—அபிப்ராயம் அறிபவன், பாவநமுமாய்—பரிசுத்தமுமாய், பாவநாப்ரகாஷம்—நினைவின்முதிர்ச்சி, பிபீலிகை—எறும்பு, புத்யதீநமாக—புத்திபூர்வகமாக, பூர்வாபரஸங்கதி—முன்பின் பொருத்தம், போக்தாக்கள்—அநுபவிக்கிறவர்கள், போக்யமுமாய்—அநுபவிக்கப்படுமதுவுமாய், போதயந்த:பரஸ்பரம்—ஒருவருக்கொருவர் சொல்லிக்கொள்ளுதல், பௌஷ்கல்யம்—பூர்த்தி, ப்ரகாசகம்—ப்ரகாசகாரணம், ப்ரச்சந்நசத்ரு—மறைந்துள்ள எதிரி, ப்ரதமகடாக்ஷஸந்நிபாதம்—முதல் கடாக்ஷம் வீழ்தல், ப்ரதிகூலர்—த்வேஷிகள், ப்ரதிபத்தி—புத்தி, ப்ரதிஷேதம்—தடுத்தல், ப்ரத்யபிஜ்ஞாகரமான—ஞாபகமூட்டவல்ல, ப்ரபத்தி—சரணாகதி, ப்ரபந்நர்—சரணாகதி செய்தவர், ப்ரபுத்தரான—அறிவுடையவரான, ப்ரப்ருதிகள்—முதலானவை, ப்ரமாணதார்ட்யத்தால்—ப்ரமாணத்தின்திண்மையால், ப்ராசுர்யம்—மிகுதி, ப்ராதாந்யம்—முக்யத்வம், ப்ராதேசிகன்—ஓரிடத்திலிருப்பவன், ப்ராபகம்—உபாயம், ப்ராப்தயௌவனன்—யௌவனப்பருவம்அடைந்தவன், ப்ராப்தர்—வகுத்தவர், ப்ராப்தாப்ராப்தவிவேகம்—தகுந்தது தகாதது என்ற பகுத்தறிவு, ப்ராப்யப்ராபகஸங்க்ரஹம்—பலனையும்உபாயத்தையும்சுருங்கச்சொல்வது, ப்ராப்யம்—பலன், ப்ராப்யருசி—பலனில் ஆசை, ப்ராமாதிகமாக—கவனக்குறைவால் விளைந்த, ப்ராயசித்தவிநாச்யம்—ப்ராயச்சித்தத்தால் விநாசம் அடையத்தக்கது, ப்ராஹ்மணி—ப்ராஹ்மணபெண், ப்ராஹ்மமுஹூர்த்தம்—விடியற்காலை, ப்ரீதைகள்—ஸந்தோஷித்தவர்கள், ப்ருதகுபலம்பமாதல்—தனியாக அறிதலாதல், ப்ருதக்ஸ்தித்யுபலப்தி—தனியாக இருத்தலையறிதல்.

மங்களதிவஸம்—நன்னாள், மநுஷ்யத்வேபரத்வம்—மநுஷ்யனாகஉள்ளபோதே (பரத்வமாகிற) மேன்மை, மநோரதம்—இச்சை, மஹார்ணவம்—சமுத்திரம், மஹார்ஹவஸநமும்—உயர்ந்த வஸ்த்ரமும், முகாவலோகநம்—முகம்பார்த்தல், முமுக்ஷு—மோக்ஷத்தில் இச்சையுடையவன், மௌக்த்யம்—அறியாமை.

யதாமனோரதம்—இச்சைப்படி, யமவச்யதாமூலம்—யமனுக்குக்கட்டுப்பட்டிருக்கை காரணமாக, யாதநாசரீரம்—நரகலோகாநுபவத்துக்குரிய சரீரம், யாதாத்மபாவி—ஆத்மஸ்வரூபத்துக்கு அநுகுணமாக உண்டாகுமது, யாவதாத்மபாவி—ஆத்மா இருக்குமளவும் உள்ளதொன்று, யோக்யதாந்தராஹிதமான—வேறு யோக்யதையற்ற, யௌகபத்யம்—ஒரேகாலம்.

ராகப்ரயுக்தம்—ஆசையினால் ஏற்படுமது, ராஜமஹிஷி—ராஜபத்நீ, ராவணபவனம்—ராவணன் மாளிகை, ருச்யுத்பாதகன்—ஆசையை உண்டாக்குமவன்.

லபிக்கை—அடைதல், லாபாநுஸந்தாநம்—அடைந்த லாபத்தைப்பற்றிய நினைவு, லீலாயஷ்டி—விளையாட்டுக்காகக் கையிலே கொள்ளும்கோல், லீலாவிபூதி—ஸம்ஸாரமண்டலம், லுப்தன்—கடும்பற்றுள்ளவன்.

வக்தாக்கள்—சொல்லுமவர்கள், வசநஸித்தம்—வாக்யத்தாலே தேறியது, வர்த்தநம்—இருக்கை, வர்ஷம்—மழை, வாங்மாதுர்யம்—பேச்சின் இனிமை, வாசாமகோசரம்—வார்த்தைக்குஎட்டாதது, விசோதிதஜடாராய்—ஜடையைக்களைந்தவராய், விச்ருங்கலஞானிகள்—வரம்புகடந்த ஞானம் உடையவர்கள், விஜயாநுஸந்தாநம்—ஜயத்தைநினைத்தல், விதேயர்—கீழ்ப்படிந்தவர், விரஹாக்நி—பிரிவாகிறநெருப்பு, விலக்ஷணை—அதிசலக்ஷணமுள்ளவள், விஷயாந்தரங்கள்—(பகவானைத்தவிரசப்தம்முதலிய) மற்றவிஷயங்கள், விஷயீகாரம்—அபிமானம், வைகுண்டநிகேதனன்—வைகுண்டத்தைவாசஸ்தானமாகஉடையவன், வைமுக்யம்—எதிர்நோக்கியிராமை, வைரூப்யம்—மாறுபாடு, வைரூப்யாவஹம்—வேறுபாட்டுக்குக்காரணம், வைலக்ஷண்யம்—லக்ஷணமிகுதி (பெருஞ்சிறப்பு), வ்யதிரேகத்தில்—இல்லாமையில், வ்யஷ்டிஸ்ருஷ்டி—காரியப்பொருளின் உற்பத்தி, வ்யாஜம்—வெளித்தோன்றும் காரணம், வ்யாப்யைகதேசம்—வ்யாப்யபதார்த்தங்களின் ஒருபாகம், வ்யாவர்த்திக்கிற—வேறுபாடு காட்டுகிற, வ்யாஹதபாஷணம்—ஸம்பந்தமின்றிக்கே (விருத்தமாகப்) பேசுகை, வ்யாஹதமான-விருத்தமான, வ்யுத்பத்தி—போதனசக்தி, வ்ரதகர்சிதை—விரதத்தாலேஇளைத்தவள், வ்ருத்தகீர்த்தனம்—நடந்தவற்றைச்சொல்லுதல், வ்ருத்திஹ்ராஸாதிகள்—பருத்தல் இளைத்தல் (ஏற்றக்குறைவு) முதலியன.

ஸதாசார்யப்ரஸாதம்—உத்தம ஆசார்யனுடைய அநுக்ரஹம், ஸத்வோத்தரம்—ஸத்வகுணம்மேலிடுகை, ஸத்ருசசாதனம்—தகுந்த

உபாயம், ஸந்நிஹிதமான—கிட்டின, ஸமநந்தரத்தில்—அடுத்த க்ஷணத்தில், ஸமுத்ரதாரணம்—கடல்தாண்டுதல், ஸம்சயம்—ஐயம் (சந்தேகம்), ஸம்ச்லேஷம்—சேர்க்கை, ஸம்ருத்தி—நிறைவு, ஸம்விதாநம்—ஏற்பாடு, ஸர்வஸ்மாத்பரன்—எல்லாரிலும் மேற்பட்டவன், ஸர்வாநிஷ்டநிவர்த்தகம்—எல்லா அநிஷ்டங்களையும் போக்கவல்ல, ஸர்வோபாயஸாதாரணம்—எல்லா உபாயங்களுக்கும் பொதுவானது, ஸவிநயமாக—விநயத்தோடுகூட, ஸஹகரித்து—உதவிசெய்து, ஸஹாயாந்தரம்—வேறுஸஹாயம், ஸாதநநைரபேக்ஷ்யம்—ஸாதநத்தின் அபேக்ஷையில்லாதநிலை, ஸாத்மிக்க—பொறுக்க, ஸாத்விகாக்ரேஸர்—ஸாத்விகர்க்குள்ளே முன்னேசெல்பவர் (சிறந்தவர்), ஸாந்த்வநம்—தேறுதல் செய்தல், ஸாம்ஸாரிகதாபம்—ஸம்ஸாரத்திலேற்படக்கூடியசிரமம், ஸித்தோபாயம்—பகவானேஉபாயம்எனப்பற்றுகை, ஸுகஸுப்தி—ஆனந்தமானதூக்கம், ஸௌகர்யாபாதக—ஸௌகர்யத்தை உண்டாக்கவல்ல, ஸௌசீல்யம்—அறப்பெரியவன் அறத்தாழ்ந்தவனோடுமேன்மைகீழ்மைபாராதேகலக்கும் குணம், ஸௌப்ராத்ரம்—சகோதரப்பான்மை, ஸௌலப்யம்—கண்ணுக்கு விஷயமாய்க் கிட்டிநிற்கை, ஸ்தநந்தயப்ரஜை—பால் குடிக்கும்சிசு, ஸ்தைர்யம்—நிலை, ஸ்ப்ருஹணீயமாய்—ஆசைப்படத்தக்கதாய், ஸ்மர்த்தவ்யவிஷயம்—நினைக்கத்தக்கபொருள், ஸ்ரக்சந்தநாதிகள்—புஷ்பமாலை சந்தனம் முதலியன, ஸ்ருஷ்ட்யுந்முகன்—ஸ்ருஷ்டி செய்வதில் ஒருப்பட்டவன், ஸ்வத:தானே, ஸ்வயம்பாகம்—தானே தளிகைசெய்கை, ஸ்வரக்ஷணம்—தன்னைரக்ஷிக்கை, ஸ்வரூபஜ்ஞாநம்—ஆத்மாவைப்பற்றிய அறிவு, ஸ்வரூபாநுரூபம்—ஆத்மாவின் நிலைக்குத் தகுந்தது, ஸ்வரூபாந்தர்க்கதம்—ஸ்வரூபத்துக்குள்ளே அடங்கியது, ஸ்வஸந்தாநத்துக்கு—தனது பரம்பரைக்கு, ஸ்வஸ்வாதந்த்ரியம்—தனனுடைய ஸ்வாதந்தரியம் (ஸ்வதந்தரமுடையவன் எனும் நினைவு), ஸ்வார்த்தமாக—தனக்காக, ஸ்வைரஸஞ்சாரம்—இஷ்டப்படி ஸஞ்சரிக்கை, ஷட்ரஸம்—ஆறுரஸங்கள், ஹர்ஷம்—ஆநந்தம், ஹிதகாமர்—ஹிதத்தை ஆசைப்படுமவர், ஹேயமுமாய்—தாழ்ந்ததுமாய் (விடததகுந்ததுமாய்), ஹோளாதிகாணம்—வஸந்தோத்ஸவத்தைபபற்றிய விசாரம்செயகிறமீமாம்ஸாபாகம், க்ஷமமன்று—இயலுவதன்று, க்ஷீராப்தி—திருப்பாற்கடல், க்ஷுத்ரம்ருகங்கள்—தாழ்ந்த மிருகங்கள், க்ஷுத்ரவிஷயாநுபவம்—தாழ்ந்தவிஷயத்தைப்பற்றிய அநுபவம், க்ஷேத்ராதிபதி—க்ஷேத்ரத்துக்குத்தலைவன, க்ஷேபித்தல்—நிந்தித்தல்.



# மார்கழிநோன்பு ஆகிய தைந்நீராடல்

ஹரிஸமயதிவாகரம் 4·12 (1927. டிசம்பர் வெளியீடு) ராவ் சாஹெப்-வித்வான்-மு.ராகவையங்கார்சுவாமிகள் எழுதியது(பக்கம் 265-284) இல்லறத்தார் நிகழ்த்திவந்த விரதங்களிலே "மார்கழி நோன்பு" என்பதொன்று பண்டைக்காலத்திற் பிரஸித்தமாக வழங்கியதென்பது ஸ்ரீ ஆண்டாள் அருளிச்செய்த திருப்பாவையாலும் திருவாதவூரர் பாடிய திருவெம்பாவையாலும் தெரியவருகின்றது. திருப்பாவை வியாக்யானத்தில் தொடக்கத்தில் ஸ்ரீ பெரியவாச்சான்பிள்ளை என்றபெரியார் இவ்விரதத்தைப்பற்றிக்குறிக்குமிடத்து "இந்நோன்புக்குமூலம் என்னென்னில் மீமாம்ஸையிலே ஹோளாதிகரண நியாயத்தாலே சிஷ்டாசாரஸித்தம். 'மேலையார்செய்வனகள்' என்று ஸ்ரீ ஆண்டாள் தானும் அருளிச்செய்தாள்" என்று எழுதலால், மார்கழி நோன்புக்கு வேதவிதியில்லையென்பதும், ஆன்றோர் அநுஷ்டானமே மூலமென்பதும் பண்டையோர் கொள்கையென்பதும் நன்கு விளங்கும்.

ஸ்ரீமத்பாகவதம் தசமஸ்கந்தம் 22ம் அத்யாயத்தில், கண்ணன் கோபியர்துகில்கவர்ந்தசரிதங்கூறும்தொடக்கத்தில் மார்கழிநோன்பு பற்றிய முக்கியமானசெய்திகள் கூறப்படுகின்றன. அதன் மொழிபெயர்ப்பு அடியில் வருமாறு:- "அரசனே! கோகுலத்துள்ள பெண்கள் ஹேமந்தருதுவின் முதல்மாதத்தில் (மார்கழியில்) காத்யாயநீ பூஜையாகிய விரதத்தைத்தொடங்கி ஹவிஸ்ஸைபுஜித்துக்கொண்டு அதனை நடத்திவந்தார்கள். அருணோதயத்தில் அவர்கள் எழுந்திருந்து யமுனாநதியில் ஸ்நானம்பண்ணி மணலால்காத்யாயநீதேவியின் உருவத்தைச்சமைத்து, சந்தனம்மலர்தூபம் தளிர்பழம் இவற்றாலும் சிறந்த நைவேத்யங்களாலும் அத்தேவியைப்பூஜித்தனர். "காத்யாயநீ! மஹாமாயே! மஹாயோகிநீ! ஈச்வரீ! உன்னைவணங்குகிறோம்; எங்களுக்கு நந்தகோபர்மைந்தனாகிய கண்ணனை நாயகனாக அருள்வீராக" என்ற இந்த மந்திரத்தை ஜபித்தவர்களாய் அவர்கள் கண்ணனைத் தியானித்துக்கொண்டு ஒருமாசகாலம்பூஜைசெய்துவிரதத்தைவிடாமல் நடத்திக்கொண்டுவந்தனர். பரமயோகிகளுக்கும் யோகியும் ஸர்வஜ்ஞனுமாகிய கண்ணபிரான், கோபகன்னியர் அநஙனம் நீர்விளையாட்டுநிகழ்த்துவதறிந்து, அப்பெண்களின் விரதபலத்தைஅளிப்பதற்காகத் தம் நண்பர்கள்சூழ அவ்விடம்சென்றார். பெரு

மான் அவர்களன்பைப்பலவகையாகவுஞ்சோதித்தமுடிவில், "நீங்கள் எந்த நோக்கத்தைக்கொண்டு காத்யாயநீவிரதத்தை நடத்தினீர்களோ அந்த மனோரதம் இன்றிரவில் என்னுடன்கூடிவிளையாடுவதால்நிறைவேறும், எல்லாரும் கோகுலம் செல்லுங்கள்" என்று நியமித்தருளினார்என்றும் கூறப்படுகின்றது. ஆனால் இந்நோன்பு காத்யாயனி சம்பந்தமுடையதென்பதற்குத்திருப்பாவைமூலத்தில் ஆதாரமில்லையே என்றுசிலர் சங்கித்தல்கூடும். இதற்குத் திருப்பாவைப்பாசுரங்களின் ஈறுதோறும் வரும் "எம்பாவாய்" என்ற தொடர், பாகவதத்திற் கண்டவாறு, ஈரநுண்மணலாற் சமைக்கப்பட்டதேவியின் பிரதிமையைப்பற்றியதாகக் கொள்ளுதல் பொருந்துமாயின் தேவீ சம்பந்தம் மூலத்தும்கூறப்பட்டதாகவே கருதலாம். பாவையென்பது 'கொல்லிப்பாவை' என்புழிப்போல, ஈண்டுப் பெண் தெய்வத்தின் பிரதிமையைக்குறிப்பதாகும். நம்பாவைக்குச்செய்யும் கிரிசைகள், நம்பாவைக்குச்சாற்றிநீராடினால், பிள்ளைகளெல்லாரும் பாவைக்களம் புக்கார் எனவரும் திருப்பாவைத் தொடர்களிலும் பிரதிமையொன்று வைத்து வணங்கும் குறிப்புத் தோன்றுதல் காணலாம். இனித்திருமால் பக்தியிற்சிறந்தஆண்டாள் தேவீவிரதத்தைமூலமாகக்கொண்டு பாடினர் எனல்தகுமோ என்றுசிலர் ஆக்ஷேபித்தல்கூடும். கண்ணனைத் தம்நாயகனாக அடைவதற்குக் கோபியர் காத்யாயநீதேவியை ஆராதித்துப்போந்தசெய்தி, சரித்திரப்பிரஸித்தமாயிருக்கும்போது, அக்கோபியர்விஷயத்தையே ஆண்டாளும்கொண்டுகூறினரெனின் அதனில் இழுக்குமுளதாமோ? திருமாலைத் தன் நாயகனாக அடைய வேண்டி "உன்னையும் உம்பியையும் தொழுதேன்" எனக் காமனையும் அவன் தம்பியாகிய சாமனையும்கூடத் தொழப்புக்க ஆண்டாள் தேவியைப்பிரார்த்தித்து அப்பெருமானைப் பெறமுயன்றகோபியர் செய்தி கூறியதிற் குற்றமென்ன ? தேவீ விரதமானது கண்ணனையடையவேண்டிக்கோபியர்தங்குலாசாரப்படி நிகழ்த்தியதாதலாலும் உத்தேசியத்தின் பெருஞ்சிறப்பை நோக்குமிடத்து அஃது எவ்வழியாலும் அடையத்தக்கதொன்றாதலாலும் அதனில்சம்பிரதாயவிரோதம் நிகழச்சிறிதும் இடமில்லையென்க. (மாணிக்கவாசகர் அருளிய திருவெம்பாவைக்குத்தலைக்குறிப்பு சத்தியைவியந்தது என்பதனால்) தேவியின்வணக்கமேதிருவெம்பாவையின் கருத்தென்பது தெளிவாகும். "முன்னிக்கடலை" என்ற திருவெம்பாவைப்பாட்டில் பராசத்தியே உவமை கூறப்பட்டிருத்தலும் "பேதித்து நம்மை வளர்த்தெடுத்தபெய்வளை தன்பாதத்திறம்பாடி" என்று அந்தச்சத்தி சிறப்பாக வணங்கப்பட்டிருத்தலும் காணலாம்.

திருப்பாவைபோன்ற பிரபந்தங்கள் "பாவைப்பாட்டு" என முன்னோரால் வழங்கப்பட்டன (தொல்காப்பியம் பொருளதிகாரம் 461 உரை) யாப்பருங்கலவிருத்தியின் இறுதிச்சூத்திர உரையுள் "கோழியுங் கூவினகுக்கிலழைத்தன...ஆழிசூழ் வையத்தறிவனடி யேத்தி...ஊழியுண்மன்னுவோமென்றேலோரெம்பாவாய்" என்ற பாட்டொன்று உதாரணங் காட்டப்பட்டுள்ளது. அறிவனடியேத்தி எனவருந்தொடரினின்று அஃது அருகக்கடவுளையோ புத்தனையோ பற்றியதாதல் வேண்டுமென்று தோற்றுகின்றது. மார்கழிநோன் பைக் கொண்டாடுதற்கு ஜைனர் பாராயணஞ்செய்யும் திருவெம் பாவை என்ற பழைய பிரபந்தமொன்றும் அச்சிடப்பட்டுளது. பிற் காலத்தில் தத்துவராயசுவாமிகள் பாடிய "பாடுதுறை"யுள் ஸ்வ ரூபாநந்தர் திருவெம்பாவைகள் இரண்டு வேதாந்த பரமாகக் காணப் படுகின்றன.

பண்டைச் சங்கநூல்கள் வாயிலாகவும் (மார்கழி நோன்பின்) செய்திகள் சில தெரியவருகின்றன. பரிபாடலுள் வையையாற்றின் சிறப்பைப்பற்றிக் கூறும் 11ம் பாடலிலே இந்நோன்பின் செய்திகள் சிலவற்றை ஆசிரியர் நல்லந்துவனார் அடியில்வரும் அடிகளாற் கூறுகின்றார்.

"கனைக்குமதிர்குரல்கார்வானநீக்கப்
பனிப்படுபைதல்விதலைப்பருவத்து
ஞாயிறுகாயாநளிமாரிப்பிற்குளத்து
மாயிருந்திங்கள்மறுநிறையாதிரை
விரிநூலந்தணர்விழவுதொடங்க
வெம்பாதாகவியனில்வரைப்பென
அம்பாவாடலின்ஆய்தொடிக்கன்னியர்
முனித்துறைமுதல்வியர்முறைமைகாட்டப்
பனிப்புலர்பாடிப்பருமணலருவியின்
... ... ... ... ...
தாயருகாநின்றதவத்தைந்நீராடுதல்
நீயுரைத்திவையைநதி"

தையினீராடிய தவந்தலைப்படுவாயோ (கலித்தொகை 59) தைஇத் திங்கட்டண்கயம் படியும்பெருந்தோட் குறுமகள்(கலித்தொகை 80) நறுவீயைம்பான் மகளிராடும் தைஇத்தண்கயம்போலப் பலர்படிந்து (ஐங்குறுநூறு 84) வான்பெயனனைந்த புறத்தநோன்பியர் தையூ ணிருக்கையின் (நற்றிணை 22) என்பனகண்டுகொள்க.

இனிப் பெண்பாற்பிள்ளைப்பாட்டின் செய்திகூறும் பிங்கலந்தை நிகண்டு 1369ம் சூத்திரத்துள்

> " பேணுஞ்சிறப்பிற்பெண்மகவாயின்
> மூன்றுமாண்டிற்குழமணமொழிதலும்
> ஐந்தின்முதலாவொன்பதின்காறும்
> ஐங்கணைக்கிழவனையார்வமொடுநோற்றலும்
> பனிநீர்தோய்தலும்பாவையாடலும் "

என்றவிடத்தில் இது கூறப்படுகின்றது.

ஆண்டாள் திருப்பாவையில் இந்நோன்பின் செய்திகள் சில குறிப்பிடப்படுகின்றன. கன்னியர் நிகழ்த்தும்கிரியைகளை "வையத்து வாழ்வீர்கள்" எனும் பாசுரத்திலும், வாத்தியங்களையும் விருதுகளையும் "மாலேமணிவண்ணா" என்பதிலும், நோன்பின்முடிவில்சிறுமியர்கோலத்தையும் விருந்தையும் "கூடாரைவெல்லும்"என்பதிலும், நோன்பால் மழைபெய்து நாடுசெழித்தலை "ஓங்கியுலகளந்த" என்பதிலும், கன்னியர் பெறுவது தலைவனையடைந்து உய்வதற்கென்பதை "சிற்றஞ்சிறுகாலே" என்பதிலும் காணலாம். திருவெம்பாவையில் "முன்னைப் பழம்பொருட்கு", "முன்னிக்கடலை", "உங்கையிற்பிள்ளை" முதலியவற்றில் காணலாம். மலையாளத்திலும் இந்நோன்பு கொண்டாடப்படும் விவரங்களை கோபாலபணிக்கர் ஆங்கிலத்தில் எழுதிய Malabar and its folk என்ற நூலிற் காணலாம்.

கல்வெட்டிலாகாவின் 1914ம் ஆண்டறிக்கையில் 68ம் எண்ணுள்ள கல்வெட்டில் முதல் ராஜராஜசோழன் மார்கழித்திருவாதிரையன்று " அக்காரடலை " நிவேதனம் செய்தற்கு ஏற்படுத்திய திட்டம் அறியத்தக்கது. அக்காரடலை என்பது அக்கார அடிசில் எனும் சர்க்கரைப்பொங்கல். வைஷ்ணவர்களும் " கூடாரைவெல்லும் சீர் " எனும் நாள்பாட்டில் கூறியபடி அக்கார அடிசில் நிவேதிப்பது இன்றும் நடைபெறுகின்றது.

## ஆழ்வார்களை எழுப்புவதில் வேறொருமுறை

வானமாமலைத் திருமடத்து ஸ்தாபகராகிய முதல்ஜீயர்ஸ்வாமிகள் அருளிய ஸ்வாபதேசத்தில் ஆழ்வார்களை எழுப்புகிறமுறையை 466-474ம் பக்கங்களில் கண்டோம். இதற்கு வேறாக, ஸ்வாபதேசம் ஒன்றைத் தகுந்த காரணங்களோடு காஞ்சிபுரம் - ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்யஸ்வாமிகள் தாம் 1948ம் ௵ வெளியிட்ட

திருப்பாவை வ்யாக்யாநத்தில் (பக்கம் 22-52) விவரிக்கிறார். அதன் சுருக்கம் கீழ்வருமாறு :—

(1) "புள்ளும் சிலம்பினகாண்" என்பதில் பெரியாழ்வாரை எழுப்புதல். புள்சிலம்புகிற நந்தனவனகைங்கர்யம் செய்தவர், புள்ளரையனுகிற கருடன் அம்சமாக அவதரித்தவர், பிள்ளாய் என்பதிலுள்ள பிள்ளைத்தனமாகிய அறியாமையினால் எம்பெருமானுடைய ரக்ஷகத்வத்தை மறந்து அவனுக்கே மங்களாசாஸன பரமாகப் பல்லாண்டுபாடியவர் (ஸ்ரீவசனபூஷணத்தில் 44ம் சூத்ரம் முதலியனவற்றிலுள்ளபடி மங்களாசாஸனத்துக்கு அஜ்ஞானமே மூலம் என்கிற அறியாமை)-திருப்பாவையிலுள்ள பலகருத்துக்களும் சரித்திரங்களும் இவர் அருளிச் செயலிலும் உள்ள ஒற்றுமை முதலிய பல காரணங்கள் காட்டப்படுகின்றன.

(2) "கீசுகீசென்று" என்பதில் குலசேகராழ்வாரை எழுப்புதல். ஏகாவலியாகச்செய்த 11 ரத்நங்களுள்ள ஹாரத்தில் நடுவே ஆறுவதாக இருக்கும் கல், நாயகக்கல் எனும் உலகவழக்கப்படி குருபரம்பரைப்படியுள்ள காலவரிசைக்ரமத்தில்முதலாழ்வார்மூவர் மழிசையார் நம்மாழ்வார் ஆகிய ஐவர் முன்னிருப்ப, பெரியாழ்வார் ஆண்டாள் தொண்டரடிப்பொடியார் பாணர் திருமங்கைமன்னன் ஆகிய ஐவர் பின்வர, நடுநாயகமாக நிற்பதாலும் கூடல் நாயகன் என்று 667ம் பாசுரத்திலும், பேயனே என்று 675லும், பெண்மையை 698-729லும் சொல்வதாலும் கருத்து சரித முதலிய ஒற்றுமைகள் திருப்பாவையிலும் பெருமாள் திருமொழியிலும் நிரம்பியிருத்தலாலும் "நாயகப்பெண்பிள்ளாய்", "பேய்ப்பெண்ணே" என்பனபோன்ற குறிப்புக்கள் குலசேகராழ்வாரைக் குறிக்கும்.

(3) "கீழ்வானம்" என்பதில் நம்மாழ்வாரை எழுப்புதல்-"கீழ்வானம் வெள்ளென்று" சூர்யோதயத்தைக் குறிப்பதுபோல நம்மாழ்வார் அவதாரம் வகுளாபரணபாஸ்கரோதயம் என்பது பிரஸித்தம். எருமைசிறுவீடு என்பதன் உட்கருத்து திருவாய்மொழி "குறுகமிக உணர்வத்தொடு எனும்(3016ம்)பாட்டில் குறிக்கப்படுவது, க்ருஷ்ண குதூஹலமே நம்மாழ்வாராக வடிவெடுத்ததென பட்டர் அருளியது "மெய்ம்மாலா யொழிந்தேன்" எனும்(3123ம்)பாட்டில் கூறப்படுவது, 3019, 3295ம் பாட்டுக்களில் "பாவை" என்றும், வேறு பற்பல பாடல்களில் நாயகிபாவத்திலும் பாடுவது, அர்ச்சாவதாரத் திருமேனிகளுள் நம்மாழ்வார் ஒருவரே வீற்றிருந்த திருக்கோலமாயிருப்பதால் "பாவாய் எழுந்திராய்" இவருக்கு மிகமிகப் பொருத்தமாவது முதலிய பலகாரணங்களால் நம்மாழ்வாரை எழுப்புதல்.

(4) "தூமணிமாடத்தில்" திருமழிசையாழ்வாரும் (5) "நோற்றுச் சுவர்க்கம்" என்பதில் பேயாழ்வாரும் (6) "கற்றுக்கறவைகள்" என்பதில் பூதத்தாழ்வாரும் (7) "கனைத்திளங்கற்றெருமை" என்பதில் பொய்கையாழ்வாரும், (8) "புள்ளின்வாய்" என்பதில் தொண்டரடிப்பொடியாழ்வாரும் (9) "உங்கள் புழைக்கடை" என்பதில் திருப்பாணாழ்வாரும் (10) "எல்லே இளங்கிளியே" என்பதில் திருமங்கையாழ்வாரும் எழுப்பப்பெறுகின்றார்கள். விரிவஞ்சி இம்மட்டில் இச்சுருக்கமான குறிப்பை முடிக்கின்றேன்.

---

### திருநாராயணபுரம் "ஆய்" எனும் ஜநந்யாசார்யஸ்வாமிகள் அருளிய

## திருப்பாவை ஈராயிரப்படி அவதாரிகை

எம்பெருமானாரை "ஒருகால் திருப்பாவைக்கு அர்த்தம் அருளிச்செய்யவேணும்" என்ன, "திருப்பல்லாண்டுக்கு ஆள்கிடைக்கிலும் திருப்பாவைக்கு ஆள்கிடையாது" என்று அருளிச்செய்தார். "மோவாய் எழுந்த முரடர் கேட்கைக்கு அதிகாரிகள் அல்லர். முலையெழுந்தார் கேட்கவேணும். அவர்களிலும் எம்பெருமானைத் தாங்கள் அநுபவிக்கவேணும் என்றிருக்கும் பரிவாணிச்சிகளான பிராட்டிமார்க்கும் கேட்க நிலமல்ல. பலசொல்லியென்! பத்து ஆழ்வார்களுடைய ஸாரபூதையான தானே சொல்லித் தானே கேட்குமத்தனை" என்று அருளிச்செய்தார்.

பதின்மருடைய ஞானமும் ஸ்த்ரீதனமாக இவள்பக்கலிலேயிறே குடிகொண்டது. பத்துபேர்க்கு ஒரு பெண்பிள்ளையிறே. ஆழ்வார்களுக்கும் எம்பெருமான் "மயர்வறமதிநலம் அருள" வேண்டிற்று. இவள்தான் எம்பெருமானுக்கு "மயர்வறமதிநலம்" அருளினாள். இவள் அருளுகையாவது :—எம்பெருமானை எழுப்பித் தன் குறையை எம்பெருமானுக்கு விண்ணப்பம் செய்கை.

இளையபெருமாள்படி ஆழ்வார்களது. ஸ்ரீபரதாழ்வான்படி பெரியாழ்வாரது. ஸ்ரீசத்ருக்நாழ்வான்படி அவர்திருமகளது. ஆழ்வார்களும் இளையபெருமாளும் பகவதநுபவத்தை ஆசைப்பட்டார்கள். ஸ்ரீபரதாழ்வானும் பெரியாழ்வாரும் பகவத்ஸம்ருத்தியை ஆசைப்பட்டார்கள். ஸ்ரீசத்ருக்நாழ்வானும் நாய்ச்சியாரும் ஸ்ரீமதுர

கவிகளோடு ஒப்பர்கள். நாய்ச்சியார் பெரியாழ்வாரையே உபாய மாக விச்வஸித்திருப்பர்.

ஆழ்வார்களுக்கு அந்யாபதேசம் ஆண்களா யிருக்கச்செய்தே பெண்களாகை. இவளுக்கு அந்யாபதேசம் ப்ராஹ்மணியான இவள் இடைச்சியாகை (1) "குலம்தரும்" இறே (2) "பண்டைக்குலத் தைத்தவிர்ந்து" என்றும் உண்டிறே.

உறங்குகிறவர் யார்? எழுப்புகிறவர் யார்? என்னில்:—குண வித்தர் உறங்குகிறார்கள், கைங்கர்யபரர் எழுப்புகிறார்கள். ராமசரம் ஒருபடிப்பட்டிராநிறே (3) "சின்னம்பின்னம்" அப்படி க்ருஷ்ண குணங்களும் நாநாவாயிறே இருப்பது. இரண்டு ப்ரகாரமும் பரம பதத்திலுமுண்டு (4) அமரரும் முனிவரும் இறே. முனிவரோடு ஒப்பர்கள் உறங்குகிறவர்கள். அமரரோடொப்பர் எழுப்புகிற வர்கள்.

ஆக நோன்புக்குக் காலத்தைச்சொல்லி இதுக்குச் செய்யக் கடவனசொல்லி, அநுமதிபண்ணினார்க்குண்டான நன்மைசொல்லி, வர்ஷிக்கும்படியை நியமித்து, "நாமிதிலே அந்வயிக்கவே ஸகல ப்ரதிபந்தகங்களும்போம்" என்றுசொல்லி, மேல்பத்துப்பாட்டாலே ஒருவரையொருவர் எழுப்புகிறார்கள். மேல்விசதமாயிருக்கும்.

2000படி அவதாரிகை முற்றிற்று.

---

## ஆண்டாள் வைபவம்

அன்னவயற்புதுவை ஆண்டாளுடைய திருவவதாரக்ரமம் இருக்கும்படி எங்ஙனே யெனனில், ஸ்ரீஜநகராஜன் யாகசாலைக்கு ஸ்தலம் உழுதுபண்ணுநிற்கப் படைச்சாலிலே பிராட்டி தோன்றி யதே நிரூபமாகச் சீதையென்று திருநாமம் சாத்தி ஸ்ரீஜனகராஜன் புத்ரியாக வளர்த்துக்கொண்டாற்போல, விஷ்ணுசித்தர் தமது திரு நந்தநவநத்தில் திருத்துழாய்க்குக் கொத்தாநிற்க, அம்மண்ணின் கீழே திரு ஆடிப்பூரத்திலே ஸ்ரீபூமிப்பிராட்டி ஆவிர்ப்பவித்தருள, விஷ்ணுசித்தர் கண்டெடுத்து, "கோதை" என்று திருநாமம் சாத் தித திருமகள்போலே வளர்த்தருளினார். விஷ்ணுசித்தர் வட பெருங்கோயிலுடையானுக்குச் சாத்தக் கட்டிவைத்த திருமாலையை ஆழ்வாரில்லாத அவசரத்திலே, இப்பெண்பிள்ளை தான் சூட்டிக்

கொண்டு, காதைறபூண்டு கூறையுடுத்துக் கைவளைகுலுக்கிக் கோவைச் செவ்வாய் திருத்தித் தன் அழகைக் கண்ணாடியிலே கண்டு, இப்படி பல நாளும் பந்துபந்தாகச் சுருட்டிவைக்க, இதை ஆழ்வார் ஒருநாள் கண்டருளிப் "பெண்ணே, எப்போதும் இப்படியோ செய்கிறாய்" என்று மிகவும் கோபித்து, அந்தத் திருமாலையை அன்று சாத்தாமலிருக்க, அன்றிரவு ஆழ்வார் கனவிலே எம்பெருமான் எழுந்தருளி, "இற்றைக்கு நமக்கு மாலை கொண்டு வாராதிருப்பானென்" என்ன, தம் புத்ரி கோதை குழலிலே முடித்த க்ருத்யத்தை விண்ணப்பஞ்செய்ய, எம்பெருமானும் "அப்போது தானும் வாசனையாய்ப் பிரியமாயிருப்பது" என்று அருளிச்செய்ய, ஆழ்வாரும் அன்றுமுதல் ஆண்டாளைப் "பின்னைகொல் நிலமாமகள்கொல் திருமகளொகொல் பிறந்திட்டாள்" என்று விசேஷப்ரதிபத்திபண்ணினார். ஆண்டாளும் தான் சூடிக்கொடுத்ததுவே நிருபகமாகச் சூடிக்கொடுத்த நாய்ச்சியாராயிருப்பர். திருத்துழாய பரிமளத்தோடேகூட முளைக்குமாபோலே, ஆண்டாளும் பால்ய யௌவனாவஸ்தைகள் தோறும வளருகிற பரபக்தி பரஜ்ஞானபரமபக்திகளை அதிகமாக உடையளானாள். புருஷன் புருஷனைக் காமிப்பது மேட்டுமடையாயிருக்கும். ஸத்ரீ புருஷனைக் காமிப்பது பள்ளமடையாகையாலே, அந்தபராவண்யமடியாக "அவனை விட்டகன்றுயிராற்றகில்லா" என்னும் நிலையையுடையாளாய் மார்கழிநீராடி நோன்பு நோற்றுக் காமபஜநாதிகளைப பண்ணித் தரிபபோமென்று பார்த்து, சங்கததமிழ்மாலைபாகத் திருப்பாவை, நாய்ச்சியார் திருமொழி என்கிற திவ்யப்ரபந்தங்களை ஜகத்துக்கு உபகரித்தருளினாள். ஆழ்வாரும் கோதையின் மணப்பருவங் கண்டு வியாகுலப்பட, ஆண்டாளும் "மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன" என்ன, ஆழ்வாரும் பினனை எங்ஙனே யென்ன, இவரும் எம்பெருமானையே மணபபதாகக்கூற, ஆழ்வாரும் நூற்றெட்டு திவ்யதேசத்தெம்பெருமான்களின் வைபவங்களை யெல்லாம ஓத, ஆண்டாளும் அணி அரங்கத்தம்மானுக்கே அற்றுத்தீர்ந்த காதலையுடையாளாக, ஆழ்வாரும் இது கூடும்படி யெங்ஙனே என்று வியாகுலத்துடன் கண்வளர, திருவரங்கச் செல்வனார் ஆழ்வார் கனவில்வந்து "உமது புத்திரி கோதையைக் கொண்டு அணியரங்கன் திருமுற்றத்தேற வாரீர், அவளுக்குத் தகுதியாக நாமே பாணிக்ரஹணம் பண்ணுகிறோம்" என்று அருளிச்செய்து, தமது பரிகாரத்தாருக்கும் "நம் சத்ரசாமரதாலவ்ருந்தாதி ஸகலபரிஜநபரிச்சதங்களோடே ஸ்ரீவில்லிபுத்தூரேறப் போய் ஆண்டாளை அழைத்துக்கொண்டு வாருங்

கோள்" என்று திருப்பவளச் செவ்வாய் திறந்து கட்டளையிட, அவர்களும் அவ்வாறே சென்று ஆழ்வாரிடம் விண்ணப்பிக்க, ஆழ்வாரும் வடபெருங்கோயிலுடையானிடம் விடைபெற்று, அழகிய மணவாளனையல்லதறியாத பாதிவ்ரத்யமுடைய ஆண்டாளை மணிப் பல்லக்கில் எழுந்தருளிவித்துப் பிறர் கண்படாமல் தட்டுப்பாயிட்டு மூடிக்கொண்டு திருவரங்கத் திருப்பதியேறச்சென்று அழகிய மணவாளன் திருமண்டபத்தே தட்டுப்பாயை வாங்க, சூடிக்கொடுத்த நாய்ச்சியாரும், அனைவரும் காணும்படி உதறியுடுத்த பட்டுச்சேலையும், சுற்றிய செங்கழுநீர்மாலையும திருநுதற்கஸ்தூரித்திருநாமமும், காதளவு ஓடிக் கயல்போல் மிளிரும் கடைக்கண் விழியும் உடையராய்க் கொங்கை குலுங்கச் சிலம்பார்க்கச் சீரார்வளையொலிப்ப, அன்னமென்னடை கொண்டு அழகிய மணவாளன் திருமுன்பே சென்று, உள்ளே புகுந்து கண்களாரக் கண்டு கேசவநம்பியைக் கால்பிடிப்பாள் என்னும் பேறுபெற்று, நாகபர்யங்கத்தை மிதித்தேறித் தீமுகத்து நாகணைமேற்சேரும் திருஅரங்கச் செல்வனைச் சேர்ந்து திருவடி வருடும்படி அந்தர்ப்பவித்தருள, இதைக் கண்ட ஆழ்வாரும் ஸ்ரீவல்லபன் முதலானோரும் விஸ்மயப்பட, அழகிய மணவாளன் ஆழ்வாருக்கு அருள்பாடிட்டருளி "க்ஷீரஸமுத்ர ராஜனைப்போலே நீரும நமக்கு மாமனாராய் விட்டீர்" என்று மிகவும் உவந்தருளித் தீர்த்தம் திருமாலை திருப்பரியட்டத்துடனே ஸ்ரீசடகோபனும் ப்ரஸாதித்து "வில்லிபுத்தூருறைவான்றன் பொன்னடி பூண்டுகொண்டு வாழும்" என்று விடைகொடுத்தருள, ஆழ்வாரும் ஸ்ரீவில்லிபுத்தூரேறச்சென்று பூர்வம்போலே வடபெருங்கோயிலுடையான் கைங்கர்யநிரதராய் வாழ்ந்தருளினார்.

---

# பெரியவாச்சான்பிள்ளை வைபவம்

இப்பெரியார் சோழவளநாட்டில், திருவெள்ளியங்குடி என்கிற திவ்யதேசத்திற்கு ஒரு கல் தொலைவில் உள்ள, சேங்கநல்லூர் எனும் ஸ்தலத்தில் கலி 4329 சர்வஜித்து ஆவணி ரோஹிணி நக்ஷத்திரத்தில் (க்ருஷ்ண பகவான் திருவவதரித்த அத்தத்தின் பத்தாநாளில்) அவதரித்தார். இயற்பெயர் ஸ்ரீக்ருஷ்ணபாதர், அபயப்ரதராஜர் என்பன. தமப்பனார் யாமுநதேசிகர், தாயார் நாய்ச்சியாரம்மாள். நஞ்சீயரிடத்திலும் நம்பிள்ளையிடத்திலும் சகல

சாஸ்த்ரங்களையும் திருவாய்மொழி வ்யாக்யானங்களையும் க்ரமமாகக் கேட்டு அநுஸந்தித்தவர். தர்சனப்ரவர்த்தகராய் நம்பிள்ளையின் நியமனப்படியே நாலாயிர திவ்யப்ரபந்தமுழுமைக்கும் வ்யாக்யானம் செய்தவர். ஸ்ரீராமாயணத்தில் இவருக்கு அளவுக்கடங்காத ஈடுபாடு, இவர் காட்டுகிற ப்ரமாணங்களுள் ஸ்ரீராமாயண ச்லோகங்களே மிகுதியானவை. பட்டர் செய்தருளின அஷ்டச்லோகி, ஸஹஸ்ர நாமபாஷ்யம் நம்பிள்ளையின் ஈடு முப்பத்தாறாயிரப்படி முதலியவற்றின் துணைகொண்டு இவருடைய வ்யாக்யாநங்கள் மிகச் சுருக்கமாகவும் விளக்கமாகவும் இருக்கும். ஆழ்வார்கள் அருளிச்செயல்கள் அனைத்திற்கும் வ்யாக்யானம் கண்டவர் இவர் ஒருவரே. இக்காரணம்பற்றி இவர் "வ்யாக்யானசக்ரவர்த்தி" என்று புகழ்பெறுவர். இவர் பூர்வசிகையந்தணகுலத்தினர் (பிள்ளை என்று இக்காலத்து வழங்கும் குலத்தினரல்லர்) திரு ஆராதனம் க்ருஷ்ணவிக்ரஹம். இருப்பிடம் கோயில் (ஸ்ரீரங்கம்) இவர் அருளிய நூல்கள் :—திருவாய்மொழிக்கு 24000படி வ்யாக்யாநம், திருப்பாவைக்கு 3000படி வ்யாக்யாநம், ஏனைய எல்லா ஆழ்வார்கள் அருளிச்செயல்களுக்கும் வ்யாக்யாநம், த்ரிமதசித்தாந்த ஸாரஸங்க்ரஹம், பாசுரப்படி ராமாயணம, கலியன் அருளப்பாடு, பரந்தரஹஸ்யம் விவரணம், மாணிக்க மாலை, நவரத்னமாலை, ஸகலப்ரமாண தாத்பர்யம், உபகாரரத்னம், கத்யத்ரய வ்யாக்யாநம், ஆளவந்தார் ஸ்தோத்ர ரத்ந வ்யாக்யானம், தனிச்லோகி வ்யாக்யாநம், பரந்தபடி, அபயப்ரதாந வ்யாக்யாநம், சரமரஹஸ்யம், அநுஸந்தாநரஹஸ்யம், நிகமனப்படி முதலியன. இவர் 95 திருநக்ஷத்ரம் எழுந்தருளியிருந்தார். இவருடைய சிஷ்யர் (திருமருமகனாரும் தத்தபுத்ரருமான) நைனாராச்சான்பிள்ளை, பரகாலதாஸர், பின்பழகிய பெருமாள்ஜீயர், ஸ்ரீரங்காசார்யர் முதலானவர்கள். நிகமாந்த மஹாதேசிகன தாம் கண்ட ஒரு கனவின் பயனாக, இவரால் திருத்தியாளப்பட்டுத் திருப்பாற்றாழ்வார விக்ரஹத்தைத் திருவாராதனமூர்த்தமாகப் பெற்றார் எனறவாலாறும் சில நூல்களுள் கூறப்பட்டுள்ளன. இவருடையதனியன் :—

ஸ்ரீமத்க்ருஷ்ணஸமாஹ்வாயநமோயாமுநஸூநவே
யத்கடாக்ஷைகலக்ஷ்யாணாம்ஸுலப: ஸ்ரீதரஸ்ஸதா

# அழகிய மணவாளப்பெருமாள் நாயனார் வைபவம்.

ஸ்ரீ

ஆழ்வார் திருவவதார மென்னலாமபடியான யுடைய நம்பிள்ளை ஒருநாள் நித்யகாலக்ஷேபாதிகளை நிறைவேற்றி மத்யாஹ்நத்தில் தனியாக எழுந்தருளியிருக்க, தம் திருவடிகளி லாஶ்ரயித்திருக்கும் வடக்குத் திருவீதிப் பிள்ளைக்குத் திருத்தாயா ரான அம்மியென்பவள், திருவடிகளில் தெண்டன் ஸமர்ப்பித்து நிற்க, நம் பிள்ளையு மவளைக் கடாக்ஷித்து, "உம்முடைய க்ருஹ யோகக்ஷேமங்களென்" என்று கேட்டருள, அம்மியு மதைக்கேட்டு, "யானென்னென்று விண்ணப்பம்செய்வேன், யான் பெற்றபிள்ளை யொரு பேயாயிருக்கிறதே" யென்ன, நம்பிள்ளையுமதென்? என்று கேட்டருள, "தேவரீர் அப்பிள்ளைக்கொரு பெண்ணை விவாஹம் செய்வித்ததே அந்தப் பெண் பெரியவளானுள். ஆகையால் அப் பிள்ளையை இப்பெண்பிள்ளையோடு ஸஹசயந கல்யாணம் செய்து இசைவிக்க, உட்புகுந்தவுடனே பிள்ளை, உடம்பெல்லாம் புழுக்க நீர் சொரிய விம்மி விம்மி முறையிட்டழுதுநிற்க, இதேது பிள்ளாய்! என்று கேட்டேன், அம்மா! இதொரு ஆடுகிற பாம்பா யிருந்தது பயப்பட்டேன், இன்னுமப்படியே யிருக்கிறதென்ன, இதுவுமொரு புதுமையோ என்று பெண்ணை அப்பாலே போகவிட்டேன், பிறகு சிலநாள் கழித்த பின்பும் சேரவிட்டேன். பின்னுமப்படியே யாச்சு தென்று வ்யாகுலப்பட, நம் பிள்ளையும சிரித்தருளி அதனுலுமக் கென்னென? அம்மியு மிதைக்கேட்டு, போரநொந்து இபபடி யரு ளிச்செய்யலாமோ? பெண் வாழவேண்டாவோ? குலமழியலாமோ வென்று திருவடிகளில் விழுந்து சோகிக்க, நம் பிள்ளையும் உகந்து "அம்மி! எழுந்திரும் நீர் சோகிக்கவேண்டா! மணுட்டிப்பெண் ஞுதஸ்நாநம் செய்து போகிறபோது இவ்வழி யழைதது வாரும்" என்றருளிச்செய்துவிட, அவளுமப்படியேசெய்ய, திருவோலகத்தி லெழுந்தருளியிருக்கும் நம் பிள்ளையு மப்போது அப்பெண்ணைக் கிட்டவழைத்தருளி தமக்கிஷ்டதெய்வமான பெரியபெருமாள் திரு நாமம் சாற்றவேணுமென்று தமதுள்ளே நினைப்பிட்டு அவள் வயிற் றைத் தமது திருக்கைகளால் ஸ்பர்சித்து ஸத்புத்ரனைப் பெற்றிடுவா யென்று அநுக்ரஹம் செய்துவிட்டு, அன்றையதினம் வடக்குத் திரு வீதிப்பிள்ளையை யழைத்தருளி, உம்முடைய பயமும் தீர்ந்தது,

விஹிதவைராக்யத்திற்கொரு குறைவும் வாராது, ஆகையால், லோகமரியாதைக்கு, நாம் சொன்னதற்காக இன்றிராத்ரி கூடியிரு மென்ன, அப்படியே கூடியிருந்தவளவில் (ஸ்ரீரங்கநாய்ச்சியார் எனும் பெயருடைய) ஆய்ச்சியும் கர்ப்பம் தரித்து, கலியுகம் 4327 குரோதன ஆடு ஐப்பசியில் திருவோணத்தில் பிள்ளை திருவவதரிக்க, அவருக்கு பிள்ளை லோகாசார்யர் என்று தம்முடைய ஆசார்யரான பிள்ளையினுடைய திருநாமத்தைச் சாத்தி வளர்த்தனர். பிள்ளை லோகாசார்யர் முதலாண்டுநிறைவில் பெரியபெருமாள் ஸந்நிதியில் தமப்பனாரும் நம்பிள்ளையும் ஸேவித்துநிற்க, நம்பெருமாள் போர உகந்தருளி, அர்ச்சகமுகேந நம்பிள்ளையைக் கூவியருளி, "உம்மைப் போலே யொருபிள்ளையைக் கொடுத்தீரே, இனி நம்மைப்போலே யொருபிள்ளை கொடும்" என்று நியமிக்க, "நாயன்தே! நாயன்தே" என்று ஓம் அறைய, அப்படியே வடமகுலத்தில் முடும்பைக்குடியில் யஜுஸ்சாகைஆபஸ் தம்பஸூத்ரம் ஸ்ரீவத்ஸகோத்ரஜராய் திருவரங்கம் பெரியகோயிலைக் குடியிருப்பாக உடையரான வடக்குத் திருவீதிப்பிள்ளைக்குப் புத்ரியான ஸ்ரீரங்கநாய்ச்சியாரிடத்தில் கலி 4329ஆடு மார்கழிமாதம் அவிட்ட நக்ஷத்திரத்தில் இரண்டாவது குமாரர் திருவவதரித்தருளினார். அவருக்கு நம்பிள்ளை எழுந்தருளி, தமது திருவுள்ளப்படி அழகியமணவாளப்பெருமாள்நாயனார் என்று பெரியபெருமாளுடைய திருநாமத்தைச் சாத்தியருளினார். இப்படிப்பட்ட பெருமையையுடையவருடைய திருவருளாலே அவதரித்து திவ்யாவதார விசேஷமாயிருந்துள்ள அழகிய மணவாளப் பெருமாள்நாயனார் அதிமேதாவியாய், தன் பிதாவான வடக்குத் திருவீதிப்பிள்ளையிடத்தில் பஞ்சஸம்ஸ்காரங்களும் நித்யாநுஸந்தாநங்களையும் பெற்று, பரமாசார்யரான நம்பிள்ளையிடத்தில் ஸ்ரீபாஷ்யம், ச்ருதப்ரகாசிகை, ரஹஸ்யங்கள், ரஹஸ்யவ்யாக்யாநங்கள் முதலான ஸகலார்த்தங்களையுமறிந்து, திருவாய்மொழி முதலிய திவ்யப்ரபந்தங்களைத், தமது திருத்தமையனாரான பிள்ளை லோகாசாரியர் ப்ரஸாதித்தருளப்பெற்று, ஸ்ரீரங்கராஜரைத் திருவாராதனமாயடைந்து, "ஆசார்யஹ்ருதயம்," "திருப்பாவைக்கு "ஆறாயிரப்படி வ்யாக்யாநம்," திருவந்தாதி, அமலனாதிபிரான், மாணிக்கமாலை, கண்ணிநுண்சிறுத்தாம்பு ஆகியவற்றிற்கு வ்யாக்யானம் அருளிச்செய்து, அருளிச்செயல் ரஹஸ்யம் முதலான க்ரந்தங்களையுமிட்டருளி, லோகத்தை வாழ்வித்து அதிவிரக்தராய், நைஷ்டிகப் பிரம்ஹசரியத்துடன் உத்தமாச்ரமஸ்வீகாரம் செய்தருளி, சிலகால மெழுந்தருளியிருந்து அப்படியே திருத்தமையனாருக்கு முன்னமே

திருநாட்டுக்கெழுந்தருளினார். இவர் திருவடிகளிலாச்ரயித்தவர் கிடாம்பி, திருமலைநாயனார், கூரகுலோத்தமதாஸர்.

இவர் தனியன் கீழ்வருமாறு :—

"த்ராவிடாம்நாய ஹ்ருதயம்குருபர்வக்ரமாகதம்
ரம்யஜாமத்ருதேவேந தர்சிதம்க்ருஷ்ணஸூநுநா"

---

## சுத்தஸத்வம் தொட்டாசார்யர்

திருப்பாவைக்கு ஸ்வாபதேசவ்யாக்யாநம் அருளியவர். இவரைப்பற்றி அதிக விவரம் தெரியவில்லை. சுத்தஸத்வம் அண்ணன் என்ற பெயருடையார் ஒருவர் வாநமாமலைத் திருமடத்து முதல் ஜீயர்ஸ்வாமிகளால் திருவாய்மொழியின் ஈடு ப்ரஸாதிக்கப்பெற்றவர் என்ற குறிப்பு ஒரு குருபரம்பரைப் பதிப்பில் வெளிவந்தது. அதை ஒட்டி, இதே ஜீயர்ஸ்வாமிகள் தாம் அருளிய திருப்பாவை ஸ்வாபதேசத்தைப் பெருக்கி சுத்தஸத்வம் தொட்டாசார்ய ஸ்வாமிகள் விஸ்தாரமாகத் தமது ஸ்வாபதேசவ்யாக்யாநத்தை அருளிச்செய்தார் என்று ஊகிக்கலாம. இவருடைய காலம் வாநமாமலைத் திருமடத்தின் ஸ்தாபித காலமாக இருத்தல்கூடும்.

---

## ஆறுயிரப்படி வடமொழி மேற்கோளகராதி

மூவாயிரப்படியிலுள்ள பற்பல மேற்கோள்கள் 6000படியிலுமுள்ளன எனினும், அவை தாத்பர்யங்களோடு வேறொரகராதியில் இப்பதிப்பிலுள்ளமையால், இங்கு இடம்பெற்றில. கீழ்வருவனவற்றில் ஒவ்வொரு குறிப்பிலும முதலுள்ள எண், இப்பதிப்பின் பக்க எண். பின்னுள்ளது மேற்கோள் குறிபெண். மேற்கோள் குறிப்பெண் தரபபடாதவை இதுவரையில் வெளிவநதுள்ள எப்பதிப்பிலும் எண் குறிக்கப்படாதவை. மேற்கோள் சுருக்கங்களின் விளக்கம் கீழ்வருமாறு :—

*இதிஹாஸ—இதிஹாஸஸமுச்சயம், கத்.த்ர—கத்யத்ரயம்,கீ—பகவத்கீதை, க்ரு.கர்—க்ருஷ்ணகர்ணாம்ருதம்,சர.கத்—சரணாகதிகத்யம், சாத்.தச—சாத்வதசஸம்ஹிதா, சா.உ—சாந்தோக்ய உபநிஷத், ஸ்ரீகுணரத்ந—ஸ்ரீகுணரத்நகோசம், சு. ஸ்த—ஸுந்தரபாஹுஸ்தவம், சு.பா (ஷை ஷை) ஜித—ஜிதந்தேஸ்தோத்ரம், தை.ஆ—தைத்தரீய ஆரண்யகம், தை.நா—தைத்தரீயநாராயணீயம், தை.ஸீ—தைத்தரீயசீக்ஷாவல்லி, பார—பாரதம், (உத்யோ—உத்யோகபர்வம்,சபா—சபாபர்வம், சாந்தி—சாந்திபர்வம், த்ரோண—த்ரோணபர்வம், ராஜஸூய—ராஜஸூயபர்வம்,) ப்ருஹ—ப்ருஹதாரண்யகம், யஜுர்காட—யஜுர்வேதம்காடகம், ர.ஸ்த—ரங்க ராஜஸ்தவம், ரா.அ—ராமாயணம் அயோத்யாகாண்டம் ரா ஆ—ஷை ஆரண்யகாண்டம், ரா.உ—ஷை உத்தரகாண்டம், ரா.கி—ஷை கிஷ்கிந்தாகாண்டம், ரா.சு—ஷை சுந்தரகாண்டம், ரா.பா—ஷை பாலகாண்டம், ரா.யு—ஷை யுத்தகாண்டம், வராஹ—வராஹபுராணம், வி.தர்—ஸ்ரீவிஷ்ணுதர்மம், வி.பு—ஸ்ரீவிஷ்ணுபுராணம், வை.ஸ்த—வைகுண்டஸ்தவம், ஸ்தோ.ர—ஸ்தோத்ரரத்நம், ஸ்வேதா—ஸ்வேதாச்வதர உபநிஷத்.*

அகாலபலி 223, ரா.யு 12.7.18, அகிலஜகந் 269, சர.கத் 1, அகிலஹேய 288, சர.கத்; அசரண்யசரண் 269, சர.கத் 1, அதவாகிம் 172, வி.பு 5.24, அதஸோபயங்க 244,தைஆ 72, அத்யாபயந்தி 425, அநச்நந் 398, ஸ்வேதா 4.6, அநந்தபோக 214, அநந்யா 265, ராசு 21.16 அநாதிர்பகவாந் 8, விபு 1.2.29, அந்தந்தம 420, அந்ருதம் 220. ராமாயணம்; அபரம்பவதோ 43, கீ 4.4, அபரிமித288, அபிசேத்ஸு 161, கீ 9.30 அபிவ்ருக்ஷா 223, ராஅ59.8,அமர்யாத 288. ஸ்தோ.ர. 62, அயோத்யா 37, ராஅ 40.9, அரதிர் 301, கீ 13 11, அவிஜ்ஞாதம் 89,290, அஸௌர்யமிவ 13, அஸ்துதே 411, அஸ்மிந்மயா 251, ராமாயணம்; அஹம்ப்ரஹ்மாஸ்மி 262, ப்ருஹ 3.4.10, அஹம்மோக்ஷயிஷ்யாமி 411, கீ 18.66, அஹோபாக்யம் 400, அஹோவீர்யம் 173, ராசு 49.17, ஆக்யாதிஹ்ருதயம் 235, ஆநயைநம் 220, ராயு 18.34, ஆவிர்ப்பூதம்மஹாத்மநா 420, விபு 5.3.2, இதஞ்ச 287, விபு 1.9.1,ஈச்வரஸ்ஸர்வ 298 கீ 18.61,ஈச்வரீம் 269, தைநா 1.30, ஈச்வரோஹம் 298, கீ 16.14, ஈஷந்நம்மய 279, உதாரா: 228, கீ 7.18, உத்திஷ்டா 104, ராபா 2.3.2 உபதாயபுஜம் 260, ராசு 21.16, ஊர்த்வம மாஸாந் 26, ராக 38.67, ஏகதாபவதி 59, சா 7.26.2, ஏகாம்தமணி 38, ராயு 5.10, ஏதத்வ்ரதம் 103, ராயு 18.33, ஏஷஸர்வஸ்வ 240 ராயு 1.13, ஏஷுஸுப்தேஷு 215, கட்வ 2.5.8, கேபேக 77, கச்ச 203, ராயு 59.144,

# மேற்கோள் விளக்கவுரை

## (ப்ரமாணத் திரட்டு)

இதில் மூவாயிரப்படி வியாக்யானத்தில், ஒன்று முதல் 215 வரையில் எண்கள் தரப்பட்டுள்ள ப்ரமாணங்கட்குக் கூடியவரையில் தெளிவான எளிய நடையில் உரை எழுதப்பட்டுள்ளது. வியாக்யானத்தில் முழு சுலோகம் காட்டப்படாது, சில சொற்களே காட்டப்பட்டிருக்கும். அந்த சொற்கள் வருகிற முழு சுலோகங்கட்கும் இங்கு உரையுள்ளது. இவ்வுரை பிரதிபதவியாக்யானமல்ல. மூன்று, ஆறு முதலிய எண்களையுடைய பதினேழுபிரமாணங்கள் எந்த நூல்களிலுள்ளன எனும் விவரம், இதுவரையில் வெளியிடப்பட்ட எந்த பதிப்புக்களிலும் காணப்படவில்லை. இவற்றை ஆராய்ந்து தெரிவித்தும், இவ்வுரையை இதைவிட எளிய தெள்ளிய நடையில் எவ்வாறெழுதலாம் என்பதையறிவித்தும் பிரபலபண்டிதர்கள் கைங்கர்யம் செய்தால் அது லோகோபகாரமாயிருக்கும். ஒலி வேறுபாடுடைய இடங்களில் மட்டும் க்ரந்த எழுத்துக்களும் மற்றெல்லா இடங்களிலும் தமிழ் எழுத்தும் உபயோகிக்கப்பெற்றுள்ளன. ஒவ்வொரு பிரமாண நூற்பெயர் முன்னும், ஸ்ரீ என்பதைச் சேர்த்துக்கொள்க. சம்ப்ரதாயத்தையொட்டி ராமன், லக்ஷ்மணன், பரதன், ஸத்ருக்னன், ஸீதை, குஹன், ஸுக்ரீவன், ஹநுமான், விபீஷணன், கஜேந்த்ரன், எனும் திருநாமங்களைச் சக்ரவர்த்தித்திருமகன் (அல்லது பெருமாள்) இளையபெருமாள், பரதாழ்வான், ஸத்ருக்நாழ்வான், பிராட்டி, குஹப்பெருமாள், மஹாராஜர், திருவடி, விபீஷணாழ்வான், கஜேந்த்ராழ்வான் என்று ஓதுக—இவ்வாறே பிறவற்றிற்கும் கொள்க—இங்குள்ள 215 பிரமாணங்களில், ஸ்ரீராமாயணத்திலுள்ளவை 93, ஸ்ரீவிஷ்ணு புராணத்துள்ளவை 22, உபநிஷத்துக்களிலுள்ளவை 19, ஸ்ரீபகவத்கீதையிலுள்ளவை 15, ஸ்ரீமஹாபாரதத்திலுள்ளவை 13, ஏனைய பத்துக்கும் குறைந்த எண்ணிக்கையுடையவையாகும்.

1. அநாதிமாயயாஸுப்தோயதாஜீவ: ப்ரவுத்யதே

அஜமநித்ரமஸ்வப்நமத்வைதம்புத்யதேததா.

(மாண்டூக்யோபநிஷத் 2.21.) அநாதிமாயையினால் உறங்கும் ஜீவாத்மா, எப்போது ஜ்ஞானவான் ஆகின்றானோ, அப்போது,

பிறப்பு உறக்கம் சொப்பனம் இல்லாதவனாகத் தன்னை அத்வைத நிலையில் அறிகிறான்.

2. பால்யாத்ப்ரப்ருதிஸுஸ்நிக்தோ லக்ஷ்மணோ லக்ஷ்மிவர்தந:
ராமஸ்யலோகராமஸ்ய ப்ராதுர்ஜ்யேஷ்டஸ்யநித்யஶ:

(ஸ்ரீராமாயணம் பாலகாண்டம் 18.27) லக்ஷ்மிவர்த்தனை லக்ஷ்மணன், லோகத்தை லோகத்தை ஆநந்திப்பிக்கிற பெரியதமையனான ராமபிரானுக்குத் தொட்டில் பருவம் தொடங்கி, எப்போதும் பரமஸ்நேஹிதனாயிருந்தான்.

3. விவாஹகாலே ரதிஸம்ப்ரயோகே ப்ராணாத்யயே ஸர்வதநாபஹாரே| விப்ரஸ்யசார்த்தேஹ்யந்ருதம்வதேந்நபஞ்சாந்ருதாந்யாஹுரபாதகாநி||

கல்யாணகாலத்திலும், ஆணும் பெண்ணுமாக்கூடி மகிழும் காலத்திலும், தன் உயிருக்கே ஆபத்து நேரும்காலத்திலும், சகல சொத்தும் பறிமுதலாகும் காலத்திலும், ஒரு பாகவதன் க்ஷேமத்தின் பொருட்டும்,பொய்யைச் சொல்லுகிறார்களன்றோ? கீழ்ச் சொல்லப் பட்ட பாபங்கள் ஐந்தையும் பாபமல்ல என்று பெரியோர் சொன்னார்கள்.

4. பதிஸம்யோகஸுலபம்வயோத்ருஷ்ட்வாசமேபிதா
சிந்தார்ணவகத:பாரம்நாஸஸாதாப்லவோயதா

(ராமாயணம் அயோத்யாகாண்டம் 118.34) அநஸூயையைப் பார்த்து பிராட்டி அருளிச்செய்தது:—எனதுபிதா (ஜநகமஹாராஜன்) நாயகனோடு சேர்த்தற்குத் தக்க எனது யௌவனத்தைப் பார்த்து, வ்யஸனமாகிற சமுத்ரத்தையடைந்து, புணையற்றவன் போல் கரையேறவில்லை.

5. துஷ்டகாலியதிஷ்டாத்ரக்ருஷ்ணோஹமிதிசாபரா
பாஹுமாஸ்போட்யக்ருஷ்ணஸ்யலீலயாஸர்வமாததே

(விஷ்ணுபுராணம் 5.13.27) க்ருஷ்ணலீலைகளைக் கோபிகைகள் அநுகரித்துத் தமக்குள் சொல்லியது:—"துஷ்டகாளியனே! இவ்விடத்தில் இரு, நான் க்ருஷ்ணன்" என்று, வேறொரு கோபஸ்த்ரீயும்

கைகளைத் தட்டிக்கொண்டு, க்ருஷ்ணலீலையால் ஒரு பாம்மை எடுத்தாள்.

6. ஶாஸநாச்சாஸ்த்ரம்—

(செய்யவேண்டுவன விலக்கவேண்டுவன இவை இவையென்று) விதிப்பதால் சாஸ்த்ரம் எனப்படுகின்றது.

7. யாவதாவர்த்ததே சக்ரம் யாவதீ ச வஸுந்தரா
தாவத்த்வமிஹ ஸர்வஸ்ய ஸ்வாமித்வமநுவர்தய

(ராமாயணம் யுத்தகாண்டம் 131-11-பரதன் ராமபிரானிடம் சொன்னது) துருவசக்ரம் எவ்வளவுகாலம் சுழலுமோ, பூமியும் எவ்வளவு பரப்புள்ளதோ, அவ்வளவு காலமும் தேசமும், தாங்கள் இங்கு சர்வத்திற்கும் ஸ்வாமித்வத்தை அநுவர்த்திக்கவேண்டும்.

8. வாஸுதேவதருச்சாயா நாதிஶீதா நகர்மதா
நரகாங்காரஶமநீ ஸாகிமர்த்தம் நஸேவ்யதே

அதிககுளிரும் அதிக உஷ்ணமும் இல்லாமல் நரகங்களாகிற பெரு நெருப்பை அழிக்கவல்லதாம் சிறப்புடைய வாஸுதேவனாகின்ற மரநிழல் ஏன் அடையப்படுவது?

9. மாஸாநாம் மார்கஶீர்ஷோஹம் ருதூநாம் குஸுமாகர:
த்யூதம் சலயதாமஸ்மி தேஜஸ் தேஜஸ்விநாமஹம்

(பகவத்கீதை 10-35-கண்ணன் அர்ஜுனனுக்குச் சொன்னது)— மாஸங்களுக்குள் மார்கழியாயும், ருதுக்களுள் வஸந்தமாகவும், ஆட்டங்களுள் சொக்கட்டான் விளையாட்டாகவும், தேஜோவான்களுள் பரமதேஜோரூபனாகவும் நானுகிறேன்.

10, 11. சைத்ர ஶ்ரீமாநயம் மாஸ: புண்ய: புஷ்பிதகாநந:
யௌவராஜ்யாய ராமஸ்ய ஸர்வமேவோபகல்ப்யதாம்

(ராமாயணம் அயோத்யாகாண்டம் 3.4 தசரதசக்ரவர்த்தி வஸிஷ்டர் முதலியவரிடம் சொன்னது) இந்த சித்திரைமாதமானது மங்களம் நிரம்பியதாயும் பரிசுத்தமாயும் மலர்ந்த புஷ்பங்கள் (வனங்களில்) நிரம்பியதாயுமிருப்பதால் ஸ்ரீராமனுடைய யுவராஜ பட்டாபிஷேகத்திற்கு எல்லா ஏற்பாடுகளும் செய்யப்படுக.

12. அத்யத்₃பு₄தமித₃ம்வாக்யம்தவராமமஹாக்ஷரம்
பாவநஸ்ஸர்வலோகாநாம்த்வமேவரகு₄நந்த₃ந

(ராமாயணம் உத்தரகாண்டம் 82.9 அகஸ்தியர் ராமனிடம் சொன்னது) ராமா! தேவரீருடைய இவ்வாக்கியம் மிக அற்புதமாயும், சுப பதங்கள் நிரம்பியதாயும் உள்ளது. ரகுவின் குலத்திற் பிறந்தவரே! தேவரீரே சர்வலோகங்கட்கும் சுத்திகரமான ஸ்வரூபத்தை யுடையீர்.

13. சந்த்₃ரகாந்தாநநம்ராமமதீவப்ரியத₃ர்ஶநம்
ரூபெளதா₃ர்யகு₃ணை:பும்ஸாம்த்₃ருஷ்டிசித்தாபஹாரிணம்

(ராமாயணம் அயோத்யாகாண்டம் 3.28) இஷ்டமான தோற்றமும் சந்திரனைக்காட்டிலும் அழகிய முகமும், அழகும் அதனை வழங்கும் வள்ளன்மையும், சௌசீலயமாகிற குணமும் ஆகியவற்றால் புருஷர்களுடைய கண்களையும் சித்தங்களையும் அபஹரிக்குமவரான ராமபிரானைத் (தசரதசக்ரவர்த்திகண்டார்)

14. ஆபூர்யமாணேபக்ஷேபுண்யேநக்ஷத்ரே

சந்திரகலைகள் நிறைந்த சுக்லபக்ஷத்தில் புண்யநக்ஷத்திரத்தில் (மங்களகாரியம் செய்தற்குரியது)

15. த்வதா₃ஶ்ரிதாநாம்ஜக₃து₃த₃யஸ்தி₂திப்ரணாஶஸம்ஸாரவிமோச
நாத₃ய:| ப₄வந்திலீலாவிதயஶ்சவைதி₃காஸ்த்வதீ₃யக₃ம்பீ₄ர
மநோऽநுஸாரிண:||

(ஸ்தோத்ரரத்நம் 30) தேவரீரை ஆச்ரயித்தவர்கட்கு ஜகத் ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரம் ஸம்ஸார விமோசனமான மோக்ஷம் ஆகிய இவை லீலைகளாகின்றன. வைதிகநியமநங்களும் தேவரீரிடத்தில் ப்ரீதிகொண்ட பாகவதர்களுடைய கம்பீரமான மனதை அனுசரித்தேயுள்ளன.

16. தாநஹம்த்₃விஷத:க்ரூராந்ஸம்ஸாரேஷுநராத₄மாந்
க்ஷிபாம்யஜஸ்ரமஶுபா₄நாஸுரீஷ்வேவயோநிஷு

கீதை 19.19 (க்ருஷ்ணன் அர்ச்சுனனுக்குச் சொன்னது) அஹங்காரமுதலியவற்றையுடையராய், சத்ருக்களாய், கடுந்தொழில் செய்

புவர்களாய், பாபிஷ்டராய்உள்ளநிக்ருஷ்ட மனுஷ்யர்களை அசுர ஸம்பந்தப் பிறவிகளிலே நான் எப்போதும் தள்ளுகிறேன்.

17. தேஷாம்ஸததயுக்தாநாம்பஜதாம்ப்ரீதிபூர்வகம்

ததாமிபுத்தியோகம்தம்யேநமாமுபயாந்திதே

(கீதை 10-10 க்ருஷ்ணன் அர்ச்சுனனுக்குச் சொன்னது) எந்த ஞானயோகத்தால் முன்கூறப்பட்ட ஞானிகள் என்னைச் சரணாக அடைகிறார்களோ, அத்தகைய ஞானயோகத்தை, எப்பொழுதும் என்னையடைய இச்சித்து ப்ரீதிபூர்வகமாக, என்னையடையும் அவர்கட்குக் கூட்டுவிக்கிறேன்.

18. அத்யமேஸபலம்ஜந்மஸுப்ரபாதாசமேநிஶா

யதுந்நித்ராப்ஜபத்ராக்ஷம்விஷ்ணோர்த்ரக்ஷ்யாம்யஹம்முகம்

(விஷ்ணுபுராணம் 5 17.3) மலர்ந்த தாமரையிதழ்போன்ற கண்களையுடைய விஷ்ணுரூபியான க்ருஷ்ணனுடைய திருமுகமண்டலத்தை ஸேவிப்பதால், இப்போது என் ஜந்மமானது நல்லபலனுள்ளதாயிற்று, இரவும் நல்லவிடிவாயிற்று (என்று அக்ரூரர் க்ருஷ்ணனைப் பார்க்கும்போது எண்ணியது.)

19. ஏஷப்ரஹ்மப்ரவிஷ்டோऽஸ்மிக்ரீஷ்மேஶீதமிவஹ்ரதம்

ஶாம்யாமிபரிநிர்வாமிஸுகம்மாமேதிகேவலம்

(மஹாபாரதம் ஸாந்திபர்வம் மோக்ஷதர்மம் 4.50) வெயிற்காலத்தில் குளிர்ந்தநீர்நிலையைப்போல், பரப்ரஹ்மத்தை நான் அடைந்தவனாகிறேன், சாந்தனாகின்றேன், தாபம் ஆறினவனாகிறேன், துக்கம் கலவாத சுகம் என்னைச்சேர்கின்றது.

20. விதிதஸ்ஸஹிதர்மஜ்ஞஶ்ஶரணாகதவத்ஸல:

தேநமைத்ரீபவதுதேயதிஜீவிதுமிச்சஸி

(ராமாயணம் சுந்தரகாண்டம் 21.20)—பிராட்டி ராவணனுக்குச் சொன்னது. அவர் (ஸ்ரீராமபிரான்) தர்மத்தையறிந்தவரென்றும், சரணடைந்தாரிடம் அதிக வாத்ஸல்யமுடையரென்றும் ப்ரஸித்தமானவர் அன்றோ? நீ பிழைக்க விரும்புகிறாயெனில் அவருடைய நட்பு உனக்கு உண்டாகக்கடவது.

21. வஸதிஹ்ருதிஸநாதநேசதஸ்மிந்ஹவதிபுமாந்ஜநஸ்தோZஸ்ய
ஸௌம்யரூப:|க்ஷிதிரஸமதிரம்யமாத்மநோந்த:கலயதிசாரு
தயைவஸாலபோத:||

விஷ்ணுபுராணம் 3.7.24—யமன் தனது தூதற்குச்சொன்னது. இளையமரமரமானது தனதழகாலே தன்னுள்ளிருக்கும் அழகியபூமி ஸாரத்தைக்காட்டுவதுபோல, பக்தன் அநாதியான பகவான் தனது ஹ்ருதயத்தில் வாஸம்செய்வதால் இந்த உலகுக்கு சுகுமாரமான ரூபத்தையுடையனுகிருன்.

22. ஸர்வப்ரியகரஸ்தஸ்யராமஸ்யாபிஶரீரத:
லக்ஷ்மணோலக்ஷ்மிஸம்பந்நோவஹி:ப்ராணஇவாபர:

(ராமாயணம் பாலகாண்டம் 18.28)—லக்ஷ்மிஸம்பந்நனை லக்ஷ்மணன், ஸ்ரீராமபிராணுக்கு சரீரம்முதலியன காரணங்களினுல் ஸர்வ ப்ரியகரராயும், வெளியே உலாவும் ஒரு பிராணன்போலும் இருக்கிருர்.

23. பரித்யக்தாமயாலங்காமித்ராணிசயநாநிவ
ஹவத்தம்மோராஜ்யஞ்சஜீவிதஞ்சஸுகாநிச

(ராமாயணம் யுத்தகாண்டம் 19.5) அபயப்ரதாநம் பெற்றபின் விபீஷணன் சொன்னது) லங்கையும் நண்பர்களும் தனங்களும் என்னுல் விடப்பட்டன. எனது ராஜ்யமும் ப்ராணனும் எல்லா சுகங்களும் தேவரீருடைய கைங்கர்யத்துக்கே வருவன.

24. அஸுவீச்சதஊாவாக்யம்ஜாதக்ரோதோயோவிபீஷண:
அந்தரிக்ஷகதஶ்ஶ்ரீமாந்ஸுாதரம்ராக்ஷஸாதிபம்

(ராமாயணம் யுத்தகாண்டம் 16.17) விபீஷணன் ராவணனிடம் சொன்னது. ஸ்ரீமாந் ஆகிய விபீஷணன் ஆகாசத்தில் நின்று, (ராவணன் தன்னிடம்க்ரூரமாகப்பேசிய) அப்போது அதிககோபத்தோடு, சகோதரனும் ராக்ஷஸமன்னனுமான ராவணனைப் பார்த்து சில வாக்யங்கள் சொல்லவும் செய்தான்.

25. பரமாபதமாபந்நோமநஸாZசிந்தயஜ்ரிம்

ஸதுநாரவரப்ப்ரீமாந்நாராயணபராயண:

(விஷ்ணுதர்மம் 69.47 கஜேந்த்ரமோக்ஷ ப்ரகரணம்) நாராயண பராயணனும் ஸ்ரீமானும் ஆன அந்த கஜேந்த்ரனே மிக்க உபத்ரவத்தை அடைந்தவனாய் ஸர்வேச்வரனைத் தன்மனத்தால் தியானித்தான்.

26. துல்யஶீலவயோவ்ருத்தாம்துல்யாபிஜநலக்ஷணம்

ராகவோZர்ஹதிவைதேஹீம்தஞ்சேயமஸிதேக்ஷணா

(ராமாயணம் சுந்தரகாண்டம் 16.5. பிராட்டியைப்பார்த்துதிருவடி நினைத்தது) (ஸ்ரீராமபிரானுக்கு) ஒத்த சுபாவத்தையும் வயதையும் செயலையும், குலத்தையும் ராஜலக்ஷணத்தையும் உடையவளான வைதேஹிக்கு ராகவன் தகுந்தவர், கறுத்த கண்களையுடைய இந்த பிராட்டியும் அவருக்கு தகுந்தவள்.

27. நஹிம்ஸ்யாத்ஸர்வாபூதாநி

எந்த ஜந்துவையும் ஹிம்ஸிக்கக்கூடாது.

28. அக்நீஷோமீயம்பஶுமாலபேத

(யஜுர்வேதம் 3ம் அஷ்டகம் 5ம் ப்ரச்னம்) அக்நீஷோமமாகிற யாக ஸம்பந்தமாக நான்கு கால் உடைய ஜந்துவைக் கொல்லவேண்டும்.

29. மந்நிமித்தம்க்ருதம்பாபமபிபுண்யாயகல்பதே

என்நிமித்தமாகச் செய்யப்படுகிற பாவமும் புண்யமேயாகின்றது.

30. தத்ரகோவிந்தமாஸீநம்ப்ரஸந்நாதித்யவர்சஸம்

உபாஸாஞ்சக்ரிரேஸர்வேகுரவோராஜபிஸ்ஸஹ

(மஹாபாரதம் - உத்யோகபர்வம் 90.11) அந்த ஸிம்ஹாஸனத்தில் எழுந்தருளிய (உதயசூரியகாந்தியையுடைய) கோவிந்தனை குருவம் சத்து அரசர்கள் அனைவரும்வெளிநாட்டரசர்களோடு பூஜித்தார்கள்.

31. ஆர்தாவிஷண்ணாஃபரீதாஃசஸீதாஃவோரேஷுசவ்யா
யிஷுவர்தமானா:|ஸங்கீர்த்யநாராயணஶப்தமாத்ரம்விமுக்த
து:கா:ஸுகிநோபவந்தி||

(விஷ்ணுஸஹஸ்ரநாமம்) தீனர்களும் துக்கவான்களும் நெஞ்சுசிதில மானவர்களும் பயந்தவர்களும் பயங்கரமான வியாதிகளால் துன்பப் படுவோரும், நாராயண எனும் சொல்லையே ஸங்கீர்த்தனம்செய்து, துக்கத்தை விடுத்து சுகிகளாகின்றார்கள்.

32. ஏஷநாராயண:ஶ்ரீமாந்க்ஷீரார்ணவநிகேதந:
நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்யஹ்யாகதோமதுராம்புரீம்

(பாரதம் - ஹரிவம்சம் 113.62) லக்ஷ்மியுடன் கூடினவராய் திருப் பாற்கடலை வாசஸ்தானமாகக் கொண்டவராய் இந்த நாராயணன் (ஆகிற க்ருஷ்ணன்) ஆதிசேஷனாகிற கட்டிலைவிட்டு மதுராபுரிக்கு எழுந்தருளினானன்றோ ?

33. நாராயணபரம்ப்ரஹ்மதத்த்வம்நாராயண:பர:
நாராயணபரோஜ்யோதிராத்மாநாராயண:பர:

(தைத்தரீயோபநிஷத் - நாராயணீயம் 11ம் அநுவாகம்) நாராயணனே பரப்ரஹ்மம், நாராயணனே பரதத்வம், நாராயணனே பரஞ் சோதி, நாராயணனே பரமாத்மா.

34. ஸ்நேஹோமேபரமோராஜந்த்வயிநித்யம்ப்ரதிஷ்டித:
பக்திஶ்சநியதாவீரபாவோநாந்யத்ர கச்சதி

(உத்தரராமாயணம் 40.15 ராமபிரானிடம் திருவடி சொன்னது) அரசே ! தேவரீர் விஷயத்தில் எனக்குப் பரமப்ரேமம் நித்யமாகநிலைத் துள்ளது; வீரரே! பக்தியும் எப்போதுமுள்ளது, மனோவ்ருத்தியும் வேறொரிடத்திற்போகிறதில்லை.

35. ஏவம்பஹுவிதாம்சிந்தாம்சிந்தயித்வாமஹாகபி:
ஸம்ஶ்ரவேமதுராம்வாக்யம்வைதேஹ்யாவ்யாஜஹாரஹ

(ராமாயணம் - சுந்தரகாண்டம் 31.1) வாநரச்ரேஷ்டரான ___ வடி, கீழே சொன்னபடியே பலவிதமான ஆலோசனையைச்செய்து

கேட்டமாத்திரத்தில் (சமீபத்தில்) மதுரமானதொரு வாக்யத்தைப் பிராட்டியை நோக்கிச் சொன்னார்.

36. புருஷார்த்தோயமேவைகோ யத்கதா ச்ரவணம் ஹரே:

ஹரிகதையைக் கேட்கிறதாகிய யாதொன்றுண்டோ, இதுவே புருஷார்த்தம் (மோக்ஷத்திற்குவழி.)

37. மச்சித்தா மத்கதப்ராணா: போதயந்த: பரஸ்பரம்
கதயந்தச்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச

(பகவத்கீதை 10.9) அர்ச்சுனற்குக் கண்ணன் அருளியது. என்னிடம் ஆஸக்தமான மனமுடையாரும் எனக்கு ஸ்வாதீனமாக உயிருடையவர்களும், தாங்களனுபவிக்கும் எனது குணங்களை ஒருவருக்கொருவர் தெரிவிக்கிறவர்களும், நாள்தோறும் எனது வரலாறுகளைத் துதிக்கிறவர்களும் ஆகியவர்கள் சொல்வதனாலும்கேட்பதனாலும் ஆநந்திக்கிறார்கள்.

38. ஸுதூரமத்வ ச்ரமதாம் தத்ருஷ்ணா மூர்ச்சிதசேதஸாம்
பாதேயம் புண்டரீகாக்ஷ நாமஸங்கீர்த்தனாம்ருதம்

(காருடபுராணம்) நெடுந்தூரமான வழியில்நடந்து பசியினால் மூர்ச்சிதமான மனதுடையவர்கட்கு புண்டரீகாக்ஷனுடைய நாமஸங்கீர்த்தனமாகிற அம்ருதம் கட்டுச்சோறு (போன்ற தாரகமாகின்றது.)

39. பஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந்மாம் ப்ரபத்யதே
வாஸுதேவஸ்ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:

(கீதை 7.19) அர்சசுனனுக்கு க்ருஷ்ணன் சொன்னது. அநேகமான புண்ணியப் பிறவிகளின் இறுதியில் ஞானம்பிறந்தவன் வாசுதேவனே சர்வமுமாம் என்று என்னைப் பற்றுகின்றான், அத்தகைய மஹாத்மா கிடைப்பது துர்லபம்.

40. அத்யந்தஸுகஸம்வ்ருத்தஸ்ஸுகுமாரஸ்ஸுகோசித:
கதந்த்வபரராத்ரேஷு ஸரயூமவகாஹதே

(ராமாயணம் ஆரண்யகாண்டம் 16.30) ராமபிரானைப் பார்த்து லக்ஷ்மணன் கேட்டது. அத்யந்தசுகஸம்வ்ருத்தி பெற்றவரும் சுகுமார

ரும் சுகத்துக்கு உசிதமானவருமாகிய பரதன் இரவின் பிற்பகுதியிலே, ஸரயூநதியில் எப்படி ஸ்நானம் செய்கிறார் ?

41. அத்ரோபவிஶ்ய ஸாதேநகாபிபுஷ்பைரலங்க்ருதா
அந்யஜந்மநி ஸர்வாத்மா விஷ்ணுராப்யர்சிதோயயா

(விஷ்ணுபுராணம் 5.13.35) கோபிகைகள் தம்முள் சொல்லிக்கொண்டது. முற்பிறவியில் எவளால் ஸர்வாந்தர்யாமியான விஷ்ணு பூஜிக்கப்பெற்றாரோ அவள் அந்த க்ருஷ்ணனால் இங்கு உட்கார்ந்து புஷ்பங்களால் அலங்கரிக்கப்பெற்றாள்.

42. போக்தாரம்யஜ்ஞதபஸாம் ஸர்வலோகமஹேச்வரம்
ஸுஹ்ருதம்ஸர்வபூதாநாம்ஜ்ஞாத்வாமாம்ஶாந்திம்ருச்சதி

(கீதை 5.29) அர்ச்சுனற்குக் கண்ணன் அருளியது. யஜ்ஞதப: பலங்களை அநுபவிப்பவனும், ஸர்வலோகமஹேச்வரனும் எல்லா உயிர்கட்கும் ஸுஹ்ருத்துமானவனுமாகிய என்னை உபாஸித்து சாந்தி அடைகிறான்.

43. ஸர்வலோகஶரண்யாய ராகவாய மஹாத்மநே
நிவேதயத மாம் க்ஷிப்ரம் விபீஷணமுபஸ்திதம்

(ராமாயணம் யுத்தகாண்டம் 17.14 சுக்ரீவன் முதலியோரிடம் விபீஷணன் சொன்னது) சர்வலோக சரண்யனும் மஹாத்மாவுமாகிய ராகவனிடத்தில் விபீஷணன் வந்தானென்று சீக்கிரமாக அடியேனை அறிமுகப்படுத்துங்கள்.

44. அக்ருத்ரிமத்வச்சரணாரவிந்தப்ரேமப்ரகர்ஷாவதிமாத்மவந்தம்
பிதாமஹம்நாதமுநிம்விலோக்யப்ரஸீதமத்வ்ருத்தமசிந்தயித்வா

(ஸ்தோத்ரரத்நம் 65) அரவிந்தம்போன்ற தேவரீர் திருவடிகளில் நிருபாதிகமான ப்ரேமப்ரகர்ஷத்துக்கு எல்லையும் ஆத்ம விவேகியும் எனது பிதாமஹரும் (பாட்டனாரும்) ஆன ஸ்ரீமந்நாதமுனிகளைப் பார்த்து, அடியேனுடைய தவறுகளைச் சிந்திக்காமல் அனுக்ரஹம் செய்யவேண்டும்.

45. அஸந்நேவஸ பவதி அஸத்ப்ரஹ்மேதி வேத சேத்
அஸ்தி ப்ரஹ்மேதி சேத்வேத ஸந்தமேநம் ததோ விதுரிதி

(தைத்ரீயம் - ஆநந்தவல்லி 6.1) ப்ரஹ்மத்தை உள்ளபடி அறிகிறான் என்பது இல்லையானால் அவன் அஸத்தாகவே ஆகிறான். ப்ரஹ்மத்தை அறிகிறான் என்பது உண்டானால், அப்படியறிவதால் இவனை ஸத்தென்று சொல்லுகிறார்கள்.

46. ராஜவித்யா ராஜகுஹ்யம் பவித்ரமிதமுத்தமம்
ப்ரத்யக்ஷாவகமம் தர்ம்யம் ஸுஸுகம் கர்துமவ்யயம்

(கீதை 9 2 - அர்ச்சுனற்குக் கண்ணன் அருளியது) (பக்திரூப உபாஸனையாகிற) இது ராஜவித்தை, மறைத்தற்குரியவற்றுள் மேலாயது, உத்தமமானது, (என்னையடைதற்கு விரோதியான) பாவங்களைப் போக்குவது, ப்ரத்யக்ஷவிஷயமுடையது, மோக்ஷஹேதுவாயது, மிக்க ப்ரீதியினால் செய்யத்தக்கது, நாசமற்றது.

47. ஆஶாஸ்தேऽயம் யஜமானோऽஸௌ ஆயுராஶாஸ்தே
ஸுப்ரஜாஸ்த்வமாஶாஸ்தே

(யஜுர்வேதம்) இந்த யாகத்தின் யஜமானன் பிரார்த்திக்கிறான் (எவைகளையெனில்) தனக்கு ஆயுளைப்பிரார்த்திக்கிறான், நல்லபிள்ளைகளைப் பெறுதற்குப் பிரார்த்திக்கிறான.

48. பிதா மாதா ஸுதோ ப்ராதா தாராஶ்சைவ ஸுஹ்ருதஸ்ததா
ஏகைகபலதா ஹ்யேதே ஸர்வலாபாய கேஶவ:

(அஹிர்புத்ந்யஸம்ஹிதை) தந்தை தாய் மகன் ஸகோதரன் மனைவி நண்பன் ஆகிய இவர் முதலானோரும் ஒவ்வொரு பலனையே தருகிறார்கள். கேசவன் (ஒருவனே) எல்லா பலனையும் தருகிறான.

49. மாதா பிதா ப்ராதா நிவாஸ: ஶரணம் ஸுஹ்ருத் கதிர்நாராயண:

(ஸுபாலோபநிஷத் 6ம் கண்டம்) தாய் தந்தை சகோதரன் இருப்பிடம் ரக்ஷகம் நண்பன் கதி (ப்ராப்யம்) எனும் எல்லாம் நாராயணனே.

50. இதம் து தே குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாம்யநஸூயவே
ஜ்ஞாநம் விஜ்ஞாநஸஹிதம் யஜ்ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸே(அ)சுபாத்

(கீதை 9.1 - அர்ச்சுனற்குக் கண்ணன் சொன்னது) எந்த உபாஸனத்தை அநுஷ்டான பரியந்தமாக அறிந்து, (என்னையடைதற்கு விரோதியான) அசுபத்திலிருந்துவிடப்பெறுகிறாயோ, மிக மறைத்தற்குரியதும் விஞ்ஞானத்தோடுள்ளதுமான இந்தஞானத்தை அசூயையற்ற உனக்கு (நான்) நன்றாகச் சொல்லுவேன்.

51. யத்ராஷ்டாக்ஷரஸம்ஸித்தோ மஹாபாகோ மஹீயதே
நதத்ர ஸஞ்சரிஷ்யந்தி வ்யாதி துர்பிக்ஷதஸ்கரா:

(நாரதீயம் 1.20) எந்த நாட்டில் அஷ்டாக்ஷர ஸம்ஸித்தியுடைய மஹாபாகவதன் பூஜிக்கப்பெறுகிறானோ, அங்கு கொடியநோய் பஞ்சம் களவு முதலியன சஞ்சரிப்பதில்லை.

52. விசக்ரமே ப்ருதிவீமேஷ ஏதாம்

(புருஷஸூக்தம்) இந்தப் பூமியை இவர் (நாராயணன்) தம் திருவடியால் அளந்தார்.

53. நதே ரூபம் நசாகாரோ நாயுதாநி நசாஸ்பதம்
ததாபி புருஷாகாரோ பக்தாநாம் த்வம் ப்ரகாசஸே

(ஜிதந்தேஸ்தோத்ரம் 5) தேவரீருடையரூபம் தேவரீருக்கன்று (ஆச்ரிதர்க்காகவே) தேவரீருடைய திவ்யமங்கள விக்ரஹமும் ஆயுதங்களும் பரமபதமும் தேவரீருக்கன்று; எனினும் பக்தர்களுக்காகவே திவ்யபுருஷாகாரத்தோடு பிரகாசிக்கிறீர்.

54. அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம் த்வாம் வா ஸீதே ஸலக்ஷ்மணாம்| நது
ப்ரதிஜ்ஞாம் ஸம்ச்ருத்ய ப்ராஹ்மணேப்யோ விசேஷத:

(ராமாயணம் ஆரண்யகாண்டம் 10.19) சீதைக்கு இராமபிரான் சொன்னது. சீதையே! நான் ரக்ஷித்தற்குரிய பிராணனையாகிலும், லக்ஷ்மணனையாகிலும், உன்னையாகிலும்விடுவேன்; ஒருவனுக்காகச் செய்த ப்ரதிஜ்ஞையை நழுவவிடமாட்டேன், ப்ராஹ்மஞானிகள்

விஷயத்தில் செய்யப்பட்ட ப்ரதிஜ்ஞையை விசேஷமாகக் கைவிடவேமாட்டேன்.

55. ராமோராமோராம இதிப்ரஜாநாமபவந்கதா:
ராமபூதம்ஜகதபூத்ராமேராஜ்யம்ப்ரஸாஸதி

(ராமாயணம் யுத்தகாண்டம் 131.97) ராமபிரான் ராஜ்யத்தை ரக்ஷிக்கும் அளவில், ஜனங்களிடத்தில் ராமன் ராமன் ராமன்என்று ஸ்தோத்ரங்கள் உண்டாயின, உலகம் ராமஸ்வரூபமாகவே ஆயிற்று.

56. ப்ரஹ்ருஷ்டமுதிதோலோகஸ்துஷ்டபுஷ்டஸ்ஸுதார்மிக:
நிராமயோஹ்யரோகஸ்சதுர்பிக்ஷபயவர்ஜித:

(ராமாயணம் பாலகாண்டம் 1.90) உலகத்தினர் மயிர்சிலிர்க்குமவராயும் ஸந்தோஷம் உடையராயும் பிரீதியுடையராயும் தர்மவான்களாயும் உடம்பிலும் மனத்திலும் ரோகமில்லாதவராயும் பஞ்சத்தினால் விளையும் பயமற்றவராயும் இருந்தனர்.

57. நிகாமேநிகாமேந:பர்ஜந்யோவர்ஷது

(யஜுர்வேதம்) பிரார்த்திக்கிறபோதெல்லாம் பர்ஜந்யன் நமக்கு மழை பெய்விக்கிறான்.

58. வ்ருக்ஷேவ்ருக்ஷேசபஸ்யாமிசீரக்ருஷ்ணாஜிநாம்பரம்
க்ருஹீததநுஷம்ராமம்பாஸஹஸ்தமிவாந்தகம்

(ராமாயணம் ஆரண்யகாண்டம் 39.15) ராவணனிடம் மாரீசன் சொன்னது. மரவுரியும் மான்தோலும் ஆடையாகக்கொண்டு வில்லைக் (கையில்) தரித்த ஸ்ரீராமனை பாசத்தைக் கையிலுடைய யமனைப்போல ஒவ்வொரு மரத்திலும் பார்க்கிறேன்.

59. பாபாநாம்வாஸுபாநாம்வாவதார்ஹாணாம்ப்லவங்கம
கார்யம்கருணமார்யேணநகஸ்சிந்நாபராத்யதி

(ராமாயணம் யுத்தகாண்டம்116.44 திருவடியைநோக்கிப்பிராட்டி சொன்னது) வாநரச்ரேஷ்டனே! (உன் எண்ணப்படி) பாபமுடையராயும் (என் எண்ணப்படி) புண்ணியமுடையராயும் உள்ள, கொல்

லத்தக்கவரான ராக்ஷஸிகள் விஷயத்தில் ஆர்யனான புருஷனால் கருணை செய்யத்தக்கது, ஏனெனில் அபராதம் செய்யாதவர் ஒருவரு மில்லை.

60. உந்திஷ்டத்யாஃப்ரணமந்தி தேவதாஃ நாஶம்திராக்ஷஸாம்
ஸ்யபயாந்திசாரயஃ|ப்ரத்கீர்த்தநாத்ஸோத்ஸஹதுபகேசமமாஸ்த்து
மாங்கல்யவிவ்ருத்தயேஹரிஃ

(விஷ்ணுதர்மம் மாங்கல்யஸ்தவம்) எவரைஸ்தோத்ரம் செய்தால், அசுரர்கள் ஓடிப்போகிறார்களோ தேவதைகள் மிகவும் வணங்கு கிறார்களோ ராக்ஷஸர்கள் நசிக்கிறார்களோ சத்ருக்களும் ஓடுகிறார் களோ, அந்த ஹரியானவர் அற்புதரூபமான அவதாரத்தால் அடி யேனுடைய மங்களத்தை விருத்தி செய்யட்டும்.

61. ஸ்வபுருஷமபிவீக்ஷ்யபாஶஹஸ்தம்வததியமஃகிலதஸ்யகர்ண மூலே|பரிஹரமதுஸூதநப்ரபந்நாந்ப்ரபுரஹமந்யந்ருணாம்நவைஷ்ணவாநாம்

(விஷ்ணுபுராணம் 3 7.14யமன் தனது கிங்கரனிடம்சொல்லியது) கையில் பாசத்தையுடைய தனது கிங்கரனைப் பார்த்து யமன் "மது சூதனனைப் பற்றியவர்களை விட்டுவிடு, இதர நரர்களுக்கே நான் யஜமானன், வைஷ்ணவர்களுக்கு யஜமானன் அல்லன்" என்று அவனுடைய காதின்கீழே (ரஹஸ்யமாகச்) சொன்னான்.

62. வாஹூச்ஹாயாமவஷ்டப்யோயஸ்யலோகோமஹாத்மநஃ
அபக்ருஷ்யாஶ்ரமபதாந்ம்ருகரூபேணராகவம்
ஶக்யோப்நாபரீதாவிதஸ்யஜூக்ஷ்யவிபத்பலம்

(ராமாயணம் சுந்தரகாண்டம் 34.31. பிராட்டியைப்பார்த்து திரு வடி சொன்னது) லோகத்தார் எந்த மஹாத்மாவான (ராமபிரா னுடைய) கைநிழலை ஆச்ரயித்தனரோ, அந்த ராகவனை (மாரீசனா கிய) மானைக்காட்டி, ஆச்ரமத்திலிருந்து வெகுதூரம் இழுத்து எவ னால் தேவரீர் தனிமையில் அபஹரிக்கப்பட்டீரோ அந்த ராவண னுடைய (அவ்வபஹாரணத்திற்குப் பலமான) மரணத்தைப் பார்க் கப்போகிறீர்.

63. ஸகோஷோ தார்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயாநி வ்யதாரயத்
நபஶ்ச ப்ருதிவீம் சைவ துமுலோ வ்யநுநாதயந்

(கீதை 1.19) (த்ருதராஷ்ட்ரனை நோக்கி ஸஞ்ஜயன் கூறியது) அந்த சங்கத்வநியானது, ஆகாசத்தையும் பூமியையும் வியாகுலமாக ஒலித்துக்கொண்டு உமது குமாரர்கள் ஹ்ருதயங்களைப் பிளந்தது.

64. ஆலிகந்தமிவாகாஶமவஷ்டப்ய மஹத்தநு:
பத்மபத்ரவிஶாலாக்ஷம் தீர்கபாஹுமரிந்தமம்

(ராமாயணம் யுத்தகாண்டம் 100.11) பெரியவில்லைப் பிடித்து (ஆகாயத்தைக் கீறுவதுபோல்) (நிற்பவரும்) தாமரை இதழ் போன்ற விசாலமான கண்களையும் நீண்ட கைகளையும் யுடையவரும், சத்ருக்களை சம்ஹரிப்பவருமான ராமபிரானை (ராவணன் கண்டான்)

65. ததோ ராமோ மஹாதேஜா: தநுராதாய வீர்யவாந்
ப்ரவிஶ்ய ராக்ஷஸம் ஸைந்யம் ஶரவர்ஷம் வவர்ஷ ஹ

(ராமாயணம் யுத்தகாண்டம் 94.18) வாநரசேனைகள் தன்னைச் சரணடைந்தபின்பு, மஹாதேஜஸ்வானும் வீர்யவானுமாகிய ராமபிரான் வில்லை எடுத்துக்கொண்டு ராக்ஷஸசேனையில் பிரவேசித்து சரமாரி பெய்தார்.

66. ஶ்ரேயாம்ஸி பஹுவிக்நாநி பவந்தி மஹதாமபி
அஶ்ரேயஸி ப்ரவ்ருத்தாநாம் க்வாபி யாந்தி விநாயகா:

பெரியோர்களுக்கும்கூட நற்காரியங்கள் பலதடைகளையுடையனவாகின்றன; கெட்டகாரியம் செய்யும்போது தடைகள் எங்குபோகின்றனவோ ?

67. ஜாதோஸி தேவதேவேஶ ஶங்கசக்ரகதாதரம்
திவ்யம் ரூபமிதம் தேவ ப்ரஸாதேநோபஸம்ஹர

(விஷ்ணுபுராணம் 5.3.10 ஸ்ரீக்ருஷ்ணனைப்பார்த்து வசுதேவர் சொன்னது) தேவதேவேசனே! (க்ருஷ்ணனாக) அவதரித்தீர், ஸ்வா

மியே, சங்குசக்கரம் கதைகளை தரித்துக்கொண்டுள்ள இந்த திவ்விய ரூபத்தை (என்னிடத்து அனுக்ரஹத்தால்) மறைத்துக்கொள்ளும்.

68. தமஸ꞉பரமோதாதா ஶங்கசக்ரகதாதர꞉

ஸ்ரீவத்ஸவக்ஷா நித்யஸ்ரீரஜய்யஶ்ஶாஶ்வதோ த்ருவ꞉

(ராமாயணம் யுத்தகாண்டம் 114.15 மந்தோதரி சொன்னது) இந்த ப்ரக்ருதிமண்டலத்திற்கு அப்பாற்பட்ட ஸ்ரீவைகுண்டத்திலிருப்பவரும், சங்கு சக்கரம் கதைகளைத் தரித்தவரும், போஷகரும், சிவந்த மறுவை வலதுமார்பில் உடையவரும், நித்தியலக்ஷ்மியோடு கூடினவரும், எவராலும் ஜயிக்கப்படாதவரும், சாஸ்வதமானவரும், விகாரமில்லாதவருமான (க்ஷீராப்திநாதனே ராம ஸ்வரூபியாக அவதரித்தார்)

69. மதுரா நாம நகரீ புண்யா பாபஹரீ ஶுபா

யஸ்யாம்ஜாதோ ஜகந்நாத꞉ ஸாக்ஷாத்விஷ்ணுஸ்ஸநாதந꞉

ஜகந்நாதனும் என்றுமிருப்பவனும் ஆகிய ஸாக்ஷாத் விஷ்ணு எந்த நகரத்தில் (க்ருஷ்ணனாகத்) திருஅவதாரம் செய்தனரோ, அப்பேர்ப்பட்ட புண்யகரமாயும் பாபத்தைப் போக்குவதாயும் சுபமாயும் உள்ள மதுரையென்று சிறப்புடைய நகரம் இது

70, 72. யமுநாஞ்சாதிகம்பீராம்நாநாவர்தஸமாகுலாம்

வஸுதேவோ வஹந்க்ருஷ்ணம்ஜாநுமாத்ரோதகோ யயௌ

(விஷ்ணுபுராணம் 5.3.18 இந்த சுலோகத்தில் முதல்வரி 72ம் பிரமாணமும் 2ம் வரி 70ம் பிரமாணமும் ஆகும்) ஸ்ரீக்ருஷ்ணனை எடுத்துக்கொண்டு வசுதேவர் முழங்காலளவு நீரே உடையவராய், அதிக கம்பீரமாகவும், பல சுழல்களாலும் மீன்களாலும் கலங்கியும் இருக்கிற (ஆழமான) யமுநாநதியைத் தாண்டினார்.

71. ஸந்தஸ்ஸந்தோஷமதிகம்ப்ரஶமம்சண்டமாருதா꞉

ப்ரஸாதம்நிம்நகா யாதாஜாயமாநே ஜநார்தநே

(விஷ்ணுபுராணம் 5.3.4) ஜநார்த்தநன் (க்ருஷ்ணன்) அவதரித்த போது பெரியோர்கள் அதிக ஸந்தோஷத்தையும், சண்டமாருதங்கள் சாந்தியையும், நதிகள் தெளிவையும் அடைந்தன.

73. ததோ Zகிலஜகத்பத்மபோதாயாச்யுதபாநுநா
தேவகீபூர்வஸந்த்யாயாமாவிர்பூதம் மஹாத்மநா

(விஷ்ணுபுராணம் 5.3.2) (தேவகிப்பிராட்டி கர்ப்பஞ்சரித்த) பின்பு அகிலஜகத்தாகிற பத்மத்தை அலர்த்த, தேவகியாகிற கிழக்கு திக்கிலிருந்து மஹாத்மா (ஆகிற க்ருஷ்ணனென்னும்) சூரியன் உதித்தான்.

74. கௌஸல்யா ஸுஷுவே தேநபுத்ரேணாமிததேஜஸா
யதாவரேண தேவாநாமதிதிர்வஜ்ரபாணிநா

(ராமாயணம் பாலகாண்டம் 18.11, அயோத்யாகாண்டம் 1.8) தேவர்கட்குள் சிறந்த வஜ்ரபாணியாகிய இந்திரனால் (தேவர்கள் மாதாவாகிய) அதிதிப்ரகாசித்தமைபோல, அதிகதேஜஸ் உடைய அந்த பிள்ளையான (ராமபிரானால்) கௌஸல்யாதேவி ப்ரகாசித்தாள்.

75. மமசாப்யந்தராத்மாயம் ஶுத்தம் வேத்தி விபீஷணம்
அநுமாநாச்சபாவாச்சஸர்வதஸ்ஸுபரீக்ஷித:

(ராமாயணம் யுத்தகாண்டம் 18.38 சுக்ரீவன் ராமபிரானிடம் சொன்னது) எனது மனதும் இந்த விபீஷணனை பாவசுத்தியுடையவனென்று அறிகிறது. அனுமானங்களாலும் பாவங்களாலும் நன்றாகப் பரீக்ஷிக்கப்பட்டார்.

76. ப்ரஸீதந்து பவந்தோ மே ஹ்ரீரேஷா ஹிமமாதுலா
யதீத்ருசைரஹம் விப்ரைருபஸ்தேயைருபஸ்தித:

(ராமாயணம் ஆரண்யகாண்டம் 10.9-ரிஷிகளிடம் ராமபிரான் சொன்னது) நானே வந்து அடையத்தக்க மஹாத்மாக்களான உங்களால் (நான்) அடையப்பெற்றமையால், எனக்குப் போதேற்படுகிற லஜ்ஜை மிக அதிகமாயுள்ளது, நீங்கள் என் அபராதத்தைப் பொறுக்கவேண்டும்.

77. அர்சிதாஸ்சைவ ஹ்ருஷ்டாஸ்ச பவதா ஸர்வதா வயம்
பத்ப்யாமபிகமாச்சைவ ஸ்நேஹஸந்தர்ஶநேந ச

(ராமாயணம் அயோத்யாகாண்டம் 50.40 குஹனிடம் ராமபிரான் சொன்னது) காலால் நடந்து எங்கள் முன்னே வருவதாலும், எங்க

னிடத்தில் நட்பு வெளிப்பட இருப்பதாலும், நாங்கள் உம்மாலே எல்லாவழியாலும் அர்ச்சிக்கப்பட்டவர்களாயும் சந்துஷ்டியுடைய ராயும் ஆனோம்.

78. த்வத³ங்க்⁴ரிமுத்³தி³ஶ்ய கதா³பி கேநசித் யதா² ததா² வாபி ஸக்ருத் க்ருதோऽஞ்ஜலி꞉। ததை³வ முஷ்ணாத்யஶுபா⁴ந்யஶேஷத꞉ ஶுபா⁴நி புஷ்ணாதி ந ஜாது ஹீயதே

(ஸ்தோத்ர ரத்நம்) தேவரீர் திருவடிகளை உத்தேசித்து எப்போதேனும் எந்தப்ரகாரத்தாலேனும் ஒருதரம் ஒருவனால் செய்யப்படுகிற அஞ்ஜலியானது அப்பொழுதே பாபங்களை வேரோடே போக்குகிறது, புண்ணியங்களை விருத்தி செய்கிறது, ஒருகாலும் (அந்த அஞ்சலி) வீணாகிறதில்லை.

79. கோ³விந்தே³தி யதா³க்ரந்த³த் க்ருஷ்ணா மாம் தூ³ரவாஸிநம் ருணம் ப்ரவ்ருத்³த⁴மிவ மே ஹ்ருத³யாந்நாபஸர்பதி

(பாரதம் உத்யோகபர்வம் 37.39 - ஸஞ்சயனிடத்தில் க்ருஷ்ணன் சொல்லியது) தூரத்தில் வஸிக்கிற என்னைக் குறித்து கோவிந்தா என்று த்ரௌபதி அழுதது (வட்டிக்கு வட்டியாக) விருத்தியடைந்த கடன்போல என் ஹ்ருதயத்தைவிட்டு நீங்கவில்லை.

80. உவாச ஸுமஹாப்ராஜ்ஞ꞉ ஸ்வரேண மஹதா மஹாந் ஸுக்³ரீவம் தாம்ஶ்ச ஸம்ப்ரேக்ஷ்ய ஸர்வாந்வாநரயூத²பாந்

(ராமாயணம் யுத்தகாண்டம் 17.9) மஹாஞானமுடைய மஹாத்மாவான விபீஷணர் சுக்ரீவனையும் மற்றவாநரத்தலைவர்களையும் நன்றாகப் பார்த்து பெரிய ஸ்வரத்தில் வார்த்தை சொன்னார்.

81. தஸ்மாத்³ யத் புருஷோ மநஸாऽபி⁴க³ச்ச²தி। தத்³ வாசா வத³தி। தத் கர்மணா கரோதி॥

(தைத்தரீயோபநிஷத்) ஆகையால் புருஷன் எதை மனதினால் அறிகிறானோ அதை வாக்கால் சொல்லுகிறான, எதை மனதால் தியானிக்கிறானோ அதை காயத்தினால் செய்கிறான்.

82. தத்யதேஷீகதூலமக்னௌ ப்ரோதம் ப்ரதூயேத
ஏவம்ஹாஸ்ய ஸர்வே பாப்மான: ப்ரதூயந்தே

(சாந்தோக்யோபநிஷத் 5.24.3) ஆகையால், நெருப்பில் இடப்பட்ட த்ருணத்தின் பஞ்சு எப்படி கொளுத்தப்படுகின்றதோ, அப்படியே இந்த உபாஸகனுடைய ஸமஸ்தமான புண்யபாபங்களும் கொளுத்தப்படுகின்றன.

83. ஏகஸ்ஸ்வாது ந புஞ்ஜீத

ருசியுள்ள பண்டத்தை ஒருவனாகவே புஜிக்கக்கூடாது.

84. கதே புரோஹிதே ராமஸ்ஸ்நாதோ நியதமாநஸ:
ஸஹபத்ந்யா விஶாலாக்ஷ்யா நாராயணமுபாகமத்

(ராமாயணம் அயோத்யாகாண்டம் 6.1) (வசிஷ்டராகிய) புரோஹிதர் போனபின்பு, ராமபிரான் காயசுத்தியும் மனோநியதியும் உடையவராய் விசாலமானகண்களையுடைய பத்நியோடுகூடநாராயணனை (ஸ்ரீரங்கநாதனை ஸேவிக்க) அடைந்தார்.

85. நூநம் ஸ காலோ ம்ருகரூபதாரீ மாமல்பபாக்யாம் லுலுபே ததாநீம் | யத்ரார்யபுத்ரம் விஸஸர்ஜ மூடா ராமாநுஜம் லக்ஷ்மண
பூர்வஜஞ்ச

(ராமாயணம் சுந்தரகாண்டம் 28.10 பிராட்டியின் வார்த்தை) எப்போது அறிவில்லாத நான் ராமாநுஜனாகிய லக்ஷ்மணனையும், லக்ஷ்மணபூர்வஜனாகிய ராமபிரானையும் விட்டேனோ, அப்போதே மான் வேஷம்தரித்து, பிரசித்தமான யமன் அல்பபாக்யமுடைய என்னை வஞ்சித்தான், இது நிச்சயம்.

86. ததஸ்தம் சிக்ஷிபுஸ்ஸர்வே பாலம் தைதேயகிங்கரா:
பபாத ஸோப்யத: க்ஷிப்தோ ஹ்ருதயேநோத்வஹந் ஹரிம்

(விஷ்ணு புராணம் 1.19.12) (ஹிரண்யகசிபு உத்தரவளித்த) பிறகு அசுரகிங்கரர்கள் யாவரும், பாலனான அந்த ப்ரஹ்லாதனைக் கீழே தள்ளினார்கள். அவன் அப்படி தள்ளப்பட்டவனாகி, ஹ்ருதயத்தில் ஹரியைப் பிடித்துக்கொண்டு விழுந்தான்.

87. ஹரிர்ஹரதி பாபாநி து³ஷ்டசித்தைரபி ஸ்ம்ருத꞉
அநிச்ச²யாபி ஸம்ஸ்ப்ருஷ்டோ த³ஹத்யேவ ஹி பாவக꞉

(ஹர்யஷ்டகம் 1) துஷ்டசித்தமுடையவர்கள் தன்னை ஸ்மரித்தாலும் அவர்கள் பாபங்களை ஹரிபோக்குகிறார்; எப்படியெனில் இச்சையில்லாமல் தன்னைத் தொட்டாலும் கொளுத்துகிற நெருப்பைப்போல (நாஸ்திகர் ஸ்மரித்தாலும் அவர்கள் நாஸ்திகபுத்தியின் காரணமாகிய பாபத்தைப் போக்குகிறார் என்றும் பொருள் கூறலாம்.)

88. யதா³ ஹ்யேவைஷ ஏதஸ்மிந்நத்³ருஶ்யேঽநாத்ம்யேঽநிருக்தேঽ
நிலயநேঽப⁴யம் ப்ரதிஷ்டா²ம் விந்த³தே|
அத² ஸோঽப⁴யங்க³தோ ப⁴வதி||

(தைத்திரியோபநிஷத் ஆநந்தவல்லி 7) கண்முதலியவற்றால் பற்றப்படாதவனும், சரீரமில்லாதவனும் அநிருக்தனும் அநாதாரனும் ஆகிய இந்தப் பரப்ரஹ்மவிஷயத்தில், எப்போது இந்த உபாஸகன் பயமின்மைக்காக இடைவிடாத ஸ்ம்ருதியை அடைகிறானோ, அதன் பிறகு அவன் பயமற்றவன் ஆகிறான்.

89. உத்³கா³யதீநாமரவிந்த³லோசநம் வ்ரஜாங்க³நாநாம் தி³வமஸ்ப்ருஶத்³
த்⁴வநி꞉| த³த்⁴நஶ்ச நிர்மந்த²நஶப்³த³மிஶ்ரிதோ நிரஸ்யதே யேந தி³ஶா
மமங்க³ளம்||

(பாகவதம் தசமஸ்கந்தம் 46.47) திசைகளின் அமங்களங்களைப் போக்கத்தக்கதாக, அரவிந்தலோசனனை (க்ருஷ்ணனை)க் குறித்து, உரக்கப்பாடுகிற கோபிகைகளின் சப்தமானது தயிர் கடைகிற மத்தோசையோடுகூடி ஆகாயத்தில் பரவிற்று.

90. தம் த்³ருஷ்ட்வா ஶத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம் ஸுகா²வஹம்
ப³பூ⁴வ ஹ்ருஷ்டா வைதே³ஹீ ப⁴ர்தாரம் பரிஷஸ்வஜே

(ராமாயணம் ஆரண்யகாண்டம் 30.39) சத்ருக்களை நாசம்செய்தவராய், மஹர்ஷிகளுக்கு சுகமளிப்பவராய், வீரன் என்று சிறப்புற்ற ராமபிரானை வைதேஹியான பிராட்டி பார்த்து ப்ரீதையானாள்; மேலும் தனது பர்த்தாவை நன்றாக ஆலிங்கனம் செய்துகொண்டாள்.

91. தேஷாம்ஸம்பாஷமாணாநாமந்யோந்யம்ஸவிபீஷண:
உத்தரம்தீரமாஸாத்யகஸ்தஏவவ்யதிஷ்டத

(ராமாயணம் யுத்தகாண்டம் 17.6) திருவடி முதலிய அந்த வாநரத் தலைவர்கள் தமக்குள் அந்யோந்யமாகப் பேசும்போது, அந்த விபீஷணன் (சமுத்திரத்தின்) வடகரையை அடைந்து ஆகாயத்திலேயே இருந்தார்.

92. ஸர்வலக்ஷணஸம்பந்நாநாரீணாமுத்தமாவது:
ஸீதாப்யநுகதாராமம்ஶஶிநம்ரோஹிணீயதா

(ராமாயணம் பாலகாண்டம் 1.27) ஸாமுத்ரிகாலக்ஷணங்கள் முழுமையுமுள்ளவளாயும், ஸ்த்ரீகளுக்குள் உத்தமவதூவாயுமுள்ள ஸீதையும், ரோஹிணீநக்ஷத்ரம் சந்த்ரனைப் பின்தொடருவதுபோல் ராமபிரானைப் பின்தொடர்ந்து சென்றாள்.

93. ஸக்ய:பஶ்யதக்ருஷ்ணஸ்யமுகமத்யருணேக்ஷணம்
கஜயுத்தக்ருதாயாஸஸ்வேதாம்புகணிகாசிதம்

(விஷ்ணு புராணம் 5.20.54) ஸகிகளே, (குவலயாபீடமான) யானையோடு சண்டை செய்த சிரமத்தாலுண்டான வேர்வைத்துளிகளையும் மிகச் சிவந்த கண்களையுமுடைய க்ருஷ்ணனுடைய திருமுகத்தைப் பாரீர்.

94. ஸோஹந்தேதேவதேவேஶநார்சநாதௌஸ்துதௌநச
ஸாமர்த்யவாந்க்ருபாமாத்ரமநோவ்ருத்தி:ப்ரஸீதமே

(விஷ்ணுபுராணம் 5.7.70 க்ருஷ்ணனைக் காளியன் ஸ்தோத்ரம் செய்தது) தேவதேவேசனே, தேவரீரை அர்ச்சிப்பது முதலியவற்றில் நான் ஸாமர்த்யவானல்லன், ஸ்தோத்ரம்செய்வதிலும் ஸமர்த்தனல்லன், க்ருபைமாத்ரமாகிய மனோவ்ருத்தியால் என்னை அநுக்ரஹிக்கவேண்டும்.

95. நகரஸ்த்ரீகலாலாபமதுரம்ஶ்ரோத்ரேணபாஸ்யதி
மதுராம்ப்ராப்யகோவிந்த:கதம்கோகுலமேஷ்யதி

(விஷ்ணு புராணம் 5.18.14) கோவிந்தன் மதுராநகரத்தை அடைந்து, அந்நகர ஸ்த்ரீகளுடைய ஸரஸமான இனியமொழிகளா

கிற தேனைக் காதினுல் பானம் செய்யப்போகிருன், (ஆகையால் அவன்) கோகுலத்திற்கு எப்படி வருவான் ?

96. த்வயாநாதவதீநாதஹ்யநாதேவ ஹீக்ஷ்யதே
ஆந்ருசம்ஸ்யம்பரோதர்மஸ்த்வத்தஎவமயாச்ருத:

(ராமாயணம் சுந்தரகாண்டம் 38.41 பிராட்டி கூறியது) நாதனே, நாயகனுகத் தேவரீரைப்பெற பாக்கியம்செய்த அடியேன் அநாதை போல் காணப்படுகிறேனன்றே ? இரக்கம், மேலான தர்மம் என்று, உங்களிடம் என்னுல் கேட்கப்பட்டதல்லவோ ?

97. சரைஸ்துஸங்குலாம்க்ருத்வாலங்காம்பரபலார்தந:
மாம்நயேத்யதிகாகுத்ஸ்தஸ்தத்தஸ்யஸத்ருசம்பவேத்

(ராமாயணம் சுந்தரகாண்டம் 39.300 பிராட்டி திருவடியிடம் சொல்லியது) ககுத்ஸ்தகுலத்தவராகிய ராமபிரான் எதிரிகள் சேனையை அழித்து, பாணங்களால் லங்கையை வியாகுலப்படுத்தி என்னை அழைத்துக்கொண்டு போவாரேல் அது அவருக்குத்தக்க தாகும்.

98. யதோவாசோநிவர்த்தந்தே| அப்ராப்யமநஸாஸஹ| ஆநந்தம்
ப்ரஹ்மணோவித்வாந்| நபிபேதிகுதச்சந||

(தைத்திரியோபநிஷத் ஆநந்தவல்லி 7) எந்த ப்ரஹ்மத்திலிருந்து வாக்குகள் மனதோடுகூட அடையமுடியாமல் திரும்புகின்றனவோ அந்த ப்ரஹ்மத்தின் ஆநந்தத்தை அறிந்தவன் எந்தப் பொருளிடத்தி லும் பயப்படுகிறதில்லை.

99. ஏஷஹ்யேவாநந்தயாதி

(தைத்திரியோபநிஷத் ஆநந்தவல்லி 7.1) இந்த (பரமாத்மாவே) ஸந்தோஷப்படுத்துகிருன்.

100. ஸர்வேவேதாஸ்ஸர்வவேத்யாஸ்ஸசாஸ்த்ராஸ்ஸர்வேயஜ்
ஞாஸ்ஸர்வ இஜ்யாச்சக்ருஷ்ண:| விதுக்ருஷ்ணம்ப்ராஹ்
மணஸ்தத்வதோயேதேஷாம்ராஜந்ஸர்வயஜ்ஞாஸ்ஸமாப்தா:

(மஹாபாரதம்) எல்லா வேதங்களும், சாஸ்த்ரங்களோடுகூடி அறி யத்தக்க எல்லாப் பொருள்களும், எல்லா யாகங்களும், யாகத்தில்

ஆராதிக்கப்பெறும் எல்லா தேவதைகளும் க்ருஷ்ணனே ; எந்த ப்ராஹ்மணர்கள் உள்ளவாறே க்ருஷ்ணனை அறிகிறார்களோ அவர்கட்கு எல்லாயஜ்ஞங்களும் ஸமாப்தமாகின்றன.

101. யஸ்த்வயா ஸஹ ஸஸ்வர்கோ நிரயோயஸ்த்வயாவிநா
இதிஜாநந்பராம்ப்ரீதிம் கச்ச ராம மயா ஸஹ

(ராமாயணம் அயோத்யாகாண்டம் 30.18 ராமபிரானிடம் பிராட்டி சொன்னது) ராமபிரானே, தேவரீருடன் வாசம் என்பது யாதொன்றோ அஃதே எனக்கு ஸ்வர்க்கம், பிரிவே நரகம் என்று, விரஹத்தை ஸஹியாத எனது ப்ரீதியை முன்னமேயறிந்திருக்கிற தேவரீர் வனவாசத்துக்கு என்னோடும் எழுந்தருளவேண்டும்.

102. ஏவமுக்தா ஹநுமதா ஸீதா ஸுரஸுதோபமா
ப்ரஹர்ஷேணாவருத்தா ஸா வ்யாஜஹார ந கிஞ்சந

(ராமாயணம் யுத்தகாண்டம் 116-15) கீழ்ச்சொல்லியபடி, (திருவடியால் வார்த்தை) சொல்லப்பட்டவளாய், சந்திரன்போன்ற முகத்தையுடையவளாய அந்தப் பிராட்டி, எழுந்திருந்து மிக்க ஆநந்தத்தினால் அவருத்தையாய் ஒன்றும் பேசவில்லை.

103. மதுரா மதுராலாபா கிமாஹ மம பாமிநீ
ஸீதா வரரோஹா ஹநுமந்கதயஸ்வமே

(ராமாயணம் சுந்தரகாண்டம் 66.15 திருவடியைநோக்கி ராமபிரான் கூறியது) ஹநுமனே ! அழகும் மதுரச் சொல்லும் உடையளாயும் உத்தமஸ்த்ரீயாயும் என்னைப்பிரிந்தவளாயும் எனக்கிஷ்டமுள்ளவளாயும் இருக்கிற ஸீதை என்ன சொன்னாள் என்பதை எனக்கு ஸங்கோசப்படாது சொல்லவேண்டும்.

104. யேச வேதவிதோ விப்ரா யேசாத்யாத்மவிதோ ஜநா:
தேவதந்தி மஹாத்மாநம் க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்

(பாரதம் ஆரண்யபர்வம் 88.26) எந்த விப்ரர்கள் வேதப்பொருளையறிந்துளரோ, எவர் ஆத்மஞானமுடையரோ, அவர்கள் மஹாத்மாவான க்ருஷ்ணனை ஸநாதநதர்மம் எனச் சொல்லுகிறார்கள்.( ஸநாதநதர்மம் = ஸித்தோபாயம் )

105. ஸவேராவயர்மஜ்ஞரிபூர்ணமபிவத்ஸல
அஹ்நுஜ்ஞாதமிச்ஹாமி ஹமிஷ்யாமியதாகதம்

(ராமாயணம் யுத்தகாண்டம் 50.59) ராமபிரானிடம் பெரிய திருவடி கூறியது. நண்பரே, ராகவனே, தர்மத்தை யறிந்தவரே, ஸத்ருக்கள் விஷயத்திலும் வாத்ஸல்யமுடையவரே, அநுஜ்ஞை பெற்றுக்கொள்ள விரும்புகிறேன், வந்தபடியே போகிறேன்.

106. ஸாப்ரஸ்வலந்தீமதவிஹ்வலாக்ஷீப்ரலம்பகாஞ்சீகுணஹேமஸூத்ரா|ஸலக்ஷணாலக்ஷ்மணஸந்நிதாநம்ஜஹாமதாராநமிதாங்ஹயஷ்டி:||

(ராமாயணம் கிஷ்கிந்தாகாண்டம் 33.37) அதிஸௌந்தர்யமும், ஆயாஸத்தால் தளர்ந்த கால்நடையும், மதுபானத்தால் மதம் செருகிய கண்களும், தொங்குகிற அரைநூல் மாலையும் பொன்சரடும், போக சின்னங்களும் உடையதாரையானவள் வளைந்த கொம்பு போன்ற சரீரத்தோடு லக்ஷ்மணன் சந்நிதியை அடைந்தாள்.

107. அஹம்புநர்தேவகுமாரரூபமலங்க்ருதம்தம்ஸுதமாவ்ராஜந்தம் நந்தாமிபஶ்யந்நபிதர்ஶநேநஹவாமிதூஷ்ட்வாசபுநர்யுவேவ

(ராமாயணம் அயோத்யாகாண்டம் 12.105) நானோ என்றால், தேவகுமாரரூபமும், அலங்காரமும், பிள்ளைத்தன்மையும், கம்பீர நடையழகுமுடைய அந்த ராமனை நெஞ்சினால் நினைத்தாலும் ஆநந்திக்கிறேன்; கண்களாலே பார்த்தாலோ யௌவனம் ப்ரகாசிக்கும் சரீரம் உடையவ[illegible]

108. ராஜாதஶரதோநாம ரதகுஞ்ஜரவாஜிமாந்
புண்யஶீலோமஹாகீர்திருஜுராஸீந்மஹாயஶா:

(ராமாயணம் சுந்தரகாண்டம் 31.2) திருவடிபிராட்டியிடம் கூறியது. தேர்களையும் யானைகளையும் குதிரைகளையும் அதிகமாக உடையவரும், புண்யசீலரும், பெருங்கீர்த்திமானும், ஸமபுத்தியுடையவரும், அதிகயசஸ்ஸுடையவரும் ஆகிய தசரதர் எனும் பெயருடைய ராஜா இருந்தார்.

109. யஜுர்வேதவிநீதஸ்ச வேதவித்பிஸ் ஸுபூஜித꞉
அப்யாஸ்த்ரே ச ஸாஸ்த்ரே ச ஸேநாநயவிஸாரத꞉

(ராமாயணம் அயோத்யாகாண்டம் 1.29) யஜுர்வேதநுட்பங்களை யறிந்தவர்களுக்குள் ராமபிரான் ஸ்ரேஷ்டர், அதிரதவீரர்களால் போற்றத்தக்கவர், சத்ருவைக் குறித்துத்தானே சென்றுபோகுமவர் சேனைகளை (பத்மவ்யூஹம் சக்ரவ்யூஹம் முதலிய வகைகளில்) விபாகம் செய்வதில் மிக்க திறமையுடையவர்.

110. அபிசேத்ஸுதுராசாரோ பஜதேமாமநந்யபாக்
ஸாதுரேவஸமந்தவ்யஸ்ஸம்யக்வ்யவஸிதோஹிஸ꞉

(கீதை 9.30-க்ருஷ்ணன் அருளியது) துராசாரமுடையவனாயினும் என்னை பஜிப்பதையே முக்கிய பிரயோஜனமாகக்கொண்டு,என்னை யடைவானாயின், அவன் நல்லவ்யவஸாயரூபமான ஞானத்தை யடைகிறான், சாதுவாகவே எண்ணற்குரியன்.

111. ஜநகாநாம்குலேகீர்திமாஹரிஷ்யதிமேஸுதா
ஸீதாபர்தாரமாஸாத்ய ராமம்தஸரதாத்மஜம்

(ராமாயணம் பாலகாண்டம் 67.21) ஜநகராஜன் விச்வாமித்ரரிடம் சொன்னது. எனது பெண் ஸீதை, தசராத்மஜரான ராமனைப்பர்த்தாவாக அடைந்து ஜநகவம்சத்திற்கே கீர்த்தியை உண்டாக்கப் போகிறாள்.

112. இந்த ப்ரமாணம் மஹாபாரதம் உத்யோக பர்வத்திலுள்ளது—த்ரௌபதியின் அல்குல் வர்ணனை—தக்க பெரியோர்களிடம் இதன் பொருளைக் கேட்டறிக.

113. ஸோஹ்யநந்யகாரண்யம்தீப்தேநஸ்வேநதேஜஸா
அத்ருஸ்யதததோராமோபாலசந்த்ர இவோதித꞉

(ராமாயணம் ஆரண்யகாண்டம் 38.15) பின்பு, ராமபிரான் ப்ரகாசிக்கிற தனது தேஜசால் தண்டகாரண்யத்தை சோபிப்பிக்குமவராய் வளரிளம் பிறைபோலக் காணப்பெற்றார்.

114. நதேவலோகாக்ரமணம்நாமரத்வமஹம்வ்ரணே
ஐஶ்வர்யம்வாபிலோகாநாம்காமயேநத்வயாவிநா

(ராமாயணம் அயோத்யாகாண்டம் 31.5–ராமபிரானிடம் லக்ஷ்மணன் சொன்னது) தேவரீருடைய கைங்கர்யத்தையொழிய தேவலோக ப்ராப்தியை (பரமபதத்தை) அடியேன் விரும்பவில்லை, அமரத்வத்தை (கைவல்யத்தை) விரும்பவில்லை, மூவுலக ஐச்வர்யத்தையும் விரும்பவில்லை.

115. ராவணஸ்யாநுஜோப்ராதாவிபீஷணஇதிஶ்ருத:
சதுர்பிஸ்ஸஹரக்ஷோபிர்பவந்தம்ஶரணம்கத:

(ராமாயணம் யுத்தகாண்டம் 17.17-ராமபிரானிடம் சுக்ரீவன் விபீஷணன் வரவு கூறியது) ராவணன் தம்பியென்று பிரசித்திபெற்ற விபீஷணர் நான்கு துணைவரோடு கருணைமிக்க தேவரீரைச் சரணம் புகுந்தார்.

116. ததோராமோமஹாதேஜா:ராவணேநக்ருதவ்ரணம்
த்ருஷ்ட்வாப்லவகஶார்தூலம்கோபஸ்யவஶமேயிவாந்

(ராமாயணம் யுத்தகாண்டம் 59.136) (திருவடிமேல் ராவணன் அம்புபோட்ட) பிறகு, மஹாதேஜஸ்ஸோடுள்ள ராமபிரான், ராவணனால் ஏற்பட்ட காயத்தையுடைய திருவடியாகிய வாநரத் தலைவனை பார்த்து கோபப் பரவசராயினர்.

117. த்விஷதந்நம்நபோக்தவ்யம்த்விஷந்தம்நைவபோஜயேத்
பாண்டவாந்த்விஷஸேராஜந்மமப்ராணாஹிபாண்டவா:

(மஹாபாரதம் உத்யோகபர்வம் 74.27–துர்யோதனனிடம் க்ருஷ்ணன் சொன்னது) சத்ருவின் அன்னம் உண்ணற்குரியதல்ல, சத்ருவிற்கும் உணவு தரக்கூடாது, துர்யோதனனே! பாண்டவர்களை, நீ, த்வேஷிக்கிறாய், பாண்டவர்கள் எனக்குப் பிராணன் போன்றவர்களன்றோ ?

118. யத்யதர்மோநபலவாந்ஸ்யாதயம்ராக்ஷஸேஶ்வர:
ஸ்யாதயம்ஸுரலோகஸ்யஸஶக்ரஸ்யாபிரக்ஷிதா

(ராமாயணம் சுந்தரகாண்டம் 49.18 ராவணனைப்பார்த்து திருவடி எண்ணியது) இந்த ராவணனாற் செய்யப்பட்ட அதர்மமானது

பலிக்காமற்போனால், இந்த ராக்ஷஸத் தலைவன் இந்த்ரனோடு கூடிய ஸ்வர்க்கலோகத்துக்கும் ரக்ஷகனாய் விடுவான்.

119. இத்யேவமார்தஸ்ய ரகுப்ரவீரஃ ச்ருத்வாவசோவாலி
யநுஜஸ்யதஸ்ய| ஸஞ்ஜாதபாஷ்பஃபரவீரஹந்தா ராமோ
முஹூர்தம்விமநாபபூவ||

(ராமாயணம் கிஷ்கிந்தாகாண்டம் 24.24) ரகுகுலத்துப் பெருவீரராய், சத்ருவீரர்களை அழிப்பவராகிய ராமபிரான், (வாலிவதத்தின் பிறகு) இம்மாதிரி நலிந்திருக்கிற (வாலியின் தம்பியான) சுக்ரீவன் வார்த்தைகேட்டுக் கண்ணீர் உகுத்து ஒரு முகூர்த்தநேரம் மனதில் தளர்ச்சியுற்றார்.

120. இதஉபரிம்ருதஸஞ்ஜீவநம்ராமவ்ருத்தாந்தம்

(ஸஹஸ்ரநாமபாஷ்யம் 391ம் திருநாம ஆரம்பம்) இறந்தோர்கட்கு உயிர் கொடுக்கத்தக்க சஞ்சீவியாகிய ராமவிருத்தாந்தத்தை, இந்தத் திருநாமமுதல் ஆரம்பிக்கிறோம்.

121. அதந்த்ரிதசமூபதிப்ரஹிதஹஸ்தமஸ்வீக்ருதப்ரணீதமணிபாதுகம்கிமிதிசாகுலாந்தஃபுரம்| அவாஹநபரிஷ்க்ரியம்பதகராஜ|
மாரோஹதஃகரிப்ரவரப்ரும்ஹிதேபகவதஸ்த்வராயைநமஃ

(ஸ்ரீரங்கராஜ ஸ்தவம்—உத்தரசதகம் 57 கஜேந்த்ரன் மெல்லிய குரலைக் கேட்டபோது, விஷ்வக்ஸேனர் கொடுக்கும் கைலாகினை வேண்டாமலும், அழுக்கின்றி சுத்திசெய்யப்பெற்ற ரத்நமய பாதுகைகளைத் தரிக்காமலும், "ஈதென்ன"! என்று பெரியபிராட்டியார் முதலான அந்தப்புரப் பெண்கள் ஆகுலமெய்தவும் வாஹந ஆரோஹண காலத்திற்குத் தக்க அலங்காரம் அற்ற பக்ஷிராஜன் மேலேறுகிற பகவானுடைய த்வரையின் பொருட்டு நமஸ்காரம்.

122. யதாக்ஷுப்தஃசமாதங்கஃஸஸஸஹிதோவநே
ததாதிரக்ஷவக்ஷ்ராமஸ்த்வம்நீசஶஶவத்ஸ்ம்ருதஃ

(ராமாயணம் சுந்தரகாண்டம் 22.16-ராவணனைப்பார்த்து பிராட்டி சொன்னது) வனத்தில் மதத்தோடுள்ள யானையும் முயலும்

சண்டைசெய்ய விரும்பி எப்படி சேர்ந்துவருமோ, அப்படியே ராம பிரான் யானையைப்போலும் நீ அல்ப முயலைப்போலும் எண்ணப் படுகிறீர்கள்.

123. விபீஷணஸ்துதர்மாத்மாநதுராக்ஷஸசேஷ்டித:

(ராமாயணம் ஆரண்யகாண்டம் 17.24 ராமபிரானிடம் சூர்ப்ப ணகை சொன்னது) ராக்ஷஸகுலத்தினராயினும் ராக்ஷஸசேஷ்டித மில்லாத தர்மாத்மாவான விபீஷணரும் (என்னுடன் பிறந்தவரே)

124. ஶத்ரோ:ப்ரக்யாதவீர்யஸ்யரஞ்ஜநீயஸ்யவிக்ரமை:
பஶ்யதோயுத்தலுப்தோஹம்க்ருத:காபுருஷஸ்த்வயா

(ராமாயணம் யுத்தகாண்டம்106.6ராவணனன் ஸாரதிக்குச் சொன் னது) ப்ரக்யாதியான வீர்யமுடையவனும், பராக்ரமங்களைக் காணும் அனைவராலும் கொண்டாடத்தக்கவனுமான சத்ருவான, ராமன் பார்த்துக்கொண்டிருக்கும்போதே, சண்டையில் ஆசை யுடைய நான் எல்லோராலும் நிந்தித்தற்குரியனாக உன்னால் ஆக்கப் பட்டேன்.

125. யோந்யதாஸந்தமாத்மாநமந்யதாப்ரதிபத்யதே
கிம்தேநநக்ருதம்பாபம்சோரேணாத்மாபஹாரிணா

(பாரதம் ஆதிபர்வம் 74.27)பரமாத்மாவிற்கு சேஷபூதனான ஜீவாத் மாவை, எவன் ஒருவன் ஸ்வதந்த்ரமாக நினைக்கிறானோ, ஆத்மா பஹாரமான, பெரிய திருட்டைச் செய்கிற அந்த கள்ளனாலே என்ன பாபம்தான் செய்யப்படவில்லை.

126. அதாதஸ்ஸாமயாசாரிகாந்தர்மாந்வ்யாக்யாஸ்யாமோ
தர்மஜ்ஞஸமய:ப்ரமாணம்வேதாஶ்ச

(ஆபஸ்தம்ப தர்ம ஸூத்ரம்) பிறகு, அவ்வச்சமயாசாரவித்தமான தர்மங்களைச் சொல்லப்போகிறோம் - தர்மங்களை உள்ளபடியறிந்த பெரியோர்களுடைய ஆசாரம் (அனுஷ்டானத்துக்கு முக்ய) ப்ர மாணம். (இவர்கள் திருவுள்ளத்தை அநுசரித்த) வேதங்களும் பிர மாணம்.

127. நாந்ருக்வேதவிநீதஸ்யநாயஜுர்வேததாரிண:
நாஸாமவேதவிதுஷஶ்ஶக்யமேவம்ப்ரபாஷிதும்

(ராமாயணம் கிஷ்கிந்தாகாண்டம் 3.28—லக்ஷ்மணனைப் பார்த்து ராமபிரான் திருவடி விஷயமாகச் சொன்னது) ரிக்வேதத்தில் சிக்ஷையில்லாதவனுக்கும் யஜுர்வேதத்தில் தாரணையிலாதவனுக்கும், ஸாமவேதத்தை உள்ளவாறு அறியாதவனுக்கும் இப்படி வார்த்தை சொல்வது சாத்தியமல்ல.

128. நூநம்வ்யாகரணம்க்ருத்ஸ்நமநேநபஹுதாஶ்ருதம்
பஹுவ்யாஹரதாZநேநநகிஞ்சிதபஶப்திதம்

(ராமாயணம் கிஷ்கிந்தாகாண்டம் 3.29—லக்ஷ்மணனைப் பார்த்து ராமபிரான் திருவடி விஷயமாகச் சொன்னது) இந்த ஹநுமானால் பலவ்யாகரணங்கள் பலதடவை (ஆசார்யனிடத்தில்) அத்யயனம் செய்யப்பட்டன, இது நிச்சயம், ஆகையால் அநேக விஷயங்களைச் சொல்லுகிற இவ்வநுமானால் ஒரு சிறிதும் அபசப்தம் சொல்லப்படவில்லை.

129. கைங்கர்யநித்யநிரதைர்பவதேகபோகை ர்நித்யைரநுக்ஷண
நவீநரஸார்த்ரபாவை:|நித்யாபிவாம்சிதபரஸ்பரநீசபாவை
வைர்மதைவதை:பரிஜநைஸ்தவஸங்கஸீய||

(வைகுண்டஸ்தவம் 75) தேவரீரிடம் நித்ய கைங்கர்யம் செய்பவர்களாயும், எப்போதும் அதிசயத்தை விளைவிப்பதையே புருஷார்த்தமாகக் கருதுபவர்களாயும், நித்யர்களாயும்,க்ஷணம்தோறும் ஏற்படும் நவீன ரஸாநுபவமுடையவர்களாயும், எப்போதும் அந்யோந்ய சேஷத்வத்தை விரும்புபவர்களாயும், என்னால் பூஜிக்கத்தக்கவர்களாயுமுள்ள, தேவரீருடைய பரிஜனங்களாகிய சேனைமுதலியார் தொடக்கமானவர்களோடு சேர்ந்தவனாகக் கடவேன்.

130. நமந்த்ராயாநதுமாதுரஸ்யாதோஷோநாஜ்ஞோநசராகவ
வஸ்ய|மத்பாபமேவாத்ரநிமித்தமாஸீத்நப்ரவேஶோரவநங்
தநஸ்ய||

(ராமாயணம்) ராமபிரான் காட்டுக்குச்சென்ற விஷயத்தில், (கூனியாகிய) மந்தரையினுடைய கலகதோஷம்,இளையதாயான கைகேயி

யின் தோஷம், தசரதசக்ரவர்த்தியின் தோஷம், ராமபிரான் சம்ப ந்த்த தோஷம் ஆகிய இந்த தோஷங்களெல்லாம் காரணங்களல்ல, எனது பாபமே அதற்குக் காரணமாயிற்று.

131. பூமௌஸ்திதஸ்யராமஸ்யரதஸ்தஸ்யசரக்ஷஸ꞉
நஸமம்யுத்தமித்யாஹுர்தேவகந்தர்வதானவா꞉

(ராமாயணம் யுத்தகாண்டம் 103.6) பூமியில் நிற்கிற ராமபிரானுக்கும் ரதத்தின்மேலுள்ள ராவணனுக்கும் யுத்தம் ஸமமல்லவென தேவர்கள் கந்தர்வர்கள் தானவர்கள் சொன்னார்கள்.

132. பாபிஷ்ட꞉க்ஷத்ரபந்துஶ்சபுண்டரீகஶ்சபுண்யக்ருத்
ஆசார்யவத்தயாமுக்தௌதஸ்மாதாசார்யவான்பவேத்

பாபிஷ்டனான க்ஷத்ரபந்து என்பவனும், புண்யம் செய்த புண்டரீகன் என்பவனும் ஆசார்யஸம்பந்தத்தால் முக்திபெற்றார்கள்; ஆகையால் ஆசார்ய சம்பந்தமுடையனாகவேண்டும்.

133. நிவாஸஶய்யாஸநபாதுகாம்ஶுகோபதாநவர்ஷாதபவா
ரணாதிபி꞉ஶரீரபேதைஸ்தவஶேஷதாம்கதைர்யதோசி
தம்ஶேஷஇதீரிதேஜனை꞉||

(ஸ்தோத்ரரத்நம்—40) தேவரீர் திருவுள்ளத்தின்படி ஶேஷத்தன்மை எய்தி வாஸஸ்தானம், சயனம், ஆசனம், பாதுகை, ஆடை, தலையணை, குடை இவை முதலான சரீர பேதங்களோடிருக்கையால், பெரியோர் ஆதிஶேஷன் என்று சொல்லுகிற (திருவநந்தாழ்வானில் எம்பெருமான் எழுந்தருளி இருக்கிறார்)

134. பயம்பயாநாமபஹாரிணிஸ்திதேமநஸ்யநந்தேமமகுத்ரதி
ஷ்டதி|யஸ்மின்ஸ்ம்ருதேஜன்மஜராந்தகாதிபயாநிஸர்வாண்ய
பயாந்திதாத||

(விஷ்ணுபுராணம் 1.17.36 ப்ரஹ்லாதன் ஹிரண்ய கசிபுவிடம் சொன்னது) தந்தையே! எவரை நினைக்குமளவில் பிறப்பு மூப்பு இறப்பு முதலியவற்றால் வரும் பயங்களெல்லாம்போகின்றனவோ, பயங்களை அபஹரிப்பவரும் அளவுகடந்தவருமாகிய அத்தகைய

நாராயணன் ஹ்ருதயத்தில் ஸ்திரமாயிருக்கும்போது எனக்குப் பயமென்பது எங்குளது ?

135. நியதாத்மா மஹாவீர்யோ த்யுதிமாந் த்ருதிமாந் வசீ
புத்திமாந் நீதிமாந் வாக்மீ ஸ்ரீமாந் சத்ருநிபர்ஹண:

(ராமாயணம்-பாலகாண்டம் 1.9) ராமபிரான் விகாரமற்றவனும் மஹாவீர்யமுடையவனும், ஞானஸ்வரூபியாயும், ஆநந்தஸ்வரூபியாயும், ஸர்வஸ்வாமியாயும், புத்திமானும், நீதிமானும், வேதங்களை உபகரித்தவனும், உபயவிபூதி ஐச்வர்யவானும் சத்ருக்களை அழிப்பவனும் பிரஸித்திபெற்றவன்.

136. த்யௌ: பதேத் ப்ருத்வீ சீர்யேத் ஹிமவாந் சகலீபவேத்|
சுஷ்யேத் தோயநிதி: க்ருஷ்ணே ந மே மோகம் வசோ பவேத்||

(பாரதம்—த்ரௌபதியிடம் கண்ணன் அருளிச்சொன்னது) சுவர்க்கம் விழுந்தாலும் விழும், பூமி சிதறியும் போகும், இமயமலை நொறுங்கியும் போகலாம், கடல் வற்றிப்போகலாம், ஆனால் த்ரௌபதியே ! எனது சொல் வீணாகமாட்டாது.

137. வாயஸேந தஸ்தேந பலவத் க்லிச்யமாநயா
ஸமயா போதித: ஸ்ரீமாந் ஸுகஸுப்த: பரந்தப:

(ராமாயணம் சுந்தரகாண்டம் 38.24 பிராட்டி திருவடியிடம் சொன்னது) அந்தக் காகாஸுரனால் பலாத்காரமாக உபத்ரவிக்கப்பட்ட என்னாலே, சுகமாக நித்ரை செய்கிறவரும், சத்ருக்கள் நடுங்கும்படிச் செய்பவரும், ஸ்ரீமானுமாகிய அந்த ராமபிரான், பிறகு எழுப்பப் பெற்றார்.

138. வத்யதாமேஷ தீவ்ரேண தண்டேந ஸசிவை: ஸஹ
ராவணஸ்ய ந்ருசம்ஸஸ்ய ப்ராதா ஹ்யேஷ விபீஷண:

(ராமாயணம் யுத்தகாண்டம் 17.27 ராமபிரானிடம் சுக்ரீவன் சொன்னது) இந்த விபீஷணன், எக்காரணத்தால் (இரக்கமற்ற) ராவணனுக்கு சகோதரன் ஆனானோ, அக்காரணத்தால் இவன் மந்திரிகளோடுகூட தீவிரமான தண்டனையால் வதைக்கத்தக்கவன்.

139. தஸ்மாத்க்ஷிப்ரம்ஸஹாஸ்மாபிஸ்துல்யோ பவது ராகவ
விபீஷணோ மஹாப்ராஜ்ஞஸ் ஸகித்வம்சாப்யுபைது நஃ

(ராமாயணம் யுத்தகாண்டம் 18.38 சுக்ரீவன் ராமபிரானிடம் சொன்னது) ஆகையால் ராகவனே! மஹாப்ராஜ்ஞனாகிய விபீஷணன் அதிசீக்கிரமாக நம்மோடு சமானராகட்டும், நமது நேயத்தையும் அடையட்டும்.

140. தாஸாமாவிரபூச்சௌரிஸ் ஸ்மயமாநமுகாம்புஜஃ
பீதாம்பரதரஸ் ஸ்ரக்வீ ஸாக்ஷாந்மந்மதமந்மதஃ

(பாகவதம் 10.31.2) அதிக துக்கமுடையரான கோபிகைகள் நடுவில், க்ருஷ்ணன் புன்முறுவலோடுகூடின தாமரை மலர்போன்ற முகத்தை யுடையனும், பீதாம்பரம் அணிந்தவனும், மாலை யணிந்தவனும், மன்மதனுக்கும் மன்மதனாகிற பேரழகுடையனும் ஸாக்ஷாத்காரமாய்த் தோன்றினன்.

141. அநித்ரஸ் ஸததம்ராமஸ் ஸுப்தோபிசநரோத்தமஃ
ஸீதேதிமதுராம்வாணீம்வ்யாஹரந்ப்ரதிபுத்யதே

(ராமாயணம் சுந்தரகாண்டம் 36.44 பிராட்டியை நோக்கித் திருவடி சொன்னது) உத்தமபுருஷனும் எப்போதும் நித்திரையற்றவருமாகிய ராமபிரான், ஒருக்கால் தூங்க நேரிட்டாலும், ஸீதா எனும் மதுரமொழி சொல்லிக்கொண்டே விழித்துக்கொள்வார்.

142. ஸங்கேதைஸ்ஸமயாரைஃப்ரேமகர்ப்பைரகர்விதைஃ
ராமேணாச்வாஸிதா கோப்யோஹரிணாஹ்ருதசேதஸஃ

(விஷ்ணுபுராணம் 5.24.20) க்ருஷ்ணனால் வசீகரிக்கப்பெற்ற மனமுடைய கோபிகைகள் மதுரமொழியாயும், ப்ரேமத்தை உள்ளடக்கியதாயும், கர்வம் அற்றதாயும், உள்ள க்ருஷ்ண சமாசாரங்களினால், பலராமனால் தேற்றப்பட்டார்கள்.

143. சௌர்யம்தேஜோத்ருதிர்தாக்ஷ்யம்யுத்தேசாப்யபலாயநம்
தாநமீச்வரபாவச்சக்ஷாத்ரம்கர்மஸ்வபாவஜம்

(கீதை 18.43 அர்ச்சுனற்குக் கண்ணன் கூறியது) சௌர்யம், தேஜஸ், எடுத்த கார்யத்தை முடிக்கிற சக்தி, கார்யமுடிவில் சாமர்த்

யம், சண்டையில் முதுகுகாட்டாமை, தானம், யஜமானத்வம் எனு மிவை, ஸ்வபாவமாக ஏற்பட்ட க்ஷத்ரிய வியாபாரங்கள்.

144. ஸ்நுஷா தசரதஸ்யாஹம் சத்ருஸைந்யப்ரதாபிந:|
ஃபுஹிதா ஜநகஸ்யாஹம் வைதேஹஸ்ய மஹாத்மந:
ஸீதேதி நாம நாம்நாஹம் பார்யா ராமஸ்ய தீமத:||

(ராமாயணம் சுந்தரகாண்டம் 33 16 திருவடியிடம் பிராட்டி கூறியது) சத்ருக்களின் சேனைகளை ஹிம்ஸிக்கும் தசரதசக்ரவர்த்தியின் மருமகள் நான், மஹிமையுள்ள விதேஹதேச மன்னனாகிய ஜநகருடைய பெண், ஸீதையெனும் பெயருடையேன், புத்திமானான ராமபிரானுடைய மனைவி.

145. ஸர்வகர்மா ஸர்வகாம: ஸர்வகந்த: ஸர்வரஸ: ஸர்வமிதம் அப்யாத்தோ அவாக்ய நாதர:

(சாந்தோக்யோபநிஷத் 3.14.2) (பரமாத்மாவானவன்) எல்லா கிரியைகளையும் போகப் பொருள்களையும் கந்தங்களையும் ரஸங்களையும் கல்யாண குணங்களையும் ஸ்வீகரித்தவன், வார்த்தை சொல்லாதவன், பூர்ணனாகையாலே உதாஸீனன்.

146. ஏவமேவைஷ ஸம்ப்ரஸாதோ அஸ்மாச்சரீராத் ஸமுத்தாய பரம் ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேந ரூபேணாபி நிஷ்பத்யதே|ஸ உத்தம: புருஷ: ஸ தத்ர பர்யேதி|ஜக்ஷத்க்ரீடந்ரமமாண: ஸ்த்ரீபிர் வா யாநைர்வா ஜ்ஞாதிபிர்வா நோபஜநம் ஸ்மரந்நிதம் சரீரம்||

(சாந்தோக்யோபநிஷத் 8.12.3) எந்த ஜீவாத்மா இந்த சரீரத்தை விட்டுப் பரமாத்மாவைக்கூடி (ஸ்வரூபாவிர்ப்பாவத்தைப் பெறுகிறானோ) அவன் உத்தமபுருஷன், அங்கு சிரித்தும் விளையாடியும் ஸ்திரீகள் வாகனங்கள் ஞாதிகளோடு ஸந்தோஷித்து பந்துஜனங்களருகே (இறந்த இச்சரீரத்தை நினையாமல்) நான்கு பக்கமும் ஸஞ்சரிக்கிறான்.

147. அஸ்யேசாநா ஜகதோ விஷ்ணுபத்நீ

(நீளாஸூக்தம்) விஷ்ணுபத்னி (பெரியபிராட்டியார்) இந்த லோகத்தவரை ஆளத்தக்கவள்.

148. ததஸ்ஸா ஹ்ரீமதீ பாலா பர்துர்விஜயஹர்ஷிதா
அவோசத்யதி தத்தத்ஸ்யாம் பவேயம் சரணம் ஹி வ:

ராமாயணம் சுந்தரகாண்டம் 58.89-பிராட்டி த்ரிஜடைக்குச் சொன்னது. (த்ரிஜடைதான் கண்ட ஸ்வப்னத்தைச் சொன்ன)பிறகு, மடந்தைப்ராயமுள்ள அந்தப் பிராட்டி லஜ்ஜையோடும் (ஸ்வப்னம் காட்டிய) ஜயத்தால் விளைந்த சந்தோஷத்தையுடையவளாய்க் கொண்டு அந்த ஸ்வப்னம் உண்மையாகிவிட்டால் "உங்களுக்கு நான் புருஷகாரமாவேன்" என்றாள்.

149. தயா ஸ ராஜர்ஷிஸுதோऽபிராமயா ஸமேயிவாநுத்தமராஜகந்யயா | அதீவ ராம: ஶுஶுபேऽதிகாமயா விபு: ஶ்ரியா விஷ்ணுரிவாமரேஶ்வர: ||

(ராமாயணம் பாலகாண்டம் 77.29) தமது விளையாடல்களால் எல்லோரையும் சந்தோஷிப்பிக்கும் சக்ரவர்த்தித் திருமகனான அந்த ராமபிரான், பேரழகும் பெருங்காதலும் உள்ள உத்தம ராஜகன்யையான பிராட்டியோடே கூடினவராய், விபுவும் அமரர்களதிபதியுமான மஹாவிஷ்ணு மஹாலக்ஷ்மியோடு விளங்குமாபோல, மிகவும் ப்ரகாசித்தார்.

150. தஸ்மிந் ப்ரஹ்மாऽஸ்தே தமேவம்வித்பாதேநைவாக்ர ஆரோஹதி தம் ப்ரஹ்மா ப்ருச்சதி கோऽஸீதி

(கௌஷீதகீப்ராஹ்மணோபநிஷத் 1.5 பர்யங்கவித்யை) அந்தத் திருவநந்தாழ்வான்மேலே ஸ்ரீமந்நாராயணன் இருக்கிறார்; அவரை உபாஸித்தவன், அவ்வாழ்வான்மேல் தனது காலை வைத்தேறுகிறான்; அவனைப்பார்த்து "நீ யார்?" என்று பரமாத்மா கேட்கிறார்.

151. அத்யந்தபக்தியுக்தாநாம் நைவ ஶாஸ்த்ரம் நைவ க்ரம:

அத்யந்த பக்தியுடையவர்கட்கு சாஸ்த்ரமுமில்லை கிரமமுமில்லை.

152. பரிஶ்ரமாத்ப்ரஸுப்தா ச ராகவாங்கேऽப்யஹம் சிரம் பர்யாயேண ப்ரஸுப்தஶ்ச மமாங்கே பரதாக்ரஜ:

(ராமாயணம் சுந்தரகாண்டம் 38.21-பிராட்டி திருவடிக்குச் சொன்னது) நானும் ஸ்ரீராகவனுடைய மடியில் ஆயாஸத்தினால் நெடும்

பொழுது தூங்கினேன், பரதன் தமையனான அவரும் எனது மடி யில் கிரமமாக நித்திரைசெய்தார்.

153, 154. அவிகாராய ஶுத்தாய நித்யாய பரமாத்மநே
ஸதைக ரூபரூபாய விஷ்ணவே ஸர்வஜிஷ்ணவே

(விஷ்ணுபுராணம் 1.2.1) அவிகாரனும் சுத்தனும் நித்யனும் பரமாத்மாவாயும் எப்போதும் ஏகரூபனும் எல்லாவற்றையும் ஜயிக்கும் மிடுக்குடையனுமாயும் இருக்கிற மஹாவிஷ்ணுவை நமஸ்கரிக்கிறேன்.

155. ஆர்த்தோ வா யதி வா த்ருப்த: பரேஷாம் ஶரணம் கத:
அரி: ப்ராணாந் பரித்யஜ்ய ரக்ஷிதவ்ய: க்ருதாத்மநா

(ராமாயணம் யுத்தகாண்டம் 18,28) ராமபிரான் சுக்ரீவனுக்குச் சொன்னது. ஆர்த்தனாகவோ தீனனாகவோ இருந்தாலும் சத்ருக்கள் மத்தியில் சரணாகதி செய்த ஸத்ருவானவன், க்ருதாத்மாவினால் தன் பிராணனைக் கொடுத்து ரக்ஷிக்கத்தகுந்தவனாகிறான்.

156. ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ
அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா ஶுச:

(கீதை 18.66 அர்ச்சுனற்குக் கண்ணன் அருளிச்செய்தது- இது க்ருஷ்ணசரமச்லோகம் என்று ப்ரஸித்திபெற்றது) எல்லா தர்மங்களையும் (விடவேண்டிய முறைப்படி) விட்டு என்னை ஒருவனையே உபாயமாகப்பற்று; உன்னை எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுபட்டவனாக நான் செய்கிறேன் நீ சோகிக்காதே.

157. சிரம் ஜீவதி வைதேஹீ யதி மாஸம் த்ரியதி
ந ஜீவேயம் க்ஷணமபி விநா தாமஸிதேக்ஷணாம்

(ராமாயணம் சுந்தரகாண்டம் 67.10 ராமபிரான் லக்ஷ்மணனிடம் சொன்னது) வைதேஹி (பிராட்டி) ஒருமாதம் உயிரைத்தாங்கியிருப்பளானால், நீண்டகாலம் ஜீவித்திருப்பாள். கரிய கண்களையுடைய அவளைவிட்டு ஒருக்ஷணம்கூட நான் ஜீவித்திரேன்.

158. கோபீஜநவல்லப:

கோபிகைகட்கு வல்லபனாயிருப்பவன்.

159. கௌஸல்யாலோகஹர்தாரம்ஸுஷுவேயம்மநஸ்விநீ
தம்மமார்யேஸுவம்ப்ருச்சஸஶிரஸாசாஸிவாஜய

(ராமாயணம் சுந்தரகாண்டம் 38.56 பிராட்டி திருவடியிடம் கூறியது) நன்மனமுடைய கௌஸல்யாதேவி லோகரக்ஷகனுகிய எவரைப் பெற்றூரோ, அவரை நான் சௌக்யமா என்று விசாரித்ததாகச் சொல்லி, தலைகுனிந்து வணங்கினதாகவும் வணக்கம் செய்யும்.

160. அஹத்வாராவணம்ஸங்க்யேஸபுத்ரஜநபாந்தவம்
அயோத்யாந்நப்ரவேக்ஷ்யாமித்ரிஸிஸ்தைர்ப்ராத்ருஸிஶுபே

(ராமாயணம் யுத்தகாண்டம் 19.21) ராவணனை பிள்ளைகள் பந்து ஜனங்களோடு சண்டையில் கொல்லாது அயோத்யா நகருக்குள் நுழைவதில்லையென்று, பிரசித்தியுடைய எனது தம்பிகள் மூவர் பேராலும் சபதம் செய்கிறேன்,

161. தேவாஸ்ஸ்வர்கம்பரித்யஜ்யதத்ராஸங்முநிஸத்தம
விசேருரவநௌஸர்வேஸிஹ்ராண்யமாநுஷீம்தநும்

(விஷ்ணுபுராணம் 1.17.5) முனிசிரேஷ்டரான (மைத்ரேயரே) எல்லாதேவர்களும் ஹிரண்யகசிபுவின் பயத்தினல் ஸ்வர்க்கத்தை விட்டு இந்த பூமியில் மனுஷ்யர்களாகச் சஞ்சரித்தார்கள்.

162. ஏஹிபஸ்யஶரீராணிமுநீநாம்பாவிதாத்மநாம்
ஹதாநாம்ராக்ஷஸைர்கோரைர்பஹூநாம்பஹுதாவநே

(ராமாயணம் ஆரண்யகாண்டம் 6-16 ரிஷிகள் ராமனிடம் சொன்னது) இந்த வனத்தில் எழுந்தருளி, கோரராக்ஷஸர்களால், பலவிதமாக ஹதம் செய்யப்பட்டும் தியானம் செய்துகொண்டுமிருக்கிற பல முனிகளின் சரீரங்களைப் பார்க்கவேணும்.

163. ப்ரியாதுஸீதாராமஸ்யதாராப்பித்ருக்ருதாஇதி
குணாத்ரூபகுணாச்சாபிப்ரீதிர்பூயோஸ்யவர்தத

(ராமாயணம் பாலகாண்டம் 77.26) தமப்பனூரால் (தசரதனுல்) விவாகம் செய்விக்கபெற்ற பத்தினியாகையால் சீதை ராமபிரானுக்குப் பிரியையானுள். ஆத்மகுணம் அழகு முதலியவற்றுல் ப்ரீதி அதிகமாக சீதையினிடம் வளர்ந்தது.

164. பதிம்விஶ்வஸ்யாத்மேஶ்வரம்ஶாஶ்வதம்ஶிவமச்யுதம்

(தைத்தரீயோபநிஷத் நாராயணீயம் 6.1.11) பரமாத்மா, லோகங் கட்கு ஸ்வாமியாயும், சுதந்திரனுயும், சாஸ்வதமாயும் மங்களம் செய்பவனுயும் ஆச்ரிதர்களைக் கைவிடாதவனுயும் உள்ளான்.

165. யஸ்யாமதம்தஸ்யமதம்மதம்யஸ்யநவேதஸ:

(கேநோபநிஷத் 2.3) எவனுல் பரமாத்மா, பரிச்சின்னனுக அறியப் படவில்லையோ (அபரிச்சின்னனுக அறியப்பட்டானே) அவன் பர மாத்மாவை உள்ளபடி அறிந்தவன்; எவனுல் பரிச்சின்னன் என்று அறியப்படுகிறுனே அவன் உள்ளபடி அறிந்தவனல்லன்.

166. யுவாஸுவாஸா:பரிவீதஆகாத்ஸஉஶ்ரேயாந்பவதிஜாய

மாந:|தம்தீராஸ:கவயஉந்நயந்தி||

(யஜுர்வேதம்) பரமாத்மா, யுவாவாகவும், பீதக ஆடையராகவும், சேனை முதலியார் தொடக்கமானவர் சூழவும் இங்கு அவதரித்தார்; அவர் அவதரித்தே ஶ்ரேயஸுடையராகிறுர்; தீரர்களான கவிகள் அவரை உள்ளபடி அறிகிறுர்கள்.

167. அவஜாநந்திமாம்மூடாமாநுஷீம்தநுமாஶ்ரிதம்

பரம்பாவமஜாநந்தோமமபூதமஹேஶ்வரம்

(கீதை 6.11 அர்ச்சுனற்குக் கண்ணன் அருளியது) மூடர்கள் என் னுடைய மேன்மையை அறியாதவர்களாய்க்கொண்டு, எல்லாருக் கும் ஈச்வரனுயும் மநுஷ்யசரீரத்தை எடுத்துக்கொண்டும் இருக்கிற என்னை (சாதாரண மநுஷ்யனுக எண்ணி) அவமதிக்கிறுர்கள்.

168. ஸபித்ராசபரித்யக்தஸ்ஸுரைஶ்சஸமஹர்ஷிபி:

த்ரீந்லோகாந்ஸம்பரிக்ரம்யதமேவஶரணம்கத:

(ராமாயணம் சுந்தரகாண்டம் 38.33. பிராட்டி திருவடியிடம் சொன்னது) அந்தக் காகாஸுரன், தமப்பனை இந்த்ரனுலும் மஹர்ஷிகளாலும் சுரர்களாலும், காப்பாற்றப்படாமல், மூவுலகங் களையும் கிரமமாகச் சுற்றி, ராமபிரானையே சரணடைந்தான்.

169. ஸத்யேநலோகாந்ஜயதிதீநாந்தாநேநராகவ:
   குரூந்ஶுஶ்ரூஷயாவீரோதநுஷாயுதிஶாத்ரவாந்

(ராமாயணம் அயோத்யாகாண்டம் 12.29. தசரதசக்ரவர்த்தி கைகேயிஇடம் சொன்னது) சத்தியத்தால் லோகங்களையும், தானத்தால் தீனர்களையும், சுச்ரூஷையால் குருமார்களையும், வில்லினால் (யுத்தத்தில்) சத்ருக்களையும், வீரனாகிய ராகவன் ஜயிக்கிறான்.

170. த்விதாபஜ்யேயமப்யேவம்நநமேயம்துகஸ்யசித்
   ஏஷமேஸஹஜோதோஷஸ்ஸ்வபாவோதுரதிக்ரம:

(ராமாயணம் யுத்தகாண்டம் 36.11. மால்யவானைப்பார்த்து ராவணன் சொன்னது) இரண்டுதுண்டாக வெட்டப்பட்டேனாயினும் ஒருவரையும் வணங்கமாட்டேன், இது எனக்கு ஸஹஜதோஷம்; ஸ்வபாவம் ஒருவராலும் கடக்கத்தக்கதல்ல.

171. அஹமஸ்யாவரோப்ராதா குணைர்தாஸ்யமுபாகத:
   க்ருதஜ்ஞஸ்யபஹுஜ்ஞஸ்யலக்ஷ்மணோநாமநாமத:

(ராமாயணம் கிஷ்கிந்தாகாண்டம் 4.12. லக்ஷ்மணன் திருவடியிடம் கூறியது) க்ருதஜ்ஞதையுடையராயும் சிறிய உதவியைப் பெரிதாக எண்ணுமவராயும் உள்ள இந்த ராமபிரான் அபிப்ராயத்தாலே நான் தம்பி; அவர் குணங்களில் ஈடுபட்டு (ஸர்வதேச காலாவஸ்தைகளிலும் கைங்கர்யம் செய்கிறேன்.( இது என் அபிப்ராயம்)லக்ஷ்மணன் எனும் பெயருடையேன்.

172. மந்யேப்ராப்தாஸ்ஸ்மதம்தேசம்பரத்வாஜோயமப்ரவீத்
   நாதிதூரேஹிமந்யேஹம்நதீம்மந்தாகினீம்ப்ரதி:

(ராமாயணம் அயோத்யாகாண்டம் 99.9 ஸத்ருக்னனையும் மந்திரிகளையும் நோக்கி பரதன் கூறியது) கங்கை இவ்விடத்திற்கு அதிதூரத்திலில்லை என்றே நான் எண்ணுகிறேன்; ஆகையால் பரத்வாஜரிஷி எந்த தேசத்தைச் சொன்னாரோ அதை யடைந்தோமென்றே நினைக்கிறேன்.

173. க்வதேராமேணஸம்ஸர்கஃகதம்ஜாநாஸிலக்ஷ்மணம்
   வாநராணாம்நராணாஞ்சகதமாஸீத்ஸமாகம:

(ராமாயணம் சுந்தரகாண்டம் 35.2 திருவடியிடம் பிராட்டி சொன்னது) ராமபிரானோடு உமக்கு ஸம்பந்தம் எங்கே ஏற்பட்டது?

லக்ஷ்மணனை எவ்வாறறிகின்றீர்? வாநரர்க்கும் மநுஷ்யர்க்கும் எப்படி ஸம்பந்தம் ஏற்பட்டது?

174. ஸர்வர்க்ஷஹரிஸைந்யாநாம்ஸு்க்ரீவமகரோத்பதிம்
ராமஸு்க்ரீவயோரைக்யம்தேவ்யேவம்ஸமஜாயத

(ராமாயணம் சுந்தரகாண்டம் 35.51 பிராட்டியிடம் திருவடி சொன்னது) கரடிகள் வாநரங்களின் சேனைகட்கு, சுக்ரீவ மஹாராஜனுக்கினமையால், தேவியே! ராமபிரானுக்கும் சுக்ரீவனுக்கும் (ஸ்நேஹம் இப்படி) ஏற்பட்டது.

175. வசஸாஸாந்த்வயித்வைநம்லோசநாப்யாம்பிபந்நிவ
ஆவ்யாஹிமமதத்வேநராக்ஷஸாநாம்பலாபலம்

(ராமாயணம் யுத்தகாண்டம் 21.6 ராமபிரான் விபீஷணனிடம் சொன்னது) விபீஷணனைக் குளிரக்கடாக்ஷித்து நல்வார்த்தை சொல்லி, ராக்ஷஸர்களுடைய பலாபலங்களை எனக்கு உள்ளபடியே சொல்லவேண்டும் என்று கேட்டார்.

176. பர்வதாதிவநிஷ்க்ரம்யஸிம்ஹோகிரிகுஹாஶய:
லக்ஷ்மணம்த்வாரிஸோபஸ்யத்ப்ரஹ்வாஞ்ஜலிபுடம்ஸ்திதம்

(ராமாயணம் அயோத்யாகாண்டம் 16.26) மலைக்குகையில் படுத்திருக்கும் ஸிம்ஹம் மலையிலிருந்து புறப்பட்டாற்போல, ராமபிரான் தனது இருப்பிடத்திலிருந்து புறப்பட்டு, வெளி வாயிலில் கைகூப்பி நிற்கும் லக்ஷ்மணனைக் கடாக்ஷித்தார்.

177. அபாரஸஹஸ்ராஸாஜஸம்பரிதம்பீமஸவார்ணவோதரே
அநிசம்ஶரணாகதம்ஹரே க்ருபயாகேவலமாத்மஸாத்குரு

(ஸ்தோத்ரரத்நம் 48) எம்பெருமானே! பல்லாயிரம் அபசாரங்கட்குறைவிடமாய், பயம் தருகிற ஸம்ஸாரப் பெருங்கடல் நடுவே விழுந்தவனாய், அதைத் தாண்டும் சக்தியற்றவனாய், உம்மைச் சரணடைந்தவனாயிருக்கும் அடியேனைப் பரமகிருபையாலே, திருவடிகளில் சேர்த்துக்கொள்ளவேண்டும்.

178. ஏஹிஸர்வைஸ்ஸார்யம்ப்ரஸாயாஸிதோமயா
ஸ்ராதுஸ்ஸிஷ்யஸ்யதாஸஸ்யப்ரஸாதம்கர்துமர்ஹஸி

(ராமாயணம் அயோத்யாகாண்டம் 104.12 ராமபிரானிடம்பரதன் கூறியது) வயதுமுதிர்ந்த இந்த அமைச்சர்களோடுகூட என்னாலும் தலைவணங்கிப் பிரார்த்தனை செய்யப்பட்டீர்கள்; ஆகையால் தேவரீருக்குச் சகோதரனும் சிஷ்யனும் தாஸனும் இருக்கிற அடியேன் விஷயத்தில் அநுக்ரஹம் செய்யவேண்டும்.

179. தந்துக்ருஷ்ணாஜினம்ரவல்கலவாஸஸம்
ததர்ஸராமமாஸீநமபிதஃபாவகோபமம்

(ராமாயணம் அயோத்யாகாண்டம் 19.26) மான்தோலை உத்தரீயமாகவும், மரவுரியைக் கீழாடையாகவும் தரித்துக்கொண்டு, எப்பக்கத்திலும் நெருப்பைப்போல் அணுகக்கூடாதவராய் தர்ப்பாஸனத்திலுள்ள அந்த ராமபிரானைப் பரதன் பார்த்தான்.

180. இச்சாமோஹிமஹாபாஹும்ரகுவீரம்மஹாபலம்
கஜேநமஹதாயாந்தம்ராமம்சத்ராவ்ருதாநநம்

(ராமாயணம் அயோத்யாகாண்டம் 2.22 தசரதசக்ரவர்த்தியிடம் பிராஹ்மணராதியோர் கூறியது) பருத்த நீண்ட கைகளையும் மஹாபலத்தையும் ரகுகுல வீரத்தையும் உடைய ராமபிரான், மிக உயர்ந்த (சத்ருஞ்ஜயன் எனும்) யானையின் மேலேறிக் கொற்றக் குடையின் வட்டத்தினால் சூழப்பெற்ற திருமுகமண்டலத்தையுடையராய்க்கொண்டு, வீதிகள் தோறும் உலாவருவதைக் காண விரும்புகிறோம்.

181. தேஹிமேததாமிதே

(யஜுர்வேதம் 1.8) நீ எனக்கு ஒருபலனைக்கொடு, நான் உனக்கு ஒரு ப்ரதிபலனைத் தருகிறேன்.

182. அந்தஃப்ரவிஷ்டஃஸாஸ்தாஜநாநாம்ஸர்வாத்மா

(யஜுர்வேதம் 3.21) (எம்பெருமான்) சேதநருடைய உள்ளே வ்யாபித்து நியாமகனும் ஸர்வாத்மாவாயும் உள்ளான்.

183. பவித்ராணாம்பவித்ரம்யோமங்களாநாம்சமங்களம்

தைவதம்தேவதாநாம்சபூதாநாம்யோऽவ்யய:பிதா

(பாரதம் பீஷ்மபர்வம், பீஷ்மர் தர்மபுத்ரரிடம் சொன்னது) எவன் பவித்ரமான பொருள்களுக்கும் பவித்ரத்தை யுண்டாக்குபவனே; மங்களவஸ்துக்களுக்கும் மங்களத்தையுண்டாக்குபவனே, தேவதை கட்கெல்லாம் தைவதமானவனே, எல்லாப்ராணிகட்கும் அழியாத பிதாவோ (அத்தகைய பரமாத்மாவின் திருநாமம் சொல்லும்.)

184. யதாபஶ்ய:பஶ்யதேருக்மவர்ணம்கர்தாரமீஶம்புருஷம்ப்ரஹ்மயோநிம்| ததாவித்வாந்புண்யபாபேவிதூயநிரஞ்ஜந:

பரமம்ஸாம்யமுபைதி||

(முண்டகோபநிஷத்) பொன்மேனியனுயும் கர்த்தாவாயும் ஈசனுயும் ப்ரஹ்மகாரணனுயுமுள்ள புருஷனை, ப்ரஹ்மஞானி எப்போது காண்கிறனே, அப்போது வித்வானுகிய இவன் புண்யபாபங்களை விட்டு, நிரஞ்ஜநனாய்ப் பரமாத்மாவோடு ஸாம்யம் பெறுகிறன்.

185. அம்ஶாவதாரோப்ரஹ்மர்ஷேயோऽயம்யதுகுலோத்பவ:

விஷ்ணோஸ்தம்விஸ்தரேணாஹம்ஶ்ரோதுமிச்சாமிதத்வத:

(விஷ்ணுபுராணம் 5.1.2 மைத்ரேயர் பராஶர மஹர்ஷியிடம் கேட்டது) பராஶரமஹர்ஷியே! மஹாவிஷ்ணுவின் (அவதாரங்களுள்) யதுகுலத்தில் உத்பவித்த எந்த பூர்ணவதாரம் உண்டோ அதன் மஹிமையை விரிவாக உள்ளபடியே கேட்க விரும்புகிறேன்.

186. அயம்ஸகத்யதேப்ராஜ்ஞை:புராணார்த்தவிஶாரதை:

கோபாலோயாதவம்வம்ஶம்மக்நமப்யுத்தரிஷ்யதி

(விஷ்ணுபுராணம் 5.20.49 நகரத்தினர் தம்முள் சொல்லிக்கொண்டது) இந்த கோபாலன், மங்கிக்கிடக்கும் யாதவவம்சத்தை அதிக விருத்திசெய்யப்போகிறுர் என்று, புராணங்களின் அர்த்தங்களை நன்கறிந்த வித்வான்களால் சொல்லப்படுகிறுர்.

187. அப்ரமேயம்ஹி தத்தேஜோயஸ்யஸாஜநகாத்மஜா
ந த்வம்ஸமர்த்தஸ்தாம்ஹர்தும்ராமசாபாஶ்ரயாம்வநே

(ராமாயணம் ஆரண்யகாண்டம் 37-18 மாரீசன் ராவணனிடம் சொன்னது) எந்த ராமபிரானுக்கு பிரசித்திபெற்ற ஜாநகி தேவியா ரிருக்கிறளோ, அத்தகையோர் தேஜஸ் அளவிடமுடியாததல் லவோ? அவருடைய வில்லை ஆஶ்ரயித்துள்ள அந்த தேவியை வனத்தில் அபகரிக்க நீ ஸமர்த்தனல்லன்.

188. ஜ்யோதிஷ்டோமேநஸ்வர்ககாமோயஜேத

(கர்மகாண்டம்) ஸ்வர்க்ககாமன் ஜ்யோதிஷ்டோமமாகிறயாகம் செய்தல்வேண்டும்.

189. ஆத்மவாஅரே த்ரஷ்டவ்யஶ்ஶ்ரோதவ்யோமந்தவ்யோநிதித்யாஸிதவ்ய:

(ப்ருஹதாரண்யகோபநிஷத் 6.5.6) ஹேஶிஷ்யனே! பரமாத்மா வானவன் ஶ்ரவணமநநத்யாந(தரிசனங்கட்கு) விஷயமாக்கத் தக்கவன்.

190. யத்யதாசரதிஶ்ரேஷ்டஸ்தத்ததேவேதரோஜந:
ஸயத்ப்ரமாணம்குருதேலோகஸ்ததநுவர்ததே

(கீதை 3.21 அர்ச்சுனற்கு கண்ணன் கூறியது) (சாஸ்த்ர அறிவா லும் அநுஷ்டானத்தாலும்) சிரேஷ்டனானவன், எவற்றை அநுஷ் டிக்கிறானோ அவற்றை இதரஜனங்களும் அநுஷ்டிப்பர், அவன் எதை ப்ரமாணமாகக் கொள்கிறானோ அதையே லோகம் கொள்ளும்.

191. யயௌதூர்யப்ரணாதேந பேரீணாஞ்சமஹாஸ்வநை:
பேரிகையின் பேரொலியோடும் தூர்யத்தின் ஒலியோடும் போனார்.

192. யோவஜ்ரபாதாஶநிஸந்நிபாதாந்நசுக்ஷுபேநாபிசசாலராஜா
ஸராமபாணாபிஹதோப்ருஶார்த்தஶ்சாலசாபஞ்சமுமோச வீர:||

(ராமாயணம் யுத்தகாண்டம் 59.139) ராக்ஷஸமன்னனான எந்த ராவணன் வஜ்ராயுதத்தின் அடிகளாலும் இடிகளின் வீழ்ச்சியாலும்

மனநடுக்கமும் சரீரநடுக்கமும் அடைந்திலனே, அவன் ராமபாணத்தினால் அடிபட்டவனாய் மனங்கலங்கி நடு நடுங்கி வீரனாயினும் வில்லையும் கூடக் கை நெகிழவிட்டான்.

193. பதிஸம்மாநிதாஸீதா ஹர்த்ராமஸிதேக்ஷணா
ஆஸ்வாரமநுவவ்ராஜமங்கலாந்யபிதத்யுஷீ

(ராமாயணம அயோத்யாகாண்டம் 16.21) ராமபிரானாகிய தனது பதியால் கௌரவிக்கப்பட்டு, கரியகண்களையுடைய ஸீதாபிராட்டி மங்களங்களைச் சொல்லிக்கொண்டே, (தன்னுடைய நாயகனை) ராமபிரானைவெளிவாயிற்படிவரையிலும்பின்தொடர்ந்து சென்றாள்.

194. ப்ரதேஹி ஸுபகே ஹாரம் யஸ்ய துஷ்டாஸி பாமிநி
பௌருஷம் விக்ரமோ புத்திர்யஸ்மிந்நேதாநி நித்யஶ:

(ராமாயணம் யுத்தகாண்டம் 131.77 ராமபிரான் பிராட்டியிடம் சொன்னது) அழகுமிக்கசீதையே! எவரிடத்தில் பௌருஷமும் விக்ரமமும் புத்தியும் நித்யமாயுண்டோ, எவரால் மிகவும் சந்தோஷம் அடைந்தனையோ அவருக்கு முத்துஹாரத்தைக் கொடு.

195. தம் பஞ்சஶதாந்யப்ஸரஸாம்ப்ரதிதாவந்தி ஶதம் மாலாஹஸ்தா: ஶதமஞ்ஜநஹஸ்தா: ஶதம் சூர்ணஹஸ்தா: ஶதம் வாஸோஹஸ்தா: ஶதம் பணாஹஸ்தா: தம் ப்ரஹ்மாலங்காரேணாலங்குர்வந்தி ஸப்ரஹ்மாலங்காரேணாலங்க்ருதோ ப்ரஹ்ம வித்வான் ப்ரஹ்மைவாபிப்ரைதி||

(கௌஷீதகீப்ராஹ்மணோபநிஷத் 1.4) முக்தனைகப்போமவனை, ஐந்நூறு அப்ஸரஸ்த்ரீகள் எதிர்கொண்டுவருகிறார்கள், நூறு அப்ஸரஸ்ஸுக்கள் மாலையேந்திய கையினராயும், நூறுபேர் அஞ்ஜனம் ஏந்திய கையினராயும், நூற்றுவர் சூர்ணமேந்தியவராயும், நூற்றுவர் வஸ்த்ரம் கொணர்பவராயும், நூறுபேர் பூஷணஹஸ்தராயும், ப்ரஹ்மாலங்காரத்துக்கேற்றபடி அலங்கரிக்கிறார்கள்; அந்த ப்ரஹ்மஞானியாகிய வித்வான் இவ்வாறலங்கரிக்கப்பெற்று ப்ரஹ்மத்தையே அடைகிறான்.

196. சகாஸதம்ஜ்யாகிணகர்கசைஶ்ஶுபைஶ்சதுர்பிராஜாநுவிலம்

பிபிர்புஜை:|ப்ரியாவதம்ஸோத்பலகர்ணபூஷண

ஶ்லதாலகாபந்தவிமர்தஶம்ஸிபி:||

(ஸ்தோத்ரரத்நம் 33) நாண் உராய்தலாலுண்டான தழும்பினால் கடினமாகவும், சுபமாகவும் முழங்கால்வரை நீண்டதாயும், பிராட்டியின் தலையணியான கருநெய்தல் மலர், கர்ணபூஷணம், அவிழ்ந்துள்ள முன் நெற்றிமயிர் இவற்றின் உராய்தலை அறிவிப்பதாகவும் இருக்கிற நான்கு திருக்கைகளால் ப்ரகாஶிக்கிற பெருமாளை (நான் எப்போது ஸந்தோஷிப்பிக்கப்போகிறேன் ?)

197. ஏதத்ஸாம காயந்நாஸ்தே|ஹா3வு ஹா3வு ஹா3வு|அஹமந்

நமஹமந்நமஹமந்நம்|அஹமந்நாதோ3ஹமந்நாதோ3ஹமந்

நாத3:||

(தைத்தரீய உபநிஷத்–ப்ருகுவல்லி) முக்தனானவன் நான் பரமாத்மாவுக்கு போக்யப்பொருள் போக்கியப்பொருள் போக்கியப்பொருள், நான் பரமாத்மாவாகிற போக்யப்பொருளை அநுபவிக்கிறவன் அனுபவிக்கிறவன் என்று சொல்லிக்கொண்டு, ஹாவு ஹாவு ஹாவு என்கிற இந்த ஸாமத்தை பாடிக்கொண்டிருக்கிறான்.

198. ப்ரஹ்மவிதா3ப்நோதி பரம்|ததே3ஷாऽப்4யுக்தா|ஸத்யம்ஜ்

ஞாநமநந்தம்ப்ரஹ்ம|யோ வேத3 நிஹிதம் கு3ஹாயாம் பர

மே வ்யோமந்|ஸோऽஶ்நுதே ஸர்வாந்காமாந்ஸஹ|ப்ரஹ்

மணா விபஶ்சிதேதி||

(தைத்தரீய உபநிஷத் ஆநந்தவல்லி) ப்ரஹ்மஜ்ஞானி பரமாத்மாவையடைகிறான்; அந்த ப்ரஹ்மத்தைக் குறித்து இந்த ரிக் அத்யயநபரர்களால் சொல்லப்பட்டது; சத்யமாயும் ஞானமாயும் அநந்தமாயும் ஹ்ருதய குஹையில் வைக்கப்பெற்றதாயும் உள்ள பரமாத்மாவை எவன் அறிகிறானோ, அவன் பரமபதத்தில், எல்லாக் குணங்களையும் ஸர்வஜ்ஞனாகிய பரமாத்மாவோடுகூட அனுபவிக்கிறான்.

199. ஆஹாரநித்ராபயமைதுநாநி ஸாமாந்யமேதத்பஶுபிர்ந-
ராணாம்|ஜ்ஞாநம்நராணாமதிகோவிஶேஷோஜ்ஞாநேநஹீநா:
பஶுபிஸ்ஸமாநா:||

(விஷ்ணுபுராணம்) மனிதர்களுக்கும் நாற்கால் பிராணிகட்கும் ஆகாரம் நித்திரை பயம் மைதுனம் ஒத்திருக்கும்; ஆனால் மனிதர்கட்கு ஞானமே பெருமையையும் விசேஷத்தையுமளிக்கிறது; அந்த ஞானமில்லாதவன் பசுக்களுக்கொப்பானவன்.

200. கதாந்பஶூநாம்ஸஹஜந்மபந்துதாம்க்ருஹாஶ்ரயம்ப்
ரேமவநேஷுபிப்ரத:|ததர்ஶகோபாநுபதேநுபாண்ட
வ:க்ருதாநுகாராநிவகோபிரார்ஜவே||

(கிராதார்ஜுநீயம்) பிறந்தநாளிலிருந்து (ஸஹவாஸத்தால்) பசுக்களின் பந்துக்களாயும், வீட்டின் மேலுள்ள ப்ரேமத்தைக் காட்டின் மேல் வைத்தும், தங்கள் வியாபாரத்தில் பசுக்களால் பரிஹஸிக்கப் படுபவர் போலுமுள்ள இடையர்களைப் பசுக்கூட்டத்தருகில் அர்ச்சுனன் பார்த்தான்.

201. பக்திஶ்சஜ்ஞாநவிஶேஷ:

(பக்தியாவது ஞானத்தின் விசேஷமாம்).

202. அஹமஸ்ம்யபராதாநாமாலயோऽகிஞ்சநோऽகதி:|
த்வமேவோபாயபூதோமேபவேதிப்ரார்தநாமதி:||
ஶரணாகதிரித்யுக்தாஸாதேவேऽஸ்மிந்ப்ரயுஜ்யதாம்||

(பகவச்சாஸ்த்ரம்) அடியேன் அபசாரங்கட் குறைவிடம், அகிஞ்சநன், அகதி; "தேவரீரே எனக்கு உபாய பூதராகவேண்டும்" எனும் பிரார்த்தனை சரணாகதியெனப்படும்; அதுஇவ் வெம்பெருமானிடத்து செய்யத் தக்கது.

